# இன்றைய மக்கள் வழக்காற்றில் செவ்வியல் கால நம்பிக்கைகள் வழக்கும் இழப்பும்: ஒரு மதிப்பீடு

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.,)
பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**கோ.அழகுராஜா**

(பதிவு எண்: 0222)

நெறியாளர்

பேரா.முனைவர். மு.பாண்டி






## தமிழ்த்துறை

## அழகப்பா பல்கலைக் கழகம்

(தேசியத்தர நிர்ணயக் குழுவின் மறுதரமதிப்பீட்டில் 'A' மதிப்புப் பெற்றது)

காரைக்குடி – 630 003

இந்தியா


டிசம்பர் - 2013

**பேரா.முனைவர் மு.பாண்டி**
*பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி - 630 003.*

*நாள்:*

## நெறியாளர் சான்றிதழ்

'**இன்றைய மக்கள் வழக்காற்றில் செவ்வியல் கால நம்பிக்கைகள் வழக்கும் இழப்பும்: ஒரு மதிப்பீடு**' *என்னும் தலைப்பில் ஆய்வாளர் திரு.கோ.அழகுராஜா அவர்களால் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப் பெற்ற இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னிச்சையாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்வுக்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.*

(*பேரா.முனைவர்.* ***மு.பாண்டி***)
**நெறியாளர்**

**கோ.அழகுராஜா,**
*பதிவு எண்:0222,*
*முனைவர்பட்ட ஆய்வாளர்,*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி – 630 003.*

*நாள்:*

# ஆய்வாளர் உறுதிமொழி

**‘இன்றைய மக்கள் வழக்காற்றில் செவ்வியல் கால நம்பிக்கைகள் வழக்கும் இழப்பும்: ஒரு மதிப்பீடு’** *என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும் இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.*

**(கோ.அழகுராஜா)**
**ஆய்வாளர்**

**உறுதிக் கையொப்பம்**
பேரா.முனைவர் **மு.பாண்டி,**
*தமிழ்த்துறைத் தலைவர்,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி–630 003.*

# நன்றியுரை

முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்ள எனக்கு அனுமதி வழங்கிய காரைக்குடி, அழகப்பா பல்கலைக் கழகத்திற்கும், தமிழ்த்துறைக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்வாய்வு மேற்கொள்ளவும், சிறப்பாக அமையவும், அவ்வப்போது தகுந்த ஆலோசனை வழங்கி ஆய்வுத் தொடர்பான நூல்களைத் தந்து என்னை வழிநடத்திச் சென்ற எனது நேசமிகு நெறியாளர், தமிழ்த்துறைத் தலைவர் உயர்திரு.பேரா.முனைவர்.மு.பாண்டி ஐயா அவர்களுக்கு என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

எனது முனைவர்பட்ட ஆய்விற்கு நிதியுதவி அளித்த சென்னை, செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்திற்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பான தகவல்களை வழங்கிய தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் திரு.மு.நடேசன், நண்பர் முனைவர்.சொ.சுரேஷ் அவர்களுக்கும் ஏனைய துறைப் பேராசிரியப் பெருமக்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இளங்கலை பயின்ற காலம் முதல் மென்மேலும் பயில வேண்டும் என்று ஆக்கமும் ஊக்கமும் தந்து தங்களது நல்லாசிகளை வழங்கிய இராமசாமி தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர்கள் பேரா.நா.வள்ளி, பேரா.நா.சுப்பிரமணியன் அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை முனைவர்பட்டம் வரைப் பயில வைத்த எனது பெற்றோர் திரு.உ.கோட்டைச்சாமி-காளியம்மாள் அவர்களுக்கு என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

நான் முனைவர்பட்டம் பயில வேண்டும் என்று சொன்னபோது, உன் விருப்பம்போல் படி என்று ஊக்கமளித்த சகோதரர்கள் திரு.கோ.ராஜா-ஜீவிதா, கோ.பிரபு, சகோதரி ச.ராஜலெட்சுமி-சசிக்குமார் ஆகியோர்க்கு என்றும் நன்றியுடையவன் ஆவேன்.

எனது முனைவர்பட்டப் படிப்பிற்கு உறுதுணையாக இருந்த எனது உயிரினும் மேலான, பாசமிகு, நேசமிகு, அன்பிற்கினிய வாழ்க்கைத் துணைவி திருமதி.அ.ரூபி அழகுராஜா அவர்களுக்கு என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

என் வாழ்வில் இன்பமும், மகிழ்ச்சியும் தரக்கூடிய மழலைச் செல்வங்கள் ரா.சந்தனா, ரா.கோவர்த்தன், அ.சுமேதாஸ்ரீ, அ.தரணிரூபன், ச.ஹேரீஸ்ராம் ஆகியோர்க்கு நன்றியினை உரித்தாக்குகிறேன்.

நான் ஆய்வுத் தொடர்பாக எப்பொழுது சென்றாலும் எனக்குத் தகுந்த ஆலோசனைகளும், கருத்துக்களும் வழங்கிய எனது மாமா முனைவர் திரு.மு.முனீஸ்மூர்த்தி அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றிகள் பலகோடி.

தமிழ்த்துறை மூத்த ஆய்வாளர்களாக இருந்து ஆய்வுத் தொடர்பான கருத்துக்களும் ஆலோசனைகளும் வழங்கிய முனைவர் அ.சங்கர்தாஸ், முனைவர் ஆறு.முத்துக்கருப்பன், முனைவர் அ.இராஜசேகர் ஆகியோர்க்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுக் காலத்தில் என்னுடன் ஆய்வு மேற்கொண்ட ஆய்வாளர்கள் தங்களது பணிகளுக்கு இடையில் என் ஆய்வுத் தொடர்பான நூல்களைத் தந்து அவ்வப்போது உதவிகள் பல செய்து உறுதுணையாக இருந்த கா.கோகுலன், மு.தெய்வேந்திரன், பா.கிருஷ்ணமூர்த்தி, ம.மார்ஷல், சகோதரிகள் க.கனகலட்சுமி, சோ.பிரேமா ஆகியோர்க்கும், ஏனைய ஆய்வாளர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக் காலங்களில் அவ்வப்போது உதவியாக இருந்த தம்பி செப.சேகர், முனைவர்பட்ட ஆய்வாளர்கள் க.இராஜேந்திரன், சு.பிரபாகரன், மருமகன் கோபாலகிருஷ்ணன் ஆகியோர்க்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கிய அழகப்பா பல்கலைக்கழக நூலகத்தாருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் செம்மொழி நிறுவனத்திற்குச் சென்னை சென்று வரும் பொழுது, எனக்குப் பல நிலைகளில் உதவி செய்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பணிபுரியும் சகோதரி திருமதி.பொ.ஜானகி அவர்களுக்கும், உலகத் தமிழாராய்ச்சி நூலகத்திற்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன.

ஆய்வேட்டை உரிய காலத்தில் கணினியில் தட்டச்சு செய்து தந்த அருண் கணினியகம் நிறுவனத்தார் சாந்தி பாண்டியன் அவர்களுக்கு என்றும் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

நன்றியுடன்

**கோ.அழகுராஜா**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஆசாரக். | - | ஆசாரக்கோவை |
| இறை.கள. | - | இறையனார் களவியல் |
| இன்னா. | - | இன்னா நாற்பது |
| இனியவை. | - | இனியவை நாற்பது |
| ஏலா. | - | ஏலாதி |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| ஐந்.எழு. | - | ஐந்திணை எழுபது |
| ஐந்.ஐம். | - | ஐந்தினை ஐம்பது |
| கலி. | - | கலித்தொகை |
| களவழி. | - | களவழி நாற்பது |
| கார். | - | கார் நாற்பது |
| குறிஞ்சி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| கைந். | - | கைந்நிலை |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| சிறுபஞ்ச. | - | சிறுபஞ்சமூலம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| திணை.நூற். | - | திணைமாலை நூற்றைம்பது |
| திணை.ஐம். | - | திணைமாழி ஐம்பது |
| திரி. | - | திரிகடுகம் |
| திருக். | - | திருக்குறள் |
| திருமுருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொல். | - | தொல்காப்பியம் |

| | | |
|---|---|---|
| நற். | - | நற்றிணை |
| நாலடி | - | நாலடியார் |
| நான்மணி. | - | நான்மணிக்கடிகை |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| பட்டினப். | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பழமொழி. | - | பழமொழிநானூறு |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | - | பொருநராற்றுப்படை |
| மணி. | - | மணிமேகலை |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| முத். | - | முத்தொள்ளாயிரம் |
| முதுமொழி. | - | முதுமொழிக்காஞ்சி |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| மேலது. | - | மேற்குறிப்பிட்ட நூல் |

# பொருளடக்கம்

அரிஸ்டாட்டில் மனிதனை ஒரு சமூக விலங்கு என்பர். அந்த அளவிற்கு மனிதன் சமுதாயத்தோடு இணங்கிய நிலையில் வாழ்க்கை நடத்துகிறான். மானுட சமூகத்தின் நாகரிக வளர்ச்சி நிலையானது, ஆதிகாலக் காட்டுமிராண்டி நிலையிலிருந்து படிப்படியாகப் பரிணாம வளர்ச்சி பெற்ற ஒன்றாகும். இந்த இரு நிலைக்கு இடைப்பட்ட காலகட்டங்களில் தமிழ்ச் சமூகம் கடந்து வந்த பாதையை நோக்குதல் இன்றியமையாத ஒன்றாகும். பழந்தமிழர் வாழ்வு நிலையை அறிய அகச் சான்றுகளாக அமைபவை தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் முதலான செவ்வியல் படைப்புகளாகும்.

**மக்கள் வாழ்வில் நம்பிக்கைகள்**

ஒரு சமூகத்தின் தேவைகள் மற்றும் நடத்தை முறைகள் அவ்வவ் சமூகத்தினரால் கட்டமைக்கப்படுபவை. இதில் நம்பிக்கைகளும் அடங்கும். மனிதனின் தன் உணர்வும், சமுதாய உணர்வும் அச்சமூகத்தில் நம்பிக்கைகளைத் தொடர்ந்து எடுத்துச்செல்ல ஊன்றுகோலாக அமைகின்றன. நம்பிக்கைகள் பற்றி வாழ்வியற் களஞ்சியம் "நம்பிக்கை ஒரு செயலின் காரணமாகவும், மரபு வழியாகவும் மக்களால் பின்பற்றப்படும் வழக்கமாக உள்ளது" என்கிறது.

"மனித மனத்தின் விழைவால் நம்பிக்கைகள் தோன்றுகின்றன. இயற்கையால் உருவான பொருட்களுக்கும் மனிதனின் செயல்களுக்கும் தொடர்புண்டு என்ற கருத்தேற்றத்தின் அடிப்படையில் அவை தோன்றியனவாகவே காட்சி தருகின்றன. அச்சத்தின் காரணமாக மனிதன் இயற்கையின் தோற்றத்தினையும் செயற்பாடுகளையும் தனது வாழ்வியல் நடப்புகளோடு இயைந்து நோக்கிய நிலையில் நம்பிக்கைகள் தோற்றம் கொண்டன" என்பர் க.காந்தி.

மனிதன் இயற்கையோடு இயைந்து வாழவேண்டும் எனில் இயற்கையின் நிகழ்வுகளுடன் ஒன்றுதல் தேவையாகின்றது. அவ்வேளை நம்பிக்கைகள் உருவாகின்றன. இந்நம்பிக்கைகள் எவ்வாறு, எப்பொழுது உருவாகின என்று திட்டவட்டமாகக் கூறவியலாது. மனித சமூகம் இயற்கையின் பாதிப்புக்கு மிகுதியாக உட்பட்டிருந்த தொடக்க காலத்தில்

நம்பிக்கைகள் தோற்றம் பெற்றிருக்கலாம். ஆதிகால இனக்குழுச் சமூகத்தில் நிலவிய நம்பிக்கைகள் இயற்கையை மையமிட்டவை. அவை பிற்காலத்தில் வைதிக நெறியின் உந்துதல் காரணமாகச் சமயம் சார்ந்த நிலையில் பரவலாக்கப்பட்டுவிட்டன. இத்தன்மையைச் சங்க இலக்கியங்களில் காணமுடியும். ஒரு காலத்தில் அச்ச நிலையில் தோற்றம் பெற்ற நம்பிக்கைகள் காலப்போக்கில் மனித சமூக இயங்கு நிலைகளைக் கட்டமைக்கவும், ஒழுங்குபடுத்தவும் முதன்மைக் கருவிகளாகச் செயல்பட்டுள்ளன; செயல்பட்டு வருகின்றன. இதனைச் சங்க இலக்கியங்களிலிருந்து மீட்டுருவாக்கம் செய்யலாம். சான்றாகக் குறிஞ்சிக்கலியில் இடம்பெற்றுள்ள,

**"சிறுகுடியீரே, சிறுகுடியீரே**
**வள்ளிகீழ் வீழா வரைமிசைத் தேன்தொடா**
**கொல்லை குரல் வாங்கி ஈனா – மலை வாழ்நர்**
**அல்ல புரிந்து ஒழுகலான்"** ***(கலி.39:11–14)***

எனும் பாடலடிகளைச் சுட்டலாம். மேலும் பல்லி ஒலிக்கும் பலன், கண் துடித்தல், சகுனம் பார்த்தல், விரிச்சி கேட்டல், (கட்டுப் பார்த்தல்) வெறியாட்டு, கனவுப் பலன் போன்ற நம்பிக்கைகள் செவ்வியல் படைப்புகளில் இடம் பெற்றுள்ளதனை அடையாளப்படுத்தியுள்ளனர்.

### ஆய்வுத் தலைப்பு

இலக்கிய வரலாறு என்னும் நிலையில் இலக்கணங்கள் இலக்கியத்துள் அடங்கும் என்பதனைக் கருத்தில் கொண்டு செவ்வியல் படைப்புகளை மையமிட்டு "இன்றைய மக்கள் வழக்காற்றில் செவ்வியல் கால நம்பிக்கைகள் வழக்கும் இழப்பும்: ஒரு மதிப்பீடு" எனத் தலைப்புத் தேர்வு செய்து ஆய்வு நிகழ்த்தப்பட்டிருக்கிறது.

### ஆய்வு நோக்கம்

மனித சமூகத்தின் வாழிடம், காலம், மொழி, இனம் போன்ற கூறுகளால் வாழ்க்கை நெறி, பண்பாட்டுச் சூழல் போன்றவைகள் மாற்றம்

பெறும். இவற்றில் நம்பிக்கைகளும் அடங்கும். இந்த மாற்றங்கள் மக்கள் சமூகத்தில் இன்றுவரை நிகழ்ந்து கொண்டே இருக்கின்றன. "தமிழ்" செம்மொழி என்னும் மதிப்பைப் பெற அடிப்படையாக அமைந்த நாற்பத்தொரு நூல்களையும் தனித்து நோக்கும் போக்குள்ளது. அவ்விலக்கியங்களில் காணலாகும் நம்பிக்கைகளைத் தற்காலச் சூழலோடு ஒப்பு நோக்கி மதிப்பிடுவது இவ்வாய்வின் நோக்கமாகக் கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு முன்னோடிகள்

நம்பிக்கைகள் பற்றிப் பல்வேறு ஆய்வாளர்கள் கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். அவர்கள் இவ்வாய்விற்கு முன்னோடிகளாக அமைகின்றனர். அவற்றில் சு.சக்திவேல் அவர்களின் "நாட்டுப்புற இயல் ஆய்வு", சு.சண்முகசுந்தரம் அவர்களின் "நாட்டுப்புற இயல்", பி.நாராயணன் அவர்களின் "நாட்டுப்புற நம்பிக்கைகள்" என்னும் நூல்களும், க.காந்தி அவர்களின் "தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்", பி.சுரேஷ் அவர்களின் "எட்டுத் தொகையில் மானிட மதிப்புகள்" ஆகிய முனைவர்பட்ட ஆய்வுகளும், கோ.அழகுராஜாவின் "புறநானூற்றுப் பெண்பாற் புலவர்கள் பாடல்களில் பண்பாட்டுக் கூறுகள்", திருமதி.சு.மகாலெட்சுமி அவர்களின் "அகநானூற்றில் விழாக்கள்", ந.பாஸ்கரன் அவர்களின் "சகுனம் பார்த்தல்" இரா.ரேணுகாதேவி அவர்களின் "நாட்டுப்புற நம்பிக்கைகளும்" ஆகிய ஆய்வியல் நிறைஞர் ஆய்வேடுகளும், இவ்வாய்விற்குத் துணை செய்வதாக அமைகின்றன.

## ஆய்வு எல்லை

அண்மைக் காலங்களில் செவ்வியல் படைப்புகளை மையப்படுத்தி ஆய்வு செய்யும் போக்கு பரவலாகக் காணப்படுகின்றன. அதன் அடிப்படையில் தமிழ்ச் செவ்வியல் நூல்களாக அடையாளப்படுத்தப்பட்ட தொல்காப்பியம் முதல் முத்தொள்ளாயிரம் வரை நாற்பத்தொரு (41) நூல்கள் இவ்வாய்விற்குரிய எல்லைகளாக அமைக்கப்பெற்றுள்ளன.

**கள ஆய்வு எல்லை**

இந்த ஆய்விற்குப் பெரிதும் துணை நிற்கும் கள ஆய்வை மேற்கொள்ளுவதற்கான எல்லையாக இராமநாதபுரம் மாவட்டம், திருவாடானை வட்டத்தில் ஒரு பகுதியாக அமைந்துள்ள இராசசிங்கமங்கலம் ஒன்றியப் பகுதியை மட்டும் கள ஆய்விற்கு எல்லையாக தெரிவு செய்யப்பெற்று ஆய்வு நிகழ்த்தப் பெற்றுள்ளது.

**கருதுகோள்**

மனித சமூகம் தோற்றம் பெற்ற காலத்திலிருந்து நம்பிக்கைகள் இருந்து வருகின்றன. இவற்றை அவ்வவ்கால இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இலக்கணத்திற்கு இலக்கியமா? அல்லது இலக்கியத்திற்கு இலக்கணமா? என்றால் இலக்கியத்திற்குத் தான் இலக்கணம். இவ்விலக்கியங்கள் தொடக்கத்தில் கல்வி கற்காத நாட்டுப்புற (சிற்றூர்) மக்களின் வாழ்வியலைப் புலப்படுத்துவனவாகும். இலக்கியங்களில் பாடுபொருளாக அமையும் கருத்துக்கள் மக்கள் வாழ்க்கை வெளிப்பாடுகள் என்ற கோட்பாட்டின் அடிப்படையில் தொல்காப்பியர்,

**"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**
**பாடல் சான்ற புலனெறி வழக்கினும்"     (தொல்.999)**

என்று சுட்டுவர். இந்நூற்பாவின்படி நாடக வழக்கு என்பது இலக்கிய வழக்காகும். உலகியல் வழக்கு என்பது மக்களின் நடப்பியல் சார்ந்ததாகும். எனவே நாடக வழக்கில் அமையும் எட்டிலக்கியங்களான செவ்வியல் இலக்கியங்களில் காணலாகும் நம்பிக்கைகள் உலகியல் வழக்கான இன்றைய மக்கள் வழக்காற்றில் உள்ள நம்பிக்கையுடன் பொருந்தி அமைய வேண்டும் என்பதும் இன்றைய மக்கள் வழக்காற்றில் செவ்வியல் கால நம்பிக்கைகள் நாகரிக வளர்ச்சியினால் வழக்கிழந்தும் காணப்படலாம் என்பதும் இவ்வாய்வின் கருதுகோளாக அமைகின்றன.

**சான்றாதாரங்கள்**

பழந்தமிழர் நம்பிக்கைகள் குறித்த கருத்துப் பதிவுகளைத் தன்னகத்தே கொண்ட நாற்பத்தொரு செவ்வியல் நூல்களும் கள ஆய்வுத் தரவுகளும் இவ்வாய்விற்குரிய முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

செவ்வியல் கால இலக்கியங்களில் நம்பிக்கைகள் குறித்த திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், இதழ்கள், கட்டுரைகள் இவ்வாய்வின் துணைமைச் சான்றாதாரங்களாக அமைக்கப்பெற்றுள்ளன.

**ஆய்வியல் அணுகுமுறை**

செவ்வியல் கால, தற்கால நம்பிக்கைகள் பற்றி விளக்கும் முகமாக விளக்கவியல் அணுகுமுறையும் (Descriptive Approach), நம்பிக்கைகளால் சமூக இயங்கு நிலைகளில் ஏற்பட்ட மாற்றங்களைக் கண்டறியும் வகையில் சமூகவியல் அணுகுமுறையும் (Sociological Approach), நம்பிக்கைகள் உளவியல் சார் அடிப்படையில் தீர்மானிக்கப்படுவதை வெளிக்கொணரும் நிலையில் உளவியல் அணுகுமுறையும் (Pshychological Approach) இவ்வாய்வில் உட்படுத்தப்பட்டுள்ளது.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது. அவை

1. நம்பிக்கைகள், தோற்றம், வளர்ச்சி, இன்றையநிலை
2. செவ்வியல் படைப்புகளில் நம்பிக்கைகள்
3. நம்பிக்கைகள் வழக்கும் இழப்பும் ஒரு மதிப்பீடு
4. நம்பிக்கைகள் காட்டும் சமுதாயச் சிந்தனைகள்

ஆய்வு அறிமுகம் என்னும் முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, விளக்கம், நோக்கம், ஆய்வின் எல்லை, கருதுகோள், ஆய்வு முன்னோடிகள், சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறைகள், இயல் பகுப்புகள், முடிவுரை, துணைநூற்பட்டியல், பின்னிணைப்பு ஆகியனவற்றின் சுருக்கம் இடம்பெற்றுள்ளன.

**இயல் விளக்கங்கள்**

மனிதன் உருவாக்கிக் கொண்ட வாழ்க்கை முறைமைக்கு கவசமாகத் திகழ்வன பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் ஆகும். அவ்வகையில் "நம்பிக்கைகள் தோற்றம், வளர்ச்சி, இன்றைய நிலை" எனும் முதலாமியலில் நம்பிக்கைகள் ஆதிமனிதனிடம் தோன்றிச் சங்ககால மனிதர்களிடம் வளர்ந்து, பெருகி, காலந்தோறும் நிலவியும் மாறியும் இன்றைய நிலையில் நம்பிக்கைகளின் வெளிப்பாடு மக்களிடையே எவ்வாறு அமைந்துள்ளது என்பதையும் விளக்குவதாக அமைக்கப்பட்டுள்ளது.

"செவ்வியல் படைப்புகளில் நம்பிக்கைகள்" என்னும் இரண்டாமியலில் நாற்பத்தொரு (41) செவ்வியல் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள நம்பிக்கைப் பதிவுகள் வெளிக்கொணரப் பெற்றுள்ளன. அவற்றின் தன்மை நோக்கி வகை தொகைப்படுத்தித் தெளிவுபடுத்தப்பெற்றுள்ளது.

"நம்பிக்கைகள் வழக்கும் இழப்பும் – ஒரு மதிப்பீடு" எனும் மூன்றாமியலில் செவ்வியல் நூல்களில் பதிவாகியுள்ள நம்பிக்கைகள் இன்றைய மக்கள் வாழ்வில் வழக்குப் பெற்றனவும், வழக்கிழந்தனவும் குறித்த மதிப்பீடுகள் இடம்பெற்றுள்ளன. இம்மதிப்பீட்டிற்காகத் தமிழகத் தென்மாவட்டங்களில் ஒன்றான இராமநாதபுரம் மாவட்டம், திருவாடானை வட்டம், இராசசிங்கமங்கலச் சிற்றூர்ப் பகுதிகளில் கள ஆய்வு மேற்கொள்ளப்பெற்றுக் கிடைத்த தரவுகளின் அடிப்படையில் ஒப்பிட்டு மதிப்பிடப்பெற்றுள்ளன.

"நம்பிக்கைகள் காட்டும் சமுதாயச் சிந்தனைகள்" என்னும் நான்காம் இயலில் மக்கள் சமூகத்தில் நிலங்கள், இனங்கள், தொழில்கள், வழிபாடுகள், சடங்குகள் போன்றவற்றின் தாக்கத்தால் நம்பிக்கைகள் பெற்றுள்ள மாற்றம் பற்றி விளக்கப்பெற்றுள்ளன.

**ஆய்வு முடிவுரை**

ஆய்வில் கண்டறியப் பெற்றுள்ள முடிவுகளின் சாரம் முடிவுரையில் ஆய்வு முடிவுகளாக இடம்பெற்றுள்ளன.

**பின்னிணைப்புகள்**

"இன்றைய மக்கள் வழக்காற்றில் செவ்வியல் கால நம்பிக்கைகள் வழக்கும் இழப்பும்: ஒரு மதிப்பீடு" என்னும் இவ்வாய்வில் மூன்று பின்னிணைப்புகள் இடம்பெற்றுள்ளன.

ஆய்வு முடிவுரைப் பகுதியை அடுத்து இந்த ஆய்விற்குப் பயன்படுத்தப்பெற்ற முதன்மைச் சான்றுகள், துணைமைச் சான்றுகள், திறனாய்வு நூல்கள், ஆய்வு நூல்கள், ஆய்வு நெறிமுறை நூல்கள், திறனாய்வுக் கட்டுரைகள், தமிழ்ப் பேரகராதிகள், கலைக்களஞ்சியங்கள், ஆய்வு இதழ்கள், முனைவர், இளநிலைப்பட்ட ஆய்வேடுகள் அனைத்தும் அகர வரிசைப் படுத்தப்பெற்று துணைநூற் பட்டியலில் கொடுக்கப்பெற்றுள்ளன.

**பிண்னிணைப்பு ஒன்று**

துணைநூற் பட்டியலைத் தொடர்ந்து பின்னிணைப்பாக இராசசிங்கமங்கல ஒன்றியத்தின் வரைபடம் தரப்பட்டுள்ளது.

**பின்னிணைப்பு இரண்டு**

இந்த ஆய்விற்கு 'நம்பிக்கைகள் வழக்கும் இழப்பும்' எனும் நிலையில் கள ஆய்வு மேற்கொண்ட போது தகவல்கள் அளித்த இராசசிங்கமங்கல ஒன்றியத்தின் தகவலாளிகளின் பட்டியல்கள் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளது.

**பின்னிணைப்பு மூன்று**

நம்பிக்கை குறித்த பதிவுகள் அட்டவணையாகத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

**முன்னுரை**

நம்பிக்கைகள் தமிழர்களின் வாழ்வில் இரண்டறக் கலந்த வாழ்வியல் கூறுகளாகக் கருதப்படுகின்றன. நம்பிக்கைகள் உணர்வு மற்றும் கருத்து வடிவம் கொண்டவை. ஆதலால் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாததாகிவிடுகிறது.

**"யானையின் பலம் தும்பிக்கையில்**
**மனிதனின் பலம் நம்பிக்கையில்"**

எனும் சொலவடைக்கேற்ப நாட்டுப்புறவியலில் நம்பிக்கைகள், மக்களின் சிறந்த உளவியலாகக் காணப்படுகின்றன. இவ்விரண்டும் மக்களால் உருவாக்கப்பட்டு அம்மக்களால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. நம்பிக்கைகள் ஒரு நாட்டின், மக்களின் பண்பாடு உளப்பாங்கு ஆகியவற்றைத் தெளிவாகக் காட்டுகின்றன. நம்பிக்கைகள் மக்களின் கல்வி, சிந்தனை மேம்பாட்டினால் நாள்தோறும் மாறிக்கொண்டே இருக்கின்றன. இருப்பினும் முதலில் தோன்றிய நம்பிக்கைகளின் எச்சங்கள் இன்றும் உள்ளன. எனவே நம்பிக்கைகளைப் பற்றி ஆய்வது மிகுந்த தேவையாகின்றது. அவ்வகையில் நம்பிக்கையின் தோற்றம், வளர்ச்சி, இன்றைய நிலை பற்றிக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

மனிதனின் தன்னல உணர்வும், சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன. நம்பிக்கைகள் பொதுவாக எல்லா இன மக்களிடமும் சமூகத்தின் அனைத்து மட்டங்களிலும், அனைத்துச் சாதியிலும், இடங்களிலும் காணப்படுகின்றன.

நம்பிக்கைகள் நாட்டுப்புறப் பாடல்களைப் போல வாய்மொழியாகப் பரவுகின்றன. "நம்பிக்கை என்பது ஒன்றினை உண்மையென ஏற்றுக் கொள்வதாகும். நம்பிக்கைகளின் அடிப்படை மனிதனின் அகமனம் என்பர். மூளைக்கு அகமானது காரண காரியங்களுக்கு அப்பாற்பட்ட எண்ணங்களை உணர்த்துகிறது. மூளையில் பதியும் அவ்வெண்ணங்கள் உண்மையாகி உறுதிப்படும் போது நம்பிக்கையாகிறது. மனித வாழ்வின் உறுதிப்பாட்டிற்கு ஆதரவு தரும் இந்நம்பிக்கைகள் மனித வாழ்வில் மிக இன்றியமையாதது"[1] என்பார் ஜேம்ஸ் வின்செஸ்டர்.

“ஏதேனும் ஒன்றை உண்மையென்று ஏற்றுக் கொள்வதோ நம்புவதோ நம்பிக்கையாகும்” என்று கென்னத் டி.டிம்பிள் குறிப்பிடுகிறார்.

**அகராதிகள் விளக்கம்**

“நம்பிக்கைகள் என்பது விசுவாசம், உண்மை”[2] எனத் தமிழகராதி கூறுகிறது.

“அனுபவம் ஏற்படுத்தும் உறுதி”[3] என்று கிரியாவின் தற்காலத் தமிழகராதி குறிப்பிடுகின்றது.

“சத்தியம், நிசம், விசுவாசம், அனுபவம் ஏற்படுத்தும் உறுதி”[4] என நர்மதாவின் தமிழகராதி சுட்டுகிறது.

“நம்பிக்கை ஒரு செயலின் காரணமாகவும், மரபு வழியாகவும் மக்களால் பின்பற்றப்படும் வழக்கமாக உள்ளது” என்கிறது வாழ்வியற் களஞ்சியம்.

நம்பிக்கையினைக் குறிக்கும் ஆங்கிலச் சொல் Belief. நம்பு என்ற சொல். விருப்பம், நம்புதல், நம்பிக்கை என்ற பொருளில் இலக்கியங்களில் கையாளப்பட்டுள்ளது.

“ஒரு சமுதாயத்தின் பண்பாட்டினை அறிவிப்பன அச்சமுதாயத்தின் நம்பிக்கைகள். நாகரிகம் குறைந்த சமுதாயத்தில் சற்று அதிகமாகவும், நாகரிகம் மிகுந்த சமுதாயத்தில் குறைந்தும் காணப்படுகின்றன. நம்பிக்கைகள் காலங்காலமாகத் தொடர்ந்து மரபு வழியே தலைமுறை தலைமுறையாக முன்னெடுக்கப்படுகின்றன. மனிதனின் எதிர்பார்ப்பு மற்றும் தேவைகளினால் நம்பிக்கைகள் பெரும்பாலும் உருவாகின்றன. மனித வாழ்வில் நிகழும் சில செயல்களுக்குக் காரணம் கூற முடியாத போது மனித மனம் சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கிறது. அவையே நம்பிக்கைகளாக உருவாகின்றன. நம்பிக்கைகள் சமுதாயப் பழக்க வழக்கங்களோடு நெருங்கிய தொடர்புடையவை”[5] என்பார் க.காந்தி.

**நம்பிக்கையின் தன்மை**

“நம்பிக்கையினை ஆலன் டாண்டிஸ் என்பவர் ‘A’ இருந்தால் ‘B’ வரும், ‘C’ இல்லாவிட்டாலும் இல்லை என்ற வாய்ப்பாட்டின் வழி அமைத்துள்ளார். அதாவது இது செய்தால் இது நடக்கும். இதைச் செய்தால் இதை நீக்கலாம் என்பதுவே இதன் பொருள். சான்றாக, கண்ணேறு பட்டால் நோய்வரும், நோய் நீக்க மிளகாயைச்சுற்றி நெருப்பில் போட வேண்டும் என்பதனைக் கூறலாம். ஒவ்வொரு நம்பிக்கையிலும் A, B, C எனும் மூன்று பகுதிகள் உள்ளன. பெரும்பாலும் இம்மூன்று பகுதிகளில் ஒன்று தொக்கி நிற்பதும் உண்டு”[6] என்பர்.

**நம்பிக்கையின் தோற்றம்**

மனித மனத்தின் விழைவால் நம்பிக்கை தோன்றுகிறது. இயற்கையால் படைக்கப்பட்டுள்ள பொருட்களுக்கும் மனிதனின் செயல்களுக்கும் தொடர்புண்டு என்ற கருத்தேற்றத்தின் அடிப்படையில் அவை தோன்றியனவாகவே காட்சி தருகின்றன.

“அச்சத்தின் காரணமாக மனிதன் இயற்கையின் தோற்றத்தினையும் செயற்பாடுகளையும் தனது வாழ்வியல் நடப்புக்களோடு இயைந்து நோக்கிய நிலையில் நம்பிக்கைகள் தோற்றம் கொண்டன. அத்துடன் நன்மை விளைய வேண்டுமென்ற மனிதனின் விருப்பமாகவும் இணைந்து கொண்ட நிலையில் நம்பிக்கையின் எல்லை விரிந்தது என்பார்”[7] க.காந்தி.

நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்படுகின்றன. அவை வழக்கில் மிகுதியாகவும் இலக்கியங்களில் குறைந்தும் காணப்படுகின்றன. இலக்கியங்கள் சுட்டும் நம்பிக்கைகள் அச்சமுதாயத்தின் நம்பிக்கைகள் அனைத்தையும் கூறும் என்று சொல்ல முடியாது. இலக்கியங்களில் இடம்பெறும் நம்பிக்கைகள் பெரும்பாலும் அன்றைய மக்களிடையே சமுதாயச் செல்வாக்குப் பெற்ற குறிப்பிடத்தக்க நம்பிக்கைகளாக அமையும். ஒரு சமுதாயத்தின் நம்பிக்கைகளைக் கொண்டு அச்சமுதாயத்தின் அறிவுத் திறனை அளவிட இயலும்.

நம்பிக்கைகள் என்று உருவாகின என்று திட்டவட்டமாகக் கூறமுடியாது. மனிதன் இயற்கையின் பாதிப்புக்கு மிகுதியாக உட்பட்டிருந்த அறிவு வளர்ச்சியின் தொடக்க காலத்தில் அவை தோன்றின எனலாம். தொடக்ககால மக்களின் நம்பிக்கைகள் இன்றைய மக்களின் நடைமுறை வாழ்வில் தொடர்ந்து பயிற்சி பெற்று வருவது கொண்டு இதனைச் சமுதாயப் பண்பாட்டின் உணர்ச்சிக் கூறுகளின் தொகுதி எனக் குறிப்பிடலாம். இன்றைய நாகரிக மனிதனிடம் காணப்படும் பல நம்பிக்கைகள் பழங்குடி மக்களிடமும் காணப்படுகின்றன. எனவே ஒரு நம்பிக்கை என்று தோன்றியது என வரையறுப்பது இயலாத ஒன்றாகும்.

நம்பிக்கைகள் காலை விழித்தெழும் போதே தொடங்கிவிடுகின்றன. நல்லது அல்லாதது அன்று விளையுமானால் உடனே காலையில் எந்த முகத்தில் விழித்தோம் என நினைக்கத் தொடங்குகிறோம். அதனால் மறுநாளிலிருந்து உள்ளங்கையையோ, கண்ணாடியையோ, தெய்வத்தின் படங்களையோ பார்க்க முயற்சிக்கிறது மனிதமனம். இவ்வாறு செய்தால் அன்றைய பொழுது நல்லபடி முடியும் என்ற நம்பிக்கை நிலவுகிறது. நம்பிக்கை மக்களின் வாழ்வோடு பின்னிப் பிணைந்து காணப்படுகிறது. ஆதலால் நம்பிக்கைகளை மனிதமனம் ஏற்றுக் கொள்கிறது. "பொதுவாக நம்பிக்கைகளை உளஉருவாக்கம் (Mental Creation) என்பர்"[8]

**நம்பிக்கையின் வளர்ச்சி**

மாற்றமும், வளர்ச்சியும், வீழ்ச்சியும், இயற்கையின் நியதி. "நம்பிக்கைகள் மரபு வழியில் காலங்காலமாக ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவிப் பழகி வருகின்றன. மனிதர்கள் பிறப்பு முதல் இறப்பு வரை பலவித நம்பிக்கைகளைக் கைக்கொண்டிருக்கக் காண்கிறோம். நம்பிக்கைகள் மனித வாழ்வினை இயக்குகின்றன என்று கூறும் அளவிற்கு அவை வாழ்வில் பெரும்பங்கு வகுக்கின்றன. ஒரு வளர்ச்சியடைந்த மனிதனிடம் ஆயிரக்கணக்கான நம்பிக்கைகளும், நூற்றுக்கணக்கான வழக்கங்களும் எண்ணிக்கைக்குட்பட்ட சில குறிக்கோள்களும் இருப்பதாகச் சமூக அறிவியல் கலைக் களஞ்சியம் சுட்டும்."[9]

நம்பிக்கையைப் பற்றி ஆராய்ச்சி செய்த சத்யபால் ரூகேலா "நம்பிக்கைகள், சடங்குகள், குறியீடுகள் வாழ்க்கையில் இயற்கையாக ஏற்படுகின்ற துன்பங்களை வெல்லும் அவாவோடு மக்கள் நோய், மலட்டுத் தன்மை, ஏழ்மை, துன்பம் போன்று ஒவ்வொரு மனிதனுக்கும் ஏற்படுகின்ற கவலைகளைத் தாங்கிக் கொள்கின்ற அல்லது வெல்லுகின்ற அவாவோடு மக்கள் மேற்கொள்கின்றனர்"[10] எனக் குறிப்பிடுகின்றார்.

சான்றாகச் சாதகம் பார்த்துத் திருமணத்தை நடத்துவதால் மணமக்கள் மகிழ்ச்சியுடனும், நீண்ட ஆயுளுடனும் வாழ்வர் என்று நம்புவதைக் கூறலாம்.

"நம்பிக்கைகள் மனிதனின் மூன்றாவது கை என்பார்கள். இந்நம்பிக்கையினால் சமுதாயத்திற்கு நலன் ஏற்படுவது வரை இவை போற்றப்பட வேண்டியதே. இவைகளினால் சமுதாயத்திற்குத் தீங்கு ஏற்படுகையில் அதனின்று மக்களை விடுத்தாக வேண்டும்"[11] என்று மருத்துவ உளவியலறிஞர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

இயற்கையின் புதிரான செயல்களை உணர இயலாத நிலையில் மனிதன் சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கூறுதல் இயலாது என்பதனை "பொதுவாக நம்பிக்கை முறைகளுக்கும் சிறப்பாகக் கடவுள் நம்பிக்கைகளுக்கும் காரணம் காணுதல் இலகுவன்று"[12] என்பார் க.கைலாசபதி.

### நம்பிக்கை சொல்லும் பொருளும்

நம்பிக்கையினைச் சுட்டும் ஆங்கிலச் சொல் Belief. இச்சொல் இடைக்காலத்தில் பயிற்சி பெற்றதனை ஆங்கில அகராதிகள் தெரிவிக்கின்றன. தமிழில் இச்சொல் நம்பிக்கையினைக் குறிக்கப் பயன்பட்டுள்ளதனைச் சங்க இலக்கியப் பயிற்சி கொண்டு உணரலாம். தொல்காப்பியத்தில் நம்பு என்ற சொல் விருப்பம் எனும் பொருளில் ஆளப்பட்டுள்ளதனை,

**"நம்பு மேவு நசையாகும்மே"** ***(தொல்.சொல்.329)***

*எனும் நூற்பா பதிவு செய்துள்ளது. நற்றிணையில் நம்பு என்ற வினைச்சொல் நம்பிக்கை (நற்.175:7-8) என்ற பொருளில் ஆளப்பட்டிருக்கக் காண்கிறோம். மற்றொரு பாடலில் நம்புதல் என்ற சொல்லாட்சியும் (நற்.327:1-3) பயின்று வந்துள்ளது. இவற்றிலிருந்து நம்பு என்ற சொல் தொடக்கத்தில் விருப்பம் என்ற பொருளிலும் பின்னர் நம்பிக்கை என்ற பொருளிலும் பயிற்சி பெற்றதாகக் கருதலாம். காலப்போக்கில் இச்சொல் நம்பிக்கையை மட்டும் குறிப்பதற்குப் பயன்பட்டு வந்துள்ளதனை இன்றைய நடைமுறைப் பயிற்சி கொண்டுணர முடிகின்றது.*

**நம்பிக்கையின் வகைகள்**

*நம்பிக்கைகளை இருவகையாகப் பிரிப்பர். அவை,*

1. *நம்பிக்கை (பகுத்தறிவுக்குட்பட்டது)*
2. *மூடநம்பிக்கை ஆகும்.*

***1. நம்பிக்கை***

*காரண காரியத் தொடர்புக்குட்பட்டுச் சான்றுகளின் வாயிலாக நிறுவமுடிவதை நம்பிக்கை என்று கூறுவர். சான்றாக, அம்மை நோய் வந்தவர்கள் வேப்பிலையைப் படுக்கையாகப் பயன்படுத்த வேண்டும் என்பது நம்பிக்கை. அம்மை நோய் வெப்பத்தால் வரக்கூடியதாகும். வேப்பிலை கிருமிநாசினியாகவும், வெப்பத்தைத் தணிக்கும் குணம் உடையதாகவும் இருப்பதால் காரண காரியத்துடன் அம்மை நோயுடன் தொடர்புபடுத்தப் பட்டுள்ளது. இதுபோன்று பல்வேறு நம்பிக்கைகள் காரண காரியத்துடன் வழக்கில் உள்ளதனை நாம் அறியமுடிகின்றது.*

*நம்பிக்கைகளை வகைப்படுத்தும் முறையில் காரண காரியத் தொடர்போடு நிறுவப்படுவன, நிறுவப்படாதன என இருவகையாகப் பகுத்துக் காண்பதே பொருத்தமானதாகத் தென்படுகின்றது. அறிவு வளர்ச்சியின் காரணமாக அன்றைய சமுதாயத்தின் பெரும்பாலான நம்பிக்கைகள் இன்று மூட நம்பிக்கைகளாகக் கருதப்படுகின்றன. இன்றைய அறிவியல் ஆய்வின் வாயிலாக சில நம்பிக்கைகளாகவும் மாறியுள்ளன.*

மனித சமுதாயத்தில் வழக்கிலிருக்கும் பெரும்பாலான நம்பிக்கைகளுக்குக் காரணம் காட்ட முடிவதில்லை. எனினும் மனித சமுதாயம் நம்பிக்கை வயப்பட்டுச் செயல்படுவதனைத்தான் இன்றைய நடைமுறை வாழ்வும் உணர்த்துகின்றது.

## 2. மூடநம்பிக்கை

காரண கரியத் தொடர்பின்றிச் சான்றுகளின் வாயிலாக நிறுவ முடியாதவற்றை 'மூடநம்பிக்கை' என்று கூறுவர். சான்றாக, காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்பது நம்பிக்கை. இந்நம்பிக்கை மக்களிடையே தலைமுறை தலைமுறையாகப் பயின்று வந்திருக்கின்றது. விருந்தினர் வரவிற்கும் காக்கைக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. இவ்வாறான நம்பிக்கை மூடநம்பிக்கை எனப் பெயர் பெறுகின்றது. காரண காரியத்தோடு தொடர்புற்றிருக்கும் பொழுது பகுத்தறிவுக்குப் புறம்பான வகையில் ஒரு நடவடிக்கை நிகழும் என்று நம்புகின்ற தன்மையை மூடநம்பிக்கை என்பர்.

மூடநம்பிக்கைகள் காலத்திற்கும், இடத்திற்கும், மக்களின் மனப்பாங்கிற்கேற்பவும் மாறக்கூடியன. எனவே இவை தாம் மூடநம்பிக்கை என்று வரையறுத்துக் கூறுதல் இயலாத ஒன்று. அது மக்களுடைய கல்வி வளர்ச்சிக்கும் சிந்தனைத் திறனுக்கும் ஏற்ப மாறக்கூடியது. "ஒருவன் வாழுகின்ற சமுதாயத்தினரின் அறிவு வளர்ச்சிக்குப் பொருந்தாத பொருளற்ற நம்பிக்கைகளையும், சடங்குகளையுமே பொதுவாக மூடநம்பிக்கை என்பர்."[13] இதனை ஆதரிக்கும் வகையில் "சமூகவியலார் காரண காரியத் தொடர்புற்றிருக்கும் பொழுது பகுத்தறிவுக்குப் புறம்பான வகையில் ஒரு நடவடிக்கை நிகழும் என்று நம்புகின்ற தன்மையை மூடநம்பிக்கை என்பர்."[14] இவ்விருவகைக் கூற்றும் ஒன்றிணைந்து சொல்வதே எது மூடநம்பிக்கை என்பதைத் தெளிவுபடுத்தி விடுகின்றது.

## நம்பிக்கையின் பிரிவுகள்

நம்பிக்கைகளை மேலும் தனிமனித நம்பிக்கை (Individual belief), சமுதாய நம்பிக்கை (Social belief) என இருவகையாகப் பகுத்துக் காணலாம்.

எனினும் தனிமனித நம்பிக்கைகளே காலப்போக்கில் பலராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுச் சமுதாய நம்பிக்கைகளாக உருப்பெறுகின்றன. எனவே தனிமனித நம்பிக்கை எனப் பகுப்பது பொருளற்றதாக மாறிவிடுகின்றது. ஆகவே இனத்தை அடிப்படையாகக் கொண்ட மொழிவழிச் சமுதாயத்தின் பொது நம்பிக்கைகளைச் சமுதாய நம்பிக்கை எனக் கருதிப் பகுத்து நோக்குவது சரியானதாகத் தோன்றுகிறது.

**நம்பிக்கைகள் தேர்வு**

நம்பிக்கைகளை மக்கள் பொதுவாகக் காரண காரியத் தொடர்பின்றியே நம்பத் தொடங்கி விடுகின்றனர். அவை மரபு வழியே தொடர்ந்து வரும் சந்ததியினரால் ஏற்றுக் கொள்ளப்பட்டு நம்பி வருவதனையே இலக்கியம் மற்றும் வாழ்வியல் சான்றுகள் உணர்த்துகின்றன.

‘‘நம்பிக்கைகளை நம்பிக்கையா எனத் தேர்வதற்கு மூன்று அடிப்படைகளை அலகுகளாகக் குறிப்பர். அவை

1. சந்தேகித்தல்
2. நம்பிக்கை பற்றிய கருத்து
3. நம்பிக்கை பற்றி முடிவெடுத்தல்’’[15]

ஆகியவையாகும். தமிழரின் நம்பிக்கைகள் பரந்துபட்டவை. அவை காலங்காலமாய் மக்களிடையே வழக்கில் பயின்று வந்திருப்பவை. இலக்கியங்களில் குறிக்கப்படும் நம்பிக்கைகளைவிடத் தனிமனித வாழ்வில் நிலவும் நம்பிக்கைகள் பலதரப்பட்டவை. எனவே இலக்கியங்கள் சுட்டும் நம்பிக்கைகளைக் கடந்த கால, நிகழ்காலச் சான்றுகள் கொண்டு சமூக, மானிட, உளவியல் நோக்கில் காண்பது பயனுடையதாகும்.

**நம்பிக்கையின் இன்றைய நிலை**

கல்வி, சிந்தனை வளர்ச்சி பெற்றுள்ள இன்றைய காலகட்டத்திலும் நம்பிக்கைகள் மிகுதியாக வளர்ச்சியடைந்துள்ளதனை உலகியல் நடப்புக்களை வைத்து அறியமுடிகின்றது. ‘‘நாட்டுப்புற நம்பிக்கையின் தோற்றத்திற்கு மூன்று காரணங்களைக் கூறுவர்.’’[16]

1. செய்வினை மந்திரம் (Magic)
2. நாட்டுப்புற மருத்துவம் (Folk Medicine)
3. விலக்குகள் (Taboos)

ஆகியவையாகும்.

### 1. செய்வினை மந்திரம் (Magic)

மனிதர்களுக்கு இயற்கையாக ஏற்படும் நோய், மரணம், துன்பம், இவைகளுக்கு உலகின் கண் உலவும் தீய ஆவிகளும், செய்வினை, பில்லி, சூனியம், ஏவல் போன்ற மந்திரவாதச் செயல்களும் காரணமாகலாம் என்று நம்புகின்றனர். ஆதிமக்கள் இயற்கைச் சக்திகளையும் தீய ஆவிகளையும் கட்டுப்படுத்தவும் அவற்றைத் திருப்திபடுத்தியும் நன்மை பெறவும் முயன்றனர். இதன் விளைவாக மந்திரச் சடங்குகளும் வழிபாடுகளும் தோன்றின எனலாம். இயற்கையைக் கட்டுப்படுத்துவதற்காக ஏற்படுத்தப்பட்ட மந்திரச் சடங்குகள், நாளடைவில் மனிதனுக்கு நன்மை செய்யவும், தீமை விளைவிக்கவும் பயன்படுத்தப்பட்டன என்பார் தே.ஞானசேகரன்.

### 1.0 செய்வினை, பில்லி, சூனியம், ஏவல்

மந்திரவாதிகளின் துணையுடன் ஒருவர் தன்னுடைய எதிரியின் மீது துன்பங்கள் ஏற்படும்படிச் செய்வதைச் "செய்வினை வைத்தல்" என்பர். பில்லி என்ற துர்தேவதையின் துணையுடன் எதிரிகளுக்குத் துன்பம் கொடுக்கும் மந்திர வித்தை பில்லி சூனியம் எனப்படும். குட்டிச்சாத்தான், பேய், பிசாசு, இரத்தக்காட்டேரி, மோகினிப்பிசாசு போன்றவற்றைப் 'பில்லி' என்று அழைப்பர். மேற்கூறிய தீய ஆவியின் துணையுடன் மந்திரவாதிகள் மனிதர்கள் மீதும், அவர்கள் உடைமைகள் மீதும் ஏவிவிட்டுப் பாதிப்பை ஏற்படுத்துவது 'ஏவல்' எனப்படும்.

### 1.1 செய்வினை, பில்லி சூனியத்தின் தோற்றம்

இவை எந்தக் காலகட்டத்தில் தோன்றின என்பதை அறுதியிட்டுக் கூறமுடியாது. மந்திரங்களும், மந்திரச் செயல்முறைகளும் ஆதிகுடி மக்களிடம்

வழக்கிலிருந்தன என்பதை மானிடவியலார் குறித்துள்ளனர். தம்மை மீறிய இயற்கைச் சக்திகளையும், தீய ஆவிகளையும் மந்திரச் சடங்கின் மூலம் கட்டுப்படுத்த முடியுமென்ற ஆதிகுடிகள் மனிதனையும் மந்திரத்தால் கட்டுப்படுத்தலாம் என்று நம்பியிருக்கக்கூடும். “அதர்வன வேதமும், இதன் சடங்கு நூலாகிய காசுக சூத்திரமும் (Kasuka-Sutra) மந்திரங்கள் பேய்களையும், சூனியக்காரர்களையும், மந்திரவாதிகளையும் கட்டுப்படுத்த வல்லன என்றும், இவற்றுள் சில எதிரிகளை வெற்றிகொள்ள அல்லது அவர்கட்கு ஊறுவிளைவிக்க வல்லன என்றும், பிறர்க்குத் தீமை விளைவிக்கும் மாயவித்தைகள் அதர்வன வேதத்தில் வன்மையாகக் கண்டிக்கப்படுகின்றன என்றும் கூறுவர்.”[17] இதனால் வேதகாலத்திற்கு முற்பட்டே இந்நம்பிக்கை இருந்து வந்திருக்கிறது என்பதை அறியலாம்.

### 1.2 செய்வினைக்குக் காரணம்

ஊரகங்களில் இரண்டு குடும்பங்களுக்கிடையே பகை ஏற்பட்டால், அல்லது ஒருவரைக் கெடுக்க நினைத்தால் செய்வினை செய்து அவரைத் துன்புறுத்த முற்படுகின்றனர். பொருளாதாரப் போட்டியாலும், பொறாமையாலும் நேரடியாக ஒருவருக்குத் தீமை செய்ய முடியாத நிலையில் இவர்கள் மந்திர வாதிகளின் துணையை நாடுகின்றனர். திடீரென நோய் பரவுதல், மரணம், ஆடு மாடுகள் இறத்தல், பொருளாதார இழப்பு, நிலம் விளையாமை. இவற்றிற்குச் செய்வினை போன்ற மந்திரவாதச் செயல்கள் காரணமாகின்றன என்று நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர். இதற்குப் பரிகாரமாக எதிர்வினை செய்யவும், வினை அகற்றவும் மந்திரவாதிகளை நாடுகின்றனர்.

## 2. மந்திரவாதிகள்

பொதுமக்களில் சிலர் மந்திரம் அறிந்தவர்கள் என நம்பப்படு கின்றவர்கள். செய்வினை போன்ற மந்திரச் சடங்குகளைச் செய்வோர் பொதுவாக மந்திரவாதிகள் என அழைக்கப்படுகின்றனர். சோதிடர், கோயில் பூசாரிகள், பேயோட்டுவோர், சித்தவைத்தியர் முதலியவர்கள் இத்தொழிலை மேற்கொண்டுள்ளனர் என்பதைக் கள ஆய்வில் காணமுடிந்தது. இவர்கள்

முறைப்படியான மந்திரங்களை அறிந்திருக்கவில்லை. தாம் வணங்கும் தெய்வத்தின் பெயரையும் தோற்றப் பொலிவினையும் திரும்பத் திரும்ப உச்சரிக்கின்றனர். இதுவே இவர்கள் கையாளும் மந்திரப் பயன்பாடாகும். இவர்கள் தாங்கள் வாழும் வட்டாரங்களில் உள்ள கருப்பசாமி, மதுரைவீரன், சுடலைமாடன், நொண்டிச்சாமி, முனியாண்டி, முனியையா முதலிய சிறுதெய்வங்களை வணங்குகின்றனர். பேய் பிசாசுகளையும், குட்டிச்சாத்தான், கருப்பு முதலிய தீய ஆவிகளையும் வசியம் செய்து அதன் துணைபெற்று அதன்மூலம் இத்தொழிலைச் செய்து வருகின்றனர்.

### 3.0 செய்வினை வகைகள்

மாந்திரீகம், சமயம், அறிவியல் என்று மூன்று கட்ட வளர்ச்சியை மனித சமுதாயம் கடந்து வந்திருக்கிறது என்று ஃபிரேசர் குறிப்பிட்டுள்ளார். சமயத்தின் முன்னோடி மாந்திரீகமே என அவர் கருதுவது குறிப்பிடத்தக்கது. “மாந்திரீகத்தை மாதிரிச் செய்வினை அல்லது பாவனை மந்திரம் (Imitative magic) என்றும், தீண்டல் செய்வினைஅல்லது தொத்துமந்திரம் (Contagious magic) என்றும் ஃபிரேசர் இருவகைப்படுத்தியுள்ளார்.”[18] எதிரியைத் தண்டிக்க அவனைப் போன்றதொரு உருவம்செய்து, அதற்குத் தண்டனையளித்தால் அது எதிரியைச் சேருமென்பது மாதிரிச் செய்வினை, ஒருவரது உதிர்ந்த முடி அல்லது நகம் கொண்டு மந்திரத்தின் மூலம் அவருக்குத் தீமை செய்ய முடியும் என்பது தீண்டல் செய்வினை. செய்வினைச் செயல்முறைகளின் போது நடத்தப்பட்ட களஆய்வின் மூலம் செய்வினைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

- **3.1** உருவேற்றும் செய்வினை
- **3.2** கருமுறைச் செய்வினை
- **3.3** முகமாற்றுச் செய்வினை

### 3.1 உருவேற்றும் செய்வினை

“மந்திரம் சொல்லி உருவேற்றி அதன்மூலம் எதிரியைத் துன்பம் அடையச் செய்வது உருவேற்றுச் செய்வினை எனப்படும். மந்திரத்தை 108, 1008 முறை என எண்ணிக்கையை அதிகரித்து உச்சரிக்க உச்சரிக்க மந்திரம் அதிகம்

வலிமை பெறும்”[19] என்று ஓலைச்சுவடிகளில் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம். செய்வினையின் போது மந்திரவாதிகள் பிறந்தமேனியுடன் நடுநிசியில் சுடுகாட்டில் அமர்ந்து பூசை மேற்கொள்வர். மந்திரம் உச்சரித்து ஆவிகளை அழைத்து, அவற்றிற்குப் பன்றி, சேவல் போன்றவற்றைப் பலி கொடுப்பர். அதன்பின் எதிரியிடமிருந்து கைப்பற்றப்பட்ட நகம், முடி போன்றவற்றையும், எதிரியின் உருவம் போன்ற பொம்மையினையும் அரிசி மாவால் செய்து வைப்பர். இவ்வாறு பூசையில் வைக்கப்பட்ட செய்வினைப் பொருட்களை மந்திரம் உச்சரித்து உருவேற்றுவர்.

### *3.2 கருமுறைச் செய்வினை*

கருமுறைச் செய்வினை, ஒருவருக்குத் தீங்கு இழைக்கவே பயன்படுத்தப்படுகிறது. இச்செய்வினையில் ‘மை’ முக்கிய இடம் பெறுகிறது. பச்சிலை மூலிகைகள், விலங்குகள், பறவைகளின் பித்துக்கள், பறவைகளின் முட்டைக்கரு மற்றும் ஐந்து மாதக் கர்ப்பிணிப் பெண்ணின் தலைப் பிள்ளைக்கரு இவற்றைக் கொண்டு, மந்திரச் சடங்குகளின் மூலம் இந்த ‘மை’ தயாரிக்கப்படுகிறது. இம் மையைப் பயன்படுத்தி ஒருவருக்குத் தீமை செய்ய முடியுமென்று மந்திரவாதிகள் நம்புகின்றனர். இம் மையைச் சில வேளைகளில் எதிரியின் உணவில் மறைமுகமாகக் கலந்து கொடுத்துவிடும்படியும் கூறுகின்றனர். திருநீற்றுடன் கலந்து போடும் வழக்கமும் உள்ளது. தகடு, தாயத்துக்களில் எதிரியின், நகம், முடி போன்றவற்றை வைத்து மந்திரம் சொல்லி எதிரியின் வீட்டில் புதைத்து விடும்படிச் சொல்கின்றனர்.

### *3.3 முகமாற்றுச் செய்வினை*

ஒருவருக்கு இயல்பாக நடக்க இருக்கும் நற்காரியங்களை மந்திர ஆற்றலின் மூலம் கட்டுப்படுத்தும் முறையை முகமாற்றுச் செய்வினை அல்லது மந்திரக்கட்டு என்பர். இச்செய்வினைக்கு இலக்கானவர் முகம் களையிழந்து காணப்படும் என்றும் இப்பாதிப்பினின்று விடுபட்டால் ஒழிய அவருடைய திடீர் மாற்றத்தை எவரும் சரி செய்ய முடியாது என்றும், இச்செய்வினையைக் கைக்கொள்வோர் கூறுகின்றனர். முகமாற்றுச் செய்யப்பட்டவரை ஒரு

கண்ணாடியில் அரைமணி நேரத்திற்கும் மேலாக முகம் பார்க்கச் செய்வர். அப்போது செய்வினை எடுப்போர் முகமாற்று மந்திரத்தை உச்சரிப்பர். இவ்வேளையில் முகமாற்றுக்கு உட்பட்டவரின் மேல் ஏவிவிடப்பட்ட தீமைகள், கண்ணாடியில் தெரியும் அவருடைய பிரதியுருவத்திற்கு வந்து சேரும். உடனே அக்கண்ணாடியை உடைத்துவிடுவர். கட்டுக்குள் வைக்கப்பட்ட தீமைகள் உடைபட்ட கண்ணாடியில் தெரிந்த பிரதியுருவத்தோடு சென்றுவிடுவதால் பாதிப்புக்குள்ளானவர் பழைய நிலையை அடைந்துவிடுவர் என்று நம்புகின்றனர். இது பாவனைச் சடங்கு (Imitative magic) என்ற வகையில் அடங்கும்.

## 4.0 செய்வினை எடுத்தல்

தமக்கு ஏற்படும் துன்பங்களுக்குச் செய்வினை போன்ற மந்திரவாதச் செயல்களே காரணம் என்று நம்புவோர் அதற்கான மாற்றுத்தேட முற்படுகின்றனர். வினையால் பாதிக்கப்பட்டதாக நம்புவோரின் வீட்டில் தான் வினை எடுத்தல் சடங்கு நடைபெறுகின்றது. மந்திரவாதி கேட்கும் பூசைப் பொருட்களை, வினையால் பாதிக்கப்பட்டவரே வாங்கித் தருவார். பெரும்பான்மையோர் மந்திரவாதிகளிடம் பணத்தைக் கொடுத்து அவர்களையே வாங்கிவரச் சொல்லுகின்றனர். பூ, பத்தி, சூடம், தேங்காய், சாம்பிராணி, முட்டை, கோழி, அல்லது பன்றி இவைகள் போதுமானதாகக் கருதப்படுகின்றன.

வினை எடுத்தல் பூசையில் பாதிக்கப்பட்டோரும் அவர்தம் உறவினரும் கலந்து கொள்ளலாம். வினை செய்தவருக்கே பாதிப்பை உண்டுபண்ணுமாறு எதிர்வினை செய்வோரும் உண்டு. இருவருக்கும் பாதிப்பை உண்டாக்காமல் புதைத்த இடத்திலிருந்து தகட்டை எடுத்துவிடுவோரும் உண்டு. எடுக்கப்பட்ட தகடு சுடுகாட்டில் பன்றி அல்லது கோழியைப் பலியிட்டுப் புதைக்கப்படும். தகடு செய்வதும் எடுத்த தகட்டைப் புதைப்பதும் சுடுகாட்டிலேயே நடைபெறுகின்றன.

## 4.1 செய்வினை எடுக்கும் சடங்கு

அடுக்கடுக்காகப் பாதிக்கப்படுவோா், தமக்குத் துன்பங்கள் தொடா்ந்து வருவது செய்வினையால் தான் என்று கருதுகின்றனா். இத்துன்பங்களை நீக்க அவா்கள் மந்திரவாதிகளின் துணையை நாடுகின்றனா். மந்திரவாதிகள் பூசை மேற்கொண்டு தகட்டை எடுத்துவிட்டதாகக் கூறுகின்றனா். பாதிக்கப் பட்டவா்களும் தமக்கு ஏற்பட்ட துன்பங்கள் இத்துடன் விலகியது என்று நம்புகின்றனா். இறுதியாக பாதிக்கப்பட்டவா்களுக்குத் தாயத்து, கருப்புக்கயிறு போன்றவைகள் மந்திரவாதியால் கொடுக்கப்பட்டுக் கட்டிக் கொள்கின்றனா். இதன்பின் செய்வினை ஆற்றல் நீங்கிவிடும் என்று நம்புகின்றனா்.

**செய்வினைப் பொருட்கள்**

“எதிரிக்குச் செய்வினையின் மூலம் பாதிப்பை உண்டாக்க அவனது முடி, நகம், காலடிமண், துணி, பெயா், புகைப்படம், இராசிபலன் போன்றவற்றை மந்திரவாதிகள் பயன்டுத்துகின்றனா். மனிதனின் முடி, நகம் ஆகியவைகளில் மனிதனின் உயிா் குடியிருப்பதாக ஆதிகுடிகள் நம்பியிருக்க வேண்டும்.”[20] இந்நம்பிக்கையின் காரணமாகவே செய்வினை வைப்பதற்குச் சம்பந்தப்பட்டவரின் முடி, நகம் போன்றவற்றைத் தோ்ந்தெடுக்கின்றனா். உலகின் பல்வேறு இன மக்களிடையே நிலவுகின்ற நம்பிக்கைகள் குறித்து ஆய்வு செய்த ஃபிரேசா் இதனைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளாா்.

“மனிதனின் உடலோடு உறவு கொண்டுள்ள பொருட்களைப் பிரித்தாலும், உடலுக்கும் அப்பொருளுக்கும் உள்ள உறவைப் பிரிக்க முடியாது. பொருளுக்கு ஏதேனும் நடந்துவிட்டால் அது அப்பொருளின் சொந்தக்காரனையும் பாதிக்கும் என்ற அளவிற்கு மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனா். இதனாலேயே முடி, நகம் இவற்றைப் பாதிப்படையச் செய்தால், அப்பாதிப்பு சம்பந்தப் பட்டவருக்கும் சென்று சேரும் என்று நம்புகின்றனா்.”[21] இது தூண்டல் செய்வினை அல்லது தொத்து மந்திரம் (Contagious magic) என்ற வகையில் அடங்கும்.

**வேளாண் நிலங்களுக்குச் செய்வினை வைத்தல்**

மனிதருக்குச் செய்வினை வைப்பது போன்று, வேளாண் நிலங்களுக்குச் செய்வினை வைத்து எதிரியின் நிலம் விளைவதைக் குறைத்தால், பொருளாதார முன்னேற்றத்தைத் தடைசெய்யலாம் என்று கிராமப்புற மக்கள் நம்புகின்றனர். எதிரியின் நிலத்தில் நான்கு திசைகளிலும் மண்ணெடுத்துத் தகட்டில் வைத்து மந்திரம் சொல்லி அதே நிலத்தில் புதைத்துவிடுவர். இவ்வாறு செய்வதால் விளைச்சல் பாதிக்கும் என்றும், இதனைப் போக்க மந்திரவாதிகளை அழைத்து வந்து தகட்டை அகற்ற வேண்டும் என்றும் கூறுகின்றனர்.

"ஆதிமக்களிடம் தோன்றிய இச்செய்வினை, மந்திரம் நம்பிக்கைகள் இன்றைய மக்களிடமும் அதிகமாகக் காணப்படுவதனைக் களஆய்வில் திரு.ஜெகநாதன் என்பவரிடம் சேகரிக்கப்பட்டதன் வாயிலாக உணர முடிகின்றது."[22]

**நாட்டுப்புற மருத்துவம்**

"நாட்டுப்புற மருத்துவத்தினை இயற்கை சார்ந்த நாட்டுப்புற மருத்துவம் (Natural Folk - Medicine), மந்திரசமய மருத்துவம் (Magic religious medicine) என்று டான்யோடர் இருவகைப்படுத்தியுள்ளார்."[23] மந்திரம், சமயம் ஆகிய இரண்டின் அடிப்படையில் மந்திர சமய மருத்துவம் செய்யப்படுகிறது.

"நோய்கள் உண்டாவதற்குப் பெரும்பாலும் தெய்வத்தின் சினம், தீய ஆவிகளின் செயல், மந்திரவாதிகளின் செயல், தீய பார்வைகள் ஆகியவை காரணங்கள் என்று நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர்"[24] இந்நம்பிக்கையில் இவர்கள் மருத்துவச் சடங்குகளைச் செய்கின்றனர்.

நோய் மற்றும் மருத்துவம் தொடர்பான பல்வேறு நம்பிக்கைகள் வழக்கிலிருந்து வருவதனைக் காணமுடிகின்றது. ஒருவனுக்குத் திடீரென மரணம் ஏற்படுவதற்கும், நோய் ஏற்படுவதற்கும், தீய ஆவிகளும், தெய்வத்தின் சினமும் காரணமாகலாம். இதிலிருந்து தங்களைக் காக்க தீய ஆவிகளையும், தெய்வங்களையும் திருப்திபடுத்தும் சடங்கினைச் செய்ய வேண்டுமென்று

நம்புகின்றனர். சான்றாகப் பேயோட்டுதல், தெய்வங்களுக்கு நேர்த்திக்கடன் செய்தல், மந்திரித்தல் இவையனைத்தும் நோயுடனும் மருத்துவத்துடனும் தொடர்புடைய நம்பிக்கைகள் ஆகும்.

**விலக்கு பற்றிய நம்பிக்கை**

விலக்கு என்பது எல்லை வரையறுத்துப் பிரிக்கப்பட்ட MARKED OF என்பதாகும். இயல் கடந்த வல்லமையுடைய அல்லது ஆவிகளுடன் தொடர்பு கொண்ட எந்தப் பொருளும் விலக்கப்பட்டதாக இதற்குப் பொருள் கூறப்படுகிறது. இவ்வாறான விலக்கு பற்றிய நம்பிக்கைகள் சமயத்துடனும், சமூகப் பண்பாட்டுடனும் தொடர்புடையதாகக் காணப்படுகின்றன. விலக்கு எனும் சொல் இரண்டு மாறுபட்டப் பொருளைக் கொண்டது.

புனிதமான விலக்கு - தெய்வப் பொருட்கள் புனிதமானவை அதனைப் பெண்கள் தொடக்கூடாது

புனிதமற்ற விலக்கு - பூப்புக்காலம், குழந்தைப் பேறுகாலம் புனிதமற்றது. அதனால் பெண்கள் கோயிலுக்குள் செல்லக்கூடாது.

மேற்கண்ட விலக்குகளில் புனிதம், புனிதமற்றது என்ற இரண்டு கருத்துக்களில் விலக்குகள் நம்பிக்கைகளாகக் காணப்படுகின்றன. இவ்விலக்கு பற்றிய கருத்துக்கள் சமுதாயத்திற்குச் சமுதாயம் மாறுபாடுடன் கடைப்பிடிக்கப்படலாம். எடுத்துக்காட்டாக பெண்கள் சுடுகாட்டிற்குச் செல்லக்கூடாது என்பதற்குத் தடை (விலக்கு) உள்ளது. ஆனால் பன்றிக் குரவர் இனத்தவர்களில் பெண்கள் சுடுகாடுவரைச் செல்கின்றனர். இதுபோன்று பல்வேறு விலக்குகள் அந்தந்தச் சமுதாயப் பண்பாட்டு மரபிற்கு ஏற்றவாறு கடைப்பிடிக்கப்படுகிறது.

இச்செய்வினை, மருத்துவம், விலக்கு ஆகியவற்றின் ஆதிக்கம் குறைந்த போது, அது பற்றிய எச்சங்கள் மக்களிடையே நம்பிக்கைகளாக வழக்கிலிருந்து வருகின்றன.

இன்றைய காலகட்டத்தில் இலக்கியங்களில் காணப்படும் நம்பிக்கைகள் கடைப்பிடிக்கப்பட்டு வந்தாலும், நம்பிக்கைகளை மூன்று நிலைகளில் பகுத்துக் காண்கின்றனர். அவை,

1. தொழில் தொடர்பான நம்பிக்கைகள்
2. சமயம் தொடர்பான நம்பிக்கைகள்
3. பொதுவான நம்பிக்கைகள் ஆகும்.

## 1. தொழில் தொடர்பான நம்பிக்கைகள்

தொழிலே இன்று உலகத்தை இயக்கும் சக்தியாக வளர்ந்துள்ளது. "வினையே ஆடவர்க்கு உயிரே" என்றும், 'செய்யும் தொழிலே தெய்வம்' என்றும் நம்புகின்றனர். ஒவ்வொரு தொழிலிலும் பல விதமான நம்பிக்கைகள் காணப்படுகின்றன. இவற்றைப் பின்பற்றுவதனால் அதிக இலாபம் பெறுவதுடன் தங்கள் தொழிலும் வளர்ச்சியடையும் என்று நம்புகின்னர். இந்நம்பிக்கைகளை

1.1 கட்டிடத் தொழில் தொடர்பான நம்பிக்கைகள்
1.2 சமையல் தொழில் செய்பவர்களிடம் காணப்படும் நம்பிக்கைகள்
1.3 மளிகைக்கடை வைத்திருப்பவர்கள் பின்பற்றும் நம்பிக்கைகள்
1.4 தொழில் தொடர்பான ஏனைய நம்பிக்கைகள்.

## 1.1 கட்டிடத் தொழில் தொடர்பான நம்பிக்கைகள்

கட்டிடம் நல்லமுறையில் விரைவில் கட்டி முடிப்பதற்கும், எவ்வித இடையூறும் ஏற்படாமலிருக்கவும், அவ்வீட்டில் குடியேறுபவர்களுக்கு நன்மை உண்டாக்கும் பொருட்டும் கட்டிடத் தொழில் செய்வோர் சில நம்பிக்கைகளைப் (வாஸ்து) பின்பற்றுகின்றனர். அவை,

1.1.1 கட்டிடம் கட்டுவதற்கு இடம் தேர்வு செய்தல்
1.1.2 பூசை போடுதல்
1.1.3 பலியிடுதல்
1.1.4 நிலைவைத்தல்
1.1.5 காலம் பார்த்தல் ஆகியவைகளாகும்.

### 1.2. சமையல் தொழில் செய்பவர்களின் நம்பிக்கைகள்

சமையல் கலைஞர்கள் தொழிலைத் தொடங்குமுன் தேங்காய், பழம் வைத்துப் பூசை செய்த பின்னரே சமையல் செய்கின்றனர். சமைத்த பின்னர் அவர்கள் முதலில் ஒரு இலையில் உணவினை வைத்து அன்னலட்சுமிக்குப் படைத்து வழிபடுவர்.

சமையலுக்குத் தேவையான மளிகைச் சமான்களை எழுதும் பொழுது முதலில் உப்பு, மஞ்சள் போன்றவற்றை எழுதிய பின்னரே மற்ற பொருட்களை எழுத ஆரம்பிக்கின்றனர். ஏனெனில் இவை வளமை Fertiling, மறு உற்பத்தி Reproduction நோக்கில் மங்கலப் பொருட்களாகக் கருதப்படுகின்றன.

### 1.3. மளிகைக் கடைக்காரர்கள் பின்பற்றும் நம்பிக்கைகள்

காலை வேளையில் கடை திறந்தவுடன் முதலில் கிடைக்கும் வியாபாரப் பணத்தைப் (போணி) பய பக்தியுடன் ஏற்றுக் கொள்வது மரபு. கடைக்காரர்கள் அதனைக் கண்ணில் ஒற்றிக் கொண்டு பிறகு கடவுளை வழிபட்டவாறே அதனைப் பணப்பெட்டியில் போடுவர்.

“வியாபாரம் நல்லமுறையில் நடைபெறுவதற்குக் கடைமுன் மஞ்சள் நீர் தெளிப்பர். அதேபோன்று வெள்ளி, செவ்வாய் கிழமைகளில் கடைகளுக்குக் கண்ணேறு கழிப்பதனையும் காணமுடிகின்றது. இரவு நேரங்களில் கடையை மூடும்பொழுது தேங்காய், பூசணிக்காய் உடைத்துக் கண்ணேறு கழிப்பதனையும் அறியமுடிகின்றது. இதேபோல் குழந்தைகள், வாகனங்கள் போன்றவற்றிற்கும் கண்ணேறு கழிப்பதாகத் தகவலாளி திரு.நடராசன் (மளிகைக்கடை உரிமையாளர்) அவர்கள் கூறவதன் மூலம் உணரமுடிகின்றது.”[25]

### 1.4. தொழில் தொடர்பான ஏனைய நம்பிக்கைகள்

1. சிறு தொழிற்சாலைகளிலும், பெரிய தொழிற்சாலைகளிலும், இரும்பு வியாபாரம் செய்பவர்களும் ஆயுதபூசை அன்று இயந்திரங்களையும்,

ஆயுதங்களையும் துடைத்து அதற்குத் திருநீறு, குங்குமம் வைத்து, பூசை செய்கின்றனர். இவ்வாறு செய்தால் இயந்திரங்கள் நல்லமுறையில் இயங்கும், உயிர்பலி ஏற்படாது என்று நம்புகின்றனர்.

2. சாதகம் பார்ப்பவர்கள் ஒருவருக்குச் சாதகம் எழுதத் தொடங்குமுன் சாதக நோட்டின் நான்கு பக்கங்களிலும் மஞ்சள் தடவுகின்றனர். அவ்வாறு தடவுவதன் மூலம் அச்சாதகம் சிறந்த பலனைத் தரும் என்று நம்புகின்றனர். நோட்டில் முதலில் பிள்ளையார் சுழி போட்டு, ஓம் என்று எழுதிய பின்னரே எழுதத் தொடங்கினர்.

3. வேளாண்மை தொடர்பான நம்பிக்கைகளாக நாள் பார்த்தல், நேரம் பார்த்தல், சித்திரை முதல் (வருடப்பிறப்பு) தேதியில் பொன்னேறு பூட்டுதல், பொங்கல் வைத்து விதை போடுதல், இல்லையேல் சித்திரை பவுர்ணமி நாளன்று ஆற்றில் அழகர் இறங்கும் நேரத்தில் விடியற்காலையில் விதை போடுகின்றனர். வேளாண் நிலங்களில் பயிர்களின் நடுவில் சோளக்காட்டுப் பொம்மைகளை வைப்பதால் கண்ணேறுபடாது என நம்புகின்றனர்.

4. குழந்தைகள் பற்றிய நம்பிக்கைகளாக பிள்ளைப்பேற்று நோன்பு, கண்ணேறு கழித்தல், காதுகுத்துதல், குழந்தை கொடி சுற்றிப் பிறத்தல் போன்றவைகள் குறிப்பிடப்படுகின்றன. இவை தவிர பருவமடைதல், திருமணம், கர்ப்பிணிப்பெண்கள், விலங்கு, பறவை, மழை, விருந்தினர், நாள் நட்சத்திரம், அங்கபலன், கிழமை, நோய்கள், வீடு, உணவு, ஆடை, அணிகலன், பயணம், ஊழ்வினை, பிறவிக் கொள்கை, விதி, சோதிடம், கனவு, சகுனங்கள், மந்திரங்கள் போன்றவைகள் பொதுவான நம்பிக்கைகளாகக் கருதப்படுகின்றன.

**2. சமயம் தொடர்பான நம்பிக்கைகள்**

மதங்கள் அல்லது சமயங்கள் மனிதர்களைப் பக்குவப்படுத்துவன. சமை என்பதன் அடியாகப் பிறந்தது சமயம். “தெய்வங்களைப் பற்றிய நம்பிக்கைகளும், சடங்குகளும் சமயம் என்ற பொருளில் சுட்டப்படுகின்றன. இயற்கையின் இயக்கங்களைத் தன்னால் கட்டுப்படுத்த இயலவில்லை என்ற நிலையில் ஏதோ ஒரு இயற்கை சக்தி இதனைக் கட்டுப்படுத்துவதாக

நம்பினான். இதனைத் திருப்திபடுத்த சில சடங்குகளைச் செய்தான். இவ்வாறான நம்பிக்கையிலிருந்து சமயம் படிப்படியாக வளர்ந்தது.''[26]

''பாமர மக்களால் ஆழமாக உணரப்பட்டும், பின்பற்றப்பட்டும் ஒரு தலைமுறையிலிருந்து அடுத்த தலைமுறைக்கு அளிக்கப்பட்டு வருகின்ற நம்பிக்கைகள் மற்றும் சடங்குகளின் தொகுதியே நாட்டுப்புறச் சமயம்''[27] என்பர்.

''தெய்வம் தொடர்பானவற்றில் நம்பிக்கை கொண்டு சடங்குகளை மேற்கொள்வது சமயம் என்கிறார்''[28] பொகெட்டு எனும் மானிடவியலார்.

**பல்வகையான சமய வழிபாட்டு முறைகள்**

தமிழ்நாட்டில் ஐவகை நிலத்திற்கும் உரிய தெய்வங்கள் வெவ்வேறாகக் கொண்டு வழிபட்டதாகக் கூறப்படினும் ஒரு நிலப்பகுதியினர் வேறொரு நிலத்திற்குரிய தெய்வ வழிபாட்டையும் மேற்கொண்டுள்ளதை ஆங்காங்கே சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணலாம். பொதுவாக அந்தந்த நிலப்பகுதியில் வாழ்ந்தோர் தத்தம் வாழ்க்கைப் பயன்களுக்கு ஏற்பத் தெய்வ வழிபாட்டை மேற்கொண்டுள்ளனர்.

உலகம் மனிதன் மற்றும் மொழியின் தோற்றத்தைப் பற்றிய செயல்களையும் காலத்தையும் தெளிவாகத் தெரிவிக்க இயலாதவாறே, சமயம் அதன் வளர்ச்சி நிலைகளில் எப்பொழுது எப்படி எங்குத் தோன்றியது, எவ்வாறு வளர்ந்தது என அறுதியிட்டுக் கூற இயலாத ஒன்றாயுள்ளது.

ஞாயிறு, திங்கள் ஆகிய இயற்கையாக ஒளிதரும் பொருட்களையும் இயற்கையாகவோ தம்மாலோ உருவாக்கப்பட்ட தீயினையும் வழிபடு பொருளாகக் கொண்டுள்ளனர்.

ஊன்கண் உடையவர் படிமையிலும் அந்தணர் வேள்வித் தீயிலும் யோகியர் உள்ளத்திலும் இறைவன் வெளிப்படக் கண்டு வழிபடுவர். அந்நிலையில் வேள்வி செய்து சுடர் வளப்பாடு கோடலை, கடவுள் இல்லை என்பாரும் உடன்படும்படியாக,

**"அந்தணர் காணும் வரவு"     (பா.2:68)**

என்னும் தொடர் வேள்வி வழிபாட்டைத் தெரிவிக்கிறது.

பண்டைத் தமிழர் ஆலமரம், கடப்பமரம் ஆகிய இரண்டையும் தெய்வம் உறையும் மரங்களாகக் கருதி அவற்றை மாலையால் அணி செய்து மகிழ்ந்தனர் என்பதனை,

**"ஆலும் கடம்பும் அணிமார் விலங்கிட்ட**
**மாலைபோல் தூக்குஞ் சினை"     (கலி.106:28-29)**

என்பதால் அறியலாம்.

மாண்ட தம் மூதாதையர்களைப் பிதிராகக் கருதி வழிபட்டமையை

**"தென்புலத்தார்"     (குறள்.43)**

**"தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்"     (புறம்.9:3)**

ஆகிய பாடல்களின் தொடர்களால் அறியலாம்.

**சமயம் தோற்றம்**

நாடோடிகளாகவும், வேடுவர்களாகவும், பின்னர் நிலைத்து ஓரிடத்தில் வாழத் தொடங்கியவர்களாகவும் விளங்கிய மக்கட் சமுதாயத்தினர் தாங்கள் பயன்படுத்தும் மரத்தாலான பொருட்களையும் உலோகத்தாலான பொருட்களையும் வழிபாட்டுக்கு உரியனவாகக் கொண்டுள்ளமையை இலக்கியங்கள் வாயிலாகவும் வழக்கத்தினாலும் அறியலாம். இவற்றால் தம் முன்னோர்களுக்கும் தம் தொழிலுக்கும் உறுதுணையாக விளங்கும் கருவிகளுக்கும் நன்றி செலுத்தும் முறையில் மேற்கொண்ட வழிபாட்டின் தொடர்ச்சி சமயமாயிருக்கலாம்.

மக்களின் அறிவு, ஆற்றல் வளர்ச்சிக்கு ஏற்ப இயற்கையில் காணும் வியத்தகு நிகழ்ச்சிகள், தற்செயலாக நிகழும் நிகழ்ச்சிகளைக் கண்டு உண்டாகும் மகிழ்ச்சியினால் மேற்கொள்ளும் செயல்கள் தொடர்வினைகளாகி அவை வழிபாட்டு நெறிமுறைக்கு உட்பட்டவையாய் அமைந்து பின்னர் அவற்றையே சமய நெறிகளாகப் பின்பற்றத் தொடங்கியிருக்கலாம்.

இயற்கையில் காணும் பொருட்களின், நிகழ்ச்சிகளின் செயற்பாட்டைக் கண்டு அடைந்த அச்சத்தினாலும் நெறிகளினின்றும், கூறிய கூற்றுகளினின்றும் தவறினமைக்குப் பரிகாரம் காண வேண்டிய நிலையிலும் மேற்கொண்ட செயல்கள் சமயமாக உருவாகி இருக்கலாம்.

மொகஞ்சோதாரா, ஹரப்பா ஆகிய இடங்களில் அகழ்ந்தெடுக்கப் பட்ட சமயச் சின்னங்கள் வாயிலாகவும் தமிழகத்தில் ஆதிச்ச நல்லூரில் கிடைத்துள்ள சான்றுகள் வாயிலாகவும் கடைச்சங்க காலத்திற்கு முற்பட்ட தலைச்சங்க காலத்தில் இந்திய நாடு முழுவதும் ஒரே விதமான பண்பாடு, சமய வழிபாடு இருந்துள்ளமையை உய்த்துணர முடிகிறது. இடைச்சங்க காலத்தில் படைக்கப்பட்ட தொல்காப்பியம் என்னும் நூலினின்றே ஆரியர் வழிபாடு திராவிடர் வழிபாட்டோடு கொண்ட தொடர்பால் இரண்டும் தனித்தனியானது என்றில்லாமல் இரண்டும் கலந்ததொரு வழிபாட்டு முறையினைக் காண இயலுகிறது.

சங்க இலக்கியங்களில் காணப்படும் வேதம், முதுமொழி என்னும் சொற்கள் ரிக், யசூர், சாமம், அதர்வனம் எனும் நான்கு வேதங்களைக் குறிப்பதாகக் கொள்வதுடன் இந்து சமயத்தில் காணப்படும் எண்ணற்ற தொன்மையான தத்துவக் கருத்துக்களையும் குறிப்பதாகக் கொள்ளலாம்.

மனிதன் தனக்கு அப்பாற்பட்ட சக்திகளிடம் கொண்ட நம்பிக்கையின் விளைவாகப் பல்வேறு வழிபாட்டு முறைகளைச் செய்கிறான். இவ்வழிபாடுகளைச் செய்வதன் மூலம், மனிதன் தான் நினைத்த வினைகள் நிறைவேறும் என்றும், நிறைவேறினால் இன்னது செய்கிறேன் என்றும், நேர்த்திக்கடனாக வேண்டிக் கொள்வதும் மக்களிடையே நம்பிக்கையாகவும் சடங்குமுறையாகவும் இருந்து வருகின்றன. அவை,

1. நேர்த்திக்கடன் சடங்குகள்
2. வழிபாட்டுச் சடங்குகள்
3. மருத்துவமுறைகள்

ஆகியவைகளாகும்.

## 1. நேர்த்திக்கடன் சடங்குகள்

தெய்வங்களை வழிபடும் மக்கள் தங்களுக்குள்ள குறைகளைக் கூறி, அக்குறைகள் நிவர்த்தியாகிவிட்டால் அதற்காக இன்னது செய்வேன் என்று வேண்டிக்கொண்டு குறை தீர்ந்ததும் செய்யப்படும் சடங்கிற்கு 'நேர்த்திக்கடன்' என்று பெயர்.

மக்கள் தங்களது நேர்த்திக் கடன்களைக் குழுவாக இணைந்தும், சில நேரங்களில் தனித்தும் செய்கின்றனர். வழிபாட்டில் நேர்த்திக்கடன் சடங்குகள் இன்றியமையாத இடத்தினைப் பெறுகின்றன. நேர்த்திக் கடன்களைப் பின்பற்றுவதற்குக் காரணம் நம்பிக்கைகள். நேர்த்திக்கடன் சடங்குகளை இருவகையாகப் பிரிக்கலாம்.

1. கூட்டுநிலைச் சடங்குகள்
2. தனித்தநிலைச் சடங்குகள் ஆகும்.

### 1.1 கூட்டுநிலைச் சடங்குகள்

பண்டிகைக் காலங்களில் அனைத்து மக்களும் ஒன்றுகூடிச் செய்கின்ற சடங்குகள் கூட்டுநிலைச் சடங்குகள் என்று கூறலாம். விழாக் காலங்களில் மக்கள் திரளாக ஒன்றுகூடித் தங்களது நேர்த்திக் கடன்களைச் செய்து வருகின்றனர். கூட்டுநிலைச் சடங்குகளாகப் பாதயாத்திரை செல்லுதல், தீச்சட்டி எடுத்தல், பால்குடம் எடுத்தல், முளைப்பாரி எடுத்தல், திருவிளக்குப் பூசை என போன்றவற்றைக் கூறலாம்.

### 1.2 தனித்த நிலைச் சடங்குகள்

பண்டிகை நாட்களில் தங்களுடைய நேர்த்திக்கடன்களைச் செய்யாமல், தங்களால் இயன்றபொழுது ஒவ்வொருவரும் தங்களுடைய சந்தர்ப்பச் சூழ்நிலைகளைப் பொறுத்துச் செய்யப்படுவது தனித்தநிலைச் சடங்குகளாகும். அவை, காணிக்கை செலுத்துதல், வேல் அடித்து வைத்தல், உருவம் வாங்கி வைத்தல், உப்பு வாங்கிப் போடுதல், கயிறு கட்டுதல், சன்னதிக்கு வருதல், விரதம் இருத்தல், மொட்டையடித்தல், பொங்கல் வைத்தல், கிடாய் வெட்டுதல், கோரிக்கைச் சீட்டுக் கட்டுதல் ஆகியவைகளாகும்.

## 2. வழிபாட்டுச் சடங்குகள்

வழிபாட்டுச் சடங்குகளாகக் காப்புக் கட்டுதல், விரதம் மேற்கொள்ளுதல் போன்றவைகள் கடைப்பிடிக்கப்படுகின்றன.

## 3. மருத்துவமுறைகள்

மனிதனின் உடலில் உண்டாகும் நோய்கள் தெய்வத்தின் அருளால் விரைவில் குணமாகும் என்று மக்கள் நம்புகின்றர். நோய் ஏற்படுவதற்கு அம்மனின் சினமே காரணம் என்றாலும் அந்நோய் அதே அம்மனாலேயே நீக்கப்படுகிறது என்று நம்புகின்றனர்.

### 3.1 அம்மை நோய்

அம்மை நோய்கள் மாரியம்மனின் சினத்தால் உண்டாகிறது என்று மக்கள் நம்புகின்றனர். அம்மை நோயினால் பாதிக்கப்பட்டவர்கள் மருத்துவமனை சென்று மருந்து மாத்திரைகள் சாப்பிட்டால் நோய் அதிகரிக்கும் என்று நம்பப்படுகிறது. அம்மை நோய் வெப்பம் மிகுதியால் வரும் நோயாகும்.

அம்மை நோய் வந்தவர்களின் வீட்டில் தினமும் காலையில் ஒருவர் கோயிலுக்குச் சென்று அம்மனை வழிபட்டு கோயில் பூசாரியிடம் தீர்த்தம், திருநீறு முதலியவை வாங்கி வந்து அவர்களுக்குக் கொடுப்பர். மிகுந்த வெப்பத்தால் இந்நோய் ஏற்படுவதால் உப்புக் கலந்த உணவைக் கொடுக்கமாட்டார்கள். ஏனெனில் உடம்பில் அதிக அரிப்பு உண்டாகுமென்று உணவுடன் தயிரும், வெங்காயமும் கொடுப்பர். மேலும் குளிர்ச்சி தரும் பழவகைகள், பனங்கற்கண்டு, இளநீர் போன்றவற்றையும் அதிகமாகக் கொடுப்பர்.

அம்மை நோய் வந்த வீட்டிலும், பக்கத்து வீட்டிலும் சமையல் செய்யும் போது எதையும் எண்ணெய் பயன்படுத்தித் தாளிக்கமாட்டார்கள். வறுக்கவும் மாட்டார்கள். வீட்டினுள் நுழையும்போது சுத்தமாக வரவேண்டும்.

**திருநீறு**

சிவன் கோயில்களில் கொடுக்கப்படும் திருநீறு பாம்புக்கடி, காணாக்கடி, உடல் தடிப்பு, காத்துக்கருப்பு போன்ற பல நோய்களைக் குணப்படுத்துகிறது என்று நம்புகின்றனர். சைவ சமயத்தில் நிலையாமையைக் குறிக்கப் பூசப்படுவது திருநீறு என்பதனை

**“மந்திரமாவது நீறு”**

என திருநீற்றுப் பதிகத்தில் குறிப்பிடப்படுகின்றது.

பாண்டிய அரசனுடைய கடுமையான வெப்பு நோயைத் திருஞானசம்பந்தர் திருநீறு தடவித் தீர்த்ததாகத் தேவாரத்தில் சொல்லப் பெற்றிருக்கிறது.

குறிப்பிட்ட தேவாரப் பாடல்களைப்பாடி, மந்திரங்களை ஓதிய பிறகு மந்திரமான திருநீற்றைப் பூசினால் எந்த நோயும் நீங்கிவிடுமென்று நாட்டுப்புற மக்களிடையே நிலவுகின்றது.

**சீரடித்தல்**

சிறு குழந்தைகளுக்கு வாந்தி வயிற்றுப்போக்கு போன்ற நோய்கள் திடீரென ஏற்பட்டால் இதனைச் சீரடித்துவிட்டது என்று கூறுகின்றனர். கருக்கலைப்பு செய்து தீட்டுடன் இருக்கும் பெண்கள் குழந்தைகளைத் தூக்கினாலோ, குழந்தைகளின் முன் எதிர்ப்பட்டாலோ குழந்தைகள் நோய்க்கு ஆட்பட்டுவிடுவர் என்று நம்புகின்றனர். இதனால் ஏற்படும் நோய்களைச் ‘சீரடித்தல்’ என்கின்றனர்.

இந்நோய்க்கு மந்திரித்தல் மருத்துவமாகக் கருதப்படுகிறது. மந்திரிக்கப்பட்ட திருநீற்றைக் குழந்தையின் வயிற்றில் பூசிவிடுகின்றனர். ஒரு சிலர் தண்ணீரில் திருநீற்றைக் கலந்து குடிக்கச் சொல்லிக் கொடுக்கின்றனர். மந்திரிக்கப்பட்ட தாயத்து, கருப்புக்கயிறு முதலானவைகளைக் குழந்தையின் கையில் கட்டிவிடுவதும் உண்டு. இசுலாமியர்களிடம் மந்திரித்தல் நம்பிக்கை ஆழமாக உள்ளது. இசுலாமிய தர்ஹாக்களில் குழந்தைகளை மந்திரிப்பதற்காக

அனைத்து மதத்தினரும் வருகின்றனர். ஓதுவார்கள் குழந்தைகளுக்கு முன் நின்று மந்திரம் சொல்கின்றனர். பின்னர் ஆலயத்திலுள்ள தீர்த்தத் தொட்டியிலிருந்து தண்ணீர் எடுத்துக் குழந்தைக்கும், பெற்றோருக்கும் கொடுக்கிறார்கள். இதன்பின் நோய் குணமாகிவிடும் என்று மக்கள் நம்புகின்றனர்.

**கண்ணேறு கழித்தல்**

சிலரது தீய பார்வைகள் குழந்தைகளுக்கு உடல் நலக்குறைவை ஏற்படுத்துகின்றன என்று மக்கள் நம்புகின்றனர். இதனைக் 'கண்ணேறுபடுதல்' என்கின்றனர். இந்நோயைக் குணப்படுத்த தெருவின் முச்சந்தியில் மண்ணெடுத்து வந்து உப்புடன் காய்ந்த மிளகாய் சேர்த்துக் குழந்தையின் தலைக்குமேல் மூன்றுமுறை சுற்றி அடுப்பில் போடுவர். அப்போது சடசட என ஒலி எழவேண்டும். இவ்வாறு செய்வதால் உடல்நலக் குறைவை ஏற்படுத்திய தீய பார்வையின் சக்தி, மிளகாய்வற்றல், உப்பு, காலடிமண் இவற்றுடன் வந்துவிடுமென்றும், அடுப்பில் எரிக்கப் படுவதனால் தீய பார்வையின் சக்தியும் எரிக்கப்பட்டுவிடும் என்றும் நம்புகின்றனர். இதனால் குழந்தைக்கு ஏற்பட்ட கண்ணேறு நீங்கிவிடுமென்று நம்புகின்றனர்.

**கட்டுமானம்**

சிவன் கோயில்களில் விசக்கடி சம்பந்தப்பட்ட நோய்களுக்குக் கட்டுமானம் (மந்திரம்) சொல்லித்தான் திருநீறு கொடுப்பர்.

- உடல்நிலை சரியாகும் வரை மூன்று அல்லது ஐந்து வாரங்கள் தொடர்ந்து வந்து திருநீறு வாங்கிப்போட வேண்டும்.
- பத்தியம் நீங்கும் வரை அசைவம் உண்ணக்கூடாது.
- தீட்டு வீடுகளுக்குச் செல்லக்கூடாது. இதனைக் கடைப்பிடித்தால் நோய் குணமாகும் என்று நம்புகின்றனர்.
- "வெப்பு நோயால் துன்பப்படும் குழந்தைகளுக்கும், பேய், பிசாசு முதலியவற்றால் பாதிக்கப்படும் சிறுவர் சிறுமியருக்கும் உடலில் திருநீறு பூசிக் கைமேல் பலன் கண்டிருக்கின்றனர்."[29]

**பொதுவான நம்பிக்கைகள்**

மக்கள் வாழ்வில் பல்வேறு நம்பிக்கைகளைப் பின்பற்றி வருகின்றனர். அவை நல்ல நாட்கள் பார்த்தல், சூலம் பார்த்தல், சத்தியம் செய்தல், மழைச் சடங்குகள், கொடும்பாவி எரித்தல், திருமணச்சடங்குகள், இறப்புச் சடங்குகள், புழங்கு பொருட்கள் பற்றியதான பல்வேறு நம்பிக்கைகள் மக்கள் வாழ்வில் தொடர்பு கொண்டுள்ளதனை உணரமுடிகின்றது.

**நாட்கள் குறித்த நம்பிக்கைகள்**

எந்த ஒரு செயலையும் தொடங்குமுன் நல்லநாள் நல்லநேரம் பார்த்துச் செய்யும் பழக்கம் இன்றளவும் மக்களிடையே இருந்து வருகின்றது. வாழ்க்கையில் நடக்கின்ற எந்த ஒரு செயலாக இருந்தாலும் நன்மையே விளைய வேண்டுமென்று எதிர்பார்க்கிறது மனித மனம். ‘நலிந்தோர்க்கு நாளுமில்லை, கோளுமில்லை என்பது எதிர்நிலை வழக்காகும்’.

தீமைகள் ஏற்படாமலிருக்கவும், தீமையிலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ளவும் வேண்டும் என்பதே நாள் பார்த்துச் செய்தலின் நோக்கமாக அமைகின்றன.

ஒரு செயலைச் செய்யுமுன் அது நன்மையில் நிலைக்க வேண்டும் என்று நினைத்து முன்கூட்டியே இன்னநாள், இன்னகிழமை, இன்னமாதம் என மக்கள் திட்டமிட்டுச் செயல்படுகின்றனர். இதனைத் தொல்காப்பியர்,

**“நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்**
**காலங் கண்ணிய ஓம்படை”**[30]

என்று கூறுவதால் அதற்கு நன்னாள், தீயநாள் என்று எழுதிய இளம்பூரணர் உரையும் பழங்காலத்திலேயே தமிழர் நாள்வழிப் பலன் பார்த்து வந்தனர் என்பதை உறுதி செய்கின்றது.

**“நாளும் கோளும் பார்த்து வினைகளாற்றுவதும், பண்டைய நாகரிகங்களிலும் இன்றைய நடைமுறையிலும் உலகின்**

**எல்லாப் பகுதி மக்களிடமும் நிலவியதனை நாகரிகங்களின் வரலாறுகள் உணர்த்துகின்றன"**[31]

"கிரேக்கர்கள் ஒவ்வொரு செயலுக்கும் நாள், நட்சத்திரம் முதலியன பார்த்துச் செயல்படுவர். விவசாயிகள் நல்லநாள் பார்த்துதான் விதை விதைப்பர். அறுவடை செய்வர். தொழிலாளர்களும் நல்லநாள் பர்த்துதான் தொழில் செய்வர்"[32] என்கின்றனர்.

நல்லநேரம், காலம் பார்த்து எச்செயலைச் செய்தாலும் அது வெற்றியடையும், அதன்மூலம் முழுப்பயனையும் அடையலாம் என்ற நம்பிக்கைகளும் மக்களிடையே உள்ளன. அன்றாட வாழ்விலும் இதனைக் கடைப்பிடித்து வருகின்றனர்.

இயற்கை நிகழ்வுகளைக் கண்டு அஞ்சிய மனிதன் நாளும், கோளும் பார்த்துச் செயல்படும் பழக்கத்தினை உண்டாக்கினான் என்பதற்கு இன்றைய மனிதனின் ஒவ்வொரு முக்கியமான செயலும் காரணமாக அமைகின்றது. இந்நிலை நாகரிகமிக்க, நாகரிகமற்ற அனைத்து மக்களிடையேயும் வழக்கில் உள்ளது.

"சான்றாகத் திருமணம் செய்ய, மாங்கல்யம், வளைகாப்பு, காதுகுத்துதல், பூப்புச்சடங்கு, வீடுகட்ட, புதுமனை புக, விதை விதைக்க, அறுவடை செய்ய, புதிய தொழில் தொடங்க, வாகனம் வாங்க, பயணம் மேற்கொள்ள ஆகிய அனைத்திற்கும் நல்லநாள் பார்த்துச் செய்வது நடைமுறையில் உள்ளது" என்னும் தகவல்கள் கள ஆய்வின் வழித் தகவலாளி திரு.கோவிந்தன் என்பவர் மூலம் தகவல் சேகரிக்கப்பட்டுள்ளது."[33]

"நல்லகாரியத்திற்குத் திதியைக் காட்டிலும் கிழமை, கிழமையைக் காட்டிலும் நட்சத்திரம், நட்சத்திரத்தைவிட இலக்கணம் பலமுடையது எனக் கருதப்படுகிறது. இவை அனைத்தும் நல்லமுறையில் அமையச் செய்வது சிறப்பானதாகக் கருதப்படுகின்றது."[34]

**1. மேல்நோக்கு நாள்**

நாட்களைப் பொறுத்தே பயிர்வகைகளும் வளரும் என்பர். நெல், ராகி, சோளம், கரும்பு, தேக்கு, மா, பலா, தென்னை போன்ற மேல்நோக்கி வளரும் பயிர்வகைகளை மேல்நோக்கு நாட்களில் பயிர் செய்கின்றனர்.

**2. கீழ்நோக்கு நாள்**

நிலத்தில் கீழ் நோக்கிச் செல்லும், மஞ்சள் முதலான கிழங்கு வகைகள் பயிரிடவும், வேருக்குரிய கொடிகள், செடிகள் முதலியவைகள் பயிர் செய்யவும் இந்நாளைத் தேர்ந்தெடுக்கின்றனர். குளம், கிணறு முதலானவைகளை இந்நாளில் வெட்டுவர்கள்.

**3. சமநோக்கு நாள்**

நிலத்தில் மேல்நோக்கியும் இல்லாமல் கீழ்நோக்கியும் இல்லாமல், சமநிலையில் பயிரிடக்கூடிய பயிர்வகைகளைச் சமநோக்கு நாளில் பயிரிடுகின்றனர். செடி, கொடிகள், தட்டைப் பயிறு, பச்சைப்பயிறு போன்ற பயறு வகைகள், கத்தரி, மிளகாய், தக்காளி, வெண்டி போன்ற காய்கறிகளையும் இந்நாளில் பயிர் செய்கின்றனர்.

“உழவு செய்யவும் இந்நாள் சிறந்த நாளாகக் கருதுகின்றனர். இவ்வாறு நாள்பார்த்துச் செய்வதன் மூலம் பயிர்களின் வளம் சிறப்புடையும் என்று தகவலாளி விவசாயி திரு.நாகராசு அவர்கள் குறிப்பிடுகின்றார்.”[35]

**வளர்பிறை தேய்பிறை குறித்த நம்பிக்கைகள்**

அமாவாசையிலிருந்து முதல் பதினைந்து நாட்கள் வளர்பிறையாகவும், பின் பதினைந்து நாட்கள் தேய்பிறையாகவும் மக்கள் கருதுகின்றனர்.

திருமணம் செய்தல், புதிய தொழில் தொடங்குதல், வீடுகட்டுதல், வேளாண்மை தொடர்பான செயல்கள் அனைத்தும் மக்களால் வளர்பிறை நாட்களில் செய்யப்பட்டு வருவதனை அறியமுடிகின்றது.

தேய்பிறை நாட்களில் முடியை வெட்டினால் வளராது என்பதில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டுள்ளனர். தேய்பிறை நாட்களில் செய்கின்ற எந்தச் செயலும் வளர்ச்சி நிலையை அடையாமல் அழிவு (தேய்ந்து) நிலையை ஏற்படுத்தும் என்றும் அதன்மூலம் இழப்புகள் ஏற்படும் என்றும் நம்புகின்றனர்.

"இன்றைய தமிழரின் நடைமுறை வாழ்வில் விதைத்தல், நடுதல், விழாக்கள், திருமணம், வேண்டிய மரங்களை வெட்டுதல் போன்றவற்றை வளர்பிறையிலும், நகங்குறைத்தல், வேண்டாத மரங்களைவெட்டுதல் ஆகியவற்றைத் தேய்பிறையிலும் நிகழ்த்தும் பழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர்."[36]

**ராகு காலம்**

"மக்கள் எந்த ஒரு முக்கிய செயலையும் ராகுகால நேரத்திலும், எமகண்ட நேரத்திலும் தொடங்குவதில்லை. இன்னும் சிலர் சிறுசிறு பயணங்களைக்கூட ராகுகாலம், எமகண்டம் போன்ற நேரங்களில் தொடங்குவதில்லை. மங்கலமில்லாத காலப்பகுதி ராகுகாலம்"[37] என்பது என்கிறார் சோமலே.

**சூலம் பற்றிய நம்பிக்கைகள்**

நல்ல வினைகளுக்கு வெளியூர் பயணம் மேற்கொள்ளும் போது சூலம் பார்த்துச் செல்லும் பழக்கம் இன்றும் மக்களிடையே இருந்து வருகின்றது. சூலம் பார்த்துச் செல்லும் செயல் வெற்றியடையும் என்று மக்கள் நம்புகின்றனர்.

"எத்திசையில் பயணம் செல்கிறோமோ அத்திசையில் சூலமில்லாமல் இருப்பது நல்லது. குறிப்பிட்ட திதிகளுக்கு, கிழமைகளுக்குக் குறிப்பிட்ட திசை பாதிப்பை ஏற்படுத்துவது சூலம் என்று கூறப்படுகிறது."[38]

| | | |
|---|---|---|
| திங்கள், சனி | - | கிழக்கும் |
| செவ்வாய், புதன் | - | வடக்கும் |
| ஞாயிறு, வெள்ளி | - | மேற்கும் |
| வியாழன் | - | தெற்கும் |

என்று மக்கள் கூறுகின்றனர். சூலம் இருக்கும் திசைகளில் பயணம் செய்யக்கூடாது என்பர். இதனைத் திருமந்திரம்

**"வாரத்திற்கு சூலம் வரும்வழி கூறுங்கால்**
**நேரொத்த திங்கள் சனிக்கிழக் கேயாகும்**
**பாரொத்த சேய் புதன் உத்திரம் பாறுநாள்**
**நேரொத்த வெள்ளை குடக்காக நிற்குமே"**[39]

என்ற பாடல் விளக்குகிறது.

**சத்தியம் செய்தல் தொடர்பான நம்பிக்கைகள்**

நாட்டுப்புற மக்கள் பேச்சு வார்த்தைகளையே வாக்குறுதியாக நம்புகின்றனர். அவற்றை நிறைவேற்றுவதும், நிறைவேற்றாததும் வாக்குறுதி அளித்தவரின் மனசாட்சியைப் பொறுத்து என்று கூறுகின்றனர்.

வாக்குறுதியை மீறினால் தெய்வத்தின் தண்டனை கிடைக்கும் என்ற நிலையில் சத்தியம் செய்யும் பழக்கம் தோன்றியிருக்கலாம். சத்தியம் பல்வேறு முறைகளில் செய்யப்படுகிறது. அவை,

1. சூடம் அணைத்துச் சத்தியம் செய்தல்
2. தலையில் அடித்துச் சத்தியம் செய்தல்
3. வேட்டியைப் போட்டு தாண்டுதல்
4. பிள்ளைகள் மேல் சத்தியம் செய்தல்
5. மண்ணை வாரித் தூற்றுதல்
6. காசு வெட்டிப் போட்டுச் சத்தியல் செய்தல்.

சத்தியம் செய்த இருவரும் காலப்போக்கில் நட்புறவு கொள்ள விரும்பினால் இருவரும் கோயில் சென்று பூசை செய்து காணிக்கை செலுத்தி பூசாரியிடம் திருநீறு வாங்கிப் பூசிக் கொள்வர் இதனைச் செய்தபின் இருவரும் முன்புபோல் பேசிக்கொள்வர்.

**மையிட்டுப் பார்த்தல் பற்றிய நம்பிக்கைகள்**

பொருட்கள் காணாமல் போய்விட்டால் 'மை' இட்டுப் பார்க்கும் பழக்கம் மக்களிடையே காணப்படுகிறது. கால்நடைகள், மனிதர்கள், வீட்டுப்

பொருட்கள் போன்ற எது காணாமல் போனாலும் மந்திரச் செயல்களின் மூலம் மை இட்டுப் பார்க்கும் போது அவை இருக்கும் இடம் தெரியும் என்று நம்புகின்றனர்.

'மை' இட்டுப் பார்க்க சிறுவர்களில் விவரம் தெரிந்தவர்களையே அழைத்துச் செல்வர். விபரம் தெரிந்தவர்களாகவும், நாய், தேள், பாம்பு, எந்த விசக்கடியும் உடம்பில் படாமலிருப்பவர்களாகவும் இருக்க வேண்டும் என்று நம்பப்படுகிறது.

இதேபோல் விலையுயர்ந்த பொருட்கள் காணாமல் போய்விட்டால் மந்திரவாதிகளிடம் முட்டை ஓதிக் கொண்டுவந்து வீடுவீடாகச்சென்று தொட்டுக்கும்பிட வைக்கின்றனர். பொருளை எடுத்தவர்கள் பொருளைக் கொடுக்கவில்லையென்றால் இரத்தங்கக்கி இறந்துவிடுவர் என்று நம்புகின்றனர்.

**புழங்கு பொருட்கள், உணவு பற்றிய நம்பிக்கைகள்**

1. திருமணமாகாதவர்கள், திருமணமாகி குழந்தைகள் பெற்றெடுக் காதவர்கள் இரட்டை வாழைப்பழங்களைச் சாப்பிடக்கூடாது. அப்படிச் சாப்பிட்டால் இரட்டைக் குழந்தைகள் பிறக்கும் என்று நம்புகின்றனர்.
2. படுக்கும் பாயை மிதித்தல் அதில் உறங்குபவர்களுக்கு உடம்பு வலிக்கும் என்பர்.
3. தலையணைமேல் உட்கார்ந்தால் கடன் அதிகரிக்கும் என்ற நம்பிக்கை உள்ளது.
4. வாசற்படியில் நின்றுகொண்டு எப்பொருளையும், கொடுக்கக் கூடாது, வாங்கக்கூடாது. கடன்காரர்கள் மட்டும் தான் வாசற்படியில் நிற்பர் என்று நம்புகின்றனர்.
5. உப்பு, தயிர், அரிசி, ஊசி, எண்ணை போன்ற பொருட்களை இரவு நேரங்களில் கொடுக்கக்கூடாது.

6. இரவில் ஊசி கொண்டுத் தைக்கக்கூடாது.

7. சுமங்கலிப் பெண்கள் வளையல், பொட்டு, அணிகலன்கள் இல்லாமல் இருக்கக்கூடாது. கணவனை இழந்தோர் தான் அவ்வாறு இருப்பர். ஆதலால் இது அபச குணமாகக் கருதப்படுகிறது.

8. இடி மின்னல் வரும்போது வெண்கலம், இரும்புப் பொருட்களை வெளியே வைக்கக்கூடாது.

9. தண்ணீரை அதிகம் செலவழிப்பதும், காலை ஆட்டிக்கொண்டே இருப்பதும் வரப்போகும் வறுமைக்கு அறிகுறியாகும்.

**ஆரியர் நம்பிக்கைகளும் சமயச் சடங்குகளும்**

சங்ககாலத் தமிழ் மக்கள் திராவிடக் கடவுளரைத் தாம் விரும்பியவாறு வழிபட்டு வந்தனர். எனினும் யாகங்கள், பலியிடுதல் முதலியனவற்றைக் கொண்ட வைதிக வழிபாட்டு முறைகளையும் தென்னாட்டில் சிறிது சிறிதாகக் கைக்கொள்ளத் தொடங்கினர். அந்தணர் அரசரின் நன்மதிப்பைப்பெற முயன்றனர். தமக்கே சிறப்பாக உரிய கடமைகளை உடையவராயினர். சங்ககால இறுதியில் அவர் சமூக வாழ்வில் முக்கியமான இடத்தைப் பெறத்தொடங்கினர்.

**அந்தணர்**

அந்தணர், முனிவர் முதலியோரின் வாழ்க்கை முறை, பண்பு, கடமை முதலியவற்றைப் பற்றிய செய்திகள் சங்க நூல்களில் உள்ளன. அவர் காலையிலே வேதம் ஓதுவர். அவர் எழுப்புகின்ற ஓசை தாதூண் தும்பி போதைச் சுற்றிச் செய்யும் ரீங்காரத்தை ஒத்திருக்கும் என்பதை,

**“தாதூண் தும்பி பேறு முரன்றாங்**
**கோத லந்தணர் வேதம் பாட”** **(மதுரைக்.655-657)**

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. புறநானூற்றில் அந்தணர் வேதத்தை நன்கு பயின்றனர். அதனால் அவர்கள் அறத்தை விரும்பும் கோட்பாட்டினை உடைய நான்மறை முதல்வர் என்று சிறப்பிக்கப்படுவதனை,

**“அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்”** ***(புறம்.93:7)***

எனும் பாடலடி எடுத்தியம்புகின்றது.

**ஆரிய நம்பிக்கைகளும் வழிபாட்டு முறைகளும்**

புகார் நகரத்து வணிகர் தெய்வங்களுக்கு அவிவழங்குவதிலும் அமரரைப் பேணுவதிலும், பகடு ஓம்புவதிலும் ஈடுபட்டிருந்ததைப் பட்டினப்பாலையில்,

**“அமரர் பேணியும் மாவுதி யருந்தியு**
**நல்லானொடு பகடோம்பிய**
**நான்மறையோர் புகழ்பரப்பியும்”** ***(பட்டினப்.200-202)***

என்பர். இப்பாடலடிகளின் மூலம் பார்ப்பனரின் ஆதிக்கம் சிறப்புற்றிருந்ததை அறியலாம். உலகத்தைக் குறித்துள்ள ஆரியத் தத்துவக் கருத்துக்கள் தமிழ்நாட்டில் புகுந்தமை பெரும்பாணாற்றுப்படையில்

**“நாவலந் தண்பொழில்”** ***(பெரும்பாண்.465)***

என்று குறிப்பிடப்படுகின்றது. வேள்வி செய்து வழிபடும் முறை அக்காலத்தில் வழக்கில் இருந்தது. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைச் சிறப்பிக்கும் எரிக்காட்டூர்த் தாயங்கண்ணனார், அவனுடைய நாட்டில் எங்கும் வேள்வி வேட்டதை

**“அறுதொழில் அந்தணர் அறம்புரிந்தெடுத்த**
**தீயொடு விளங்கு நாடன்”** ***(புறம்.397:20-21)***

என்று குறிப்பிடுகின்றார். சோழன் கரிகாற் பெருவளத்தான் செய்த வேள்விகளைக் கருங்குழலாதனார் அறத்தைத் தெளிய உணர்ந்த ஒழுக்கம் மாட்சிமைப்பட்ட அந்தணரது அவைக்களத்தின் கண் வேள்விக்குறிய முறைமையை நன்றாக அறிந்தோர். அம்முறைமையை முன்னின்று காட்டினர். பலராலும் புகழப்பட்ட தூய இயல்பு பொருந்திய கற்பொழுக்கத்தையுடைய குற்றந்தீர்ந்த குலமகளிர் சூழ்ந்து நின்றனர். வட்டமாகிய வடிவினையுடைய பல படையாற் செய்யப்பட்ட மதில்கள் வேள்விச் சாலையைச் சூழ்ந்திருந்தன.

அச்சாலையுள் பருந்து வடிவமாகச் செய்யப்பட்ட இடத்தில், யூபமாகிய நெடிய கம்பத்தை நாட்டி, வேள்வியைச் செய்து முடித்தான் அரசன் எனப் புறநானூறு (224:4-9) பாடலடிகள் மூலம் விளக்குகின்றார்.

சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறை யாகம் செய்வதற்குரிய விதிகளைக் கேட்டு, விரதம் மேற்கொண்டு, தன் கற்புக்கரசியோடு வேள்வி செய்தான். இதன் பயனாக அவள் வயிற்றிலிருந்த குழந்தை கருவிலிருந்தே அரசுத் துறைக்கு வேண்டுவன எல்லாவற்றையும் பெற்று நல்லறிவோடு விளங்கியது என்பதனைப் (பதிற்.74:1-21) பாடலடிகள் விளக்குகின்றன. இங்ஙனமாக அரசர்கள் வேள்வியை மேற்கொண்டு செய்தனர். வேள்வியில் பங்குபெற்ற அந்தணர்க்குரிய செல்வாக்கும் அதிகரித்தது. இதனால் அந்தணர் வழிமொழிந்து ஒழுகினர் அரசர் என்பதை,

**"ஆறு புரிந் தொழுகும்**
**அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி" (பதிற்.24:7–8)**

எனும் பாடலடிகளும் அந்தணருக்குப் பணிதலே அல்லாமல் பிறருக்குப் பணிதலை அவர்கள் அறியார் என்பதை,

**"பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே" (பதிற்.63:1)**

என்ற அடியும் புலப்படுத்துகின்றது. அரசன் அவர்கள் வாழ்த்தியதை "நீடு வாழ்க" என அந்தணர் வாழ்த்திடும் கையின் முன்னே அரசரின் முடி வணங்கிற்று என்பதனை,

**"இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த**
**நாள்மறை முனிவ ரேந்துகை யெதிரே" (புறம்.6:19–20)**

என்ற அடிகளும் சுட்டுகின்றன. மேலும்,

**"காரி நின்னாடே**
**அழல் புறந்தரூஉ மந்தன ரதுவே" (புறம்.122:2–3)**

எனும் அடிகளில் காரியினுடைய நாடு வேள்வித் தீயைப் பாதுகாக்கும் அந்தணர்க்குரியது என்ற கொள்கையும் பரவியது என்று புறநானூறு புலப்படுத்துகிறது.

ஊழ்வினையைப் பற்றிச் சில பாடல்கள் இடம்பெற்றுள்ளன. ஊழ்வினையின் உண்மையை முதலில் உணர்ந்தவர்கள் திராவிடரா அல்லது ஆரியரா என்பதை அறியமுடியவில்லை. "கன்மன்" என்ற வடசொல் உணர்த்தும் பொருளைச் சங்க நூல்கள் "ஊழ்" என்ற சொல்லினால் உணர்த்துகின்றன. "ஊழ்" என்று தமிழ்ச்சொல் அதற்குரிய பழமையான கருத்தை அறிய முடியவில்லை. பொருநராற்றுப்படையில் பொருநனைப் பார்த்துப் புலவர் கூறுவர். "உன்னை நான் காணும்படி செய்தது நல்வினைப் பயனாகும்" என்பதனை,

**"ஆற்றெதிர்ப் படுதலு நோற்றன் பயனே"** **(பொருந.59)**

எனும் அடி உணர்த்துகிறது.

குறிஞ்சிப்பாட்டில் தலைவனுடன் ஏனையுலகத்தில் இயைவது தனக்கு உண்டெனத் தலைவி தன்னைத் தேற்றிக் கொள்வதிலிருந்து அக்காலத்தில் மறுபிறப்பில் நம்பிக்கை இருந்ததை,

**"ஏனையுல கத்து மியைவதா னமக்கென**
**மானமர் நோக்கங் கலங்கிக் கையற்று"** **(குறிஞ்சி.24–25)**

எனும் அடிகள் புலப்படுத்துகின்றன.

கடத்தற்கரிய போரைச் செய்யும் வலியினையுடையோர் நீண்ட அலையையுடைய வேலாற் புண்ணுற்று வடுப்பட்ட உடம்போடு மேலுலகம் புகுவர் எனப் பரணர் கூறுவதால் மறுபிறப்பில் நம்பிக்கை இருந்ததெனத் தெரிகின்றது. இதனை,

**"ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின்**
**நீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு**
**வாரா உலகம் புகுத லொன்றென"** **(புறம்.341:13–15)**

எனும் பாடலடிகள் சுட்டுகின்றன.

சங்க காலத்தில் தமிழகத்தில் அந்தணரும், முனிவரும் வாழ்ந்தன ரெனினும் அவர்கள் செல்வாக்குப் பிற்காலத்தில் இருந்த அளவுக்கு மேம்பட்டிருக்கவில்லை என்பதை அறியமுடிகிறது.

**இன்றைய நிலையில் நம்பிக்கைகள்**

இன்றைய கால கட்டத்தில் நாட்டுப்புற மக்களிடையே தொழில், திருமணம், சகுனம், கனவு, வழிபாடு, உணவு, உடை, இறப்பு போன்றவைகளின் அடிப்படையில் நம்பிக்கைகள் நிலவி வருகின்றன.

- திருமணச் சடங்குகளில் விதவைப் பெண்கள் கலந்து கொள்வதை அமங்கலமாகக் கருதுகின்றனர்.
- இரண்டு திருமணங்கள் ஒரே வீட்டில் நடந்தால்; ஒன்று சிறந்து விளங்கும் மற்றொன்று தாழ்ந்து விடும் என நம்புகின்றனர்.
- உரை பற்றிய நம்பிக்கைகளில் ஆடையைத் தாண்டக்கூடாது, கோவிலில் சட்டை போடக்கூடாது, கிழிந்த ஆடையை அணியக் கூடாது, பழைய துணிகளைப் பிறருக்குக் கொடுக்கவும் கூடாது எனவும் நம்புகின்றனர்.
- கனவுகள் தொடர்பான நம்பிக்கைகள் மக்கள் வாழ்வில் அதிகமாகக் காணப்படுகின்றன. அதிகாலைக் கனவு பலிக்கும் என்றும் பகல் கனவு பலிக்காது என்றும் நம்புகின்றனர். கனவில் இறைச்சி, நெற்குவியல் போன்றவைகள் வந்தால் துன்பம் அல்லது நோய்க்கு அறிகுறி என்று நம்புகின்றனர். கனவில் மரணம் என்றால் வாழ்க்கை சிறக்கும் என்றும், திருமணம் என்றால் இழப்பு ஏற்படும் என்றும் நம்புகின்றனர். உறவுகளில் கனவில் சிலர் வந்தால் நல்லது என்றும் சிலர் வந்தால் கெட்டது என்றும் கருதுகின்றனர்.
- சகுனங்கள் தொடர்பான நம்பிக்கையில் நல்ல சகுனம், தீய சகுனம் என இருநிலைகள் உள்ளன. நல்ல சகுனங்களாக சுமங்கலிப்பெண் வருதல், நிறைகுடத்துடன் வருதல், நரிமுகத்தில் விழித்தல், கழுதை கத்துதல், பல்லி கத்துதல், மணிஓசை கேட்டல், தும்மல், இரு பாம்பு பிணைந்திருப்பதைப் பார்த்தல், பசு கன்றுக்குப் பால் கொடுத்தல் போன்றவைகள் கருதப்படுகின்றன.

“தீய சகுனங்களாக பன்றி, பூனை குறுக்கே செல்லுதல், கணவனை இழந்த பெண்கள் எதிர்ப்படுதல், காலிக் குடத்துடன் வருதல், தலைவிரிக் கோலம், நாய் ஊளையிடல், முக்காடு போட்டவர் எதிர்ப்படுதல் ஆகியன நம்பப்படுகின்றன எனத் தகவலாளி திரு.உ.பஞ்சவர்ணம் அவர்கள் குறிப்பிடுகின்றார்.”[40]

- கர்ப்பிணிப் பெண்கள் தலைவாசலில் தலைவைத்துப் படுக்கக் கூடாது என்றும், கிழிந்த ஆடையை இரவில் ஊசி கொண்டு தைக்கக்கூடாது என்றும் நம்புகின்றனர். ஊசி கொண்டு தைத்தால் குழந்தையை அறுவை சிகிச்சை மூலம் வெளியில் எடுத்து அவர்கள் வயிற்றில் தையல் போடுவர் என்று நம்புகின்றனர்.
- கர்ப்பிணிப் பெண்கள் விரும்பிய பொருளை வாங்கிக் கொடுக்க வேண்டும், இல்லையேல் குழந்தையின் காதில் சீல் வடியும் என்று நம்பப்படுகிறது.
- தவளை கத்தினால் மழைவரும், தட்டான் தாழப்பறந்தால் மழைவரும் என்பன மழை பற்றிய நம்பிக்கைகளாகக் கருதப்படுகின்றன.
- காகம் கரைந்தால் விருந்தினர் வருவர் எனும் நம்பிக்கை வழக்கிலிருந்து வருவதனைக் காணமுடிகிறது.
- அங்க பலன் பற்றிய நம்பிக்கைகளாக, கையில் ஆறு விரல் இருந்தால் யோகம், சுருட்டை முடி சோறு போடும், மாறுகண் அதிர்ஷ்டம், கோரை முடி கோத்திரத்திற்காகாது என நம்புகின்றனர்.
- கிழமை பற்றிய நம்பிக்கைகளாக ‘பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது’ வெள்ளி, செவ்வாய் முடிவெட்டல் கூடாது, வெள்ளிக்கிழமை இரவு எந்தப் பொருளும் பிறருக்குக் கொடுக்கக் கூடாது. சனிக்கிழமை பிணம் புதைத்தால் கோழியையும்

*சேர்த்துப்புதைத்தல், (சனிப்பிணம் தனியே போகாது எனும் அடிப்படையில் இவ்வாறு செய்யப்படுகிறது) வெள்ளிக்கிழமை ஆண் குழந்தை பிறந்தால் கொள்ளிக்கு உதவாது என்றும் நம்பிக்கைகள் உள்ளன.*

- *வீடு பற்றிய நம்பிக்கைகளாக, இரவில் வீடு பெருக்கிக் குப்பையை வெளியில் போடக்கூடாது. (ஏதேனும் பொருட்கள் தொலைந்து இருந்தால் குப்பையோடு சென்றுவிடும் என்ற விழிப்புணர்வும் இருக்கலாம்)*
- *கர்ப்பமான பெண்கள் வீட்டில் குளவி மண்கூடு கட்டினால் பெண் குழந்தை பிறக்கும் என்று நம்புகின்றனர். கர்ப்பிணிப் பெண்கள் எட்டாவது மாதம் தாய்விடு செல்லக்கூடாது. இரவில் உப்பு, அரிசி, எண்ணெய் முதலியவற்றை மற்றவருக்குத் தரக்கூடாது. தந்தால் தரித்திரம் வரும் என்று நம்புகின்றனர்.*
- *நட்சத்திரம் பற்றிய நம்பிக்கைகளாக பரணி நட்சத்தில் பிறந்தவன் தரணி ஆள்வான் எனவும், அவிட்ட நட்சத்திரத்தில் குழந்தை பிறந்தால் தந்தைக்கு ஆகாது எனவும் (சித்திரையப்பன் தெருவிலே) என்று குறிப்பிடுகின்றனர்.*
- *சகுனங்களில் மிக முக்கியமானதாகப் பல்லி சகுனம் கருதப்படுகிறது. நமது சமுதாயத்தில் பல்லி சகுனம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததால் ‘கௌளி சாஸ்திரம்’ என்ற நூலையே நமது முன்னோர்கள் இயற்றியுள்ளனர். பல்லி சகுனம் என்பது சொல் பலன், விழும் பலன் என இரண்டு வகைப்படும். பல்லி சொல் எண்ணிக்கையைக் கொண்டு பலன் சொல்லுவர். எண்ணிக்கை மட்டுமின்றித் திசையை வைத்தும் கிழமையை வைத்தும் பலன் சொல்லுவர். பல்லி விழும் இடங்களை வைத்துப் பலனையும் நமது முன்னோர்கள் கண்டுணர்ந்துள்ளனர்.*

| | | |
|---|---|---|
| சிரசில் | - | மரணம் |
| மூக்கில் | - | நோய் |
| வயிற்றில் | - | குழந்தை |
| குறியில் | - | கேடு |
| முழங்காலில் | - | கலகம் |
| பாதத்தில் | - | பிணி |
| இடக்கையில் | - | மரணம் |
| வலக்கையில் | - | பெரிய சாவு |
| உடம்பில் | - | தீர்க்காயுள் |

பல்லி உடம்பில் விழும் இடத்திற்கு இடம் வேறுபட்ட பலனை உணர்த்துகின்றன. இத்துடன் பல்லிகளின் வகை, நிறம், இருப்புநிலை முதலியவற்றையும் தெரிந்துகொள்ள வேண்டும். மேற்கண்ட நம்பக்கைகள் அனைத்தும் இன்றைய மக்கள் வாழ்வில் கடைப்பிடிக்கப்பட்டு வருவதனைக் காணமுடிகின்றது.

**நம்பிக்கை பற்றிய பழமொழிகள்**

* பரணியில் பிறந்தவன் தரணி ஆள்வான்.
* தொட்டில் பழக்கம் சுடுகாடு வரைக்கும்.
* சனிப்பிணம் தனியே போகாது.
* கொடிசுற்றிப் பிறந்தால் கோத்திரத்திற்காகாது.
  மாலை சுற்றிப் பிறந்தால் மாமனுக்கு ஆகாது.
* தாரமும் குருவும் தலைவிதிப்படி.
* தைப்பிறந்தால் வழிபிறக்கும்.
* வெள்ளிக்கிழமை ஆண் குழந்தை கொள்ளிக்காகாது.
* பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது.
* பகற் கனவு பலிக்காது.
* யாரு கடன் இருந்தாலும் மாரி கடன் ஆகாது.

* காகம் கத்தினால் விருந்தினர் வருவர்.
* கல்லடி பட்டாலும் கண்ணடி படக்கூடாது.

**சகுனங்களும் நம்பிக்கைகளும்**

வாழ்க்கையில் நிகழவிருக்கும் நன்மை தீமைகளை முன்னரே அறிவிக்கும் குறியீடுகள் சகுனங்கள் என்று அழைக்கப்படுகின்றன. சகுனம் பார்க்கும் வழக்கம் உலகெங்கிலும் காணப்படுகிறது. ஆங்கிலத்தில் சகுனங்களை ஓமன்கள் (Omens) என்று கூறுவர். சகுனங்களை நிமித்தங்கள் என்றும் சொல்லுவர்.

நிமித்தங்கள் நம்பிக்கையின் பாற்பட்டவை. நிமித்தங்களை அதன் பயன்பாட்டு விளைவு கருதி இருவகையாகப் பிரிக்கலாம். நற்செயலை அறிவிக்கும் குறியினை நன்னிமித்தம் என்றும், தீச்செயலை அறிவிக்கும் குறியினைத் தீநிமித்தம் என்றும் வகைப்படுத்தலாம்.

இதனையே நாட்டுப்புற வழக்கில் நல்ல சகுனங்கள் (Good Omens) என்றும், தீய சகுனங்கள் (Ill Omeans) என்றும் அழைக்கின்றனர்.

ஒரு செயலைத் தொடங்கும் போது நல்ல சகுனம் தோன்றினால் அச்செயல் நன்மையாக முடியும் என்றும், தீய சகுனங்கள் தோன்றினால் அச்செயல் தோல்வியுறும் என்றும் மக்கள் நம்புகின்றனர். சான்றாக,

1. கன்னிப்பெண் நிறைகுடத் தண்ணீருடன் வருதல்
2. வண்ணான் அழுக்குத்துணி மூட்டையைக் கொண்டு வருதல்
3. பிணம் எதிர் வருதல்
4. சுமங்கலிப் பெண் எதிர்வருதல்

போன்றவைகள் நல்ல சகுனங்களாக கருதுகின்றனர்.

**தீய சகுனங்கள்**

1. பூனை / பன்றி குறுக்கே செல்லுதல்
2. விதவை எதிர் வருதல்

3. எங்கே போகின்றாய் என்று கேட்டல்

4. தலைவிரி கோலம் / அழுகைக் கண்ணீர்

போன்றவைகள் தீய சகுனங்களாக நம்புகின்றனர்.

“சகுனங்களைச் சிந்தனை நிலை, செயல்நிலை, சொல்நிலை என்ற மூன்று நிலைகளில் காண வேண்டும் என்பார்”[41] சு.சக்திவேல்.

**சிந்தனை நிலைச் சகுனம்**

ஏதேனும் ஒன்றைப் பற்றியோ, பொருளைப் பற்றியோ சிந்தித்துக் கொண்டிருக்கையில் ஏற்படும் சகுனங்கள் சிந்தனை நிலைச் சகுனம் என்பர்.

**சொல் நிலைச் சகுனம்**

ஏதேனும் ஒன்றைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும் பொழுது ஏற்படும் சகுனம் சொல்நிலைச் சகுனம் என்பர்.

**செயல் நிலைச் சகுனம்**

ஒருவர் ஏதேனும் ஒரு செயலை முன்னிட்டோ, பொருளை வாங்கவோ, நற்செயல் புரியவோ நாடிச்செல்லும் வழியில் காண்கின்ற, எதிர்ப்படுகின்ற, கேட்கின்ற சகுனத்தைக் கொண்டு பயணத்தின் பின்விளைவை முன்னதாகவே அது வெற்றிபெறுமா, தோல்வியுறுமா என்பதை அறிந்து கொள்ளலாம். இதனைச் செயல் நிலைச் சகுனம் என்பர்.

ஒருவர் காணுகின்ற அல்லது கேட்கின்ற சகுனம் நல்லதாக இருப்பின், அவரின் பயணம் வெற்றியடையும், அதன் பயனும் நன்மை அளிப்பதாக அமையும்.

அது தீய சகுனமாக இருக்குமானால், பயணமும் தோல்வியுறும், அதன் பயனும் பயனளிக்காது. சகுனம் தீமை பயக்கும் என உணர்த்தினால் பயணத்தை மேற்கொண்டு தொடராமல் வீட்டிற்குத் திரும்புவது நல்லது. வீட்டில் வந்து ஐந்து அல்லது பத்து நிமிடங்கள் அமர்ந்து நீர் அருந்திவிட்டுச் சென்றால் நன்மை பயக்கும் என நம்புகின்றனர்.

இன்றைய நிலையில் பெரும்பாலும் வெளியில் புறப்படும்போது சகுனங்கள் அதிகமாப் பார்க்கப்படுகின்றன.

**நல்ல சகுனங்கள்**

ஒருவர் வெளியில் செல்லும்போது சுமங்கலிப்பெண் எதிர்படுவது நல்ல சகுனமாகக் கருதப்படுகிறது. சுமங்கலிப் பெண் எதிர்பட்டால் எடுத்த செயல் மங்கலகரமாக முடியும் என்று நம்புகின்றனர். சுமங்கலிப் பெண் என்பவர் பலருக்கும் நன்மை செய்யக் கூடியவளாகவும், மக்களைப் பெறக் கூடியவளாகவும், பொருட்செல்வம் வளரக் காரணமானவளாகவும் வளமை, குழந்தைப்பேறு, வாரிசு உருவாக்கம் ஆகிய நிலைகளில் கருதப்படுகிறாள்.

சுமங்கலிப் பெண்களைக் கண்டால் அவரது நலன் முழுவதும் எதிர்படுபவரைச் சென்று சேரும் எனும் நம்பிக்கையில் இவர்கள் எதிர்படுவது நல்ல சகுனமாகக் கருதப்படுகின்றது. சுமங்கலிப் பெண்கள் பூ, பொட்டு போன்ற மங்கலப் பொருட்களை அணிந்தவர்களாக இருப்பதைக் கண்டால் வலிமை, மறு உற்பத்தி நிலைகளில் நன்மை பயக்கும் என நம்புகின்றனர்.

**நிறைகுடம்**

ஒருவர் வெளியில் செல்லும்போது எதிரே கன்னிப்பெண் தண்ணீர் நிறைந்த குடத்துடன் வருவது நல்ல சகுனம் என்று கருதப்படுகின்றது. நிறைகுடநீரைப் பார்த்துச் சென்றால் நன்மை விளையும் என்று நம்புகின்றனர்.

**தும்மல், மணி ஓசை**

இறைவன் ஒலி (நாதம்) வடிவானவன். ஒலிகளுக்குப் பல்வேறு சிறப்புக்கள் உள்ளன. ஓம் என்னும் ஒலி மிகுநலன் பயக்கும் என்பது இந்து சமய நம்பிக்கை. “ஒரு செயலைத் தொடங்கும் போதும் சிந்திக்கும் போதும் இரட்டைத் தும்மல், மணி ஓசை எத்திசையில் இருந்து கேட்டாலும் அது நல்ல சகுனமாகக் கருதப்படுகிறது. இவைகளின் மூலம் நன்மை விளையும், மகிழ்ச்சி கிட்டும், லாபம் ஏற்படும் என்று நம்புவதாகத் தகவலாளி திரு.தேசிங்குராஜன் அவர்கள் குறிப்பிடுகிறார்.”[42]

**ஐயையோ எனும் ஓசை**

ஒருவர் ஒரு செயலைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருக்கும் போதும், வீட்டை விட்டு வெளியேறும் போதும் ‘ஐயையோ’ எனும் ஓசையைக் கேட்க நேர்ந்தால் அது தீய சகுனமாகக் கருதப்படுகிறது. இத்தகைய அவல ஓசையைக் கேட்க நேர்ந்தால் செய்யத் தொடங்கிய செயலைக் கைவிட வேண்டும் என்று கூறுகின்றனர்.

பறவைகள், விலங்குகளின் செயல்கள் வழி நிமித்தம் காண்பதும் மக்களிடையே உள்ளன. பறவைகளில் நன்மை பயப்பவையாக கருடன், காக்கை போன்றவைகளும், தீமை பயப்பதாக ஆந்தையையும் குறிப்பர்.

விலங்குகளில் நன்மை பயப்பவைகளாக யானை, நரி, நாய், குதிரை, கழுதை, பாம்பு முதலியவை இடம்பெற்றுள்ளன. தீமை பயப்பவைகளாக, பூனை, பன்றி, பல்லி போன்றவைகள் காணப்படுகின்றன.

**பல்லி கத்துதல்**

ஒரு செயலைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கும் போதும், செயல்படும் போதும் குறிப்பிட்ட திசைகளில் பல்லி கத்தினால் நல்ல சகுனம் என்று நம்புகின்றனர். தீயசெயல்களை நினைக்கும் போது கத்தினால் தீமை விளையும் என்று நம்பப்படுகிறது.

**தீய சகுனங்கள்**

ஒருவர் பயணம் மேற்கொண்டு செல்லும் போது அவர் காணக்கூடாத சகுனங்களைக் கண்டால் அது தீய சகுனம் அல்லது அபசகுனம் என்று கூறப்படுகிறது. இத்தகைய சகுனங்கள் எதிர்படுவதால் ஏற்படும் பலன்கள் தீமை விளைவிக்கும். அவற்றின் விளைவாக பொருள் இழப்பு, காயம்படுதல், விபத்துக்குள்ளாதல், நம்பிக்கை மோசடி, இறப்பு போன்ற பல தீமைகள் உண்டாகும் என்று நம்புகின்றனர்.

ஏதேனும் ஒரு செயலைப் பற்றியோ, ஒரு பொருளைப் பற்றியோ சிந்தித்துக் கொண்டிருக்கும் போது இந்தத் தீய சகுனங்கள் ஏற்பட்டால் அச்செயலைச் செய்யாது விட்டுவிட வேண்டும் என்று நம்புகின்றனர்.

**விதவை**

கணவனை இழந்து பூவும், பொட்டும் இன்றி அணிகலன்களை நீக்கி, வெண்ணிற ஆடை உடுத்தி வாழும் பெண்டிரைக் கைம்பெண்டிர் என்று கூறுவர். இது பழங்கால மரபு. இவர்களை இன்று விதவைகள் என்று கூறுகின்றனர். விதவைகளைச் சகுனத் தடையாக மக்கள் கருதுகின்றனர்.

கணவனை இழந்தவர்களை எந்த ஒரு சுப நிகழ்ச்சிகளுக்கும் முன் நிறுத்துவதில்லை. ஏனெனில் இவர்கள் வாழ்த்தினால் வாழ்த்து ஏற்பவர்களும் விரைவில் இவர்களைப் போல் ஆகிவிடுவர் என்று நம்புகின்றனர். இன்றைய கால கட்டத்தில் இவர்கள் மங்கல அணிப் பொருட்களை மட்டும் அணிய மறுக்கின்றனர். பல பெண்கள் வெள்ளை ஆடையைத் தற்காலத்தில் உடுத்துவதில்லை, உடுத்தினால் இவர்களைத் தீநிமித்தமாக மக்கள் கருதுகின்றனர்.

**தலைவிரி கோலத்தில் பெண் எதிர்படுதல்**

ஒருவர் பயணத்தின் போது எதிரே தலைவிரி கோலமாக பெண்கள் நின்றால் நினைத்த செயல் நடைபெறாது என்று நம்புகின்றனர். தலையை விரித்தபடியே, விரித்த தலையை ஆற்றியபடியோ இருக்கும் பெண் எதிர்வருவது அமங்கலமான செயலாகக் கருதப்படுகின்றது.

பெண்கள் தங்கள் கணவனை இழந்து, விதவையானால் அவர்களின் கூந்தலை அவிழ்த்துப் பூவைக் கீழே இறக்குவார்கள். விரித்த கூந்தலுடன் வருபவர்களைக் கண்டால் துன்பங்கள் நிகழும் என்று நம்புகின்றனர். தான் மேற்கொண்ட செயல்கள் நிறைவேறாது என்று பெண்கள் கூந்தலை விரித்துப் போடுவதைத் தீய சகுனமாகக் கருதுகின்றனர்.

பாஞ்சாலி, கௌரவர்களின் சபையில் அவள் கூந்தலை அவிழ்த்துச் துச்சாதனன் மானபங்கப்படுத்தினான். அதன் பின் விளைவுகளில்

பாண்டவர்களும், கௌரவர்களும் எவ்வளவு துன்பம் அடைந்தார்கள் என்பதைக் கொண்டு கூந்தல் விரித்தலை அபசகுனமாகக் கருதிய நிலை ஏற்பட்டிருக்கக்கூடும். புறநானூற்றிலும் பெண்கள் தலைவிரித்தலைத் தீநிமித்தமாகச் சுட்டுவதனைக் காணமுடிகிறது.

**மொட்டைத்தலை எதிர்படுதல்**

ஒருவர் வெளியில் புறப்படும் பொழுது தலையை மொட்டையடித்துக் கொண்டிருக்கும் நபர்கள் எதிர்பட்டால் அவர்கள் மேற்கொள்ளும் செயல் தீமை விளைவிக்கும் என்று நம்புகின்றனர். இவர்கள் எதிர்படுவதால் பொருள் இழப்பும் பண விரயமும் உண்டாகும் என்று நம்பப்படுகிறது.

**முக்காடிட்டவர்கள் எதிர்படுதல்**

பயணமாக ஒருவர் வெளியில் செல்லும்போது முக்காடு போட்டவர்கள் எதிர்பட்டாலும் தீய சகுனமாகக் கருதுகின்றனர். பொதுவாக ஒருவர் இறந்தபின் உடலைச் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்லும்போது அவரின் தலை, உடல் துணியால் மூடப்பட்டிருக்கும். இறந்த நிகழ்ச்சிக்குச் செல்லும் பெண்கள் முக்காடிட்டுச் செல்வர். அதனால் அபசகுனமாகக் கருதுகின்றனர்.

**எங்கே போகிறீர்கள்**

ஒருவர் வெளியில் கிளம்பும் போது அவரது உறவினர்கள் யாரும் "எங்கே போகிறீர்கள்" என்று கேட்கக்கூடாது. அப்படிக் கேட்டால் வெளியில் சென்று முடிக்க வேண்டிய எந்தச் செயலும் நிறைவேறாது. ஏதேனும் குழப்பம் உண்டாகும் என்று மக்கள் நம்புகின்றனர்.

**தொகுப்புரை**

நம்பிக்கைகள் பெரும்பாலும் அச்ச உணர்வின் காரணமாகத் தோன்றியவை. இவை மனிதனுடைய வாழ்வோடு இரண்டறக் கலந்து

விட்டதால், அவற்றைப் பிரிப்பதென்பது இயலாது. இயற்கையிடமிருந்து நன்மைபெற வேண்டும். கவலைகள் நீங்க வேண்டும் என்பனவற்றால் நம்பிக்கைகள் தோன்றின எனலாம்.

சில குடும்பங்களுக்குள் உண்டான பகை காரணமாகவும், அதன் மூலம் ஒருவரை ஒருவர் பழிவாங்கும் நோக்கத்துடனும் செய்வினை போன்ற மந்திரச் சடங்குகள் தோன்றியுள்ளன. பகை உணர்வின் தொடர்ச்சியால் செய்வினை செய்வது இன்றும் பல சிற்றூர்களில் பெரும்பான்மையும், நகரங்களில் சிறுபான்மையும் காணப்படுகின்றன. இரு குடும்பங்களுக்கு இடையே ஏற்படும் பகை உணர்வின் காரணமாக இந்நம்பிக்கை வளர்ந்து வருகின்றது.

தற்காலத்தில் செய்வினைகளைப் பெரும்பாலும் தீமை செய்வதற்காகப் பயன்படுத்துகின்றனர்.

உருவேற்றுச் செய்வினை, கருமுறைச் செய்வினை ஆகிய மூன்று வகைகளில் கருமுறைச் செய்வினையே இன்று பெரிதும் வழக்கில் உள்ளது.

செய்வினையால் ஏற்படும் பாதிப்புக்கு அதன்மீது கொண்ட நம்பிக்கையின் அளவும், தொடர்புடையவரின் உளவியலும் காரணமாகின்றன.

மக்கள் தாங்கள் மேற்கொள்ளும் தொழில் எதுவானாலும் அதில் மிகுந்த இலாபம் அடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் பல நம்பிக்கைகளைப் பின்பற்றுகின்றனர்.

கட்டிடத் தொழில் செய்வோர், கட்டிடம் கட்டி முடிக்கும் வரை தங்கள் உயிருக்கு எந்தவித இடையூறும் ஏற்படாமலிருக்கப் பூசை போடுதல், பலியிடுதல் போன்ற சடங்குகளைச் செய்கின்றனர்.

பிள்ளையார் சுழி போட்டும், பிள்ளையார் செய்து வைத்து விட்டும் எச்செயலையும் தொடர்ந்தால் வெற்றி கிட்டும் என்று மக்கள் நம்புகின்றனர்.

கடைகளுக்குக் கண்ணேறு கழித்து, யந்திரங்கள் வைத்து வழிபடுவதால் கண் திருஷ்டி விலகி, இலாபம் கிடைக்கும் என்ற நம்பிக்கை மக்களிடம் காணப்படுகின்றது.

பொதுவான நம்பிக்கைகளாக மக்கள் சிலவற்றைக் கடைப்பிடித்து வருகின்றதனை அறிய முடிகின்றது. நாட்கள் குறித்த நம்பிக்கை, வளர்பிறை தேய்பிறை, சூலம் பற்றியது, சத்தியம் செய்தல், மையிட்டுப் பார்த்தல், புழங்குபொருட்கள், உணவு பற்றியது, சகுனம் பற்றியது எனக் காணமுடிகின்றது.

குழந்தையை நரபலியிடல், ஆடு, சேவல் பலியிடல் போன்ற உயிர்ப்பலியிடுதல், எலுமிச்சம்பழம் வைத்து நசுக்குதல் போன்ற வகைகளிலும் நம்பிக்கைகள் உள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. சு.சண்முகசுந்தரம், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.79
2. தமிழகராதி, ப.292
3. கிரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.607
4. நர்மதாவின் தமிழகராதி, ப.480
5. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.103
6. சு.சண்முகசுந்தரம், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.79
7. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், பக்.101–104
8. மேலது, ப.104
9. மேலது, ப.105
10. வி.சரஸ்வதி, நாட்டுப்புறப் பாடல்கள் சமூக ஒப்பாய்வு, ப.160
11. நாட்டுப்புறவியலில் இறைமறை பொருட்கூறுகள் (மதுரை மாவட்டம்) தே.ஞானசேகரன்; மதுரை காமராசர் பல்கலைக்கழக அறிஞர் பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு; ப.499
12. க.கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.51
13. Annals of Orieptal Research-Vol-XXIII; திருக்குறளுக்கு உறைகள் வேண்டுமா? க.த.திருநாவுக்கரசு, ப.14
14. Annals of Orieptal Research-Vol-XXIII; ப.14
15. ஜெ.நாராயணன், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள்; பாஸ்கல் கிஸ்பர்ட்; தமிழாக்கம், ப.283
16. சு.சண்முகசுந்தரம், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.78
17. Stutley, Margret, Anicient indian Magic and Folklore, p.2
18. Frazer,J.G. The Golden Bough, Vol-1, Part-1, p.54
19. தே.ஞானசேகரன், மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள், ப.65
20. மேலது, ப.65
21. Frazer,J.G., Op, Cit, pp.164-165
22. திரு.ஜெகநாதன், விவசாயி, வயது 54, கொத்தியார்கோட்டை, நாள்: 2.2.13

23. Don Yoder, Folk Medicine, p.192

24. ரா.முத்தையா, நாட்டுப்புற மருத்துவம் மந்திரச் சடங்குகள், அகரம் வெளியீடு, சிவகங்கை மாவட்டம், 1986, ப.23

25. திரு.நடராசன், வயது 60, கொத்தமங்கலம், நாள்: 2.2.13

26. தே.ஞானசேகரன், கொங்கு நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு, ப.9

27. ஆறு.இராமநாதன், நாட்டுப்புறவியல் ஆய்வுமுறைகள், ப.249

28. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 3, ப.794

29. சோமலே, தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப.82

30. தொல்.பொருள்.89

31. தி.மகாலட்சுமி, இலக்கியத்தில் சோதிடம், ப.178

32. வெ.சாமிநாத சர்மா, கிரீஸ் வாழ்ந்த வரலாறு, ப.171

33. திரு.கோவிந்தன் ஐயர், வயது 62, கொத்தமங்கலம், நாள்: 2.2.13

34. தி.மகாலட்சுமி, இலக்கியத்தில் சோதிடம், ப. 233

35. திரு.ஆ.நாகராசு, கொத்தனார், வயது 40, சோழந்தூர், நாள்: 16.2.13

36. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.159

37. சோமலே, தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்,ப.69

38. தி.மகாலட்சுமி, இலக்கியத்தில் சோதிடம், ப.214

39. திருமந்திரம், 797

40. திரு.உ.பஞ்சவர்ணம், வயது 57, வடவயல்

41. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.172

42. திரு. தேசிங்குராசன், வயது 60, வடவயல்

**முன்னுரை**

ஒரு காலத்தெழுந்த இலக்கியங்கள் அக்காலச் சமுதாயத்தினை நன்கு படம் பிடித்துக் காட்டுவனவாகும். இலக்கியத்தினை வாழ்க்கையின் உரைகல் என்றும் குறிப்பிடுவர். மொழியின் வாயிலாக வாழ்க்கையை உணர்த்துவதே இலக்கியம் என்பர். அம்முறையில் தனக்கென ஒரு விழுமிய வரலாறும் வாழ்க்கை நெறியும் படைத்த தமிழினம் பழமையும் சிறப்பும் கொண்டு துலங்குவதாகும்.

தனித்தனியாக வாழ்ந்த மானிடர் கூட்டமாக வாழ்ந்த போது அது சமுதாயம் எனப்பட்டது. அச்சமுதாயத்தில் நம்பிக்கைகள் பழக்க வழக்கங்கள் நின்று நிலவத் தொடங்கின.

“பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் சமுதாயத்தின் குறிக்கோள்கள், தேவைகள் அடிப்படையில் தோன்றியனவைகளாகும். பழக்க வழக்கங்கள் மனித சமுதாயத்தின் தேவை கருதிப் படைத்துக் கொண்டவை களாகத் தென்படுகின்றன. தனிமனிதப் பழக்கங்கள் காலப்போக்கில் கூட்டமைப்புடைய மக்கள் குழுக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு வழக்கங்களாகவும், மரபுகளாகவும் நிலைபெறுகின்றன.”[1]

மனிதன் தன்னுடைய அன்றாட வாழ்க்கை நடைமுறையில் சந்திக்கும் வெற்றிக்கும் தோல்விக்கும் காரணமாக அமைகின்ற ஏதேனும் ஒரு பொருளை அல்லது நிகழ்ச்சியைத் தன்னுடைய வாழ்க்கையில் மீண்டும் ஏற்படுகின்ற வெற்றிக்கும் தோல்விக்கும் காரணம் என்று நினைக்கின்ற மனப்பாங்கு உடையவன். இது தொடரும் நிலையில் அதனைப் பழக்கப்படுத்திக் கொள்கிறான். அதன்பின்னர் வழக்கமாகிவிடுகிறது. நம்பிக்கை, பழக்கம், வழக்கம் ஆகிய மூன்றும் ஏதேனும் ஒருவகையில் ஒன்றோடு ஒன்று தொடர்புடையன.

ஒரு சமுதாயத்தின் உண்மை நிலையை நாம் அறிய வேண்டுமென்றால் அச்சமுதாயத்தின் நம்பிக்கை, பழக்க வழக்கங்களை ஆய்வு செய்ய வேண்டும். அச்சமுதாயத்தின் கால ஓட்டத்தில் உருவாக்கப்படுகின்ற இலக்கியங்களில்

அச்சமுதாயத்தின் வெளிப்பாடாக இத்தகு பழக்க வழக்கங்கள் பரவலாகப் பதியப்படுகின்றன. தமிழில் செவ்வியல் (செம்மொழி) இலக்கியங்கள் என்று தகுதிபெற்ற நாற்பத்தொரு நூல்களில் காணப்படும் நம்பிக்கைகளை வெளிக்கொணர்வது இவ்வியலின் நோக்கமாகும்.

**செவ்வியல் நூல்கள்**

தமிழ் செவ்வியல் மொழி என்ற தகுதியைப்பெற பதினான்கு தன்மைகளைச் சுட்டியிருப்பினும் இதற்கு அடிப்படையாக அமைந்த நூல்கள் நாற்பத்தொன்று என வறையறுத்துள்ளனர். அவை, 1. தொல்காப்பியம், 2. நற்றிணை, 3. குறுந்தொகை, 4. ஐங்குறுநூறு, 5. பதிற்றுப்பத்து, 6. பரிபாடல், 7. கலித்தொகை, 8. அகநானூறு, 9. புறநானூறு, 10. திருமுருகாற்றுப்படை, 11. பொருநராற்றுப்படை, 12. சிறுபாணாற்றுப்படை, 13. பெரும்பாணாற்றுப்படை, 14.முல்லைப்பாட்டு, 15.மதுரைக்காஞ்சி, 16.நெடுநெல்வாடை, 17.குறிஞ்சிப்பாட்டு, 18. பட்டினப்பாலை, 19.மலைபடுகடாம், 20.சிலப்பதிகாரம், 21.மணிமேகலை, 22. நாலடியார், 23. நான்மணிக்கடிகை, 24.இன்னாநாற்பது, 25.இனியவை நாற்பது, 26.கார்நாற்பது, 27.களவழிநாற்பது, 28.ஐந்திணை ஐம்பது, 29.ஐந்திணை எழுபது, 30. திணைமொழி ஐம்பது, 31.திணைமாலை நூற்றைம்பது, 32.பழமொழிநானூறு, 33.சிறுபஞ்சமூலம், 34.திருக்குறள், 35.திரிகடுகம், 36.ஆசாரக்கோவை, 37.முதுமொழிக்காஞ்சி, 38.ஏலாதி, 39.கைந்நிலை, 40.முத்தொள்ளாயிரம், 41.இறையனார் களவியல் ஆகியனவாகும்.

**செவ்வியல் நூல்களிலுள்ள நம்பிக்கைகள்**

செவ்வியல் நூல்களிலுள்ள நம்பிக்கைகளாவன கடவுள் நம்பிக்கை, நாள் பார்த்தல், கனவு, திருமணச்சடங்கு, நடுகல், நிமித்தம் பார்த்தல், விரிச்சி கேட்டல், உன்னமரம் தளிர்த்தல், பேய், வெறியாட்டு, மடலேறுதல், பல்லி கத்துதல் காக்கை கரைதல், ஓந்தி வலம் செல்லுதல், புலிப்பல் தாலி அணிதல், திருவிழா, பலியிடுதல், கண் துடித்தல், முதுமக்கள் தாழி, கழங்கு கொண்டு நன்மை தீமையறிதல், வீரமரணம், ஈமச்சடங்கு, கைம்மை மகளிர், கைம்மை நோன்பு, விளக்கு அணைதல், தலைவிரி கோலம், நல்வினை, தீவினை,

கூற்றுவன், மந்திரம், முற்பிறப்பு மறுபிறப்பு, நிலவைப் பாம்பு விழுங்குதல், சாபம், தும்மல், ஊழ்வினை, அசரீரி ஆகியனவாகும்.

**கடவுள் நம்பிக்கை**

இயற்கையின் அச்சந்தரும் செயல்கள் மனிதனைக் கடவுள் நெறிக்கு இட்டுச் சென்றதென்பது மானிடவியலாரின் கருத்தாகும். மனிதன் தன் ஆற்றல் சில வரம்புக்குட்பட்டது என்பதை உணர ஆரம்பித்த நிலையில் கடவுட் கோட்பாடு உருவாகியது. தன் அறிவுக்கும் ஆற்றலுக்கும் முறையே புலப்படாத, உட்படாதவற்றின் மீது அச்சத்தின் காரணமாக மனிதன் நம்பிக்கை கொள்ளத் தொடங்கினான். அந்நம்பிக்கையின் அடிப்படையில் கடவுள் நம்பிக்கை தோன்றியதெனலாம். இயற்கையின் புதிரான செயலை மனிதன் உணர இயலாத நிலையில் அதனை வழிபட்டு அமைதிப்படுத்த முயன்றபோது வழிபாடு உருவாகியது.

மீவியல்பாற்றல்களை இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகள் எனக் குறிக்கும் வழக்குண்டு. இதுபற்றி ஔவை துரைசாமிப்பிள்ளை, "இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகள் என்பது இயற்கையுலகில் காணப்படாத தெய்வ, தெய்வீக நிகழ்ச்சிகளைக் குறிப்பதாகும். தெய்வங்களின் செய்கைகளும் தெய்வச் சார்பான நிகழ்ச்சிகளும் மக்கள் வாழ்வில் நேரில் காணப்படாமல் இயற்கை வாழ்வுக்கு அப்பாற்பட்டு நின்று தொடர்பு பெறுவது பற்றி அவை இயற்கைக்கு அப்பாற்பட்டவையெனக் கருதப்படுகின்றன"[2] என்பார்.

பழந்தமிழரின் சமயக் கோட்பாடு அச்சத்தை அடிப்படையாகக் கொண்டதாகக் காட்சி தருகின்றன. இவற்றை இயற்கைக் கூறுகளான மலை, கடல் ஆகியவற்றை வணங்கிய நிலை தெரிவிக்கும். "சமயக் கூறுகள் யாவும் மனிதனுடைய அச்ச உணர்ச்சியிலிருந்தும், குற்ற உணர்ச்சியிலிருந்தும் உண்டாகியிருப்பதாக சிக்மன் பிராய்டு (Sigmund Freud) கூறுகின்றார்."[3]

"பழந்தமிழரின் சமய வாழ்வில் ஆவிக்கொள்கையும் முன்னோர் வழிபாடும் பல தெய்வ வணக்கமும் சிறப்பிடம் வகிப்பதாகச் சுட்டுவர்"[4]

தெய்வ வணக்கத்தில் சிறுதெய்வ வழிபாடும், பெருந்தெய்வ வழிபாடும் சிறப்பிக்கப்படுகின்ற நிலையினைக் காண்கிறோம்.

**இயற்கை வழிபாடு**

இயற்கையின் கூறுகளான நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், மலை, ஞாயிறு, திங்கள் போன்றவற்றை வழிபடும் தன்மையினை இயற்கை வழிபாடாகக் கருதுவர். தொல்காப்பியர் ஞாயிறு, திங்கள், தீச்சுடர் ஆகிய இயற்கையின் முக்கூறுகளை வழிபட்டமையினைப் பாடாண் திணையில்

**“கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
**வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே”[5]**

எனக் காட்டியுள்ளார். இக்கடவுள் நம்பிக்கை பற்றித் தொல்காப்பியத்தில்,

**“காமப் பகுதி கடவுளும் வரையார்**
**ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்” (தொல்.1029)**

எனவும், மன்னனை வாழ்த்தும் பொழுது கடவுளுடன் பொருத்தி வாழ்த்துதல் ஒரு மரபாக இருந்தது என்பதனை தொல்.1034 நூற்பாவும், தெய்வத்தைத் தீங்கு நேராதவாறு வேண்டியதனை,

**“தோழியை வினாவலும் தெய்வம் வாழ்த்தலும்” (தொல்.1061:7)**

என்றும், அச்சந்தரும் களவு காலத்தில் காவலாக இருந்து காத்தக் கடவுளைத் தோழி வழுத்திய போதும் என்பதனை,

**“ஏமுறு கடவுள் ஏத்திய மருங்கினும்” (தொல்.1092)**

நூற்பாவும், தான் வழிபடும் தெய்வத்திற்கு அஞ்சி நடந்த செய்தியினைத் தொல்.1218 ஆவது நூற்பாவும் பதிவு செய்துள்ளதன் மூலம் அறியமுடிகின்றது.

நற்றிணையில் வேட்டுவர்கள் காட்டுப்பசு மீது எய்த அம்பு குறிதவறியதால் தெய்வக் குற்றம் என நம்பி அத்தெய்வத்தை வழிபடும் பொருட்டுத் தன் சுற்றத்தாருடன் தலைவன் சென்றதனை,

**"கடவுள் ஓங்குவரை பேண்மார் வேட்டு எழுந்து" (நற்.165:4)**

எனவும்,

**"பலிபெறு கடவுட் பேணி, கலி சிறந்து" (நற்.251:8)**

என்றும்,

**"கணம் கெழு கடவுட்கு உயர்பலி தூஉய்ப்**
**பரவினம் வருகம் சென்மோ தோழி" (நற்.358:6-7)**

எனும் பாடலடிகளும் பதிவு செய்துள்ளன.

குறுந்தொகையில் கடவுள் நம்பிக்கையினை

**"மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்**
**கொடியோர்த் தெறூஉ மென்ப யாவதும்" (குறுந்.87:1-2)**

பொதுமரத்தில் தங்கும், பிறர்க்கு அச்சம் செய்யத்தக்கத் தெய்வம் கொடுமை யுடையவரைத் தண்டிக்கும் என்றும்,

**"கடியுண் கடவுட்கிட்ட செழுங்குதல்" (குறுந்.105:2)**

எனும் பாடலடியும் பதிவு செய்யப்பட்டுள்ளதன் வாயிலாக உணர முடிகின்றன.

ஐங்குறுநூற்றில் களவொழுக்கம் மேற்கண்ட காலத்தில் தலைவி உடல்மெலிந்து காணப்பட்டாள். அம்மெலிவைக் கண்ட பெற்றோர் இது தெய்வத்தால் வந்தது என்று நம்பினர். இதனை,

**"கைபுனை நறுந்தார் கமழு மார்பன்**
**அருந்திறல் கடவுள் அல்லன்**
**பெருந்துறைக் கண்டு இவள் அணங்கியோளே"**
**(ஐங்.182:2-4)**

எனும் பாடலடிகளும்,

**"கறிவளர் சிலம்பின் கடவுட் பேணி" (ஐங்.243:1)**

எனும் பாடலடியும்,

**"மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித்**
**தேம்பலிச் செய்த ஈர்நறுங் கையல்" (ஐங்.259:3-4)**

எனும் அடிகளும் பதிவு செய்துள்ளன.

பதிற்றுப்பத்தில் இக்கடவுள் நம்பிக்கையினை,

**"காடே கடவுள் மேன" (பதிற்.13:20)**

என்றும்,

**"உருகெழு மரபின் கடவுட் பேணியர்" (பதிற்று.21-5)**

எனும் பாடலடியும் எடுத்துக் காட்டுகின்றன. முரசில் வீற்றிருக்கும் தெய்வத்தை வழிபட கருங்கண் பேய்மகள் கைகொட்டி அஞ்சும்படி தெய்வத்திற்குப் பலிகெடுக்கும் பிண்டத்தை உயர்ந்தோர் ஏந்தினர் என்பதை (பதிற்.30:34–35) பாடலடிகளும், ஆடல்துறைக்கு வேண்டிய பொருட்களை இளையர் சுமந்து செல்லும்போது வழியில் தீங்கு நேராமலிருக்கக் கடவுளை வாழ்த்திப் பாடிச் சென்றனர் என்பதனை (பதிற்.41:6) எனும் பாடலடியும், கடவுள் நிலைபெற்ற கற்களில் உயர்ந்து விளங்கும் என்பதனை (பதிற்.43:6) எனும் அடியிலும், கொற்றவைத் தெய்வம் வீற்றிருக்கும் அயிரை மலையினைப் போன்ற பெருமை சான்ற வேந்தே என (பதிற்.79:18) தெய்வத்துடன் சிறப்பித்துக் கூறியதன் வாயிலாக விளங்குகின்றன.

பரிபாடலில் இந்நம்பிக்கையினை

**"பதினாயிரம் கை முதுமொழி முதல்வ!**
**நூறாயிரம் கை ஆறுஅறி கடவுள்" (பரி.3:43-44)**

எனும் பாடலடிகளும், உன்னைவிடச் சிறந்தது உன் திருவடிகள். அவை கடவுள் தன்மையைக் கொண்டுள்ளன என (பரி.4:63-64) பாடலடிகளும், கடவுள் கற்பினையுடைய அருந்ததியைத் தவிர ஏனைய கார்த்திகைப் பெண்டிர் உண்டனர் என்பதனை (பரி.5:4) எனவும், யார் சென்று கண்டாலும் மயக்கத்தைப் போக்கும் வழிபடு தெய்வம் போன்றது அம்மலை என (பரி.15–37) பாடலடியும் விளக்குகின்றது.

**"நிலை உயர் கடவுட்குக் கடம் பூண்டு, தன்மாட்டுப்**
**பல சூழும் மனத்தொடு பைதலேன் யானாக"** ***(கலி.46:16-17)***

*எனக் கலித்தொகைப் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. தோழி நீ வெளியே செல்லும் போது நான் உன்னிடம் இவனைக் கோவில்களுக்கு அழைத்துச் சென்று வணங்கச் செய்து திரும்பி வா என்று கூற, நீ குறித்த நேரத்தில் வரவில்லை என (கலி.84:6–7) பாடலடியும், கலி.93,101:24 எனும் பாடலடிகளும் பதிவு செய்துள்ளன.*

*பிறரால் வெல்வதற்கு அரிய அம்மலைவாழ் முருகன் வேலைப் பூசை செய்து குறவர்கள் கொண்டு வந்து தந்த அந்த மாலையாகிய ஆரமும் என்பதனை அகநானூற்றில்,*

**"தெறல் அருமரபின் கடவுட் பேணி**
**குறவர்தந்த சந்தின் ஆரமும்"** ***(அகம்.13:3-4)***

*எனும் பாடலடிகளும்*

**"அருந்திறற் கடவுட் செல்லூர்க் குணா அது"** ***(அகம்.90:9)***

*எனும் அடியும்,*

**"கைதொழு மரபின் கடவுள் சான்ற"** ***(அகம்.125:14–15)***
**"கடிநகர் புனைந்து கடவுட் பேணி"** ***(அகம்.136:6)***
**"கடவுள் காந்த ளுள்ளும், பலஉடன்"** ***(அகம்.152:17)***
**"நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஒச்சி"** ***(அகம்.156:15)***
**"எழுது அணி கடவுள் போகலின்"** ***(அகம்.167:15)***
**"கடவுள் கற்பொடு குடிக்கு விளக்கு ஆகிய"** ***(அகம்.184:1)***
**"கடவுள் மரத்த முள்மிடை குடம்பைச்"** ***(அகம்.270:12)***
**"இல்உறை கடவுட்கு ஆக்குதும் பலியே"** ***(அகம்.282:18)***
**"கடவுள் ஓங்கு வரைக்கு ஓச்சி, குறவர்"** ***(அகம்.348:8)***
**"அருந்தெறல் மரபின் கடவுள் காப்ப"** ***(அகம்.372:1)***
**"தெறல் அருங் கடவுள் முன்னர்த் தேற்றி"** ***(அகம்.396:7)***

*எனும் பாடலடிகளும் இந்நம்பிக்கையைப் பதிவு செய்துள்ளன.*

புறநானூற்றில் கடவுள் நம்பிக்கையினை

**"கலிகெழு கடவுள் கந்தம் கைவிடப்**

**பலிகண் மாறிய பாழ்படு பொதியில்" (புறம்.52:12–13)**

எனும் அடிகளில் கடவுள் பொதியில் உறைந்த செய்தியைப் புலப்படுத்துகிறது.

**"மலைவான் கொள்க! என, உயர்பலி தூஉய்,**

**மாரி ஆன்று, மழைமேக்கு உயர்க! எனக்**

**கடவுட் பேணிய குறவர் மாக்கள்" (புறம்.143:1–3)**

எனும் பாடலடிகள் பதிவு செய்துள்ளதன் வாயிலாக உணரமுடிகிறது.

**பத்துப்பாட்டில் கடவுள் நம்பிக்கைகள்**

பத்துப்பாட்டில் ஒன்றான பொருநராற்றுப்படையில் காட்டில் உறைந்திருக்கின்ற கடவுளுக்குக் கடன்களைச் செய்ததனை,

**"காடுஉறை கடவுட் கடன் கழிப்பிய பின்றைப்"**

**(பொருநர்.52)**

எனும் பாடலடி உணர்த்துகிறது.

பெரும்பாணாற்றுப்படையில் கடவுள் நம்பிக்கையினை

**"கடவுள் ஒண்பூ அடைதல் ஓம்பி" (பெரும்பாண்.290)**

**"அருந்திறற் கடவுள் வாழ்த்திச் சிறிநுறும்" (பெரும்பாண்.391)**

எனும் அடிகள் பதிவு செய்துள்ளன.

மதுரைக்காஞ்சியில் இந்நம்பிக்கையினை

**"தொல்முது கடவுள் பின்னர் மேய" (மதுரை.41)**

எனும் அடியில் பாண்டியனைச் சிவனுக்கு இணையாக ஒப்புமைப்படுத்திக் கூறப்படுகின்றது.

**"பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்**

**சிறந்து புறங்காக்கும் கடவுள் பள்ளியும்" (மதுரை.466-467)**

என்றும் புலப்படுத்தப்படுகின்றன.

குறிஞ்சிப்பாட்டில் தோழி செவிலித்தாயிடம் கூறுவதனை,

***"அகலுள் ஆங்கண் அறியுநர் வினாயும்,***
***பரவியும் தொழுதும், விரவுமலர் தூயும்,***
***வேறுபல் உருவின் கடவுள் பேணி" (குறிஞ்சி.4-6)***

எனும் பாடலடிகளும்,

***"மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது,***
***ஏமுறு வஞ்சினம் வாய்மையின் தேற்றி" (குறிஞ்சி.209-210)***

என்ற பாடலடிகளும் பதிவு செய்துள்ளதனைக் காணலாம்.

மலைபடுகடாமில் கடவுள் நம்பிக்கையைக் குறிக்கும் பாடலடிகளாக,

***"காரி உண்டிக் கடவுளது இயற்கையும்" (மலை.83)***
***"பராவுஅரு மரபின் கடவுள் காணின்" (மலை.230)***
***"கடவுள் ஓங்கிய காடுஏசு கவலை" (மலை.396)***
***"அருந்திறல் கடவுள் பழிச்சிய பின்றை" (மலை.538)***

ஆகியன அமைகின்றன.

**பதினெண் கீழ்கணக்கு நூல்களில் கடவுள் நம்பிக்கைகள்**

பதினெண்கீழ்கணக்கு நூல்களில் ஒன்றான நாலடியார் கடவுள் நம்பிக்கை பற்றி,

**"திருத்தன்னை நீப்பினும் தெய்வம் செறினும்**
**உருத்த மனத்தோ டுயர்வுள்ளி னல்லால்**
**அருத்தம் செறிக்கும் அறிவிலார் பின்சென்று**
**எருத்திறைஞ்சி நில்லாதா மேல்" (நாலடி.304)**

இலட்சுமி கைவிட்டாலும், தெய்வம் கோபித்துக் கொண்டாலும் சோர்வின்றி எழுந்த மனத்தினால் தன்மேன்மையை நினைப்பதேயல்லாமல் பணத்தை வீணாகச் சேர்த்து வைக்கின்ற விவேகமில்லாதவரிடம் போய்த் தலைகுனிந்து நிற்கமாட்டார்கள் மேலானவர்கள் என்று குறிப்பிடப்படுகின்றது.

தெய்வத்திற்கு இணையாகத் தாயை நான்மணிக்கடிகையில் சித்தரித்துள்ளதனை,

**"கண்ணிற் சிறந்த உறுப்பில்லை கொண்டானின்**
**நுன்னிய கேளிர் பிறரில்லை மக்களின்**
**ஒன்மையவாய்ச் சான்ற பொருளில்லை ஈன்றாளோடு**
**எண்ணிக் கடவுளு மில்"** ***(நான்மணி.57)***

எனும் பாடல் புலப்படுத்துகிறது.

ஆசாரக்கோவை கடவுளை வணங்கும் முறையினை எடுத்தியம்புகின்றது.

**"நாளந்தி கோலின்று கண்கழீஇத் தெய்வத்தைத்**
**தானறியு மாற்றாற் றொழுதெழுக வல்கந்தி**
**நின்று தொழுதல் பழி"** ***(ஆசார.9)***

காலையில் கண்துடைத்து பல்துடைத்து தான் வணங்கும் தெய்வத்தைத் தானறியும் நெறியால் தொழுக, மாலைப் பொழுதில் தான் வணங்குந் தெய்வத்தை நின்று தொழுதல் குற்றமாம், இருந்து வணங்க வேண்டும் என்று வலியுறுத்துகிறது.

பொய் பேசுதல், பொறாமையுறுதல், பிறர் பொருள்மேல் ஆசைப்படுதல் போன்றவை தெய்வக் குற்றமாகி நரகத்தில் புகுத்தி விடும் என்பதனை,

**"பொய்குறளை வெளவ லழுக்கா றிவை நான்கு**
**மையந்தீர் காட்சியார் சிந்தியார் – சிந்திப்பின்**
**ஐயம் புகுவித் தருநிரயத் துய்த்திடுந்**
**தெய்வமும் செற்று விடும்"** ***(ஆசார.38)***

எனும் பாடல் புலப்படுத்துகிறது.

திருக்குறளில் கடவுள் நம்பிக்கைகளைக் கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் அகர ஒலி எல்லா எழுத்துக்கும் முதலாகும். அதுபோல ஆதிபகவன் உலகுக் கெல்லாம் முதலானவன் என்பதனை,

**“அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**

**பகவன் முதற்றே உலகு”     (குறள்.1)**

உணர்த்துகிறது. இறைவனின் நல்ல திருவடிகளைத் தொழவில்லையெனில் என்னதான் கற்றாலும் பயன் இல்லை (குறள்.2) எனவும், நெஞ்சமலரில் இருப்பவன் அடியைத் தொழுபவர் இவ்வுலகில் நெடுங்காலம் வாழ்வர் (குறள்.3) என்றும், விருப்பு, வெறுப்பு இல்லாத இறைவனை நினைத்தவற்கு என்றும் துன்பங்கள் இல்லை என்பதனை (குறள்.4), இறைவனது உண்மைப் புகழை விரும்புவாரை வினைகள் நெருங்காது என (குறள்.5), ஐம்புலனையும் அழித்தவனது மெய்நெறியைக் கடைப்பிடித்தவர் நெடுங்காலம் வாழ்வர் என (குறள்.6), உவமை கடந்தவன் அடியை நினைத்தாலன்றி மனக்கவலையை மாற்றமுடியாது என்பதனை (குறள்.7), அறக்கடலாம் அருளாளன் அடியை நினைத்து வாழ்ந்தால் துன்பக்கடலில் எளிதாக நீந்திவிடலாம் என குறள்.8, எண் குணம் உடையவன் அடியை வணங்காத தலை பாராத கண், கேளாத செவி, போலப் பயனற்றது என்று (குறள்.9) இறைவன் அடியை நினைத்தவர் பிறவிக்கடனைக் கடப்பர், நினையாதவர் கடக்கமாட்டார்கள் என்பதனைக் குறள்.10 பதிவு செய்துள்ளது.

**“வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**

**தெய்வத்துள் வைக்கப் படும்”     (குறள்.50)**

என்றும், தெய்வத்தால் ஒரு செயல் முடியாமல் போகினும் முயன்றால் அதற்கானக் கூலி கடைக்கும் என (குறள்.619), தெளிவாக உள்ளோட்டத்தை உணர்பவனைத்தெய்வத்திற்கு நிகராக மதிக்க வேண்டும் என்று (குறள்.702)லும், தனது குடும்பத்தை உயர்த்துவேன் என்பவனுக்குத் தெய்வம் உதவி செய்ய முன்வரும் என்பதனைக் (குறள்.1023) வெளிப்படுத்துகின்றன.

**நாள் பார்த்தல்**

நாளும் கோளும் பார்த்து வினைகளில் ஈடுபடும் வழக்கம் பண்டை மக்களிடம் பரவலாகக் காணப்பட்டதனை உலக நாகரிக வரலாறு தெரிவிக்கின்றது. பண்டைத் தமிழரிடமும் இவ்வழக்கம் நிலவியதற்கு

அவர்களின் தொன்மை இலக்கியங்கள் சான்றுகள் காட்டி நிற்கின்றன. நாட்களை விண்கோள்களின் நிலைகள் கொண்டு நிச்சயித்த நிலையில் நாட்களுக்கும் விண்கோள்களுக்கும் தொடர்பு கற்பிக்கப்பட்டது. அந்நிலையில் கோள்களின் இயல்புகளுக்கேற்ப நாட்களின் நன்மை தீமைகள் நிச்சயிக்கப்பட்டு நல்லநாள், தீயநாள் என்ற கருத்தேற்றம் உருவாகத் தொடங்கியது.

மக்கள் தாங்கள் ஈடுபடும் வினைகளில் நன்மைபயக்க வேண்டுமென்று எதிர்பார்க்கின்றனர். எனவே தான் நல்ல காலங்களைத் தேர்ந்துச் செயல்களைத் தொடங்குகின்றனர். நல்லநாளும், நல்ல பொழுதும் பார்த்துச் செயல்படும் நிலை பழங்குடி மக்கள் தொட்டு நாகரிகமிக்க மக்கள் வரை அனைத்துச் சமூக மக்களிடமும் தொடர்ந்து மரபு வழியாகப் பின்பற்றப்பட்டு வருவதை வரலாறுகளும் வாழ்க்கைமுறைகளும் உணர்த்துகின்றன. இவ்வுணர்வு தோன்றுவதற்கு அடிப்படையாக அமைவது நன்மை விளைய வேண்டுமென்ற மனிதனின் எதிர்பார்ப்பும், தீமைகளிலிருந்து தங்களைக் காத்துக்கொள்ள வேண்டும் என்ற காப்புணர்வுமேயாகும்.

தமிழிலக்கியங்களில் நாளும் பொழுதும் பார்த்துச் செயலாற்றியமையைத் தொல்காப்பியம் தொட்டு இன்றைய இலக்கியங்கள் மற்றும் வாழ்க்கைமுறை வரைத் தொடர்ந்து பயிற்சி பெற்று வந்திருக்கின்றது. "நாள் செய்வதை நல்லோர் செய்யார்" என்ற முதுமொழியும் நாள் பற்றிய நம்பிக்கையினைப் புலப்படுத்துவதாக உள்ளது. தொல்காப்பியர் இதனை,

**"குடையும் வாளும் நாள்கோள் அன்றி"** ***(தொல்.1014:1)***

எனும் நூற்பாவில் போருக்குச் செல்லுமுன் நல்ல நாள் பார்த்து வெண்கொற்றக் குடையும், வீரவாளும் எடுத்ததனைப் புலப்படுத்துகிறார்.

**"நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்**
**காலங் கண்ணிய ஓம்படை உளப்பட"** ***(தொல்.1037:17-18)***

என்ற நூற்பா நாள் நிமித்தம், பறவை நிமித்தம் பார்த்ததனைப் பதிவு செய்துள்ளது. புணர்ச்சிக்கு நிமித்தமாக நிகழ்பவை பன்னிரெண்டு மெய்ப்பாடுகள் என்பதனை,

**"பாங்கர் நிமித்தம் பன்னிரண் டென்ப"     (தொல்.1050)**

என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**"நாள், கோள், திங்கள், ஞாயிறு, கனை அழல்**
**ஐந்து ஒருங்கு புணர்ந்த விளக்கத்து அனைய"   (பதிற்.14:3-4)**

எனப் பதிற்றுப்பத்திலும், அகநானூற்றில் நல்ல நாளில் வினைகள் நிகழ்த்தியதை,

**"கனையிரு ளகன்ற கவின்பெறு காலைக்**
**கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கட்"     (அகம்.86:3-4)**

என்றும்,

**"அறுமீன் சேரு மகளிருள் நடுநாள்"     (அகம்.141-8)**

என நல்லநாளில் விழா எடுத்ததனைச் சுட்டியுள்ளது.

புறநானூற்றில் நிலத்தில் வித்திடுவதற்கும், விளைந்ததை அறுவடை செய்வதற்கும் நல்ல நாள் பார்த்துச் செயல்பட்டதனை,

**"கருங்கட் கேழ லுழுத பூழி**
**நன்னாள் வருபதம் நோக்கிக் குறவர்**
**உழாஅது வித்திய பரூஉக்குரற் சிறுதினை**
**முந்துவிளை யாணர் நாட்புதி துண்மார்"     (புறம்.168:4–7)**

எனவும், மதுரைக்காஞ்சியில் பிறந்தநாளும் நன்னாளாகக் கருதப்பட்டதனை,

**"பேரிசை நன்னன் பெரும் பெயர் நன்னாள்**
**சேரி விழவின் ஆர்ப்பெழுந் தாங்கு"     (மதுரை.618–619)**

எனும் பாடலடிகளும் புலப்படுத்துகின்றன.

திணைமாலை நூற்றைம்பதில் தோழி தலைவனை நோக்கி நல்ல நாளாராய்ந்து அறிந்து இவளைத் (தலைவியை) திருமணம் செய்வது தான் அறம் என்று கூறியதனை,

**"......................... விரையாது**
**வேந்து கிளர்ந்தன்ன வேலைநீர்ச் சேர்ப்ப! நாள்**
**ஆராய்ந்து வரைத லறம்"     (திணைமாலை.நூற்.52:2-4)**

என்றும்,

***"கோணாடல் வேண்டா குறியவார்க் கூஉய்க் கொண்டோர்***
***நாணாடி நல்குத னன்று"      (திணைமாலை.நூற்.54:3–4)***

எனும் அடிகளில் நிமித்தமறிவாரை அழைத்து நல்லதொரு நாளை நாடி இவட்கு நல்குதல் நன்று என்று பதிவு செய்ததன் வாயிலாக உணரமுடிகிறது.

நற்கருமம் செய்பவர்கள் அந்தணர்களிடம் நல்லநாள் கேட்டுச் செய்தால் நன்மை பிறக்கும் என்பதனை ஆசாரக்கோவை,

***"அந்தணர் வாய்ச் சொற்கேட்டுச் செய்க அவர்வாய்ச்சொல்***
***என்றும் பிழைப்பதில்"      (ஆசாரக்.92:3-4)***

உணர்த்துகின்றது. திருமணம் முதலிய நற்செயல்களுக்கு நாட்பொருத்தம், நாழிகைப் பொருத்தம் முதலியன பார்த்து நல்ல நாள் கொள்ள வேண்டும் என்பதனைச் சிறுபஞ்சமூலத்தில்,

***"நாள் கூட்டம் மூழ்த்தம் அவற்றோடு நன்றாயக்***
***கோள்கூட்டம் யோகங் குணனுணர்ந்து தோள்கூட்டல்***
***உற்றானும் அல்லானும் ஐந்தும் உணர்வானால்***
***பெற்றானேட் கொள்க பெரிது"      (சிறுபஞ்சமூலம்.44)***

எனும் பாடல் உணர்த்துகின்றது.

சிலப்பதிகாரத்தில் மங்கல வாழ்த்துக்காதையில் கோவலன் கண்ணகியைத் திருமணம் செய்தது மறையோன் காட்டிய நன்னாளில் என்பதனை,

***"சாலி யொருமீன் றகையாளைக் கோவலன்***
***மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்***
***தீவலஞ் செய்வது காண்பார்க ணோன் பென்னை"***
***(சிலம்பு.மங்கலவாழ்.51-53)***

எனும் அடிகள் புலப்படுத்துகின்றன.

**கனவு நம்பிக்கை**

கனவுகள் மக்களுக்கு வாழ்வில் பின் நிகழப்போவதை முன்னர் உணர்த்துகின்றன என்று நம்புகின்றனர். உளவியலாளர்கள் (Psychologists)

“அடக்கி வைக்கப்பட்ட விருப்பத்தின் மறைமுகமான வெளிப்பாடே கனவு என்பர்.”[6] வேறு சிலர் கனவு உளநோயால் தோன்றுகிறது என்றும் கூறுவர். கனவுகளை நற்கனவு, தீயக்கனவு என இருவகையாகப் பிரிப்பர். தங்களுக்கு நிகழப்போவதைத் தெய்வமோ அல்லது முன்னோர்களின் ஆவியோ கனவில் தோன்றிக் கூறுவதாக நம்புகின்றனர். தமிழில் ‘கனாநூல்’ என்றொரு நூல் இருந்ததே தமிழ் மக்கள் எந்த அளவிற்குக் கனவு பற்றிச் சிந்தித்துள்ளனர் என்பதற்குச் சான்றாகும்.

இலக்கியத்தில் கனவுகள், நம்பிக்கைகளாகவும், வருங்காரியத்தை முன்னர் உணர்த்துவனவாகவும், உற்பாதங்ளின் அறிகுறிகளாகவும் காட்டப் பட்டுள்ளன. கனவுக்காட்சிகள் பின் நிகழ்வனவற்றை மற்றொரு நிகழ்ச்சியால் குறிப்பாகக் காட்டல், சிலருக்கு உண்மையான நிகழ்ச்சியை உள்ளவாறே அறிவித்தல் என இருவகையாக நம்பிக்கை கொள்ளுதலாகும். மக்கள் பொதுவாகக் கனவுகள் பின் நிகழ்வனவற்றை முன்னுணர்த்துகின்றன என நம்புகின்றனர்.

“கனவுகள் உளநோயால் தோன்றுகின்றன”[7] என்று சிலர் கூறுவர். “கனவுகள், எதிர்பாராது தோன்றுவதால் வியப்புக்குரியனவாக அமைந்து உள்மனம் புறமனத்திற்கு எச்சரிக்கை செய்வதற்காகப் பயன்படுகிற கருவி என்ற கொள்கையும் வலுப்பெற்றுள்ளதாக ச.வே.சுப்பிரமணியன் சுட்டிக் காட்டியுள்ளார்.”[8]

“இலக்கியத்தில் கனவுகள் பெரும்பாலும் பின் நிகழ்வனவற்றை முன்னுணர்த்தும் நிலையிலேயே அமைகின்றன. இலக்கியக் கனவுகளில் தீமையை முன்கூட்டி உணர்த்துகின்றவைதான் மிகுதி. நற்கனவுகள் மிகக் குறைவாகவே அமைவதாகச் சுட்டுவர்.”[9] தொல்காப்பியத்தில் கனவு நம்பிக்கையை

**“காதல் கைம்மிகக் கனவின் அரற்றலும்”** **(தொல்.1061:6)**

தலைவியின் காதல் மிகுதியாகவே, கனவில் தலைவி புலம்புவதைத் தாய் கேட்க நேரிட்டது என்றும், தலைவன் தலைவி கனவில் பேசுவதுண்டு என்பதனை,

**"கனவும் உரித்தால் அவ்விடத்தான"** ***(தொல்.1143)***

*எனவும், கண்கள் உறங்கமறுத்து கனவில் மயங்கியிருந்ததனை,*

**"கண்துயில மறுத்தல், கனவொடு மயங்கல்"** ***(தொல்.1216:5)***

*எனும் நூற்பாவும் பதிவு செய்துள்ளன.*

*பரிபாடலில் பிரிந்து சென்ற கணவன் கையைப் பற்றி நீராடியதாகத் தலைவி கனவு கண்டதனை,*

**"கனவின் தொட்டது கைபிழை யாகாது**
**நனவின் சேஎப்ப நின் நளிபுனல் வையை"** ***(பரி.8:103-104)***

*எனும் பாடலடிகளும், புறநானூற்றில் தீய நிமித்தத்தை உணர்த்துவதாகப் பல்நிலத்தில் விழுந்தது போலும், எண்ணையினைத் தலையில் தடவியது போன்றும், ஆண் பன்றி மீது ஏறுவது போலவும், ஆடையைக் களைவது போலவும், வெண்மையான படைக்கருவி கட்டிலோடு கீழே கவிழ்வது போலும் உள்ளம் பொறுப்பதற்கு அறிய பல தீய அறிகுறிகளைக் கண்டதனை,*

**"எயிறு நிலத்து வீழவும் எண்ணெய் ஆடவும்**
**களிறுமேல் கொள்ளவும் காழகம் நீப்பவும்**
**வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்**
**கனவின் அரியன காணா நனவின்"** ***(புறம்.41:8-11)***

*என்ற பாடலும்,*

**"ஆர்வலர் குறுகின் அல்லது, காவலர்**
**கனவினும் குறுகாக் கடியுடை வியன்நகர்"** ***(புறம்.390:5-6)***

*எனும் பாடலடிகளும் புலப்படுத்துகின்றன.*

*பொருநராற்றுப்படையில் கனவு என மருண்டு இருந்ததனை,*

**"கனவு என மருண்ட என்நெஞ்சு ஏமாப்ப"** ***(பொருநர்.98)***

*பாடலடியும், பதினெண்கீழ்கணக்கில் ஒன்றான ஐந்திணை எழுபதில்*

**"பூங்கணிட மாடுங் கனவுந் திருந்தின**
**வோங்கிய குன்ற மிறந்தாரை யாநினைப்ப"** ***(ஐந்.எழு.39:1-2)***

எனும் அடிகளும், திருக்குறளில் சொல்வேறு செயல்வேறு என்பவரது நட்பு கனவிலும் நன்மை தராது என்பதனை,

**"கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு**
**சொல்வேறு பட்டார் தொடர்பு"** ***(குறள்.819)***

எனும் குறள் உணர்த்துகிறது. கனவு நிலையுரைத்தல் எனும் அதிகாரம் முழுமையும் கனவு பற்றிய செய்தியினைப் பதிவு செய்துள்ளது. காதலரின் தூதாக வந்த கனவுக்கு என்ன விருந்து செய்வேன் என குறள் (1211), கண்கள் தூங்கினால் கனவில் வரும் காதலர்க்கு எப்படி பிழைத்துள்ளேன் என்று சொல்வேன் என (1212), நனவிலே வந்து அணையாத காதலரைக் கனவிலேனும் பார்த்தலின் என் உயிர் உண்டு என்பதனை (1213), நனவில் அருளாதவரைத் தேடிக் காட்டுதற்குக் கனவில் காமம் உண்டாகிறது என்று (1214), கனவிலும், நனவிலும் அவரைப் பார்ப்பது இனிது என்பதனை (1215), விழிப்பு நிலை இல்லை என்றால் காதலர் கனவைவிட்டு நீங்குவதில்லை என (1216), நேரில் வந்து அன்பு செய்யாத காதலர் கனவில் துன்புறுத்துகிறார் என்று (1217), தூங்கும் போது தோள்மேல் இருந்து விழித்தவுடன் நெஞ்சிற்குள் போய்விடுகிறார் என (1218), கனவிலும் காதலரைக் காணாதவர்கள் தான் நேரில் அருளாத அவரைப் பழிப்பர் என்று (1219), நனவிலே விட்டுப் பிரிந்தார் என்பர் இவ்வூரார். கனவிலே வருவதை அறியமாட்டார்களோ? என (1220) குறளும் கனவு பற்றிய செய்தியினைத் தாங்கி வருகின்றன.

சிலப்பதிகாரத்தில் இந்நம்பிக்கையினை,

**"கடுக்குமென் னெஞ்சங் கனவினா லென்கை**
**பிடித்தனன் போயோர் பெரும்பதியுட் பட்டேம்"**
***(கனாத்திறமுறைத்த காதை.45–46)***

என்ற பாடலடிகளும், கோவலன் மதுரையில் இறந்துபடுவதற்கு முன் ஒரு தீக்கனா கண்டான் என்பதனை,

**"நனவு போல நள்ளிருள் யாமத்துக்**
**கனவு கண்டேன் கடிதீங் குறும்"** ***(அடைக்கலக்காதை.105-106)***

என்றும், கோவலனின் கனவில் கட்டிய ஆடையைப் பறிகொடுத்தல், மற்றும் கோட்டுமா ஊர்தல் ஆகிய நிகழ்வல்லாத செயல்களும் இடம்பெற்றன என்பதனை,

**"நாறைங் கூந்த னடுங்குதுய ரெய்தக்**
**கூறை கோட்பட்டுக் கோட்டுமா ஊரவும்"**

***(அடைக்கலக்காதை.97-98)***

எனும் அடிகளும், கோப்பெருந்தேவி பாண்டிய மன்னன் இறப்பதற்கு முன் ஒரு தீயகனவு கண்டாள். கனவில் இயற்கையின் மாறுபட்ட அச்சந்தரக்கூடிய தோற்றப் பொழிவுகளும் இயல்பல்லாத செயல்களும், நிகழ்வுகளும் தீநிமித்தக் குறிகளாகக் காட்டப்பட்டிருந்ததனை,

**"ஆங்குக்**
**குடையொடு கோல்வீ நின்று நடுங்கும்**
**கடைமணி யின்குரல் காண்பென்கா ணெல்லா**
**திசையிரு நான்கு மதிர்ந்திடு மன்றிக்**
**கதிரை யிருள் விழுங்கக் காண்பென்கா ணெல்லா**
**இடுங்கொடி வில்லிர வெம்பகல் வீழும்**
**கடுங்கதிர் மீனிவை காண்பென்கா ணெல்லா"**

***(வழக்குரைகாதை.1-7)***

எனும் காதையில் புலப்படுத்தப்படுகிறது.

மணிமேகலையில் கனவு நம்பிக்கை பற்றி மிகப்பெரிய தவமுடைய மகளைப் பெற்றனை என்று நேரில் கூறுவதைப் போலக் கனவின் கண் மொழிந்தேன் என்று கூறுவதை,

**"மாபெருந் தவக்கொடி யீன்றனை யென்றே**
**நனவே போலக் கனவகத் துரைத்தேன்"** ***(மணி.7:37-38)***

அடிகளும்,

**"நனவோ கனவோ வென்பதை யறிவேன்**
**மனநடுக் குறூஉ மாற்றந் தாராய்"** ***(மணி.8:21-22)***

அடிகளும்,

**“சாது சக்கரன் றனையா னூட்டிய**
**காலம் போல்வ தோர் கனாமயக்குற்றேன்”**
**(மணி.11:103-104)**

**“உடம்பீண் டொழிய உயிர்பல காவதம்**
**கடந்து சேண் சேறல் கனவினுங் காண்குவை”**
**(மணி.16:102-103)**

*எனவும் சுட்டுகின்றன. மணிபல்லவத்திற்கு நின்னைக் கொண்டு சென்ற மணிமேகலா தெய்வம் மயக்குறுத்த, மூங்கிலினுடைய தோள்களையுடையாய் நீ கனவாகிய மயக்கத்தினை அடைந்தாய் என (மணி.21:109-110) அடிகளும், கனவில் தோன்றி நனவிற் தெளியப்பேசுவது போலச் சொல்லிய மெல்லிய பூப்போன்ற மேனியையுடைய அம்மணிமேகலா தெய்வமெனப்படும் என்று (மணி.29:31–33) அடிகளும் குறிப்பிட்டுள்ளன.*

*பழமொழியில் கனா முந்துறாத வினையில்லை என்ற நம்பிக்கையினை (பழ.13:3–4) பாடலடிகளும் தீக்கனா கண்டால் பிறரிடம் கூறக்கூடாது என்ற அறிவுறுத்தலும் உள்ளதனை,*

**“விழித்தலரும் நெய்தற் றுறைவா உரையார்**
**இழித்தக்க காணிற் கனா”    (பழ.130:3–4)**

*எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.*

**திருமணச் சடங்கு**

*திருமணம் என்பது ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் இணைந்து வாழ்வதற்காகச் சமுதாயத்தால் ஏற்படுத்தப்பட்ட வினைமுறையாகும். இவ்வினை காரணமாக ஆண் சில மதிப்புக்களையும் பல பொறுப்புக்களையும் ஏற்க வேண்டியுள்ளது. மக்கட் சமுதாயம் நின்று நிலவும் சமூக நியதிகள் காக்கப்படவும் மனிதனால் மனித சமுதாயத்தின் நலன்கருதிப் படைத்துக் கொள்ளப்பட்ட ஒன்றாக இது காட்சி தருகின்றது. திருமணம் மனித சமுதாயத்தின் மதம், இனம், பண்பாடு, மனப்பாங்கு ஆகியவற்றிற்குத் தக*

மாறுபடும் இயல்பினது. தமிழ்ச் சமுதாயத்தில் திருமணமுறை அவர்களின் தனித்த பண்பாட்டினை உணர்த்தும் நிலையில் அமைந்திருந்ததனைச் சங்கப் பாடல்கள் சுட்டிச் செல்கின்றன. பின்னர் காலப்போக்கில் அதன் செயற்பாட்டில் பிற பண்பாட்டின் செயல்முறைகள் செல்வாக்குப் பெற்றுவிட்ட நிலையினைக் காப்பியங்களின் வழி அறியமுடிகின்றது. அந்நிலையில் இங்குப் பண்டைத் தமிழர்களின் திருமண முறையினை இலக்கியச் சான்றுகள் கொண்டு காணலாம்.

**சொல்லும் பொருளும்**

இன்றைய தமிழ் மக்களால் திருமணம், கல்யாணம் எனச் சுட்டியுரைக்கப்படும் மணமுறையினைப் பண்டைத் தமிழர் 'வதுவை' மன்றல், மணம் எனக் குறித்துள்ளனர். இதனை ஐங்குறுநூற்றில்,

**"நல்லோர் நல்லோர் நாடி**
**வதுவை யயர விரும்புதி நீயே"** ***(ஐங்.61:4-5)***

எனவும்,

**"மணப்பருங் காமம் புணர்ந்தமை யறியார்**
**தொன்றியல் மரபின் மன்ற லயர"** ***(அகம்.112:15-16)***

என அகநானூற்று பாடலடியும்,

**"விளங்கிழைப் பொலிந்த வேளாமெல்லியற்**
**சுணங்கணி வனமுலை யவளொடு நாளை**
**மணம்புகு வைகல் ஆக லொன்றோ"** ***(புறம்.341:10-12)***

என்று புறநானூற்றுப் பாடலடியும் சுட்டிச் செல்கின்றன.

மணம் என்பது இன்று பொதுவாக நறுமணத்தைக் குறிப்பினும் இலக்கிய வழக்கில் அது திருமணத்தைச் சுட்டக் காண்கிறோம். "திருமணம் என்பது மனிதனுக்காக மனிதனால் நடத்தப்படும் சடங்கு என்பர்."[10]

இச்சடங்கின் தோற்றம் பற்றித் தொல்காப்பியர் பண்டைத் தமிழர்கள் திருமணம் இன்றியே இல்வாழ்க்கையில் ஈடுபட்டனர் என்பதும் பின்னர்

இச்செயற்பாட்டில் பொய்யும் வழுவும் மிகுதிப்பட்டன என்றும், அதனைக் களையவே முன்னோர் சில விதிமுறைகளை ஏற்படுத்தினர் என்றும் கூறுவர். இதனை,

**"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
**ஐயர் யாத்தனர் கரணம் என்ப"** **(தொல்.1091)**

எனும் நூற்பா பதிவு செய்துள்ளது.

சங்கப் பாடல்களில் அங்குமிங்குமாகத் திருமணச் செய்திகள் சிதறிக் கிடக்கக் காண்கிறோம். அவைகளை ஒருங்கிணைத்துப் பார்க்கும் பொழுது அவர்களுக்கெனத் தனித்த திருமணமுறை ஒன்று இருந்ததனை உணரமுடிகிறது. இன்றைய தமிழ்ச் சமுதாயத்தின் பெரும் பகுதியினர் திருமணத்தைக் கல்யாணம் என்ற சொல்லால் சுட்டி வருகின்றனர். இச்சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் பயிலப்படவில்லை. ஆரியச்சார்பு மிகுந்த காலமான சங்க மருவிய கால கட்டத்தில் இச்சொல்லாட்சி வழக்குப் பெற்றதனைப் பதினெண்கீழ்கணக்கு நூல்கள் தெரிவிக்கின்றன நாலடியாரில்,

**"பல்லா ரறியப் பறையறைந்து நாள்கேட்டுக்**
**கல்யாணஞ் செய்து கடிப்புக்க"** **(நாலடி.86:1–2)**

எனவும், ஆசாரக்கோவையில்,

**"அறத்தொடு கல்யாணம் ஆள்வினை கூரை**
**இறப்பப் பெருகிய கண்ணும்"** **(ஆசார.85:1–2)**

எனும் பாடலடிகளும் புலப்படுத்துகின்றன.

**மணத்தேர்வு**

மக்களின் வாழ்வியல் அடிப்படையிலும், சூழ்நிலையின் அடிப்படையிலும் மணத்தேர்வு முறைகள், பண்டை மக்கட் சமுதாயங்களிடையே பல்வேறு முறைகளில் பழகிவந்த நிலையினைப் பண்பாட்டு வரலாறுகள் உணர்த்துகின்றன. பண்டைத் தமிழரிடையே வீரத்தின் அடிப்படையிலும் சமுதாயப் பிரிவுகளின் அடிப்படையிலும் மணத்தேர்வு முறைகள் இருந்ததனைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன.

இதனை ஆயரின் ஏறுதழுவுதல், மகற்பாற்காஞ்சித் துறைப் பாடல்கள் கொண்டு அறியலாம்.

சங்க காலத்தில் சேவை மணம் (Marriage by service) எனப்படும் பெண்வீட்டில் உழைத்துத் திருமணம் செய்யும் வழக்கம் இருந்ததனை,

**"அசையின ளிருந்த ஆய்தொடிக் குறமகள்**
**நலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்**
**பெறலருங் குரைய ளாயின் அறந்தெரிந்து**
**நாமுறை தேஎம் மரூஉப் பெயர்ந் தவனொடு**
**இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழந்தும்**
**பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்**
**படுத்தனம், பணிந்தனம், அடுத்தனம், இருப்பின்**
**தருகுவன் கொல்லோ தானே..."** ***(அகம்.280:4–11)***

எனும் பாடல் உணர்த்துகிறது.

தென்னிந்தியப் பழங்குடி மக்கள் சிலரிடையே இச்சேவை மணமுறை நிலவுவதனை,

"Marriage by service is an earlier from of marriage by purchase.
It is prevalent among the mannas and The Paliyans"[11]

என மானிடவியலார் உணர்த்துகிறார்.

**நிமித்தம் பார்த்தல் (சகுனம்)**

நிமித்தம் என்பது வாழ்வில் பின் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் வாயிலாக முன்னுணர்த்துவதாகும். இதனை இன்று சகுனம் என்று குறிப்பிடுகின்றோம். பழங்காலத் தமிழர் புள், நிமித்தம் ஆகிய இரு சொற்களால் சுட்டியுள்ளனர். வருங்கால நிலைமைகளை முன்னறிவிக்கும் அறிகுறியாக நிமித்தங்களை மக்களினங்கள் கருதுவதனைப் பண்டுதொட்டு இன்றுவரையுள்ள சமூகங்களின் வாழ்வியல்கள் உணர்த்தி நிற்கின்றன. செயல்களில் நிகழும் நன்மை, தீமைகளை நிச்சயிக்கும் நிலையில் அவை நன்னிமித்தம், தீநிமித்தம் எனப்பகுக்கப்படுவதுண்டு.

நிமித்தங்கள் நம்பிக்கையின் பாற்பட்டவை. நம் செயல்களுக்கும் நம் வயப்படாத இயற்கையின் நிகழ்வுகளுக்கும் தொடர்புகாட்டுவது நிமித்தங்களின் செயற்பாடாகும். "நிமித்தங்கள் அச்சத்தின் அடிப்படையில் தோன்றியிருக்கலாம் என்பர்."[12]

தீமைகளிலிருந்து மனிதன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும் வாழ்வியலில் சில நிலமைகளை நிச்சயிப்பதற்கு உதவுவதாலும் இவை மக்களால் தொன்றுதொட்டு நம்பப்பட்டு வருகின்றன. "நிமித்தம் என்ற சொல்லுக்குத் தமிழ்ப் பேரகராதி 1.காரணம், 2.நிமித்தம், 3.சகுனம், 4.அடையாளம், 5.பொருட்டு என்று ஐந்து பொருட்களைச் சுட்டுகிறது."[13] தொல்காப்பியத்தில் இதனை,

**"தன்னும் அவனும் அவளும் சுட்டி**
**மன்னும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்**
**நன்மை தீமை அச்சம் சார்தலென்று"** **(தொல்.982:1-3)**

என்றும், உவகையை ஆக்கியும், இவற்றால் குறைவுபடாமல் முக்காலமும் கருதிப் பாதுகாப்பாக வாழ்க என வாழ்த்துகின்ற ஓம்படை நிலையை (தொல்.1037) நூற்பாவும், புணர்ச்சிக்குரிய நிமித்தம் பன்னிரெண்டு என தொல்.1050,

**"ஆவொடு பட்ட நிமித்தங் கூறலும்"** **(தொல்.1123:3)**

என்றும் திருமண வாழ்விற்கு இருபத்தி நான்கு மெய்ப்பாடுகள் தவிர பிறவும் நிமித்தமாக அமையும் என்பதனை,

**"அன்ன பிறவும் அவற்றொடு சிவணி**
**மண்ணிய வினைய நிமித்தம் என்ப"** **(தொல்.1213)**

எனவும் சுட்டிக்காட்டுகின்றது.

**நன்னிமித்தங்கள்**

நன்னிமித்தம் தீநிமித்தம் ஆகிய இருவகையான நிமித்தங்களும் பல்வேறு பொருட்கள், செயல்கள் பற்றி எழுந்தனவாகவே காட்சி தருகின்றன. அவை மரம், பறவை, ஊர்வன, விலங்குகள், மாந்தர், கனவுகள், இயற்கையின்

மாறுபட்ட தோற்றப் பொழிவுகள் ஆகியவற்றின் வாயிலாக உணர்த்தப் பட்டிருக்கின்றன என்று க.காந்தி குறிப்பிடுகிறார்.

"கிரேக்கர்களின் மூடக் கொள்கைகளான நாள் பார்த்தல், சகுனம் பார்த்தல், மந்திரவாத நங்கையிருப்பதாக நம்பல் போன்றவைகளும் ஐரோப்பியச் சமுதாயத்தில் இன்றும் உலாவுகின்றன"[14] என்பர்.

**புள் நிமித்தம்**

தொல்காப்பியர் கருப்பொருள்கள் பதினான்கினுள் ஒன்றாகப் புள் என்னும் பறவைகளைச் சுட்டியுள்ளார்.

**"தெய்வம் உணாவே மாமரம் புள் பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ" (தொல்.964)**

என்று குறிப்பிடுகின்றார்.

ஏதாவது ஒரு செயலைத் தொடங்கு முன் நல்ல நாளும், பொழுதும் பார்த்துத் தொடங்குவது பண்டைத் தமிழ் மக்கள் தொடங்கி இன்றுவரை தொன்றுதொட்டு வருகின்றது.

தொல்காப்பியத்தில் நாள் பார்த்தனையும், புள் நிமித்தம் பார்த்ததனையும்,

**"நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்" (தொல்.1037:17)**

என்றும், நற்றிணையில் காக்கைகள் கரைந்து தலைவனின் வரவைச் சொல்லின என்பதை,

**"தோள்வலி யாப்பா ஈண்டுநம் வரவினைப்**
**புள்அறி வுறீஇயின கொல்லோ தெள்ளிதின்" (நற்.161:8-9)**

என்றும்,

**"மனைமா நொச்சி மீமிசை மாச்சினை**
**வினைமாண் இருங்குயில் பயிற்றலும் பயிற்றும்" (நற்.246:3-4)**

என தலைவனின் இனிய சூழலைத் தன் இனிய குரலால் குயில் கூறியது என சுட்டப்பட்டுள்ளன.

குறுந்தொகையில் நன்னிமித்தத்தை உணர்த்தும் பாடலாக,

**"குருகும் இருவிசும் பிவரும் புதலும்**
**வரிவண்டூத வாய் நெகிழ்ந்தனவே**
**சுரிவளைப் பொழிந்த தோளுஞ் செற்றும்" *(குறுந்.260:1-3)***

எனவும், விருந்தினர் வரக் கரைந்தது காக்கை என்பதனை,

**"விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே" *(குறுந்.210:6)***

எனும் அடிகளும் புலப்படுத்துகின்றன.

தலைவனொடு தலைவி விரைந்து வரக் கரைந்தால் தங்கக் கலத்தில் இறைச்சி கலந்த உணவு தருவேன் எனக் காக்கைக்குக் கூறியதனை ஐங்குறுநூற்றில்,

***"மறுவில் தூவிச் சிறுகுருங் காக்கை***
***அன்புடை மரபின் நின்கிளையோடு ஆரப்***
**..............................................................**
**..............................................................**
***வெஞ்சின விறல் வேல் விடலையோடு***
***அஞ்சில் ஓதியை வரக்கரைந்தீமே" (ஐங்.391)***

என்று நம்பிக்கை வைத்துக் கூறியதனைப் புலப்படுத்துகிறது.

அகநானூற்றில் பறவைச் சகுனம் பார்த்ததனை,

**"புள்ளுப் புணர்ந்து இனிய ஆக" *(அகம்.136:3)***

எனும் அடி குறிப்பிடுகிறது. உப்புவிற்கச் செல்லும் உமணர் புள் நிமித்தம் பார்த்துத் தங்கள் பயணத்தைத் தொடங்கினர் என்பதனை,

**"அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்**
**உணங்கு திறம் பெயர்த்த வெண்கல் அமிழ்தம்**
**குடவுல மருங்கின் உய்ம்மார், புள் ஓர்த்துப்**
**படை அமைத்து எழுந்த பெருஞ்செய் ஆடவர்" (அகம்.207:1-4)**

என்ற பாடலடிகள் சுட்டிச் செல்கின்றன.

புறநானூற்றில் நன்னிமித்தமும், நாள் பொழுதும் பார்த்ததனை,

**"புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை**
**உள்ளிச் சென்றோர் பழியல ரதனாற்" (புறம்.204:10-11)**

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

சிலப்பதிகாரத்தில் பறவைச் சகுனம் பார்த்ததனை, பாலைநில மக்களான வேட்டுவர்கள் நிரைகவரச் சென்று செயல் முடித்து ஊர் திரும்பிய நிலையில் ஆநிரையினைப் புள் வாய்ச் சொன்ன கணியின் முற்றத்தில் நிறைந்த செயலால் அறியமுடிகின்றது. இதனை,

**"முருந்தே ரிளநகை காணாய்நின் னையர்**
**கரந்தை யரறக்கவர்ந்த வின நிரைகள்**
**கள்விலை யாட்டிநல் வேய்தெரி கானவன்**
**புள்வாய்ப்புச் சொன்ன கணி முன்றி னிரைந்தன" (சிலம்பு.12:16)**

எனும் அடிகளில் காரிப்புள் நன்னிமித்தம் உணர்த்தியதனைச் சுட்டிச் செல்கின்றது.

**காக்கை கரைதல்**

காக்கை பறவை இனங்களில் அறிவுமிக்கதாகக் கருதப்படுகின்றது. இதன் ஒலியினைச் சகுனமாகக் கொள்ளும் வழக்கம் சங்ககாலம் தொட்டு இன்றுவரை மக்களிடையே நின்று நிலவுகின்றது.

"நிமித்தம் உணர்த்தும் பறவைகள் சிலவற்றிடம் புனிதத்தன்மை அடங்கியிருப்பதாகக் கருதும் எண்ணத்தின் அடிப்படையில் காக்கை நிமித்தப் பறவையாகச் சுட்டப்பட்டிருப்பதாகச் ஜி.எல்.ஹார்ட் (G.L.HART) குறிப்பிடுகின்றார்."[15]

காக்கை கத்தினால் விருந்தினர் வருவர் என்று சங்ககாலம் தொட்டு இன்றுவரை மக்கள் நம்பி வருவதனை வாழ்வியல் நடப்புகளின் மூலம் அறிய முடிகின்றது. இதனை விளக்கும் முகமாகக் குறுந்தொகையில் விருந்தினர் வரவினைத் தெரிவிக்கும் வகையில் காக்கை கரைந்தது என்பதனை,

**"விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே"** ***(குறுந்.210:6)***

*என்ற பாடலடியும், ஐங்குறுநூற்றில் தலைவன் மீது காதல் கொண்ட தலைவி உடன்போக்கு மேற்கொண்டு சென்றதால் தாயின் உடல் மெலிவுற்றது. அதனால் தலைவி மீண்டும் திரும்பி வந்து தலைவனைத் திருமணம் செய்து வைக்க தாய் நினைக்கின்றாள். அதனால் காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்று அறிந்த தாய் அவ்வழியாகப் பறந்த காக்கையைப் பார்த்து நன்னிமித்தமாகக் கரையும்படி வேண்டுகிறாள். காக்கையே நீ அவ்வாறு கரைந்தால் உனக்கும் உன் சுற்றக்கிளைக்கும் பசுமையான ஊன் கலந்த உணவைப் பொன்னால் செய்யப்பட்ட கலத்தில் இட்டுத் தருவேன் என்றதனை,*

**"மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை**
**அன்புடை மரபின் நின்கிளையோடு ஆறப்**
**பச்சூன் பெய்த பைந்நிண வல்சி**
**பொலம்புனை கலத்தில் தருகுவென் மாதோ**
**வெஞ்சின விறல்வேல் காளையொடு**
**அஞ்சிலோதியை வரக் கரைந்தீமே"** ***(ஐங்.391)***

*எனும் பாடல் புலப்படுத்துகின்றது.*

*பழமொழி நானூற்றில் காக்கை வாயின் கண் உண்டாகும் சொல் நன்னிமித்தம் உணர்த்துவதுபோல், கீழாயினர் வாயிற் பிறந்த சொல்லாயினும் நற்சொல்லாக இருந்தால் அதனை இகழாமல் ஏற்றுக்கொள் என்று குறிப்பிடப்படுகிறது. இதனை,*

**"கள்ளியகிலும் கருங்காக்கைச் சொல்லும்போல்**
**எள்ளற்க யார்வாயின் நல்லுரையை"** ***(பழமொழி.36:1–2)***

*எனும் பாடலடிகள் உணர்த்துகினறன.*

**பல்லி கத்துதல்**

*பல்லி ஒலித்தலைச் சகுனமாகக் கருதுவதனைச் சங்க காலந்தொட்டு இன்றுவரை தமிழ் மக்கள் வழக்கமாகக் கொண்டுள்ளதனை இலக்கியங்கள்*

மற்றும் வாழ்வியல் சான்றுகள் தெரிவிக்கின்றன. சங்க இலக்கியத்தின் கண் பல்லியின் ஓசையினை நல்ல சகுனமாகக் (நிமித்தமாக) கொண்டதற்கானச் சான்றுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

பல்லியின் சொல்லைச் சகுனமாகக் கொள்வதற்குரிய காரணத்தை இரகுநாதாச்சாரியார், "மனித உற்பத்திக் காரண பூதங்களாகிய பிராணிகளில் பல்லியினம் முதன்முதலில் நிலத்தில் வசிக்க வல்லமை பெற்றனவாக இருந்தமையால் பல்லியினத்தைப் படைப்புக் கர்த்தாவாகக் கருதி வணங்குகின்றனர் எனவும், பிராணிகளின் படைப்பில் பல்லியினத்திற்கே முதன்முதலில் வாயினால் சப்தம் செய்யும் சக்தி உண்டான காரணத்தால் பல்லி சொல்லுக்குப் பலனை ஏற்படுத்தினார்கள்"[16] என எடுத்துரைப்பார்.

நற்றிணையில் பல்லி ஒலியினைச் சகுனமாகக் கொண்டதனைத் தலைவன் போருக்குச் சென்று திரும்பும் நிகழ்வினைப் பல்லி ஒலியின் மூலம் உணர்த்தியதனை,

**"வருவம் என்னும் பருவரல் தீரப்**
**படுங்கொல் வாழி நெடுஞ்சுவர் பல்லி"** ***(நற்.169:2–3)***

எனும் பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன.

**"நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கில் தேற்றும்"** ***(நற்.246:2)***

என தலைவனின் வரவைத் தெரிவிக்கும் பொருட்டுப் பல்லி உணர்த்தியதையும், தோழி நம் வீட்டில் உயர்வான இடத்திலிருக்கின்ற பல்லி நம் தலைவனை நினைக்கும் பொழுதெல்லாம் நல்ல சொல்லைச் சொல்லியபடி இருக்கின்றது என்பதனை,

**"உயர்புகழ் நல்இல் ஒண்சுவர்ப் பொருந்தி**
**நயவரு குரல பல்லி**
***நள்ளென் யாமத்து உள்ளுதொறும் படுமே"*** ***(நற்.333:10-12)***

என்ற பாடலடிகளும் சுட்டிக் காட்டுகின்றன.

குறுந்தொகையில் இந்நம்பிக்கையினைப் பொருள் ஈட்டும் பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரிந்த காலத்தில் அவர் நம்மை

நினைப்பாரோ, நினையாரோ என்று கருதிக் கவலையுற்றத் தலைவியை நோக்கித் தோழி அவர் சென்ற பாலை நிலத்தில் ஆண் பல்லிப் பெண் பல்லியை அழைத்தலைக் கேட்டு நின்னை நினைத்து மீண்டும் வருவார் என்பதனை,

**"செங்காற் பல்லி தன்துணை பயிரும்**
**அங்காற் கள்ளியங் காடிறந்தோறே"** ***(குறுந்.16:3-4)***

என்ற பாடல் புலப்படுத்துகின்றது.

**"புனை நலம் வாட்டுநர்அல்லர்; மனைவயின்**
**பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன"**

***(கலி.11:20-21)***

எனும் பாடலடிகளில் தலைவன் தலைவியைப் பிரிந்து சென்று மீண்டும் வருவதற்குக் கலதாமதமானதால் தலைவி துன்புறுகிறாள். அதனைக் கண்ட தோழி தலைவன் விரைவில் வருவான் என்று கூறிய நேரத்தில் பல்லியும் கத்தியதால் நன்னிமித்தமாகக் கருதினர் என்பதனை அறியமுடிகின்றது.

அகநானூற்றில் பல்லி கத்துதலை நிமித்தமாகக் கருதி, தலைவன் தேர்ப்பாகனிடம் கூறுகிறான். எனது வரவை எதிர்பார்த்திருக்கும் தலைவி என் இல்லத்தில் உள்ள பல்லியின் ஒலியைக் கேட்டு அதனை நன்னிமித்தமாகக் கொண்டு தலைவன் வருவார் என்ற நம்பிக்கையோடு இருப்பாள் என்று கூறியதனை,

**"ஓங்கிய நல் இல் ஒருசிறை நிலைஇ**
**பாங்கர்ப் பல்லி படுதோறும் பரவி"** ***(அகம்.9:18-19)***

என்ற அடிகளும், உச்சியிலே செழித்து முற்றியிருக்கும் நல்ல தினையின் உயர்ந்து வளைந்த பெரிய கதிரை உண்ணும் பொருட்டுப் பிளந்த வாயையுடைய பல்லியின் சொல்லை அறிந்து நல்ல நிமித்தம் என்று எண்ணி இளம் பன்றி வந்தது என்பதனை,

**"முதைச்சுவல் கலித்த மூரிச் செந்தினை**
**ஓங்கு வணர்ப் பெரும்குரல் உணீஇய, பாங்கர்ப்**

**பகுவாய்ப் பல்லிப் பாடுஓர்த்துக் குறுகும்**

**புருவைப் பன்றி" *(அகம்.88)***

எனும் பாடலும் எடுத்தியம்புகின்றன.

கள்ளிச் செடிகள் வளர்ந்து நிற்கும் பாலை நிலத்தில் சோதிடன் போல வழிச் செல்வோர்க்கு அங்குள்ள பல்லிகள் நிமித்தம் கூறும் என்பதனை,

**"உறுவது கூறும், சிறு செந்நாவின்**

**மணிஓர்த் தன்ன தெண்குரல்**

**கணிவாய் பல்லிய, காடு இறந்தோரே" *(அகம்.151:13-15)***

எனும் அடிகள் சுட்டுகின்றன. தலைவன் பிரிந்த நிலையில் தலைவி அவன் சென்றது முதல் ஒவ்வொரு நாளும் சுவரில் குறியிட்டு அதனை எண்ணி வருத்தத்துடன் வாழ்கிறாள். இந்நிலையில் அவளுடைய வருத்தத்தை நீக்குவது போலப் பல்லி ஒலித்தது என (அகம்.351:15–16) பாடலடிகளும்,

**"பகுவாய் பல்லி படுதொறும் பரவி**

**'நல்ல கூறுஎன' நடுங்கி,**

**புல்லென் மாலையொடு பொரும்கொல் தானே" *(அகம்.289:15-17)***

என்பனவும் பல்லி ஒலித்தால் தெய்வத்தை வணங்கி நல்ல குறி சொல்வாயாக என பல்லியை வேண்டிக் கொள்வாள் எனச் சுட்டுகின்றன. மானமிக்க வீரரின் நடுகற்கள் வரிசையாய் நிற்கும். அந்நடுகற்களில் தங்கி இறையினை விரும்பிக் கிடக்கும் முதுமை வாய்ந்த பல்லி சிறிதளவு ஒலித்துச் செய்தால் பட்டம் அணிந்த யானைமேல் செல்லும் அரசரேயாயினும், மேற்செல்லாமல் திரும்பும் காட்டில் நம் தலைவர் சென்றார் என்று

**"நிறைநிலை நடுகல் பொருந்தி இமையாது**

**இரைநசைஇக் கிடந்த முதுவாய்ப் பல்லி**

**சிறிய தொற்றுவது ஆயின் பெரிய**

**ஓடை யானை உயர்ந்தோர் ஆயினும்**

**சென்றோர் மன் என இருக்கிற் போர்க்கே" *(அகம்.387:15-19)***

எனும் அடிகள் சுட்டிச் செல்கின்றன.

ஐந்திணை எழுபதில் பல்லியின் ஒலியினை நிமித்தமாகக் கருதியதனைப் பல்லியானது இணக்கமாக நிமித்தஞ் சொல்லா நின்றதனை,

**"வீங்கிய மென்தோள் கவினிப் பிணிதீரப்**
**பாங்கத்துப் பல்லி படும்"** ***(ஐங்.எழு.39:3-4)***

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. கைந்நிலையில் இச்சகுனத்தினை

**"தாமாண்பில் வெஞ்சுரஞ் சென்றார் வரக்கண்டு**
**வாய்மாண்ட பல்லி படும்"** ***(கைந்.218:3-4)***

எனும் பாடலடிகள் வெஞ்சுரத்தின் கண் சென்றவர் வருவரென்பதனை அறிந்திட நிமித்தம் பார்த்ததனைப் புலப்படுத்துகின்றன.

**ஓந்தி நிமித்தம்**

ஓந்தி எனும் உயிரினத்தையும் நிமித்தம் பார்ப்பதற்கு மக்கள் பயன்படுத்தினர். ஓந்தி வலமாகச் சென்றால் நன்னிமித்தம் என்று சங்க காலத்தில் கருதியதனை,

**"வேதின வெரிநி னோதி முதுபோத்**
**தாறுசென் மாக்கள் புட்கொளப் பொருந்தும்**
**சுரனே சென்றனர் காதலர் உரனழிந்து"** ***(குறுந்.140:1-3)***

எனும் பாடலடிகள் தெரிவிக்கின்றன. காதலர், கருக்கரிவாளைப் போன்ற முதுகையுடைய முதிய ஆண் ஓந்தியானது வழிச் செல்லும் மனிதர்கள் நிமித்தமாகக் கொள்ளும்படி தங்குகின்ற பாலை நிலத்தில் சென்றனர் என்பதன் வாயிலாக உணரமுடிகிறது. அரப்பளிசுர சதகத்திலும் இது கூறப்பட்டுள்ளது.

**கண் துடித்தல்**

பெண்களின் இடதுகண் துடிப்பதனைச் சங்க இலக்கியங்களில் நன்னிமித்தமாகக் கொண்டதனைக் காணமுடிகின்றது. ஐங்குறுநூற்றில் இந்நம்பிக்கையினை,

**"நுண்ஏர் புருவத்த கண்ணும் ஆடும்"** ***(ஐங்.218:1)***

எனும் அடியில் அழகான புருவம் அமைந்த என் கண் துடிக்கின்றது. அதனால் தலைவன் விரைவில் வருவான் என்று நம்பியதனை எடுத்துரைக்கின்றது.

கலித்தொகையில் இந்நம்பிக்கையினை நின் இடக்கண்ணும் துடிக்கிறது. அதனால் பிரிந்து சென்ற தலைவன் விரைவில் வருவார் என்பதனை,

**“நல்எழில் உண்கணும் ஆடுமால் இடனே”** ***(கலி.10:22)***

எனும் பாடலடி சுட்டுகிறது.

**“பூங்கணிட மாடுங் கனவுந் திருந்தின**
**வோங்கிய குன்ற மிறந்தாரை யாநினைப்ப”** ***(ஐங்.எழு.39:1-2)***

என ஐந்திணை எழுபதில் தலைவனின் வருகையினை எதிர்நோக்கிக் கலங்கிய தலைவிக்குத் தோழி நிமித்தங்காட்டிக் கூறியதன் மூலம் உணரமுடிகிறது.

சிலப்பதிகாரத்தில் இக்கண் துடித்தல் நம்பிக்கை பற்றி கண்ணகிக்கு இடக்கண்ணும், மாதவிக்கு வலக்கண்ணும் துடித்ததனை இளங்கோவடிகள் பதிவு செய்துள்ளார். வலக்கண் துடித்தால் தீமை விளையும் என்று நம்பியதை சிலப்பதிகாரத்தில்

**“கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்**
**உண்ணிறை கறந்தகத் தொளித்து நீருகுத்தன**
**எண்ணுமுறை இடத்தினும் வலத்தினும் துடித்தன”**
***(சிலம்பு.இந்.237–240)***

என்பதன் மூலம் அறியமுடிகின்றது.

**வளை இறுகுதல்**

பெண்களின் வளை இறுகுதல் நன்னிமித்தமாகக் கருதப்பட்டதனைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது. ஐங்குறுநூறில் இதனை,

**“மயிர்வார் முன்கை வளையும் செறூம்”** ***(ஐங்.218:2)***

எனும் அடியில் முன்கையில் அணிந்திருக்கின்ற வளையல்கள் இறுகிப் பொருந்துகின்றன. அதனால் தலைவன் விரைவில் வருவார் என தலைவிக்கு நன்னிமித்தத்தைத் தோழி கூறியதனைக் காணமுடிகிறது.

**தும்மல் நம்பிக்கை**

தும்மல் நற்சகுனமாக விளங்கியதனை ஐந்திணை எழுபதில் தலைவனின் வருகையை எதிர்நோக்கிய தலைவிக்குத் தோழி நிமித்தங்காட்டிக் கூறியதாகக் குறிப்பிடப்படுகின்றது.

***"கள்ளிய தன்மையர் போலு மடுத்தடுத்***

***தொள்ளிய தும்மல் வரும்" (ஐந்.எழு.38:3–4)***

எனும் அடிகளில் புலப்படுத்தப்படுகின்றது.

திருக்குறளில் இந்நம்பிக்யைினைத் தலைவன் தும்மியவுடன் வாழ்த்தியவள் மீண்டும் அழுதால் ஏன் என்று கேட்கையில் யார் நினைத்ததால் தும்மல் வந்தது என்று என்பதனை,

***"வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்***

***யார்உள்ளித் தும்மினீர் என்று" (குறள்.1317)***

எனும் குறளும்,

***"தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்***

***எம்மை மறைத்திரோ என்று" (குறள்.1318)***

என வந்த தும்மலை அடக்கியதற்கும் அழுதாள், உம்பெண்டிர் நினைப்பதை ஒளிக்கிறீர்கள் என்று எடுத்தியம்புகிறது.

அன்றுபோல் இன்றும் தும்மலைச் சகுனமாகக் கொள்ளும் போக்கு தமிழ் மக்களிடம் வாழ்க்கையில் நிலை பெற்றுள்ளது. தும்மல் தொடர்ந்து வந்தால் தும்முபவரைத் தொலைவிலுள்ள உறவினரோ, நண்பர்களோ நினைப்பதாகக் கருதுவதனையும், ஒரு செயலைச் சிந்திக்கும் பொழுதும், செயல்படுத்தும் பொழுதும் தும்மும் போது நன்மை, தீமைகளை உணர்த்தும் சகுனங்களாகக் கருதுவதனையும் காணமுடிகின்றது.

குழந்தைகள் தும்மும்போது நூறு, இருநூறு எனப் பெரியோர் கூறுவர். அதாவது அப்படிக் கூறினால் குழந்தைகளின் ஆயுள் கூடும் என்று நம்புகின்றனர்.

**உன்னமரம் தளிர்த்தல்**

உன்னம் என்பது ஒருவகை மரமாகும். “இதனை இலவ மரமெனக் கூறுவது மலைநாட்டு வழக்கெனவும் போர் செய்வதற்குச் செல்வோர் நிமித்தம் பார்த்தற்குரிய மரமெனவும் உ.வே.சா. அவர்கள் குறிப்பர்” என்பர். இம்மரம் நிமித்தம் காண்பார்க்கு வெற்றி எய்துவதாயின் தழைத்தும் தோல்வியுறுவதாயின் கரிந்தும் காட்டிப் பின்விளைவுகளை முன்னுணர்த்துவதாகக் கருதுவர். தொல்காப்பியர் புறத்திணையியலில் இதனை ‘உன்னநிலை’ என்று குறிப்பிட்டுள்ளதனை,

**“ஓடாக் கழல்நிலை உளப்பட ஓடா**
**உடல்வேந்து அடுக்கிய உன்ன நிலையும்”**

***(தொல்.1006:7-8)***

எனப் பதிவு செய்துள்ளார்.

பதிற்றுப்பத்தில் உன்னம் நிமித்தமுணர்த்திய நிலையினை,

**“புன்கால் உன்னம் சாயதெண் கண்”** ***(பதிற்.40:17)***

என்றும், செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் உன்னத்துப் பகைவன் என்று பாராட்டுகின்றார். இங்கு உன்னமரம் தீ நிமித்தம் உணர்த்தியதால் வாழியாதன் அஞ்சாது சென்று போரிட்டு வெற்றி பெற்றதனால் அவ்வாறு அழைக்கப்பட்டான்.

புறநானூற்றில் உன்னமரம் பற்றிய குறிப்பாக

**“உன்ன மரத்து துன்அருங் கவலை”** ***(புறம்.3:23)***

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. வற்றிய மரம் தீப்பிடித்து எரிந்த செய்தியும் இடம்பெற்றுள்ளதை

**“பெருமரத்து இலையில் நெடுங்கோடு வற்றல் பற்றவும்”**

***(புறம்.41:3)***

என்று பதிவு செய்யப்பட்டுள்ளது.

**பிற நன்னிமித்தங்கள்**

சிலப்பதிகாரத்தில் நன்னிமித்தமாக இளங்கோ அடிகள்

**"முழுத்த மீங்கிது முன்னிய திசைமேல்**
**எச்சிப் பாலை யாகென்றேத்த" (கால்கோட்காதை.30-31)**

என்ற அடிகளில் சுட்டுகிறார்.

மணிமேகலையில் ஆபுத்திரன் தோன்றிய போது சில நன்னிமித்தங்கள் நிகழ்ந்ததனை,

**"மண்ணக மெல்லாம் மாரி யின்றியும்**
**புண்ணிய நன்னீர் போதொடு சொரிந்தது**
**போதி மாதவன் பூமியிற் றோன்றும்**
**கால மன்றியுங் கண்டென சிறப்பெனச்**
**சக்கர வாளக் கோட்டம் வாழும்" (மணி.15:27–31)**

என்று புலப்படுத்துகிறது.

**தீநிமித்தம்**

பின்னர் நிகழவிருக்கும் நிலைமைகளை முன்னர்ச் சில அறிகுறிகளின் வாயிலாக முன்னறிந்து கொள்ளும் நிலையில் நிமித்தங்கள் மனித வாழ்வில் சிறப்பிடம் பெறுகின்றன. அவை மனிதர்களின் செயல்களில் நன்மை, தீமைகளை நிச்சயிக்கும் நிலையால் நன்னிமித்தம், தீநிமித்தம் எனப் பகுக்கப்படுகின்றது. தீநிமித்தங்கள் பெரும்பாலும் இயற்கையின் மாறுபட்ட செயல்முறைகள், பறவை நிமித்தங்கள், விலங்கு பற்றிய நிமித்தங்கள், மாந்தரின் உடலில் ஏற்படும் மாற்றங்கள், கனவு நிமித்தங்கள், விண்ணியல் மாறுபாடுகள் ஆகியவற்றின் வழி வெளிப்பட்டிருப்பதனை இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன.

**மாந்தர் உறுப்புக்கள்**

மாந்தர்களின் உறுப்புகளின் வாயிலாக நிமித்தம் உணர்த்தியதனைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. இடக்கண் பெண்களுக்குத் துடித்தால்

நன்னிமித்தமாகக் கருதியதியமை முன்னர் சுட்டப்பெற்றுள்ளது. மற்ற உறுப்புகளும் தீய நிமித்தத்தை உணர்த்துவதனை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

**பல் நிலத்தில் விழுதல்**

கனவில் பல் நிலத்தில் விழுதல் தீநிமித்தமாகக் குறிக்கப்பெற்றுள்ளது. இதனைப் புறநானூற்றில்

**“எயிறு நிலத்து வீழவும்”** ***(புறம்.41:8)***

எனும் பாடலடி தெளிவுபடுத்துகிறது.

**எண்ணை தேய்த்தல்**

கனவில் எண்ணெய் தேய்த்தல் தீநிமித்தமாகக் கருதப்பட்டதனை,

**“எண்ணெய் ஆடவும்”** ***(புறம்.41:8)***

என்ற அடி சுட்டுகின்றது.

**ஆடை நீக்குதல்**

கனவில் உடுத்தியிருக்கும் ஆடையை நீக்குதலும் ஆண் பன்றி மீது ஏறுதலும் தீய நிமித்தமாகக் கருதப்பட்டதனைப் புறநானூற்றில்,

**“களிறுமேல் கொள்ளவும் காழக நீப்பவும்”** ***(புறம்.41:9)***

என்ற பாடலடி குறிப்பிடுகின்றது.

**படைக்கருவிகள் கவிழ்தல்**

போருக்குப் பயன்படுத்தக்கூடிய படைக் கருவிகள் அனைத்தும் கனவில் கவிழ்வது போலக் காண்பதும் தீய நிமித்தம் என்று நம்பியதனை,

**“வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்”**

***(புறம்.41:10)***

எனும் அடிகளில் வலிமை வாய்ந்த படைகளும், கருவிகளும் கவிழ்ந்ததை எடுத்துக்காட்டுகின்றன.

**தலைவிரிகோலம்**

பெண்களின் தலைவிரி கோலத்தைத் தீய நிமித்தமாகச் சங்கச் சான்றோர்கள் நம்பினர். ஒருவர் பயணத்தின் போது பெண்கள் தலைவிரி கோலமாக எதிர்ப்பட்டால் நினைத்த வினை நிறைவேறாது என்று நம்பினர். இதனை,

> **"களரும் நெஞ்சும் தலைஇ மனையோள்**
> **உளரும் கூந்தல் நோக்கி களர"** ***(புறம்.26:3–4)***

எனும் அடியில் கணவன் புறப்படும் பொழுது மனைவி தன் தலைமுடியை விரித்து உலர்த்துதல் தீயநிமித்தம் என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. இந்நம்பிக்கை தற்பொழுதும் வழக்கிலுள்ளது.

**அழுகைக் கண்ணீர்**

அழுகைக் கண்ணீரும் சங்க காலத்தில் தீநிமித்தமாக இருந்தது என்பதை நற்றிணையில் தலைவன் பொருளீட்டச் செல்கிறேன் என்றவுடன் தலைவி அழுகின்றாள். தான் அழுவது தெரியக்கூடாது என்பதற்காகத் தனது கூந்தலை வைத்து முகத்தை மறைத்தாள் என்பதனை,

> **"நெய்தல் உண்கண் பைதல் கூரப்**
> **பின்னிரும் கூந்தல் மறையினள் பெரிதழிந்து"** ***(நற்.113:7-8)***

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**விளக்கு அணைதல்**

சங்க காலத்தில் மக்கள் எற்றிவைத்த விளக்கு அணைதல் தீநிமித்தம் என்று நம்பியுள்ளனர். இதனை,

> **"நெடுநகர் வரைப்பின் விளக்கும் நில்லா"** ***(புறம்.280:3)***

எனும் புறநானூற்று அடி தலைவன் மார்பில் ஏற்பட்ட பெரிய புண்ணால் அவனது உயிர் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரிந்து கொண்டு இருக்கின்றது. இவ்வேளையில் அவனுக்காக ஏற்றி வைக்கப்பட்ட விளக்கு நின்று

எரியவில்லை. இது அபசகுனமாகும் என்று எடுத்துரைக்கப்பெறுகிறது. இக்காலத்திலும் இந்நம்பிக்கை வழக்கிலுள்ளது.

**வானியல் நிகழ்வுகள்**

வானியல் நிகழ்வுகளின் மூலம் நிமித்தம் பார்த்ததனைச் சங்க இலக்கியங்கள் சுட்டிச் செல்கின்றன. அவை, 1.எரி நட்சத்திரம் தோன்றுதல், 2.கோண்மீன் தகைத்தல், 3.விண்ணில் குளமீனும் நாள்மீனும் புகைந்து தோன்றுதல் ஆகியவைகளாகும்.

***1. எரிநட்சத்திரம் தோன்றுதல்***

எரிநட்சத்திரம் தோன்றுதல் ஒரு நாட்டிற்குத் தீய நிமித்தமாக அமையும் என நம்பியதனை,

***"மிகவானுள் எரிதோன்றினும்" (புறம்.395:34)***

என வானில் எரிநட்சத்திரம் தோன்றினாலும் அவன் வாரிவழங்குவான் என்பதன் மூலம் அறியமுடிகின்றது.

***2. கோள்மீன் தகைத்தல்***

கோள்மீன் தகைத்தலைக் தீநிமித்தமாகக் கருதியதனைக் கலித்தொகையில்,

**"நாளும் கோள்மீன் தகைத்தலும் தகைமே" *(கலி.4:9)***

என்று நாளும் கோளும் தான் இனி உன் போக்கைத் தடுக்க வேண்டும் என்று கூறுவதனால் உணரமுடிகிறது.

***3. குளமீனும் நாள்மீனும் புகைந்து தோன்றல்***

விண்ணில் குளமீனும் நாள்மீனும் புகைந்து தோன்றுதலைத் தீய நிமித்தமாகக் கருதியதினைப் புறநானூற்றில்,

**"குளமீனொடு நாள்புகையினும்" *(புறம்.395:35)***

என்ற பாடலடியில் குளமீன், நாள்மீன் ஆகியவைகள் புகைந்து தோன்றினாலும் தவறாது விருந்து கொடுப்பான் என்று குறிப்பிடப்படுகின்றது.

**பறவைச் சகுனம் (தீநிமித்தம்)**

பறவைகள் நன்னிமித்தம், தீநிமித்தம் ஆகிய நிமித்தங்களை உணர்த்தும் காரணியாகச் செயல்பட்ட நிலையினைப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பேசுகின்றன. தீநிமித்தக் காரணியாக ஆந்தை இனப் பறவைகள் சங்க இலக்கியத்தில் சுட்டப்பட்டிருக்கின்றன.

"சங்க இலக்கியத்தில் ஆந்தை இனப் பறவைகளை ஐந்து வகைகளாகப் பிரிப்பர். அவை, கூகை, குரால், குடிஞை, ஊமன், ஆண்டலை என்பர்."[18]

கூகைப் பறவை நடுஇரவில் அனைவரும் அஞ்சும்படி குழறக்கூடியது. கூகை; சாவோரை அழைப்பதாகக் கருதும் வழக்கம் இன்றும் மக்களிடையே நின்று நிலவுகின்றது. இரவு நேரங்களில் இவை பேரொலி எழுப்பினால் ஏதோ நிகழப்போகின்றது என்று நம்பும் தன்மையைக் காணமுடிகின்றது. இக்கூகையினைப் பற்றி நற்றிணையில்,

**"கூகைச் சேவல் குராலோ டேறி**
**ஆறிருஞ் சதுக்கத் தஞ்சுவரக் குழறும்**
**அணங்குகால் கிளருங் மயங்கிருள் நடுநாள்"** ***(நற்.319:4-6)***

எனும் பாடலில் மணல் சூழ்ந்த பழைய ஊரின் பெரிய தெருவிலே கூகையானது தன்னுடைய பெட்டையோடு உளறிக் கொண்டு நாற்சந்தியில் கூவி நிற்கும் என்று குறிக்கப்பட்டுள்ளது.

அகநானூற்றில் இக்கூகையினைப் பற்றி வீட்டு எலியைப் பிடித்துண்ணும் கோட்டான் நடுச்சாமத்தில் கடுங்குரலெடுத்து அலறும் என்பதனை,

**"இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை**
**கழுது வழங்கு யாமத் தழிதகக் குழறும்"** ***(அகம்.122:13-14)***

எனும் பாடலடிகளும், நடுச்சாமத்தில் பழைய மரத்தில் இருக்கும் கிழட்டு ஆந்தை திடுமெனக்கூவும். தலைவனை எண்ணி உறங்காமல் இருக்கும் எனக்கு அது பயத்தைத் தரும் என்றதனை,

**“முதுமரத்து உரையும் முரவுவாய் முதுபுள்**

**கதுமெனக் குழறும், கழுது வழங்கு”** ***(260:12-13)***

எனும் பாடலடிகளும் சுட்டுகின்றன.

புறநானூற்றில் இக்கூகையினைப் பற்றிக் குறிப்பிடுகையில் சுடுகாட்டின் அருகில் வாழும் தன்மையுடையது என்பதை,

**“வாய்வன் காக்கையும் கூகையும் கூடிப்**

**பேஎய் ஆயமொடு பெட்டாங்கு வழங்கும்**

**காடு முன்னினனே”** ***(புறம்.238:3–5)***

எனும் பாடலடிகளும், பிளந்த வாயையுடைய ஆந்தை சுட்டுக்குவி என்று செத்தாரை அழைப்பது போல் கூவும். இதனை,

**“பொத்த வறையுட் போழ்வாய்க் கூகை**

**சுட்டுக்குவி எனச்செத்தோர் பயிரும்**

**கள்ளயம் பறந்தலை ஒருசிறை அல்கி”** ***(புறம்.240:7-9)***

என்ற பாடலடிகளும், கள்ளிச்செடிகள் பறந்து இருக்கும் நிலையில் பகலில் கூகைகள் கூவும் என்பதனை,

**“களரி பரந்து, கள்ளி போகிப்**

**பகலும் கூஉம், கூகையொடு பிறழ்பல்**

**ஈமவிளக்கின் பேஎய் மகளிரொடு”** ***(புறம்.356:1–3)***

என்ற அடிகளும், பெரிய மரத்தின் பொந்துகளில் இருந்து அலறிக் கூவும் பேராந்தைகள் அகலாத தாழிகளை உடைய சுடுகாட்டை அடையும் என்று கூறுவதனை,

**“நிலம்பக வீழ்ந்த அலங்கற் பல்வேர்**

**முதுமரப் பொந்தில் கதுமென வியம்பும்**

**கூகைக் கோழி ஆனாத்**

**தாழிய பெருங்காடு எய்திய ஞான்றே”** ***(புறம்.364:10-13)***

எனும் பாடலடிகளும் தெளிவுபடுத்துகின்றன.

அஞ்சத்தக்கப் பறவையின் ஒலியை தீநிமித்தமாகக் கருதியதை,

**"அஞ்சுவரத் தகுந புள்ளுக்குரல் இயம்பும்"** ***(புறம்.41:7)***

எனும் பாடலடி விளக்குகின்றது.

மதுரைக்காஞ்சியில் இதனைப் பெரிய மாளிகைகளில் வெந்து வீழ்ந்த கரிந்த நெற்குதிர்களில் தலைச்சுட்டினையுடைய ஆந்தைகள் தம் பெடைகளுடன் கதறின என்பதனை,

**"நெடுநகர் வீழ்ந்த கரிக்குதிர்ப் பள்ளிக்**
**குடுமிக் கூகை குராலொடு முரல"** ***(மது.169–170)***

எனும் அடிகள் எடுத்தியம்புகின்றன. பட்டினப்பாலையில் வளைந்த வாயையுடைய கூகைகள் பகல் காலத்திலும் குழறியது என்பதனை,

**"வளைவாய்க் கூகை நண்பகற் குழறும்"** ***(பட்.268)***

எனும் அடியும் உணர்த்துகிறது.

மணிமேகலையில் இக்கூகை நிமித்தக்கூறாக விளங்கியதனை இறந்தோரை அழைக்கும் பேராந்தையின் ஒலி என்பதனை,

**"சாவோர்ப் பயிருங் கூகையின் குரலும்"** ***(மணி.6:75)***

என்றும், பட்டினப்பாலையில்,

**"அழுகுரற் கூகையொ டாண்டலை விளிப்பவும்"** ***(பட்.258)***

அடிகளும் பதிவு செய்துள்ளன. புதுப்புள் வருதலும் பழம்புள் போதலும் தீநிமித்தமாகக் கருதியதனைப் புறநானூற்றுப் பாடலடிகள் (20:18–20) விளக்குகிறது.

**விலங்கு தீநிமித்தம்**

விலங்குகளில் யானை, குதிரை, எருது, மறி ஆகியவற்றின் இயல்பல்லாத நிலைகள் தீநிமித்தக் குறிகளாகச் சுட்டப்பட்டுள்ளன. நிமித்தக் கூறுகள் பெரும்பாலும் மக்கள் வாழ்வியலின் சுற்றுப்புறச் சூழ்நிலைகளுக்குத் தக அமைகின்றன. சான்றாகப் புறநானூற்றில் மன்னனது கனவில் சில குறியீடுகளின் வாயிலாக நிமித்தம் உணர்த்தியதனை,

***“எயிறு நிலத்து வீழவு மெண்ணெ யாடவும்***
***களிறுமேல் கொள்ளவும் காழக நீப்பவுங்***
***வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்***
***கனவி னரியன காணா” (புறம்.41:8-11)***

எனும் பாடலடியில் எட்டுத்திசைகளிலும் எரிகொள்ளி எரிந்து விழவும், பெரிய மரத்தின் இலை இல்லாத பெரிய கிளை பட்டுப்போகவும், கொடிய வெப்பத்தையுடைய கதிரவன் எரிபோல் பற்றவும், அஞ்சந்தக்க பறவைகள் ஒலி எழுப்பவும், பல் நிலத்தில் வீழவும், எண்ணெய் தேய்க்கவும், ஆண் பன்றி மீது ஏறுவது போலும், ஆடையை நீக்குவது போலும், வலிமை வாய்ந்த படைக்கருவிகள் அவற்றை வைத்திருந்த கட்டிலொடு கவிழ்வது போலவும் தீநிமித்தம் உணர்த்தியதனைப் புலப்படுத்துகிறது.

***“அஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே***
***மைந்துடை யானை கைவைத் துறங்கவும்***
***திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவும்***
***காவல் வெண்குடை கால்பரிந் துலறவும்***
***காலியற கலிமாக் கதியன்றி வைகவும்***
***மேலோருலக மெய்தின னாகலின்” (புறம்.229:17-22)***

எனும் பாடலில் யானை தூங்குதல், குதிரை முடங்கிக் கிடத்தல் போன்றவை தீநிமித்தங்களாகச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. மேலும் இப்பாடலில் விண்மீன் விழுந்த ஏழாம் நாளில் தீநிமித்தம் நிகழ்ந்ததனை, இறுக்கிக் கட்டப் பெற்ற முரசம் கிழிந்து உருண்டது என்றும், காவல் கடமை செய்வதற்கு அடையாளமாகிய வெண்கொற்றக் குடைக் காம்பு ஒடிந்தது எனவும் குறிக்கப்பெற்றுள்ளன.

சிலப்பதிகாரத்தில் விலங்கு நிமித்தத்தைக் குறிப்பிடும் பொழுது கனவில் கோட்டுமா ஊர்தல் தீநிமித்தமாகக் கருதப்பட்டது புலனாகிறது. இதனை,

**"நாறைங் கூந்த னடுங்குதுய ரெய்தக்**

**கூறைகோட் பட்டுக் கோட்டுமா வூரவும்"**

***(சிலம்பு.15:97-98)***

எனும் அடிகளும், தன் மனைவியின் காற்சிலம்பை விற்க மாதரியின் வீட்டிலிருந்து புறப்பட்டுத் தெருவில் சென்ற கோவலனை எருது எதிர்த்தது. ஆயர் நிமித்தமறியாத கோவலனின் நிலையினை இளங்கோவடிகள்,

**"பல்லான் கோவல ரில்ல நீங்கி**

**வல்லா நடையின் மறுகிற் செல்வோன்**

**இமிலே றெதிர்ந்த திருக்கென வறியான்**

**தன்குல மறியுந் தகுதியன் றாதலின்"** ***(சிலம்பு.16:98–101)***

எனும் அடிகளும், சிலப்பதிகாரத்தில் கோவலன் மறையப் போகிறான் என்பதனை அறிவுறுத்துவதாக சில தீய குறிப்புகள் நிகழ்ந்தது என்பதனை,

**"குடம்பால் உறையா, குவிஇமில் ஏற்றின்**

**மடக்கண்நீர் சோரும் வருவது ஒன்று உண்டு**

**உறிநறு வெண்ணெய் உருகா உருகும்**

**மறிதெறித் தாடா; வருவதொன் றுண்டு**

**நான்முலை ஆயம் நடுங்குபு நின்றிரங்கும்**

**மான்மணி விழும் வருவது ஒன்று உண்டு"** ***(சிலம்பு.17:2-4)***

எனும் அடிகளில் குடங்களில் உறையிட்டிருந்த பால் உறையாதிருக்கின்றது. திரண்ட திமில்களையுடைய ஆணேற்றின் அழகிய கண்களிலிருந்து நீர் வழிந்து கொண்டிருக்கின்றது. அதனால் நமக்கு வருவதோர் தீமை ஒன்று உண்டு எனவும்,

முதல்நாள் உறியிலே எடுத்துவைத்திருந்த மணமுள்ள வெண்ணெய் உருகவைத்தும் உருகவில்லை. துள்ளி விளையாடும் ஆட்டுக்குட்டிகள் சோர்ந்து படுத்திருக்கின்றன. அதனால் நமக்கு வருவதோர் தீமை ஒன்று உண்டு என்றும் நான்கு முலைக் காம்புகளையுடைய பசுநிரைகள் தம் உடல் நடுங்க நின்று கதறுகின்றன. அவற்றின் கழுத்திலே கட்டியிருந்த மணிகள் அறுந்து கீழே

வீழ்கின்றன. அதனால் தமக்கு வருவதோர் தீமை ஒன்று உண்டு என குறிப்பால் உணர்த்தியதனைக் கண்ட மாதிரி தன் மகளிடம் சொல்லிக் கவலைப் பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

கம்பராமாயணத்தில் மண்டோதரி கண்ட கனவில் வாழைமரம் சாய்தல், பகலில் விண்மீன் விழுதல், பெண்களின் மாங்கல்யம் அறுந்துவிடுதல் போன்ற தீய குறிப்புகள் இராவணன் அழிவிற்கும், இலங்கை அழிவிற்கும் அறிகுறியாக இருந்ததை அறியலாம்.

**விரிச்சி கேட்டல்**

ஒரு செயலைத் தொடங்குவதற்கு முன்னர்ப் பிறர் கூறும் சொற்களைச் சில நிகழ்வுகளைச் சகுனங்களாகக் கொள்ளும் வழக்கம் பண்டுதொட்டு நம்மிடம் நிலவிவருகின்றது. இதனைப் பண்டைத் தமிழ் மக்கள் விரிச்சி என்று சுட்டியுள்ளனர். ‘‘விரிச்சி என்பது வருங்காரியத்தை விரிவாய் முன்னே தெரிவிப்பதாகும்’’[19] என்பர். இதனை நற்சொல் எனவும் கூறலாம். ‘‘ஒருவர் ஒரு செயலைச் சிந்திக்க அல்லது செயலாற்ற நினைக்கும் நேரத்தில் அருகிலுள்ளவர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்ளும் சொற்கள் தான் சிந்திப்பவற்றிற்கு இயைந்ததாகவோ, இயலாததாகவோ அமைந்து மேற்கொள்ளப்போகும் செயலின் பயனை நிச்சயிக்கும் என நம்பிக்கை கொள்ளுதலே விரிச்சி எனப்படும்’’[20] என்பர். இது நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றுவது.

விரிச்சி கேட்டல் அகம், புறம் ஆகிய இரு மரபுகளிலும் பயின்று வந்துள்ளது. இது நன்னிமித்தம் உணர்த்தப் பயின்று வந்துள்ளதனைக் காண்கிறோம். பெரும்பாலும் நிமித்தக் கூறுகளில் பெண்டிரின் சொற்கள் நன்னிமித்தமாக அமைந்த திறத்தினைச் சங்கப் பாடல்கள் சுட்டுகின்றன. இந்நம்பிக்கையினைத் தொல்காப்பியர்,

***‘‘படைஇயங்கு அரவம் பாக்கத்து விரிச்சி’’ (தொல்.1004:1)***

எனும் நூற்பாவில் சுட்டுகிறார். போருக்குப் படை புறப்படும்போது சேரியின் வீட்டுப் புறத்தே நின்று நற்சொல் கேட்டனர் என்று குறிப்பிடப்படுகின்றது.

நற்றிணையில் இந்நம்பிக்கையிருந்ததைப் பிறர் பேசும் இனிய சொற்களின் மூலம் தலைவன் விரைவில் வருவார் என்பதனை,

**"இடூஉ ஊங்கண்இனிய படூஉம்"** ***(நற்.246:1)***

எனும் பாடலடி சுட்டுகின்றது.

**"பெரும்பாண் காவல் பூண்டென வொருசார்த்**
**திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப"** ***(நற்.40:1–4)***

எனும் பாடலடிகளும் நன்னிமித்தம் உணர்த்தியதனை எடுத்தியம்புகின்றன.

குறுந்தொகையில் இதனைத் தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றவுடன் தோழிக்குக் கூறியதாக அமைகின்றது. இதனை,

**"புள்ளு மோராம் விரிச்சியும் நில்லாம்**
**உள்ளலு மள்ளா மன்றே தோழி"** ***(குறுந்.218:3–4)***

எனும் பாடலடிகள் சுட்டுகின்றன.

புறநானூற்றில் இவ்விரிச்சி கேட்டலைச் செம்முது பெண்டிர் நெல்லையும் நீரையும் தூவி விரிச்சி கேட்டு நிற்குங்கால் அவர்கள் செவிகளில் விழுந்த சொற்கள் நன்மை நிரம்பிய சொற்களாக இல்லை என்பதனை,

**"நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்கும்**
**செம்முது பெண்டின் சொல்லு நிரம்பா"** ***(புறம்.280:6–7)***

எனும் பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன.

பத்துப்பாட்டில் ஒன்றான முல்லைப்பாட்டில் பெருமுதுப்பெண்டு விரிச்சி கேட்டு நின்ற பொழுது, பசுவைப் பிரிந்த கன்றை நோக்கி ஓர் இடைக்குலப்பெண் 'இன்னே வருகுவர் தாயர்' என்று சொன்ன சொல்லை நல்நிமித்தமாகப் போற்றிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. 'இன்னே வருகுவர் தாயர்' என்று கூறிய மொழி தலைவனைப் பிரிந்து வருந்திய நிலையிலிருக்கும் தலைவிக்கு ஆறுதல் அளித்தது என்பதனை,

**"யாழிசை இனவண்டு ஆர்ப்ப நெல்லொடு**
**நாழி கொண்ட நறுவீ முல்லை**
**அரும்பவிழ் அலரி தூஉய்க் கைதொழுது**
**பெருமுது பெண்டிர், விரிச்சி நிற்ப**
**சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்**
**உறுதுயர் அலமரம் நோக்கி ஆய்மகள்**
**நடுங்கு அவல் அசைந்த கையள் கைய**
**கொடுங்கோற் கோவலர் பின் நின்று உய்த்தர**
**இன்னே வருகுவர், தாயர் என் போள்**
**நன்னர் நன்மொழி கேட்டனம் அதனால்**
**நல்ல நல்லோர் வாய் புள்" (முல்லை.8–17)**

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**கட்டுக் கேட்டல்**

தலைவியின் காமநோயை அறியமாட்டாத தாய் அவளது வேறுபாட்டின் காரணத்தை ஆராயும் பொருட்டு அகவன் மகளாகிய கட்டுவிச்சியை அழைத்துக் கட்டுப்பார்ப்பது வழக்கம். கட்டுக்குறி பெரும்பாலும் பெண்டிரால் நிகழ்த்தப்பெறும் ஒன்றாகக் கருதப்படுகின்றது. "கட்டுப் பார்த்தல் என்பது முறத்தில் நெல்லை விட்டமாகப் பரப்பி வைத்து தெய்வங்களைப் பாடி எண்ணிப் பார்த்துக் கட்டுவிச்சி காணும் குறி"[21] என்பர்.

இது வெறியாடலுக்கு முன் நிகழும் குறிமுறையாகவும், கட்டுப் பார்த்தல் பெண்களுக்குரிய ஒன்றாகவும் கருதப்படுகின்றன. பெண்ணாகிய கட்டுவிச்சியரால் அறிந்துணர்த்தப்படும் குறிமுறையாகவும் இலக்கியச் சான்றுகள் உணர்த்துகின்றன. இதன் வளர்ச்சியினைத் தமிழிலக்கிய வகையினுல் ஒன்றான குற்றாலக் குறவஞ்சியில் குறத்தி குறி சொல்லுதல் எனும் பகுதியில் காணலாம்.

இந்நம்பிக்கையினை நற்றிணையில் தலைவன் பிரிந்ததால் தலைவிக்கு அழகு அழிந்து பசலை படர்ந்தது. அதனைக் கண்ட அன்னை

செம்மையும் முதுமையும் உடைய பெண்டிரோடு முறத்தில் நெல்லைப் பரப்பி குறி கேட்டாள் என்பதனை,

**"நல்நுதல் பரந்த பசலை கண்டு அன்னை**
**செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇ**
**கட்டின் கேட்கும் ஆயின்"** ***(நற்.288:5–7)***

எனும் அடிகளிலும், குறுந்தொகையில் தலைவியினது வேறுபாட்டின் காரணத்தைச் செவிலித்தாய் முதலியோர் நெற்குறி கொண்டு ஆராய்ந்த காலத்தில் தோழி, தலைவனுக்குரிய மலையை நீ பாடுவாயாக என்று தலைவி கூறுவதன் மூலம் தலைவியின் வேறுபாடு ஓர் ஆடவனால் வந்தது என்பதனை உணர்த்தும் பாடலாக,

**"அகவன் மகளே அகவள் மகளே**
**மனவுக் கோப்பன்ன நன்னெடுங் கூந்தல்**
**அகவன் மகளே பாடுக பாட்டே**
**இன்னும் பாடுக பாட்டே அவர்**
**நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே"** ***(குறுந்.23)***

என்பது அமைகிறது. இதனை மற்றொரு பாடலடியில்

**"இன்கடுங் கள்ளி னகுதை பின்றை**
**வெண்கடைச் சிறுகோ லகவன் மகளிர்"** ***(குறுந்.298:5-6)***

வெள்ளிய முனையையுடைய சிறிய கோலைக் கொண்ட அகவன் மகளிர் நம்மைக் கண்டு இனியமொழி கூறுதலேயன்றி வேறு ஒன்றைக் கருதியாயிற்று என்று பதிவுசெய்துள்ளது.

அகநானூற்றில் கட்டுப் பார்த்தச் செய்தியினை,

**"சூருறை வெற்பன் மாற்புறத் தணிதல்**
**அறிந்தன ளல்ல ளன்னை வார்கோற்**
**செறிந்திலங் கெல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்**
**கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்**

**பொய்வல் பெண்டிற் பிரப்புளர் பிரீஇ**
**முருக னாரணங் கென்றலின்"      *(அகம்.98:5-10)***

*எனும் பாடலடிகளில் தலைவனால் வளையல் நெகிழ்தல், மெலிதல், உடல் நலக்குறைவு இவை ஏற்பட்டது என உம்மை அறியாத தாய் கழங்காடிக்குறி சொல்வோர் கூறியவாறு முருகனால் இந்நோய் வந்தது என நம்பினார் என்று எடுத்துரைக்கின்றது.*

**கழங்குக் குறிபார்த்தல்**

*கட்டுவிச்சியிடம் நெற்பரப்பிக் குறிபார்ப்பதைப் போல வேலனை அழைத்துக் கழங்குக் குறி பார்ப்பது உண்டு. இதனை வேலன் மட்டுமே நிகழ்த்தியதாகத் தெரிகின்றது. வேலன் தன் கையிலுள்ள கழற்சிக்காய்களை முருகனை வழிபட்டு அழைத்துப் பரப்பி அதன் மூலம் நன்மை தீமை போன்ற குறியுணர்த்துவார்.*

*கழங்குக்குறி பற்றி நற்றிணைக்கு உரை எழுதியுள்ள பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், "கழங்கு – கழற்சிவித்துப் பலவற்றை முருகன் முன் போட்டு வேலன் தன் தலையில் ஆடை சூடிக் கையிற் பல தலைகளிற் சிறுபைகளைக் கட்டிய கோலொன்றேந்தி அக்கோலாற் கழங்கு வித்துக்களை வாரியெடுப்புழிக் குறிப்புக் காணுகின்ற ஒருவகைக்குறி"[22] என்று குறிப்பிட்டுள்ளார்.*

*ஐங்குறுநூற்றுக்கு உரை வரைந்த ஔவை துரைசாமிப்பிள்ளை, "தன் தலையில் ஆடை கட்டிய சிறிய பைகள் நாலவிட்ட பல கிளைகளையுடைய வளைந்த கொம்பொன்றில் கழற்காய்களை முருகன் முன் வைத்து அள்ளியெடுக்குங்கால் கண்டு கூறும் ஒருவகைக்குறி"[23] என்பார். தொல்காப்பியர் இதனை,*

**"கட்டினும் கழங்கினும் வெறிஎன இருவரும்"  *(தொல்.1061:3)***

*என்று குறிப்பிடுகிறார். இக்குறிபார்த்தலைச் சங்க இலக்கியங்களில் ஒன்றான நற்றிணையில் தோழி தலைவிக்குக் கூறியதாக வெறியாடிய காமக்கண்ணியார், முற்றத்தில் வெண்மணல் பரப்பி உள்ளனர். வேலனை அழைத்துக் கழங்குக்*

காய்களைக் கொண்டு தலைவிக்கு ஏற்பட்ட மாற்றங்களுக்குக் காரணத்தைக் கூறுமாறு தாய் கேட்கிறாள் என்பதனை,

**“பெய்ம்மணல் முற்றம் கடிகொண்டு**
**மெய்ம்மலி கழங்கின் வேலன் தந்தே” *(நற்.268:8–9)***

எனும் பாடலடிகளும், தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஏற்பட்ட மாற்றங்களைக் கண்ட தாய் தெய்வத்தினால் ஏற்பட்ட குற்றம் என்று எண்ணி, வேலனை அழைத்து உன்நிலை குறித்து விளக்கி, அதன் காரணத்தைக கழங்கினாலே விளக்கும்படி கேட்டுக் கொண்டாள் என தோழி தலைவிக்கு எடுத்துக் கூறியதாக,

**“அணங்குறு கழங்கின் முதுவாய் வேலன்**
**கிளவியின் தணியின் நறுமன் சாரல்” *(நற்.282:5–6)***

எனும் பாடலடிகளும் விளக்குகின்றன.

ஐங்குறு நூற்றில் இந்நம்பிக்கையினைத் தலைவனால் உற்ற நோயைத் தீர்ப்பதற்கு வேலன் வெறியாட்டு நிகழ்த்துவதற்கானவற்றைச் செய்தான் என்பதனை,

**“வெறிசெறித் தனனே, வேலன் கறிய**
**கல்முகை வயப்புலி கழங்குமெய்ப் படூஉம்” *(ஐங்.246:1-2)***

எனும் பாடலடிகளும், தலைமகள் வேறுபாடு கழங்கினால் தெரியும் என்று வேலன் கூறியதனை,

**“பெய்மணல் குற்றம் கவின்பெற இயற்றி**
**மலைவான் கொண்ட சினைஇய வேலன்**
**கழங்கினால் அறிகுவது என்றால்,**
**நன்றால் அம்ம, நின்ற இவள் நலனே” *(ஐங்.248)***

எனும் பாடலும், தலைவியின் மாற்றத்திற்குக் காரணம் முருகன் தான் என வேலன் கழங்குக் குறியில் கூறியதனை,

**"பெய்ம்மணல் வரைப்பில் கழங்குபடுத்து, அன்னைக்கு**
**முருகுஎன மொழியும் வேலன்; மற்றவன்**
**வாழிய இலங்கும் அருவிச்**
**சூர்மலை நாடனை அறியா தோனே!" (ஐங்.249)**

என்ற பாடலும், தலைவியின் மெலிவுக்குக் காரணம் முருகன் தான் என ஐங்.250 ஆவது பாடலும் பதிவு செய்துள்ளன.

பதிற்றுப்பத்தில் கழங்குகாய் கொண்டு நனமை, தீமை அறிந்ததனை,

**"எல்லாம் எண்ணின் இடுகழங்கு தபுந" (பதிற்.32:8)**

எனும் பாடலடியில் சுட்டப்படுகின்றது. கழற்காய்களைக் கொண்டு பெண்கள் விளையாடும் விளையாட்டு கழங்காடல் என்பதனை அகநானூற்றில்,

**"இளந்துணை யாயமொடு கழங்குடனா டினும்" (அகம்.17:2)**

எனும் அடியும், மகட்போக்காகிய தாய் ஒருத்தி தலைவியைக் கவர்ந்து சென்ற தலைவன் என் வீட்டிற்குத் திரும்புவானா? அல்லது தன் இல்லத்திற்கே சென்றுவிடுவானா? அவனுடைய எண்ணம் யாதாயிருக்கும் என்று கூறுமாறு கழக்குக்குறி பார்க்கும் வேலனை வினவியதனை,

**"ஆகுவது அறியும் முதுவாய் வேல**
**கூறுக மாதோநின் கழங்கின் திட்பம்**
**மாறா வருபனி கலுழுங் கங்குலில்**
**ஆனாது துயருமெங் கண்ணினிது படீஇயர்**
**எம்மனை முந்துறத் தருமோ**
**தன்மனை உய்க்குமோ யாது அவன் குறிப்பே"**
**(அகம்.195:14-19)**

எனும் பாடலடிகளும், காட்டில் குரங்குகள் நெல்லிக்காயைக் கழங்காகக் கொண்டு விளையாடின என்பதனை,

**"விருந்தின் வெங்காட்டு வருந்தி வைகும்**
**அத்த நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய்**

**வட்டக் கழங்கிற் றாஅய்த் துத்தலை**

**செம்முக மந்தி யாடும்" (அகம்.241:12–15)**

எனும் பாடலடிகளும் விளக்குகின்றன.

தலைவியின் தாய் தங்கள் மகளின் மேனி வேறுபாட்டின் காரணத்தை அறியவும், தாங்கள் எண்ணியது நிறைவேறுமா? கைகூடுமா என்று அறியவும் இவ்வகையானக் குறிகளை நம்பினர் என்று தெளியமுடிகிறது.

திணைமாலை நூற்றைம்பதில் இந்நம்பிக்கையினை நிமித்தஞ் சொல்வார் பலருள்ளும் நின்னை வேறாகக் கொண்டு வினவா நின்றேன். உன்னுடைய தெய்வத்தன்மையுடைய கழங்காற் பார்த்துக் கூறாய் என்பதனை,

**"வேறாக நின்னை வினவுவேன் தெய்வத்தாற்**

**கூறாயோ கூறுங் குணத்தினாய்" (திணை.நூற்.90:1–2)**

எனும் பாடலடிகளில் கழங்கு பார்க்கும் செய்தியினை அறியமுடிகின்றது.

**வெறியாட்டு தொடர்பான நம்பிக்கைகள்**

வெறியாட்டு என்பது பழந்தமிழரின் தனித்த வழிபாடாகும். வெறியாடுபவர்களின் வாயிலாக இறைவன் வெளிப்படுவான் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றிய இவ்வழிமுறை வெறி எனவும் வெறியயர்தல் எனவும் இலக்கியங்களில் சுட்டப்பெறுகின்றன. மருந்தாலும் பிறவற்றாலும் நீங்காத நோய் வெறியாட்டால் நீங்குமென்று நம்பிக்கை கொண்டு வெறியயர்தலே வெறியாட்டு எனப்படும்.

இந்த வெறியாட்டினை இன்றைய தமிழக நாட்டுப்புறங்களில் வழக்கிலிருக்கும் பேயோட்டுதல் என்பதனோடு இயைந்து நோக்கலாம். இவ்வெறியாட்டு பெரும்பாலும் முருகனைப் பூசை செய்யும் வேலனும், சிறுபான்மை தேவராட்டி எனும் குறமகளும் தெய்வமேறி ஆடுங்கூத்தாகும். இதனை வேலனாடல் எனவும் குறிப்பர்.

இவ்வெறியாட்டினைத் தொல்காப்பியர்

**“வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**

**வெறியாட்டயர்ந்த காந்தளும்”** ***(தொல்.1006)***

எனும் நூற்பாவில் சுட்டுகிறார். இதற்குத் தெய்வத்திற்குச் செய்யும் கடன்களை அறியும் சிறப்பினையும் உயிர்க்கொலை கூறலின் வெவ்வாயினையும் உடையனாகிய வேலன் தெய்வமேறியாடுதலைச் செய்த காந்தள் என நச்சினார்க்கினியர் உரை வரைந்துள்ளார்.

தலைவி வேறுபாடு கண்டு செவிலி வெறியாட்டுவிக்க வரும் அச்சத்தானும் குறிவழிச் சொல்லலாம் என்பதனை,

**“வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும்”** ***(தொல்.1057)***

எனும் சூத்திரமும்,

**“கட்டினும் கழங்கினும் வெறியென விருவரும்**

**ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்”** ***(தொல்.1061)***

என்ற நூற்பாவும் வெறியாட்டு பற்றிய செய்தியினைக் குறிப்பிடுகின்றது.

நற்றிணையில் நற்றாயும் செவிலியும் தலைவியின் மெலிவு கண்டு வெறியாட்டு எடுத்ததனை,

**“வேலன் வேண்டவெறிமனை வந்தோய்**

**கடவுள் ஆயினும் ஆக”** ***(நற்.34:9–10)***

எனும் பாடலடிகளும், இவ்வெறியாட்டு நிகழ்த்தும் வேலன் வெறியாட்டு நிகழ்த்தும் இடத்தில் புதிதாக மணலைத் திட்டாகச் சேர்த்து வைத்து அம்மணல் திட்டிலிருந்து வேலன் வெறியாடுவான் என்பதனை,

**“பெய்மணல் முற்றம் கடி கொண்டு**

**மெய்ம்மலி கழங்கின் வேலற்றந்தே”** ***(நற்.268:8–9)***

எனும் பாடலடிகளும் புலப்படுத்துகின்றன.

குறுந்தொகையில் இவ்வெறியாட்டுப் பற்றி வேலனால் அமைக்கப்பட்ட இடந்தோறும் செந்நெல்லினது வெண்பொறி சிதறிக் கிடந்தது என்பதனை,

**"வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்**
**செந்நெல் வெண்பொறி சிதறியன்ன"** ***(குறுந்.53:3-4)***

எனும் பாடலடிகளும், தேவராட்டி வெறியாடுகின்ற அழகைப்போல என்று

**"வெறியுறு வினப்பின் வெய்துற்று நடுங்கும்"** ***(குறு.105:4)***

எனவும், அலரி மாலையை முருகனுக்குச் சூட்டி வெறியெடுத்து இந்த ஆரவாரத்தை உடைய ஊரானது மயக்கமுற்றது என

**"தரலை மாலை சூட்டி**
**ஏமுற் றன்றிவ் வழுங்க லூரே"** ***(குறு.214:6–7)***

எனும் பாடலடிகளும், முருகன் என்று சொல்லி வெறியெடுத்து தாய் அறிந்து கொண்டாள் என்பதனை,

**"பெரிய கூறி யாய்அறிந் தனளே"** ***(குறுந்.248:7)***

எனும் அடியும், வெறியாடும் இடத்தைப் போலத் தோன்றுகின்ற துறையையுடைய தலைவன் என

**"நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்**
**வெறியயர் களத்தினிற் தோன்றும் துறைவன்"**
***(குறுந்.318:2–3)***

பாடலடிகளும்,

**"வெறியென வுணர்ந்த வேலனோய் மருந்**
**தறிய னாகுத லன்னை காணியே"** ***(குறுந்.360:1–2)***

என தோழிக்குத் தலைவி எனது நோயைத் தீர்க்கும் வழி வெறியாடுதலென்று தெளிந்த வேலன் அந்நோயைத் தீர்ப்பதற்கு உரிய பரிகாரத்தை அறியாதவன் எனக் கூறினாள் எனவும்,

**"வெறியாள் கூறவும் அமையாள் அதன் தலைப்"** ***(குறுந்.366:8)***

என வெறியாடும் மகள் இந்நோய் முருகனால் ஆனது என்றும் குறிப்பிடப்படுகின்றன.

ஐங்குறுநூற்றில் வெறியாட்டு பற்றிய நம்பிக்கையினைத் தலைவியின் மெலிவைக் கண்ட பெற்றோர் அருளாடும் வேலனை அழைத்து வெறியாட்டிற்கு ஏற்பாடு செய்தனர் என்பதை,

**"உண்துறை அணங்கு இவள் உறைநோய் ஆயின்" (ஐங்.28:1)**

எனும் அடியும், தாயே நின்மகள் அடைந்திருக்கின்ற பிணியானது வேலனுக்கு வெறியாட்டு நிகழ்த்தத் தணியக்கூடும் என்று

**"பூக்கெழு குன்றம் நோக்கி நின்று**
**மணிபுரை வயங்கிழை நிலைபெறத்**
**தணிதற்கும் உரித்து அவள்உற்ற நோயே" (ஐங்.210:3–5)**

என்ற பாடலடிகளும்,

**"வேலற் றந்தா ளாயினுவ் வேலன்**
**வெறிகமழ் நாடன் கேண்மை" (ஐங்.241:2-3)**

பாடலடியும்,

**"அறியாமையின் வெறியென மயங்கி**
**அன்னையும் அருந்துயர் உழந்தனள் அதனா" (ஐங்.242:1-2)**

பாடலடிகளும், மலைத் தெய்வமாகிய முருகனை வாழ்த்திப்பாடி இது தெய்வத்தாலானது, இதற்கு மருந்து வெறியாடுதலே என,

**"கறிவளர் சிலம்பில் கடவுள் பேணி**
**அறியா வேலன் வெறிஎனக் கூறும்" (ஐங்.243:1–2)**

என்ற பாடலடிகளும் சுட்டுகின்றன. நற்றாய் நின் நோய் நீக்க வேலன் வந்து வெறியாடல் தொடங்குகிறான் என்றும் மணமுடைய சோலைகளைக் கொண்ட நம் தலைவன் குன்றத்தினை வேலன் பாடாவிட்டால் இவ்வெறியாடலால் தலைவிக்கு என்ன பயன் என

**"அம்ம வாழி! தோழி பண்மலர்**
**நறுந்தன் சோலை நாடுகெழு நெடுந்தகை**
**குன்றம் பாடான் ஆயின்**
**என்பயம் செய்யுமோ வேலற்கு" (ஐங்.244)**

எனும் பாடலும், மலை நாட்டையுடைய நம் பெருமான் செய்த நோய் காரணமாக வேலன் வெறியாடற்குரிய பொருட்களைக் களத்தில் நிரப்பினான். இதனை,

**“வெறிசெறித் தனனே வேலன்கறிய**

**கல்முகை வயப்புலி கழங்குமெய்ப் படூஉம்” (ஐங்.246:1-2)**

எனும் அடிகளும் புலப்படுத்துகின்றன.

அகநானூற்றில் வெறியாடலைப் பற்றித் தலைவனைப் பிரிந்த தலைவி மெலிந்தது கண்ட தாய், வெறியாட்டிற்கு ஏற்பாடு செய்து முருகவேலிற்கு மாலை சூட்டிப், பலிகொடுத்து செந்தினையினைக் குருதியோடு கலந்து தூவி முருகனை வரவழைத்தனர் என்பதனை,

**“நெடுவேள் பேணத் தணிகுவள் இவள் என**

**முதுவாய் பெண்டிர் அதுகூற**

**களம் நன்கு இழைத்து கண்ணி சூட்டி**

**வளநகர் சிலம்பப் பாடி பலிகொடுத்து**

**உருவச் செந்தினை குருதியொடு தூஉய்**

**முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்” (அகம்.22:6-11)**

எனும் பாடலடிகளும், தலைவியின் மெலிவுகண்ட தாய் வெறியாடலுக்கு ஏற்பாடு செய்தவுடன் வேலன் வெறியாடி உண்மையைச் சொல்லி விடுவானோ எனவும் அவ்வாறு உண்மையைக் கூறினால் களவு வெளிப்பட்டு விடுமோ என்றும் அஞ்சியதனை,

**“வெறியயர் வியன்களம் பொறப்ப வல்லோன்**

**பொறியமை பாவையின் தூங்கல் வேண்டின்” (அகம்.98:19-20)**

அடிகளும், அச்சம் நிறைந்த காட்டுவழியில் நடு இரவில் தலைவன் வருவதை எண்ணி வருத்தமுற்றாள் தலைவி. இதனைத் தெய்வக்குறை என்றெண்ணி வெறியாட்டிற்கு ஏற்பாடு செய்தாள் அன்னை என்பதனை,

**“வறிதுயான் வருந்திய செல்லற்கு அன்னை**

**பிறிது ஒன்று கடுத்தனள் ஆகி வேம்பின்**

**வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி**

**உடலுநர்க் கடந்த கடல்அம் தானைத்" *(அகம்.138:3-6)***

*எனும் பாடலடிகளும் சுட்டிச் செல்கின்றன. இதனைத் தொடர்ந்து அதிரும் குரலையுடைய ஆண் குரங்கு மிளகின் தளிரை உண்பதை வெறுத்து தாவி விளையாடியது அதனால் மரங்களின் மலர்கள் உதிர்ந்து வேலன் வெறியாடும் களத்தைப் போல் தோன்றும் எனத் தோழி கூறியதனை,*

**"கமழ்இதழ் அலரி தாஅய் வேலன்**

**வெறியயர் வியன்களம் கடுக்கும்**

**பெருவரை நண்ணிய சாரலோனே" *(அகம்.182:16–18)***

*என்ற பாடலடிகளும், காதலினால் ஏற்பட்ட மாறுபாட்டைக் கண்ட செவிலித்தாய் முருகன் கோபத்தினால் வந்தது எனக்கருதி வெறியாட்டிற்கு ஏற்பாடு செய்தாள். இதனை,*

**"கடியுடை வியல்நகர்க் காவல் கண்ணி**

**முருகு என வேலன் தரூஉம்**

**பருவமாகப் பயந்தன்றால் நமக்கே" *(அகம்.232:13–15)***

*எனும் பாடலடிகளும், அகம் (242:10–12, 292:1–5, 370:14–15, 382:1–5, 388:18–20) உணர்த்துகின்றன.*

*திருமுருகாற்றுப்படையில் முருகன் மீது பற்றுள்ளவர்கள் அவனை நினைக்கும் போது அவர்கள் உள்ளங்களில் இருப்பான். முருகனைத் தன்பால் கொள்ளும் வேலன் இயற்றுகின்ற வெறியாடும் களத்திலும் இருப்பான் என்பதனை,*

**"ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்**

**வேலன் தைஇய வெறிஅயர் களனும்" *(முருகு.221-222)***

*எனும் பாடலடிகள் சுட்டுகின்றன.*

*குறிஞ்சிப்பாட்டில் இந்நம்பிக்கையினை,*

**"அணங்குறு மகளிர் ஆடுகளம் கடுப்பத்**

**திணிநிலைக் கடம்பின் திறள் அரை வளைஇய**

**துணையறை மாலையின் கைபிணி விடேஎம்" *(குறிஞ்சி.175-177)***

பாடலடிகளும், பட்டினப்பாலையில் வெறியாடும் மகளிர் கைகூப்பி முருகனை வழிபட்டு, இசைகள் முழங்க, முழவுகள் அதிர விழாக்கள் கொண்டாடினர். இதனை,

**"செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்**
**வெறியொடு மகளிரொடு செறியத் தாஅய்" (பட்டினப்.154-155)**

என்ற பாடலடிகளும் குறிப்பிடுகின்றன.

மலைபடுகடாமில் இவ்வெறியாடுதலைக் காந்தள் மலரை ஊன் என்று எடுத்துச் சென்ற பருந்து, ஏமாற்றமடைந்து போட்டுவிட்டது. அப்படி சிதறப்பட்ட காந்தள் மொட்டுக்களின் இதழ்கள் பறந்து அகன்ற பாறையில் கிடந்தது. அக்காட்சி வேலன் வெறியாடும் களம் போன்றிருந்தது என்பதனை,

**"நெருப்பின் அன்ன பல்லிதழ் தாஅய்**
**வெறிக்களம் கடுக்கும் வியலறை தோறும்" (மலை.149-150)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

முத்தொள்ளாயிரத்தில் இவ்வெறியாடலைப் பற்றி,

**"காராட் டுதிரந்தூஉ யன்னை களனிழைத்து**
**நீராட்டி நீங்கென்றால் நீங்குமோ" (முத்.20:1–2)**

என்ற அடிகள் சுட்டுகின்றன.

இறையனார் அகப்பொருளில்

**"தோழிக்குரிய கோடாய் தேஎத்து**
**மாறுகோள் இல்லா மொழியுமார் உளவே" (இ.அ.13)**

என்னும் இந்நூற்பாவிற்கு விளக்கம் சொல்லும் ஆசிரியர்,

**"காப்புக் கைம்மிக்குக் காமம் பெருகினும்"**[24]

எனும் நூற்பாவை எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார். தலைவிக்கு எப்பொழுது வேறுபாடு உண்டாகியதோ அப்பொழுதே தோழிக்கு உண்மை நிலை புரிந்துவிடும். இவ்வேறுபாடு காப்பு மிகுதியாலும், காதல் மிகுதியாலும்

தோன்றியதாகும். இதனை அறியாத தாய் தெய்வத்திற்கு வழிபாடு செய்ய நினைப்பாள் என்று உணர்த்தப்படுகிறது.

**வெறியாட்டு எடுக்கும் முறை**

தலைவி உடல் மெலிந்தவுடன் தாய் காரணம் அறிய வெறியாட்டு எடுக்க வேலனை அழைக்கிறாள். வேலன் வெறியாட்டு எடுக்க வெறியாட்டுக் களம் அமைக்கிறான். களத்தில் அமர்ந்த வேலன் கழற்சிக் காயினைக் கொண்டு குறிசொல்கிறான். இதனைத் தொல்காப்பியர்,

**"கட்டினும் கழங்கினும் வெறியென விருவரும்" (தொல்.1061)**

என்கிறார்.

இவ்வெறியாட்டுச் சடங்கில் உயிர்ப்பலி இடுதல் நடைபெற்றுள்ளது. உயிர்ப்பலி இடும் சடங்கு இன்றும் சமூகத்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. வெறியாட்டில் ஆட்டுக்குட்டியை உயிர்ப்பலி இட்டுள்ளனர். இச்செய்தியை நற்றிணையில்,

**"வெறியென உணர்ந்த உள்ளமொடு மறியறுத்து" (நற்.47:9)**

என்றும், குறுந்தொகையில்

**"மறிக்குரல் அறுத்து தினை பிரப்பு இரிஇச்" (குறு.263:1)**

எனவும்,

**"சிறுமறி கொன்று, இவள் நறுநுதல் நீவி" (குறு.362:4)**

என்றும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

"தமிழ்நாட்டில் முருக வணக்கத்திற்குத் தோற்றமாயிருந்தது வேலன் வெறியாடல். அது ஒரு இனக்குழு வழிபாட்டு முறையாகும். இம்முறையை அகப்பொருள் இலக்கியங்களில் காணலாம்"[25] என்று மானிடவியலார் சுட்டிச் செல்வர்.

**நடுகல் நம்பிக்கை**

சமுதாயச் சிறப்புமிக்க இயல்புகளைக் கொண்டிருந்தவர்களின் இறப்பிற்குப் பின் அவர்களது நினைவாக நடப்பட்ட கல் நடுகல் ஆகும்.

நடுகல் என்றால் நடப்பட்ட கல் என்று பொருள்படும். வீரத்தினைப் போற்றும் பண்பின் அடிப்படையில் நடப்பட்ட நினைவுச் சின்னம் காலப்போக்கில் ஆவி பற்றிய நம்பிக்கையின் பாற்பட்ட நிலையில் நடுகல் வழிபாடாக உருப்பெற்றது.

நடுகல் எடுக்கும் வழக்கத்தில் ஏற்பட்ட இடமாற்றம் ஆவிக் கொள்கைக்கு வழியமைத்ததனைப் பிரேசர் என்ற சமூக மானிடவியலார் "இறந்தவனது ஆன்மாவைச் சில சடங்குகள் மூலம் ஓர் குறிப்பிட்ட இடத்திற்கு வரவழைக்கலாம். அங்குள்ள ஒரு பொருளில் நுழைந்து கொள்ளச் செய்யலாம் என்ற நம்பிக்கை உலகமெங்கும் பண்டைய மக்களின் பண்பாட்டில் காணப்படுகிறது"[26] எனச் சுட்டுவார்.

"பீலி சூட்டுவதும்சிறுகலத்துக் கள் வார்ப்பதும் ஆவிச்சடங்குகள். அதிகமானது ஆன்மா மகிழ்ச்சியோடிருக்க அவனது மக்கள் செய்யும் சடங்குகள்"[27] என நா.வானமாமலை குறிப்பிடுவார்.

"இறந்தவர்களுக்கு நன்றிக்கடன் காட்டுவது தமிழர்களின் பழமையான வழிபாட்டு முறையாகும். இறந்தவர்களுக்குக் கல் நாட்டி வழிபட்டனர். அது வீரக்கல் வழிபாடு எனப்படுகிறது"[28] என்கிறார் வே.தி.செல்லம்.

பண்டைத் தமிழர்களிடம் வீரராக இறந்தோர்க்குக் கல் நடும் வழக்கம் இருந்தது. 'நடுகல்' வழிபாடு அன்று பெருவழக்காகும். இதனை,

**"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்**
**சீர்தகு மரபில் பெரும்படை வாழ்த்தலென்று**
**இருமூன்று மரபிற் கல்லொடு புணர"  (தொல்.1006:19-21)**

என்று நடுகல் நாட்டும் பழக்கத்தின் பல்வேறு நிலைகளைத் தொல்காப்பியர் சுட்டியுள்ளார். கல்லில் இறந்தோர் பெயரைப் பொறித்தலும் அவருடைய அருஞ்செயல்களை எழுதுதலும் பின்னர் அக்கல்லிற்கு மயிலிறகு, மலர்களைச் சூட்டுதலும், கூழ், பால்சோறு படைத்தல், பூவும் நெல்லும் தூவி வழிபடுதல்

போன்றவை நடுகல் வழிபாட்டு முறையாகும். இன்றைய கொடை, சாமியாட்டம் போன்றவற்றில் இசைக்கருவி முழக்கங்களுடன் வழிபாடு நிகழ்த்துதலை இதன் எச்சமாகக் கருதலாம்.

நடுகற்கு உரியோராகப் போரில் மாய்ந்தோர், கறவையினை மீட்டோர், வடக்கிருந்தோர், பத்தினிப் பெண்டிர் ஆகியோர் அமைகின்றனர்.

ஐங்குறுநூற்றில் இந்நம்பிக்கையினை நம் தலைவன் வரும் வழி நடுகல் நிற்கும். அது தப்பாது சென்று தாக்கும் வில் வீரர்களால் கொல்லப்பட்டு வீர மரணம் எய்திய வீரர்களுக்கு நினைவாக நடப்பட்டது என்பதனை,

**"விழுத்தொடை மறவர் வில்லிடத்தொலைந்தோர்**
**எழுத்துடை நடுகல் அன்ன விழுப்பினர்" (ஐங்.352:1-2)**

என்ற பாடலடிகளும், அகநானூற்றில் இறந்து பட்டோர்க்கு நடுகல் எடுத்து மயிலிறகு சூட்டித் துடி கொட்டி நெல்லினால் சமைத்த கள்ளொடு செம்மறி ஆட்டுக்குட்டியைப் பலிகொடுக்கப் போவதற்கரிய காட்டுவழியில் பிறனோடு சென்று பிறள் ஆயினாள் என்றதனை,

**"நடுகல் பீலி சூட்டி, துடிப்படுத்துத்**
**தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்" (அகம்.35:8-9)**

எனும் அடிகளும், வழிப்பறிக் கள்வரால் இறந்துபட்டவர்களின் உடல்கள் புதைக்கப்பெற்ற இடத்தில் நடப்பட்ட நடுகற்களின் நிழலில், கூறிய பற்களை உடைய செந்நாய் பசியால் வாடும். இதனை,

**"விழுத்தொடை மறவர் வில்இட வீழ்ந்தோர்**
**எழுத்துடை நடுகல் இன்நிழல் வதியும்" (அகம்.53;10-11)**

எனவும்,

**"கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்**
**பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்**
**பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" (அகம்.131:9–11)**

என்றும், வழிப்பறிக் கள்வர் வழிப்போக்கர்களைக் கொன்று கற்குவியலால் மூடுவர். அக்குவியலின் மீது படர்ந்த காட்டு மல்லிகைப் பூக்கள்

*கோடைக்காற்றால் ஒன்று சேர்ந்து அருகில் உள்ள நடுகலுக்குக் காலையில் இடும் படையலாகச் சேர்ந்தன என்பதனை (அகம்.289:3–4) பாடலடிகளும்,*

**“கடுங்கண் மறவர் பகழி மாய்த்தென**
**மருங்கல் நுணுகிய பேஎம்முதிர் நடுகல்**
**பெயர் பயம்படரத் தோன்றும் குயில் எழுத்து**
**இயைபுடன் நோக்கல் செல்லாது” *(அகம்.297:6–9)***

*என்ற பாடலடிகளல் நாம் கடந்து வந்த காட்டில் நடுகற்கள் உள்ளன. அவற்றில் இறந்தோரின் பெயரும், பெருமையும் எழுதி வைத்துள்ள எழுத்துக்களைப் பொறுமையாகப் பார்க்கக்கூட மனமின்றிப் பயத்தால் விரைவாகச் செல்கின்றனர் என்றும் குறிப்புகளுண்டு.*

**“புன்தலை சிதைத்த வன்தலை நடுகல்**
**கண்ணி வாடிய மண்ணா மருங்குல்**
**கூர்உளி குயின்ற கோடுமாய் எழுத்து அவ்**
**ஆறுசெல் வம்பலர் வேறுபயம் படுக்கும்” *(அகம்.343:5-8)***

*எனும் பாடலடிகளில் உப்பு வணிகம் செய்வோர் கொண்டு செல்லும் வண்டி இயங்கிடக் காரணமான உருளையின் பூண் சிதைய நடுவில் நடுகல் ஒன்று உள்ளது. அதில் அணியப் பெற்ற மாலை வாடியும், நீராட்டப் பெறாதும், உளிகொண்டு செதுக்கிய எழுத்துக்கள் அழிந்தும், புதியவர்களுக்கு அது வேறு பொருள்படும் நிலையில் காணப்படும் என்று விளக்கப்படுகின்றது.*

**“சினவல் போகிய புன்கண் மாலை**
**அத்த நடுகல் ஆள்என உதைத்த**
**கான யானைக் கதுவாய் வள்உகிர்” *(அகம்.365:3–5)***

*எனும் அடிகளில் இரவில் யானை நடுகல்லை ஆள் என நினைத்து உதைத்தது என்றும், போரில் பகைவர் அழியக் கொன்று புகழை நிலை நிறுத்திய மானம் மிக்க மறவரின் நடுகற்கள் வரிசையாய் நிற்கும் என்பதனை,*

**“நல்இசை நிறுத்த நாணுடை மறவர்**
**நிரை நிலை நடுகல் பொருந்தி இமையாது”**
***(அகம்.387:14-15)***

என்ற பாடலடிகளும் சுட்டிச் செல்கின்றன.

புறநானூற்றில் இந்நடுகல் நம்பிக்கையினைப் புலவர்களுக்கும், புரவலர்களுக்கும், அறவோருக்கும் மென்மையானவன் இவன். இவனைக் கூற்றுவன் கவர்ந்து சென்றான். அகன்ற இவ்வுலகம் வருந்தக்கெடுதல் இல்லாத நல்ல புகழ் மாலையைச் சூடிய அரசன் நடுகல் ஆகிவிட்டான் என்பதனை,

**“நனந்தலை உலகம்அரந்தை தூங்கக்**
**கெடுஇல் நல்இசை சூடி**
**நடுகல் ஆயினன் புரவலன் எனவே”** ***(புறம்.221:11–13)***

பாடலடிகள் குறிப்பிடுகின்றன. சிறிய வழியிடத்தில் அடங்கி என்றும் நிலைபெறும் நடுகல் ஆகினை என

**“தலைப்போ கன்மையின் சிறுவழி மடங்கி**
**நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்”** ***(புறம்.223:2–3)***

எனவும்,

**“நடுகல் பீலிசூட்டி நார் அரி**
**சிறுகலத்து உகுப்பவும் கொள்வன் கொல்லோ”** ***(புறம்.232:3-4)***

என்றும்,

**“மடம்சால் மஞ்ஞை அணிமயிர் சூட்டி**
**இடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்**
**படம்செய் பந்தர்க் கல்மிசை யதுவே”** ***(புறம்.260:26-28)***

எனவும் சுட்டப்பட்டுள்ளன. பசுக்கூட்டத்தைத் திரும்பி வரத் தந்து போரியல் கல்லாத இளையர் களத்தில் இருந்து நீங்கவும் தான் நீங்கானாய் வில்லில் இருந்து புறப்பட்ட கடுமையான அம்பு தைக்கக் கரையை அழிக்கும் வெள்ளத்தை அடக்கும் அணையைப் போன்று பகைப்படையைத் தடுத்து நிறுத்தியவன் நடுகல்லே என புறம்.263 பாடலும், பரந்த கற்களை உடைய

காட்டின் மேட்டில், மரல் நாரைக் கிழித்துத் தொடுக்கப்பெற்ற சிவந்த பூவால் ஆகிய கண்ணியுடன் அழகிய மயில் தோகையைச் சூட்டி, பெயரை எழுதி இப்போது நடுகல்லை நிறுத்தினர் என்றதனை,

**"மரல் வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு**
**அணிமயில் பீலி சூட்டி பெயர் பொறித்து**
**இனி நட்டரே கல்லும்"** ***(புறம்.264:2-4)***

என்ற பாடடிகளும்,

**"பல்ஆன் கோவலர் படலை சூட்டக்**
**கல் ஆயினையே கடுமான் தோன்றல்"** ***(புறம்.265:4-5)***

எனவும், என் தலைவன் வேந்தனோடு நாட்டைத் தரும் சிறந்த பகையை அடைவானாக என்று நாளும் தவறாமல் நடுகல்லை வழிபடுவாள் என்பதனை,

**"அரிது உண் கூவல் அம்குடிச் சீறூர்**
**ஒலிமென் கூந்தல் ஒள்நுதல் அரிவை**
**நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது"** ***(புறம்.306:2-4)***

என்றும் எடுத்துக் காட்டியுள்ளனர். நடுகல் விளங்கும் தழைகள் நிரம்பிய காடுகளையும் மெல்லிய விதைகளை உடைய நெல்லி மரங்களையும் கொண்ட சிறிய ஊரில் வாழும் குடியவன் அவன் என புறநானூறு 314வது பாடலும், வீட்டில் காய்ச்சப்படும் கள்ளை உடைய சிறுகுடிகள் அமைந்த சிற்றூரின் பக்கத்து நடப்பட்ட கல்லுக்குக் காலையில் படையல் செய்து, நல்ல நீராட்டி, நெய் விளக்கேற்றி மணப் பொருட்களைக் கொண்டு புகையூட்டி வழிபட்டுள்ளனர். இதனை,

**"இல்அடு கள்ளின் சில்குடி சீறூர்ப்**
**புடை நடு கல்லின் நாட்பலி ஊட்டி**
**நல்நீராட்டி நெய்நறைக் கொளீஇய**
**மங்குல் மாப்புகை மறுகுடன் கமழும்"** ***(புறம்.329:1-4)***

பாடலடிகளும், தங்களோடு மனம் பொருந்தாத பகைவரைத் தடுத்து நிறுத்துகின்ற ஆற்றலுடைய தந்தங்களைக் கொண்ட யானையைக் கொன்று தானும் இறந்தான். நடுகல்லை வழிபடுதல் அல்லது நெல்லைத் தூவி வழிபடும் பிற கடவுளரும் இல்லை. இதனை,

**"ஒளிறு ஏந்து மருப்பின், களிறு எறிந்து வீழ்ந்தெனக்**
**கல்லே பரவின் அல்லது**
**நெல்உகுத்துப் பரவும் கடவுளும் இலவே"(புறம்.335:10-12)**

எனும் பாடலடிகளும் புலப்படுத்துகின்றன.

பட்டினப்பாலையில் இந்நடுகல் பற்றியச் செய்தியினை,

**"கிடுகு நிரைத்து எஃகு ஊன்றி**
**நடுகல்லின் அறண் போல" (பட்.78–79)**

எனும் பாடலடிகள் சுட்டுகின்றன.

மலைபடுகடாமில் இந்நம்பிக்கையினை

**"சொல்லா நல்லிசைப் பெயரொடுபட்ட**
**கல் ஏசு கவலை எண்ணுமிகப் பலவே" (மலை.388–389)**

எனவும், நீங்கள் போகும் இடங்களில் வீரனின் பெயர் தெரியுமாறு கல்லை அகழ்ந்து எழுதிய, தெய்வத்தன்மை பொருந்திய நடுகற்கள் மரத்தினடியில் இல்லாத காடுகள் இகழும் தன்மையுடைய வழிகள் உள்ளன என்பதை,

**"கல்லெறிந்து எழுதிய நல்லரை மராஅத்த**
**கடவுள் ஓங்கிய காடுஏசு கவலை" (மலை.395–396)**

எனக் குறிப்பிடப்படுகின்றன.

ஐந்திணை ஐம்பதில் இந்நம்பிக்கையினைக் கொடிய வில்லினையுடைய வேட்டுவர் தமது கொல்படையானே வீழ்ந்த தசையையும் நிணத்தையும் தின்ற பேய்கள், போரில் இறந்தவர் பெயர் பொறித்து நட்ட கல்லின் நிழலில் உறங்கும் என்பதனை,

**"கொடுவில் எயினர் தம் கொல்படையால் வீழ்ந்த**
**தடிநிணம் ஆந்திய பேஎய் நடுகல்**
**விரிநிழற் கண்படுக்கும் வெங்காண மென்பர்**
**பொருள்புரிந்தார் போய சுரம்" *(ஐந்.ஐம்.35)***

*எனும் பாடல் எடுத்துரைக்கின்றது. ஐந்திணை எழுபதில் பொருளீட்டச் செல்லும் தலைவன் நடுகற்கள் வரிசையாக நடுவதற்குக் காரணமாகிச் சிறப்பாக அம்பு தொடுக்கும் பழைமையாகிய தம் பகைவர்களை மறவர்கள் வருதற்கு இடமாகிய பாலைநிலவழியிலே ஒழுங்காகச்செல்லுதலை உடையது என்று தோழி தலைவியிடம் கூறியதனை,*

**"எழுத்துடைக் கன்னிரைக்க வாயில் விழுத்தொடை**
**யம்மா றலைக்கும் அரநிரைத் தம்மா**
**பெருந்தகு தாளாண்மைக் கேற்க வரும்பொரு**
**ளாகு மவர் காதலவா" *(ஐந்.எழு.27)***

*பாடல் பதிவு செய்துள்ளது.*

*வள்ளுவர் திருக்குறளில் இந்நம்பிக்கையினை,*

**"என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை**
**முன்நின்று கல்நின் றவர்" *(குறள்.771)***

*எதிரிகளே என் தலைவன் முன் பகைத்து நிற்காதீர்கள். அவன் முன் நின்று கல்லானவர் பலர் என்று குறிப்பிடுகின்றார்.*

*சிலப்பதிகாரத்தில் இந்நடுகல் நம்பிக்கை*

**"பேர் இமயக்கல் சுமத்திப்**
**பெயர்ந்து போந்து நந்த கொள்கையின்" *(வாழ்த்து.3)***

*என்றும்,*

**"கற்கால் கொள்ளினும் கடவுள் ஆகும்" *(காட்சி.119)***

*எனவும் சுட்டப்படுகின்றது.*

**பேய் பற்றிய நம்பிக்கை**

பழந்தமிழ் இலக்கியங்களில் அச்சந்தரக்கூடிய கூறுகளாகப் பேய், பூதம் போன்ற மீவியல்புச் சக்திகள் மனித வாழ்வியலோடு இணைத்துப் பேசப்பட்டிருக்கின்றன. இவற்றில் பேய் என்ற சக்தி பிற, மீவியல்பு சக்திகளைவிட அதிகமாக இலக்கியத்தில் இடம்பெற்றிருக்கக் காண்கிறோம். இப்பேய் அச்சந்தரக்கூடிய உருவையும், அச்சத்திற்கு அடிப்படையான இடங்களையும் தங்களுடைய உறைவிடமாகக் கொண்டிருந்ததனை இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன.

பேய் பற்றிய நம்பிக்கை பண்பட்ட மற்றும் பண்படாத மக்களிடையே உலகெங்கும் இருந்துவரக் காண்கிறோம். இயற்கைச் சூழலில் வாழ்ந்த மனிதனிடம் இதுபற்றிய கருத்தேற்றங்கள் மிகுதியாக உண்டு. செயற்கைச் சூழலில் வாழும் இன்றைய நாகரிக மனிதனிடமும் பேய் பற்றிய நம்பிக்கை இல்லாமலில்லை. இப்பேய் பற்றிய கருத்தேற்றம் பற்றித் தமிழவன் அவர்கள் “இயற்கையின் ஆற்றலைத் தன் தேவைக்கேற்ப ஆளுகிற வலிமையை அவன் பெறவில்லை. இயற்கையின் இயக்கத்திற்குரிய காரணங்களை அவன் ஆய்ந்தரியாத நிலையில் இயற்கையின் ஆற்றலில் பல அம்சங்களை அவன் கற்பனையில் மனித விகாரமாகவும், விலங்கு விகாரமாகவும் அமைந்த பேயுருவங்களாகப் படைத்து அவற்றை நம்பினான்”[29] என்பார். இன்றும் நாட்டுப்புறங்களில் இறந்தோர் புளியமரம், பனைமரம், பாழடைந்த நீர் நிலைகளில் உறைவதாகவும், அவ்வப்பகுதியில் அழைவதாகவும் நம்புகின்றனர். பேய்களினால் பாதிக்கப்பட்டவர்களுக்கு பேயோட்டல் நிகழ்ச்சி நடத்தப்பெறுகிறது.

பேய் மகளிர் உண்மையான மகளிர். ஆனால் பெண் தெய்வ வழிபாட்டிற்காகப் பிணந்தின்னிகளாகவும் இருந்தனர் என்றும், மானுட உடம்பின் உருவ அடிப்படையிலமைந்த பிணத்தை உணவாகக் கொண்ட மக்களின் எச்சமெனக் கூறி “ஆஸ்திரேலியாவிலிருந்து மேற்கே வட அமெரிக்காவரை ஒரு காலத்தில் நிலவிய புராதன சமூகங்களில் காணப்பட்ட

எண்ணற்ற பழக்க வழக்கங்களுள் ஒன்று பெண்கள் பிணந்தின்னும் செயல்''[30] என்றும் க.கைலாசபதி சுட்டிச் செல்கின்றார். தொல்காப்பியத்தில் இதனை,

**"ஏமச்சுற்றம் இன்றிப் புண்ணோன்**
**பேஎய் ஓம்பிய பேஎய்ப் பாக்கமும்"** ***(தொல்.1025:5-6)***

எனும் நூற்பா சுட்டுகின்றது. நற்றிணையில் செம்முருக்கின் பூப்பூக்கும் வேனிற் காலத்தில் அதில் காய்ந்து முற்றிய நெற்றுப்போல வலியவாயை உடைய பேய்களின் விரல்கள் காணப்படுகின்றன. அப்பேய் கொடிய வேனிற் காளத்துத் தெய்வத்தின் முன் படையலிடும் புலால் சோற்றை உண்ணப் பாழ் மன்றத்தை நோக்கி எழும். இதனை,

**"வேனில் முருக்கின் விளைதுணர் அன்ன**
***மாணா விரல வல்வாய்ப் பேஎய்***
***மல்லல் மூதூர் மலர்ப்பலி உணீஇய"*** ***(நற்.73:1–3)***

எனவும்,

***"அணங்குகால் கிளரும் மயங்குஇருள் நடுநாள்"*** ***(நற்.319:6)***

என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. போரில் பெரும்புண் பட்டு வீழ்ந்த வீரனைப் பேய் ஒன்று காத்து நின்றதனை,

**"பெரும்புண் உறுநர்க்குப் பேஎய் போல"** ***(நற்.349:8)***

எனும் பாடலடி உணர்த்துகின்றது.

குறுந்தொகையில் இப்பேய் நம்பிக்கையினைப் பற்றி, பேயின் பல் யானையின் கால்நகம் போன்றது என்பதனை,

***"பழூஉப்பல் லன்ன பருவுகிர்ப் பாவடி"*** ***(குறுந்.180:1)***

என்றும், இவள் பேயாள் கொள்ளப்பட்டாள் என்றதனை,

**"பேஎய்க் கொளீஇய ளிவளெனப் படுதல்"** ***(குறுந்.263:5)***

என்ற பாடலடியும் சுட்டுகின்றன. ஐங்குறுநூற்றில் இதனைத் தலைவி தலைவனிடம் பேயின் உருவத்தைக் கூறுவதாக, நான் உனக்குக் குழந்தை பெற்றதால் பேய்போல் ஆகிவிட்டேன். அதனால் நீ பரத்தையை விரும்பிச் சென்றாய். இதனை,

**“பேஎய் அனையம்யாம் சேய் பயந்தனமே”     (ஐங்.70:5)**

எனவும், தொடியணிந்த பேய்மகள் இரையை விரும்பிச் சுழலா நிற்கவும், அவள் ஊர்தியாகிய கழுது என்னும் குற்றேவற் பேய் உணவாகத் தின்னா நிற்பவும் எனஐங்.314:1 பாடலடியும் புலப்படுத்துகின்றன.

பதிற்றுப்பத்தில் பேய் பற்றியச் செய்தியினை,

**“கவைத் தலைப் பேய்மகள் கழுது ஊர்ந்து இயங்க”**

**(பதிற்.13:15)**

எனவும்,

**“கருங்கண் பேய்மகள் வழங்கும்**
**பெரும்பாழ் ஆகுமண் அளியதாமே”     (பதிற்.22:27–28)**

என்றும், கரிய கண்ணை உடைய பேய்மகள் பிணம் தின்று மகிழ்ந்து ஆடும் போர் என்பதை (பதிற்.35:9) என்றும், போர்க்களத்தில் நீண்டு கிடக்கும் பிணவரிசை பலவற்றைப் பேய்மகள் உண்டு மகிழ்ந்து கூத்தாடியதை (பதிற்.36:12) எனவும், பேய் மகளிர் கண்டார்க்கு வருத்தம் உணடாகும்படி இருந்ததனை (பதிற்.67:11) பாடலடிகளும் பதிவு செய்துள்ளன.

கலித்தொகையில் இந்நம்பிக்கையினை,

**“ஏனைப் பிசாசு அருள்என்னை நலிதரின்”     (கலி.65:17)**

என்றும்,

**“பேயும்பேயும் துள்ளல் உறும் என்க”     (கலி.94:38)**

எனவும், எருமை வாகனத்தையுடைய எமனை நெஞ்சு பிளந்துக் கொன்று குடலைப் பேய்களுக்கு இட்ட காட்சியைப் போல் உள்ளது என்பதனைக் கலி.101:26 பாடலடிகளும் விளக்குகின்றன.

அகநானூற்றில் இந்நம்பிக்கையினைப் பேயும் அறியாத காலத்தே யாம் இணைந்திருந்தோம் என்றதனை,

**“பேயும் அறியா மறை அமை புணர்ச்சி”     (அகம்.62:6)**

என்றும், பேயினது தலை தாழைமடலைப் போன்றது என்பதை,

**“பேஎய்த் தலைய பிணர் அரைத் தாழை”   (அகம்.130:5)**

எனவும், நன்னன் என்ற குறுநில மன்னன் பாழி என்னும் ஊரில் மலைக்குகையில் உள்ள பேய்க்குப் படையல் வைப்பதாக நேர்ந்து அதனை நிறைவேற்றிய ஞிமிலி என்பவனுக்கு நண்பன் என்பதனை,

**“ஊட்டுஅரு மரபின் அஞ்சுவரு பேஎய்க்**
**கூட்டுஎதிர் கொண்ட வாய்மொழி ஞிமிலி” (அகம்.142:10-11)**

எனவும் சுட்டியுள்ளனர். உதியன் சேரல் உணவு அளித்த போது அதை உண்ணுவதற்கு சுற்றிலும் இருந்த பேய்க்கூட்டம் போல என்பதனை,

**“பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை இரும்பல்**
**கூளிச் சுற்றம் குழீஇ இருந் தாங்கு”   (அகம்.233:9-10)**

பாடலடிகளும்,

**“அணங்குஅரு மரபின் பேஎய் போல”   (அகம்.265:14)**

எனவும்,

**“பேஎய் கண்ட கனவின் பல்மாண்”   (அகம்.303:2)**

என்றும் சுட்டப்படுகின்றன.

புறநானூற்றில் இப்பேய் பற்றியச் செய்தியினைப் போரிட்டு இறந்த வீரர் புண்ணைத் தோண்டி இரத்தம் படிந்த சிவந்த கையால் கூந்தலைச் சீவி ஒளிமிக்க உருவத்தையுடைய பேய் என்பதனை,

**“குருதிச் செங்கைக் கூந்தல் நீட்டி**
**நிறம்கிளர் உருவின் பேஎய்ப் பெண்டிர்”   (புறம்.62:3-4)**

எனவும், பிணத்தை இட்டுப் புதைத்த தாழியின் அருகில் ஆண் கழுகும் பெண் கழுகும் அஞ்சாதிருக்கவும் பேய்கள் தன் கூட்டத்துடன் விரும்பியவாறு திரியவும் ஆகிய சுடுகாடு என்பர். இதனை,

**“பேஎய் ஆயமொடு பெட்டாங்கு வழங்கும்**
**காடுமுன் னினனே கட்கா முறுநன்”   (புறம்.238:4-5)**

என்றும்,

**"பகலும் கூஉம் கூகையொடு பிறழ்பல்**
**ஈம விளக்கில் பேஎய் மகளிரொடு"     (புறம்.356:2–3)**

என்ற பாடலடிகளும், பேய்ப் பெண்டிர் பிணங்களைத் தழுவித் தசைகளைத் தின்றதனை,

**"பேஎய் மகளிர் பிணம் தழூஉப் பற்றி"     (புறம்.359:4)**

எனவும் எடுத்துக் காட்டியிருக்கின்றன.

**"பேஎய்மகள் பற்றிய பிணம் பிறங்குபல் போர்பு" (புறம்.369:15)**

என்றும், கோடாரியால் வெட்டுண்ட வீரனின் குடல் தன் கால்களைச் சுற்றிக்கொள்ள, அவற்றை எடுத்துப் பேய்ப்பெண் அழுகைக் குரலுடன் கூத்தாடின என்பதனை,

**"அழுகுரற் பேய்மகள் அயர கழுகொடு"     (புறம்.370:25)**

எனும் பாடலடிகளும்,

**"உருகெழு பேய்மகள் அயரக்**
**குருதித் துகள் ஆடிய களம்கிழ வோயே!"     (புறம்.371:26-27)**

எனும் பாடலடிகளும்,

**"தாஇன்று உதவும் பண்பின் பேயொடு"     (புறம்.373:36)**

என்ற பாடலடிகளும் சுட்டிச் செல்கின்றன.

திருமுருகாற்றுப்படையில் இந்நம்பிக்கையினை எண்ணெய் தடவப்படாத உலர்ந்த பரட்டையான கூந்தலையுடையவள் பேய் மகள். வரிசை இல்லாத அழகற்ற பற்களையும், பெரிய வாயையும் உடையவள் எனப் பேயின் உருவத் தோற்றம் பற்றி

**"உலறிய கதுப்பின் பிறழ்பல் பேழ்வாய்**
**குழல் விழிப் பசுங்கண் ஆர்த்த நோக்கின்**
**கழல்கன் கூகையொடு கரும்பாம்பு தூங்கப்**
**பெருமுலை அழைக்கும் காதின் பிணர்மோட்டு**
**உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்"     (முருகு.47-51)**

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்ன. சிறுபாணாற்றுப்படையில் தீப்பிழம்பு சாய்ந்தது போன்ற ஒத்த நாவினையும், பற்களையும், வெள்ளாட்டுக் குட்டிகளைக் காதணியாக அணிந்துள்ள காதுகளையும், பிளவு பெற்றக் கால்களையும் உடைய பேய்மகள் நிணத்தை உண்டு சிரித்தத் தோற்றம் போல என பேயின் இயல்பினை,

**"கருமறிக் கதின் கவையடிப் பேய்மகள்**
**நிணன் உண்டு சிரித்த தோற்றம் போல" (சிறுபண்.197-198)**

எனவும், மதுரைக்காஞ்சியில் சான்றோர் இருந்த பெரிய பொதுவிடங்களில் பிறந்த அடிகளையுடைய கடுநோக்கும் பேய்மகளிரைக் கால்பெயர்த்து ஆடச் செய்தாய்த்ததனை,

**"கவையடிக் கடுநோக்கத்துப்**
**பேய்மகளிர் பெயர்பாட" (மது.162–163)**

எனவும், பட்டினப்பாலையில் பேயின் கண்ணுக்கு முரசம் உவமிக்கப் பட்டுள்ளதனை,

**"பேய்க்கண் அன்ன பிளிறுகடி முரசம்" (பட்.236)**

என்ற பாடலடியும், பேய்க் கூட்டத்துடன் பெண் பேய்கள் மயிர் விரித்து அசைந்து ஆடியதை,

**"கணங்கொள் கூளியொடு கதுப்பு இருந்து**
**பிணந்தின் யாக்கைப் பேய்மகள் துவன்றவும்" (பட்.259-260)**

பாடலடிகளும் புலப்படுத்தப்படுகின்றன.

பதினெண்கீழ்கணக்கு நூல்களில் இந்நம்பிக்கையினை,

**"கொடுவில் எயினர்தம் கொல்படையால் வீழ்ந்த**
**தடிநிணம் ஆந்திய பேஎய் – நடுகல்**
**விரிநிழற் கண்படுக்கும் வெங்காண மென்பர்**
**பொருள் புரிந்தார் போய சுரம்" (ஐந்.ஐம்.35)**

எனும் பாடலில் கோட்டிய வில்லினையுடைய வேட்டுவர் தங்கொல் படையாலே வீழ்ந்த தசையையும் நிணத்தையும் தின்ற பேய்கள் என்றும்,

**"விலங்கேயும் தம்மோ டுடனுரைதல் மேவும்**

**கலந்தாரைக் கைவிடுதல் ஒல்லா – இலங்கருவி**

**தாஅ யிழியு மலைநாட! இன்னாதே**

**பேஎயோ டானும் பிரிவு"** ***(பழமொழி.127)***

*எனும் பழமொழி நானூற்றுப் பாடலில் கருவிகள் பாய்ந்து இழியா நின்ற மலைநாடனே! மிருகமாயினும் தம்மோடு ஒன்றாக வசித்தலைப் பொருந்திய நட்பினரைக் கைவிடுதல் மாட்டா. ஆதலால் பேயோடாயினும் தான் கலந்த பின்பு பிரிவு துன்பந் தருவதேயாம் என்றும், திருவள்ளுவர் இதனைப் பார்க்க அமையும் முகக்கடுமையும் உடையவன் செல்வம் பேய் காத்தது போல எனப் பேயின் இயல்பினைக் கீழ்க்காணும் குறளில்,*

**"அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்**

**பேஎய்கண் டன்னது உடைத்து"** ***(குறள்.565)***

*எனச் சுட்டுகின்றார்.*

*இரட்டைக் காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரத்தில்,*

**"இடுபிணம் தின்னும் இடாகினிப் பேய்வாங்கி**

**மடிஅகத்து இட்டாள் மகவை"** ***(கனாத்.21-22)***

*எனும் பாடலடியில் பேய் பற்றிய நம்பிக்கை இருந்துள்ளமையை அறிய முடிகின்றது.*

*மணிமேகலையில் இந்நம்பிக்கையினை மயானத்தை நகரமாக நினைத்து அதில் தனியே சென்றான். அங்கே களித்தாடிய பேயொன்றைக் கண்டு அஞ்சி அதனால் தாக்கப்பட்டு கதறி ஓடித் தன் தாயாகிய கோதமையை அடைந்து "சுடலையிலுள்ள பேய்க்கு என்னுயிரைக் கொடுத்தேன்" என்று சொல்லி அவள் முன் வீழ்ந்து இறந்தான் பார்ப்பனச் சிறுவன் சார்ங்கலனென் என்பதனை,*

**"கெம்மனை காணா யீமச் சுடலையின்**

**வெம்முது பேய்க்கென் னுயிர்கொடுத் தேனெனத்**

**தம்மனை தம்முன் வீழ்ந்து மெய்வைத்தலும்"** ***(மணி.6:29-31)***

*எனும் பாடலடிகள் சுட்டுகின்றன.*

முத்தொள்ளாயிரத்தில் இப்பேய் நம்பிக்கையினைச் சோழ மன்னனின் போர் யானைகள்பகைவர்களைத்தாக்கி அழித்தவுடன் பேய்மகளிர்கள் இறந்தவர்களின் குடலை எடுத்து மாலையாகப் போட்டுக் கொண்டு நடனமாடின என்பதனை,

**"அலங்கலம் பேய்மகளி ராட வருமே" (முத்.36:3)**

என்றும், கிள்ளிவளவன் போர் செய்த களத்தில் உடைந்த தலைகளும் மூளையும், நிணமும், தசையும், எழும்பும் குடலும் நிறைந்து கிடக்க, அதுகண்ட பேய்கள் மகிழ்ச்சியுடன் கூத்தாடின என்று (முத்.37) பாடலும், எதிரி மன்னனின் மண்டை ஓடு அகலாகவும், மூளை நெய்யாகவும், குடல் திரியாகவும் இட்டுப் பேய்கள் விளக்காகப் பயன்படுத்தின என (முத்.38) ஆவது பாடலும், பாண்டியனுக்குத் திறைப்பொருளைக் கொடுக்காதவர்களின் நாடு ஒன்றன்பின் ஒன்றாகப் பசுக்கூட்டங்களும், பெண்களும் போர் செய்ய இயலாத ஆடவர்களும் நீங்கிச் சென்றுவிட, அவ்விடங்கள் தாய்ப் பேய்கள், பெற்றெடுத்த இளம்பேய்கள் தூங்குகின்ற இடமாக விளங்குகின்றன என்று (முத்.89) ஆவது பாடலும் புலப்படுத்துகின்றன.

**விழா பற்றிய நம்பிக்கைகள்**

விழை என்பதன் அடிப்படையில் தோன்றியது விழா என்பர். மக்களின் வாழ்வில் சோர்வினைப் போக்கி இன்பமும், மலர்ச்சியும், புத்துணர்ச்சியும் ஊட்டுவன விழாக்களாகும். பிரிந்தவர்களை ஒன்றுபடுத்தி மகிழ்ச்சியில் திளைக்க வைப்பது விழாக்களின் செயற்பாடாகும். அவை சடங்குகளின் அடிப்படையில் தோன்றிச் சமுதாய நம்பிக்கையின் காரணமாகச் செல்வாக்குப்பெற்று வளர்ந்தும், வாழ்ந்தும், மறுமலர்ச்சியடைந்தும் தொன்றுதொட்டு நிலவி வருகின்றன. விழாக்கள் என்பன மக்கள் ஒன்று சேர்ந்து நடத்தும் கூட்டுச் சடங்குகளிலிருந்து தோன்றியனவாகக் காட்சி தருகின்றன.

சடங்குகள் விழாக்களுக்கு அடிப்படை. சடங்குகளின் ஒன்றினைக்கப்பட்ட கூட்டுத்தொகுதியினை விழா எனக்கூறலாம். பொதுவாக

இன்று மகிழ்ச்சியினை அடிப்படையாகக் கொண்டிருப்பனவற்றையே விழாக்கள் என்று அழைக்கின்றோம்.

"விழாக்கள் அறிவூட்டுவனவாயும் சமுதாயம் மற்றும் சமயம் சார்ந்த தன்மைகளை உள்ளடக்கியதாகவும் கருதப்படுகின்றன."[31] என்பர்.

"உள மகிழ்ச்சியினையும் செயலாற்றுவதற்குரிய நம்பிக்கை யினையும் மனிதனுக்கு விழாக்கள் அளிக்கின்றன. இவை நம்பிக்கையின் அடிப்படையில் கொண்டாடப்பட்டு வருகின்றன. மக்கள் விரும்பி ஏற்றுக் கொண்டாடும் நிகழ்ச்சியாதலின் அது விழா எனப் போற்றப்படுகின்றது என கா.காந்தி குறிப்பிடுவார். பண்டைத் தமிழ் இலக்கியங்கள் விழாவினை விழவு, விழா, சாறு என்ற சொற்களால் சுட்டிச் சென்றுள்ளன."[32]

"விழா என்பது விழவு என்ற அடிச் சொல்லிலிருந்து பிறந்ததாகும். விழாக்கள் என்பன ஆதிமனிதனின் கூட்டுச் சடங்கிலிருந்து தோன்றியனவாகும்"[33] என்பர். எல்லா நாட்டுப் பண்பாடுகளிலும் திருவிழாக்கள் முக்கியக் கூறுகளாக விளங்கி வருகின்றன. "நாட்டுப்புற விழாக்கள் மூலம் மக்களின் பண்பாடும் கலாச்சாரமும் வெளிப்படுகின்றன."[34]

"திருவிழாக்கள் பல மரபுத் தொகுதிகளை உள்ளடக்கியவை என்றும் நாட்டுப்புற மக்களின் பெரும்பிரிவாகக் கருதத்தக்கன என்றும் ராபர்ட் ஜெரோம்ஸ்மித் குறிப்பிடுகின்றார்."[35]

**விழா கொண்டாடுவதற்கான காரணங்கள்**

இன்று பெரும்பாலான விழாக்கள் பசி, பிணி, பகை நீங்கவும், ஊர் செழிக்கவும் கொண்டாடப்பட்டு வருகின்றன. இதனைச் சிலம்பும், மணிமேகலையும் "பசியும், பிணியும், பகையும் நீங்கி வளனும் சுரக்கப் பண்டைக்கால மக்கள் விழாக் கொண்டாடினர்"[36] என்று குறிப்பிடுகின்றன.

தெய்வ நம்பிக்கை காரணமாகவும் விழாக்கள் நடைபெறுகின்றன. தெய்வத்திற்கு விழா எடுக்காவிட்டால் தம்மைத் தண்டித்துவிடும் என்று

மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர். தம்முடைய முன்னோர்கள் வழிவழியாக விழாக்களை நடத்தி வந்தனர். இதனைப் பின்பற்றிப் போலச் செய்தல் காரணமாகவும் விழாக்களைக் கொண்டாடி வருகின்றனர்.

"இவ்வுலகில் வாழுகின்ற மக்கள் இன்மை இன்பமும், மறுமையின்பமும் பெற்றுத் தம் பிறவியைத் தூய்மையாக்கவே விழாக்கள் நடத்தப்படுகின்றன"[37] என்கிறார் இரா.சீனிவாசன்.

**விழாக்களின் தோற்றமும் வளர்ச்சியும்**

விழாக்கள் நமது முன்னோர்களால் ஆய்ந்து அறிந்து ஏற்படுத்தப் பட்டவை. பண்டைக் காலத்தில் பூம்புகார் நகரில் நடைபெற்ற இந்திரவிழா பற்றிச் சிலப்பதிகாரமும், மணிமேகலையும் குறிப்பிடுகின்றன. பக்தி இயக்கக் காலகட்டங்களில் விழாக்கள் மிகுதியாகவும் விரிவாகவும் நிகழ்ந்துள்ளன என்பதைத் திருமுறைகளும் நாலாயிரத்திவ்விய பிரபந்தமும் குறிப்பிடுகின்றன.

"மக்களுக்கு ஓர் ஆன்மீகச் சூழ்நிலையை ஏற்படுத்தித் தருவதற்கு திருவிழாக்கள் ஏற்படுத்தப்பட்டன. இச்சூழ்நிலையில் அவர்கள் ஆன்மீகச் சுகம் பெறலாம். ஆன்மாவைப் பயன்படுத்தித் திருத்தி அமைக்கலாம். இந்நாள்களை ஒருவன் பயன்படுத்திக் கொண்டால் இவையே உண்மையில் ஒருவன் வாழ்ந்த நாட்களாகும்"[38] என்பர்.

**செவ்வியல் இலக்கியங்களில் விழாக்கள்**

குறுந்தொகையில் விழாக்கள் பற்றி தலைவர் பக்கத்தவராக இருப்ப மிக மகிழ்ச்சியுற்று விழாக்கண்ட ஊரினர் மகிழ்வதைப் போல நிச்சயமாக விரும்பி மகிழ்வேன் எனத் தலைவி தோழியிடம் கூறியதனை,

> ***"காதல ருழைய ராகப் பெரிதுவந்து***
> ***சாறுகொ ளூரிற் புகழ்வேன்மன்ற"*** **(குறுந்.41:1-2)**

எனும் பாடலடிகளும்,

**“விழவுமேம் பட்டவென் னலனே பலவிறற்” (குறுந்.125:4)**

*எனவும், தலைவியும் தோழியும் விழவின்கட் சென்று தலைவனை எதிர்ப்பட்டு அளவளாவிய பழைய நிகழ்ச்சியைத் தலைவி நினைவுறுத்தியதை*

**“பேரூர் கொண்ட வார்கலி விழவிற்**
**செல்வாஞ் செல்வா மென்றி யன்றிவன்” (குறுந்.223:1-2)**

*என்றும், நீர் விழாவிற்குரிய அடையாளங்களோடு வாரா நின்றாய் என (குறுந்.295:3) பாடலடியும், தூய அணிகலன்களை அணிந்த மகளிர் விழாவுக்குரிய அலங்காரங்களைத் தொகுக்கின்ற மாலைக் காலத்தே அறிவேனாயினேன் என்று (குறுந்.386:6) பாடலடியும் சுட்டுகின்றன.*

*ஐங்குறுநூற்றில் இந்நம்பிக்கையினை வளமான ஊரில் இந்திரவிழா நடத்துவதற்கு மங்கையரைத் தொகுத்தனை*

**“இந்திரவிழவில் பூவின் அன்ன**
**புன்தலைப் பேடை வரிநிழல் அகவும்” (ஐங்.62:1-2)**

*எனவும், பதிற்றுப்பத்தில்*

**“அரியா விழவின் இழியாத் திவவின்” (பதிற்.29:7)**

*என்றும்,*

**“முழவுஇமிழ் மூதூர் விழவுகாணுஉப் பெயரும்” (பதிற்.30:20)**

*எனும் பாடலடியும் தெரிவிக்கின்றன. திருவிழாக்கள் நிலைபெற்று விளங்கும் இடமகன்ற பேரூர்களில் கூத்தர்கள் முழவு ஒலிக்குத்தக ஆடுவதில் வல்லவர்கள் என்பதனை (பதிற்.56:1) பாடலடியும், திருவிழாவின் தன்மை பொருந்தியதுமான மதுவினைக் கொண்டது நாள்மகிழிருக்கையாகிய செல்வம் என்றதனை (பதி.65:17) பாடலடிகளும், நீ சினம் கொள்ளுமாறு செய்த பகைவர்களுடன் போர்புரியும் இடத்து விழவினைப் போல் அனைவருக்கும் இன்பம் செய்யும் செயலை நீக்கிச் செயல்படுகிறார் என்பதை (பதிற்.72:13) பாடலடியும் புலப்படுத்துகின்றன.*

*பரிபாடலில் இந்நம்பிக்கையை வெறியாட்டு விழாவாகக் காட்டியதனை,*

***"சால்வக தலைவனெனப் பேஎ விழவினுள்***

***வேலனேத்தும் வெறியும் உளவே" (பரி.5:14-15)***

*என்ற பாடலின் வாயிலாக சடங்குகளையும் விழாவாகக் கூட்டினர் என்பதனை உணரமுடிகின்றது.*

***"நனிமலர்ப் பெருவழிச்***

***சீறடியவர் சாறுகொள எழுந்து" (பரி.8:95-96)***

*என்ற பாடலடிகளும், கதிரவன் கடுமையாகக் காயாததால் குளிர்ந்த பின் மழையுடையதுமான மார்கழி மாதத்தில் களங்கத்தோடு வளரும் முழுமதியின் திருவாதிரை நாளில் அந்தணர் விழாத் தொடங்கப் பார்ப்பனர் என்பதனை பரி.(11:76–78) பாடலடிகளும், திருப்பரங்குன்றத் தலைவியர் தம்மைப் பிரிந்து சென்ற தலைவர் வருதல் வேண்டித் தெய்வ விழா எடுத்தனர் என பரி.(17:42–43) பாடலடிகளும், வள்ளியை மணந்த பிறகு விண்ணகத்திலுள்ள தேவயானையை உன்பக்கத்தில் வைத்துக் கொண்டுத் திருமணவிழா செய்து கொண்டாய் என்று பரி.(19:6) பாடலடியும் விளக்குகின்றன.*

*கலித்தொகையில் இவ்விழா பற்றி பேரொலியோடு திருவிழா நிகழ்ந்ததனை,*

**"கல் எனக் கவின்பெற்ற விழவு ஆற்றுப்படுத்த பின்" (கலி.5:10)**

*என்னும் 'விழா' என்ற சொல்லை கலித்தொகையில் குறிப்பிட்டுள்ளதனை,*

**"ஆலமர் செல்வன் அணிசால் மகன்விழாக்**

**கால்கோளென் றுக்கிக் கதுமென நோக்கி" (கலி.83:14-15)**

*பாடலடிகளும் புலப்படுத்துகின்றன.*

*அகநானூற்றில் இவ்விழாவினைப் பற்றி*

**"விழவுத் தலைக்கொண்ட பழவிறல் மூதூர்" (அகம்.17:19)**

*என்றும், திருவிழாக்களால் சிறப்புப்பெற்ற திருவேங்கடம் என*

**"விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்" (அகம்.61:13)**

*பாடலடியும்,*

**"விழவு அணி மகளிர் தழை அணிக்கு ஊட்டும்" (அகம்.70:12)**

எனவும்,

**"அழியா விழவின் அஞ்சுவரு மூதூர்ப்" (அகம்.115:1)**

என்றும் வெளிப்படுத்தியுள்ளனர். அதிகமாக விழாக்கள் நடைபெறும் மதுரையில் பாண்டியனுடன் போரிட்ட சேர, சோழ, அரசர்கள் தோற்றோடிய போது வெற்றிகண்ட வீரர்கள் போர்க்களத்தில் செய்த ஆரவாரத்தைப் போல என்பதை,

**"பொய்யா விழவின் கூடற்பறந்தலை**
**உடன் இயைந்து எழுந்த இருபெரு வேந்தர்" (அகம்.116:14-15)**

எனும் பாடலடிகளும், தோழி நம் ஊரில் விழா இல்லாவிட்டாலும் இங்கு மக்கள் உறங்கமாட்டார்கள் கள்ளுக்கடை இருப்பதனால். அதனால் தலைவன் இரவில் வந்து நம்மைக் காண எத்தனையோ தடைகள் உள்ளன என்பதை,

**"விழவு இன்று ஆயினும் துஞ்சாது ஆகும்" (அகம்.122:1)**

பாடலடியும், பசலைக் கொடியில் ஆம்பல் பூவோடு சேர்த்துக்கட்டிய தழையை உடுத்தி மகளிர் ஒருவிழாவில் குரைவைக் கூத்து ஆடியதை,

**"அரிஅலர் ஆம்பலொடு ஆர்தழை தைஇ**
**விழவுஆடு மகளிரொடு தழூஉஅணிப் பொலிந்து"**
**(அகம்.176:14-15)**

என்றும், கோடைக்காலத்தில் வானம் வறண்டமையால் குளங்களில் நீரில்லை, ஆண் யானைகள், பெண் யானைகளுடன் வேறு இடத்திற்குச் செல்கின்றன. அச்செயல் விழா முடிந்ததும் பாணர்கள் தங்கள் வாத்தியக் கருவிகளை எடுத்துக்கொண்டு பிற நாட்டிற்குச் செல்வது போல் இருந்தது என்பதனை,

**"நாறுஉயிர் மடப்பிடி தழீஇ வேறுநாட்டு**
**விழவுப்படர் மன்னரின் முழவுஎடுத்து உயரி"(அகம்.189:4-5)**

எனவும், கடற்கரையில் தமையன்மார் பிடித்து வந்த மீன்களை விழா நிகழும் தெருக்களில் தங்கைமார் விற்பர் என்றும் குறிப்பிடப்படுகின்றது.

புறநானூற்றில் இவ்விழாவினை என் தலைவன் போர்க்களம் புகுந்தால் ஆரவாரம் மிக்க ஊரில் மற்போர் செய்தற்கு விழா எடுத்த இடத்துத் தற்பெருமை பேசி மகிழ்ந்து வந்த வீரர்க்கு, உப்பு வணிகர் அஞ்சும் மேடு பள்ளம் அமைந்த வழியைப் போன்றவன் என

**"கல்லென் பேர்ஊர் விழவுடை ஆங்கண்**
**ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்கு" (புறம்.84:4–5)**

பாடலடிகளும், விழா நிகழ்ச்சிகள் இல்லையாயினும் உண்டாக்கும் உணவு யாவர்க்கும் உண்டு. இதனை,

**"விழவன்று ஆயினும் படுபதம் பிழையாது**
**மைஊன் மொசித்த ஒக்கலொடு" (புறம்.96:6–7)**

என்றும் குறித்துள்ளனர். இறைச்சி உணவும், வெறுத்தால் பால்விட்டுச் செய்தனவும் பாகு சேர்த்துச் செய்தனவும் ஆகியவற்றைக் கலந்து பருகி விருந்தினராகப் பல நாள் இருந்தோம். தற்பொழுது விழாக்கள் நிறைந்த எங்கள் நாட்டிற்குச் செல்ல விரும்புகிறோம் என்றதனை.

**"ஊனும் ஊணும் முனையின், இனிது என**
**பாலிற் பெய்தவும், பாகின் கொண்டவும்**
**அளவுபு கலந்து மெல்லிது பருகி**
**விருந்துறுத்து ஆற்றி இருந்தனமாகச்**
**சென்மோ பெரும! எம் விழவுடை நாட்டு? என" (புறம்.381:1-5)**

எனும் பாடலடிகளும், விழா எதுவும் இல்லை என்றால் உழவரின் உண்கலங்களில் கெடிற்று மீன் உணவுடன் பூவுடன் கலந்த கள்ளும் இருக்கும் என்பதை,

**"விழவு இன்றாயினும் உழவர் மண்டை**
**இருங்கெடிற்று மிசையொடு பூங்கண் வைகுந்து"**
**(புறம்.384:8-9)**

என்ற பாடலடிகளும் விளக்குகின்றன.

பத்துப்பாட்டில் இவ்விழாக்கள் பற்றி ஒவ்வொரு குன்றிலும் இல்லாமல், ஒவ்வொரு ஊரிலும் முருகனுக்குத் திருவிழா நடைபெறும்.

மலைகளில் கிடைக்கும் தினை அரிசியால் செய்த பிரப்பரிசியை மலர்களுடன் தூவி ஆட்டுக்குட்டியை அறுத்து அதனையும் விறவி, கோழிக்கொடியை நிறுத்தி ஒவ்வொரு ஊரிலும் விழாக் கொண்டாடியதை,

**“சிறுதினை மலரொடு விரைஇ மறிஅறுத்து**
**வாரணக் கொடியொடு வயற்பட நிறீஇ**
**ஊர் ஊர் கொண்ட சீர்கெழு விழவினும்”**

**(முருகு.218:220)**

எனும் பாடலடிகளும்,

**“சாறு அயர் களத்து வீறுபெறத் தோன்றி”** **(முருகு.283)**

எனும் பாடலடியும் விழா பற்றி பதிவு செய்துள்ளன.

பொருநராற்றுப்படையில் புதிய வருவாயையுடைய ஊரின் அகன்ற இடத்தில் பெரிய திருவிழா நடந்து முடிந்தது. இதனை,

**“அறாஅ யாணர் அகன்தலைப் பேரூர்**
**சாறுகழி வழிநாள், சோறுநசை உறாது”** **(பொருநர்.2)**

எனும் பாடலடிகளும், மதுரைக்காஞ்சியில் கடற்கரைச் சோலையில் பரதவர் ஆடும் குரவைக் கூத்தின் ஓசையும், ஒரு பக்கத்தே விழாக்கள் கொண்டாடுவதால் எழுகின்ற ஓசையும் எழுந்தன என்பதன் மூலம் விழா நடைபெற்றதை அறியமுடிகின்றது. இதனை,

**“ஒருசார் விழவு நின்ற வியல் ஆங்கண்”** **(மதுரை.98)**

எனும் பாடலடியும், திருவிழாக்களை நிகழ்த்த எடுத்த அழகிய பல கொடிகள் ஒரு பக்கம் அசைந்து கொண்டிருந்தன என்பதை,

**“சாறுஅயர்ந்து எடுத்த உருவப் பல்கொடி”** **(மதுரை.366)**

என்றும், திருவிழாக்களின் ஏழாம் நாள் நிறைவாக தீவினைகளைப் போக்க நீராடல் உண்டு என்பதனை,

**“கழுநீர் கொண்ட எழுநாள்அந்தி**
**ஆடுதுவன்று விழவின் நாடு ஆர்த்தன்றே”** **(மதுரை.427)**

*எனவும் சுட்டியுள்ளனர். தெய்வங்களுக்கு உயர்ந்த பூசைப் பொருளைக் கொடுப்பதற்காக மாலைக்கால விழாவிற்கு இசைக் கருவிகள் முழங்கின என்பதனை,*

***"அந்தி விழவின் தூரியம் கறங்க" (மதுரை.460)***

*எனும் பாடலடிகளும், குறிஞ்சிப்பாட்டில்*

***"சாறுகொள் ஆங்கண் விழவுக்களம் நந்தி" (குறிஞ்சி.192)***

*எனவும், திருவிழாக்காலங்களில் வருபவர்க்கெல்லாம் வரையறை இல்லாது கொடுக்கும் வளமையுடைய இல்லம் என்பதனை,*

***"சாறுஅயர்ந் தன்ன மிடாஅச் சொன்றி***
***வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப" (குறிஞ்சி.201-202)***

*எனும் பாடலடிகளும், பட்டினப்பாலையில் விழா நாட்களில் மக்கள் தொழிலாற்றுவதில்லை என (பட்.86–93) பாடலடிகளும்,*

***"சாறு அயர்ந்த மூதூர் சென்று தொக்கு ஆங்கு" (பட்.215)***

*திருவிழாக் கொண்டாடும் பழைமையான ஊரில் சென்று கூடினர் எனவும், இனிய பாடல்களைப் பாடிப் பெருவிழாக் கொண்டாடியதை,*

***"பெருவிழாக் கழிந்த பேஎம்முதிர் மன்றத்து" (பட்.255)***

*பாடலடிகளும், உணர்த்துகின்றன.*

பதினெண்கீழ்கணக்கு நூல்களில் இந்நம்பிக்கையினைப் பரத்தையர் புதுமணவிழாக் கொண்டாடும் பொருட்டுச் செய்ததனை ஐந்திணை ஐம்பதில்,

**"பொய்வளைக் கையாய் பெருநகை யாகின்றே**
**செய்வய லூரன் வதுவை விழவியம்பக்**
**கைபுனை தேரேறிச் செல்வானைச் சென்றிவ**
**னெய்தி யிடருற்ற வாறு" *(ஐந்.ஐம்.26)***

*எனும் பாடலும், திணைமாலை நூற்றைம்பதில்*

***"வில்லார் விழவினும்வேலாழி சூழுலகி***
***னல்லார் விழவகத்து நாங்காணே" (திணை.நூற்.62:1–2)***

பாடலடிகளும், வான் வறண்டால் திருவிழாவும் வழிபாடும் உலகில் வானவர்க்கு நிகழாது என்பதை,

**"சிறப்பொடு பூசனை செல்லாது வானம்**
**வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு"** ***(குறள்.18)***

எனும் திருக்குறளும் குறிப்பிடுகின்றன.

**இரட்டைக் காப்பியங்கள் கூறும் திருவிழா**

சிலப்பதிகாரம் ஐந்தாம் காதையிலும் மணிமேகலை முதற்காதையிலும் இந்திரவிழா பற்றிக் குறிப்பிடப்படுகின்றன. இருகாப்பியப் புலவர்களும் மக்களின் பண்பாட்டு அம்சங்களை வெளிப்படுத்தும் பொருட்டு இந்திரவிழாக் கொண்டாட்டங்களைக் காப்பியத்தின் தொடக்கத்திலேயே குறிப்பிடுகின்றனர்.

"காவிரிப்பூம்பட்டினத்தில் அம்மக்கள் இருபத்தெட்டு நாட்களுக்கு இந்திர விழாவினைக் கொண்டாடி இருக்கின்றனர்"[39] என்பர். "பண்டைக் காலத்தில் இந்திரவிழா மிகப்பெருவிழாவாக, திரளான மக்கள் பங்குகொண்ட விழவாகக் கொண்டாடப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கதாகும். 'வருணன் மேயபெருமணல் உலகும்' எனத் தொல்காப்பியம் குறிப்பிடுவது மருதநிலத் தெய்வமான இந்திரனைச் சுட்டுவதாகும்"[40] என்பார்.

சிலப்பதிகாரத்தில் இதனைப் பற்றி இந்திரவிழவூரெடுத்த காதையில்,

**"வெற்றிவேன் மன்னற் குற்றதை யொழிக்கெனத்**
**தேவர் கோமா னேவலிற் போந்த**
**காவற் பூதத்துக் கடைகெழு பீடிகைப்**
**புழுக்கலு நோலையும் விழுக்குடை மடையும்**
**பூவும் புகையும் பொங்கலும் சொரிந்து"**

***(இந்திரவிழவூறடுத்தகாதை.65-69)***

எனும் அடிகள் புலப்படுத்துகின்றன.

**கார்த்திகை விழா**

கார்த்திகை விளக்குப் பற்றிய குறிப்புத் தமிழிலக்கியங்களில் பரவலாகப் பேசப்பட்டிருப்பது கொண்டு இவ்விழா சிறப்பாகக் கருதப்பட்டமை தெரியவருகின்றது. "இவ்விழாவைப் பெருவிழா எனவும், கார்த்திகைச் சாறு எனவும் இலக்கியங்கள் சுட்டிச் செல்கின்றன."[41] "கார்த்திகை விழா நிறைமதி நாளில் கொண்டாடப்பட்டதாகவும் விளக்கேற்றி வழிபடுதலில் சிறப்பிடம் பெற்றதாகவும்"[42] அறிகின்றோம்.

"கார்த்திகை விழா மாலையிலும், புனலாடலாகிய நீர் விழாக் காலையிலும் கொண்டாடப்பட்டதனை இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன"[43] என்பர்.

பழங்காலத்தில் தமிழ்மக்கள் கார்த்திகைத் திருநாளைக் கொண்டாடினர். கார்த்திகை நாளில் வீதியில் விளக்கேற்றி, மலர் மாலைகளைத் தொங்கவிட்டுப் பார்த்து மகிழ்வர். இதனை அகநானூற்றில்,

**"குறுமுயல் மறுநிறம் கிளர மதிநிறைந்து**
**அறுமீன்சேரும் அகல் இருநடுநாள்**
**மறுகு விளக்கு உறுத்து மாலைதூக்கிப்**
**பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய**
**விழவுடன் அயர வருகதில் அம்ம"** ***(அகம்.141:7-11)***

பாடலடிகள் விளக்குகின்றன. பெருங்கடுங்கோ கார்த்திகை விழாவின் விளக்குகளை இலையற்ற இலவமரம் பூத்த காட்சியோடு உவமிக்கின்றார். இதனை,

**"வேனி லாத்த தாங்கண் வானுலந்து**
**அருவி யான்ற உயர்சிமை மருங்கிற்**
**பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்**
**இலையில் மலர்ந்த இலவமொடு**
**நிலையுயர் பிறங்கல் மலையிறந்தோரே"** ***(அகம்.185:9-13)***

எனும் பாடலடிகளும், கார்நாற்பது, நலமிக்க கார்த்திகைத் திருவிழா எனவும், அதில் தலைநாள் விளக்கம் சிறப்பான ஒன்றாகும் எனவும் சுட்டக் காண்கிறோம்.

**"நலமிகு கார்த்திகை நாட்டவர் இட்ட**
**தலைநாள் விளக்கில் தகையுடைய வாகிப்**
**புலமெலாம் பூத்தன தோன்றி சிலமொழி**
**தூதொடு வந்த மழை" (கார்.26)**

இப்பாடலில் தலைநாள் விளக்கம் எனச் சுட்டியிருப்பது கொண்டு இவ்விழா சிலநாட்கள் தொடர்ந்து நடைபெறுவதுண்டு என்பதும் அதில் தலைநாளே சிறப்பு மிக்கது என்றும் புலனாகின்றது. களவழி நாற்பதில் கார்த்திகை விளக்கினை போர் களத்தின் குருதியோடு இயைந்து பேசுகிறது.

**"ஆர்ப்பு எழுந்த ஞாட்பினுள் ஆளான் எதிர்த்து ஓடித்**
**தாக்கி எறிதர வீழ்தரும்ஒண்குருதி**
**கார்த்திகைச் சாற்றில் கழிவிளக்கைப்போன்றனவே**
**போர்க்கொடித்தானைப் பொருபுனல் நீர் நாடன்**
**ஆர்த்து அமர் அட்டகளத்து" (களவழி.17)**

எனும் பாடலும் சுட்டுகிறது. "இன்றும் தமிழகத்தில் கார்த்திகை விளக்கீட்டுவிழா கொண்டாடப்பட்டு வருவதும் தலைநாளில் விளக்குகள் மிகுதியாக இடம்பெறுவதும் மற்றைய நாட்களில் சில விளக்குகள் ஏற்றப்படுவதனையும் வழக்கமாகக் கொண்டிருக்கக் காண்கிறோம்."[44]

**புனலாட்டு விழா**

புனலாட்டு என்பது நீரில் குளித்தல் எனப்பொருள்படும். இதனை நீராடல், தீர்த்தவாரி எனவும் சுட்டுவர். குறிப்பிட்ட இடங்களில் நீராடுதலால் பாவம் நீங்கும் என்று நம்பப்படுகிறது. குமரியில் கடல் சேரும் முக்கூடலில் நீராடினால் பாவம் போகும் என்று நம்பப்படுகிறது. ஆறுகளில் கடலில் குறிப்பிட்ட நாள்களில் நீராடினால் நன்மைகிட்டும் என்று கருதப்பெற்றது. "பட்டினப்பாலை தீது கடலாடியும், மாசு போக புனல் படிந்தும்"[45] என இதனைச் சுட்டுகின்றது. திருவிழாக்களில் ஒரு நாள் தீர்த்தவாரி உண்டு.

**புனலாடுதலின் நோக்கம்**

பருவத்தே மழை பொழிந்து ஆற்றில் நீரோட்டம் ஏற்பட அதனை வரவேற்கும் முகத்தான் மகிழ்ச்சிப் பெருக்கால் நீராடி வழிபடுவது புதுப்புலனாடுதலின் நோக்கமாகும். "புனலாடல் ஆற்றிலும், கடலிலும் நிகழ்ந்ததனை இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன."[46] இன்றும் தமிழர்கள் ஆடி 18 இல் காவிரியல், தாமிரபரணியில், வையையில் நீராடுவர்.

அகநானூற்றில் இவ்விழா பற்றி தலைவன் பரத்தையொடு வேலக் கரும்பாலாகிய வெள்ளிய தெப்பத்தில் களிறும் பிடியும் போல முகமலர்ச்சியுடன் புனலாடியதும் (அகம்.6) ஒளி பொருந்திய நெற்றியும், மணம்வீசும் மலர் வேய்ந்த கூந்தலும், மாவடு போன்ற கண்களும், முத்துவடம் அசையும் மார்பும், கொண்ட அழகுவாய்ந்த பரத்தையொடு இடையறாது புனலாடியதை (அகம்.116), வலிமைமிக்க களிற்றினைப் போல புனை தழுவி நாணம் சிறிதுமின்றி இளமகளிரொடு புனலாடியதை (அகம்.376), கழார்ப் பெருந்துறையில் நிகழ்ந்த நீராட்டு விழாவில் அட்டனத்தியை காவிரிப்புனல் கொண்டு செல்ல, ஆதிமந்தி அலறிய திறத்தினை (அகம்.396) பாடலும் புலப்படுத்துகின்றன.

பரிபாடலில் புனலாடுவதற்குக் காலையில் பறையறைவித்ததை,

**"வெந்நாற்று வேசனை நாற்றங் குதுகுதுப்ப**
**ஊரூர் பறையொலி கொண்டன் றுயர்மதில்"** **(பரி.20:13-14)**

எனும் பாடலடியும் சுட்டிச் செல்கின்றன.

பட்டினப்பாலையில் தீதுநீங்கக் கடலாடும் வழக்கம் நிலவியதனை,

**"தேறுநீர்ப் புணரியோ டியாறுதலை மணக்கும்**
**மலியோதத் தொலிகூடல்**
**தீதுநீங்கக் கடலாடியும்**
**மாசுபோகக் கடல்படிந்தும்"** **(பட்.97–100)**

என்றும், சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் குமரியில் கடலாடியதை,

**"மன்னர் கோவே யான்வருங் காரணம்**
**மாமுனி பொதியின் மலைவலங் கொண்டு**
**குமரியம் பெருந்துறை யாடி மீள்வேன்" (சிலம்.27:67-69)**

எனவும்,

**"தென்றிசைக் குமரியாடி வருவோள்" (மணி.13:7)**

என மணிமேகலையும் குறிப்பிடுகின்றது.

**பூந்தொடை விழா**

"பூந்தொடை விழா என்பது மறவர் மக்கள் முதன்முதலாக அம்பு தொடுத்தற்பொருட்டு நிகழ்த்தும் திருவிழா என உரையாசிரியர் விளக்கியுள்ளார்."[47] இவ்விழா பற்றிப் பழந்தமிழ் இலக்கியத்தில் ஓரிடத்தில் மட்டும் குறிப்புள்ளது. பிற்கால இலக்கியங்களில் இவ்விழா பற்றிய குறிப்புக் காணப்படவில்லை. இதனை அகநானூற்றில்

**"நம்முயர் வுள்ளினர் காதலர் கறுத்தோர்**
**தெம்முனை சிதைத்த கடும்பரிப் புரவி**
**வார்கழற் பொலிந்த வன்கண் மழவர்**
**பூந்தொடை விழவின் தலைநா ளன்ன**
**தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்" (அகம்.187:5-9)**

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

**தைந்நீராடல்**

தையல் என்பது மகளிரைக் குறிக்கும். இவர்கள் ஆடிய நீராடல் இது. "இக்காலத்தில் மார்கழி நோன்பும், தை மாதம் முதல் நாள் அன்று பொங்கல் விழாவும் தமிழர்களால் மிகச்சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. இவற்றினுடைய பழைய வடிவம் 'தைந்நீராடல்' எனும் திருவிழாவாக இருந்திருக்கக்கூடும்."[48]

தைமாதம் முதல் நாளன்று மேற்கொள்ளப்பட்ட புனித நீராடல் ஒருவகைத் திருநாளாகக் கொண்டாடப்பட்டது. சங்க காலத்தில் கடைசிப்

பகுதியில் இந்த விழா வழக்கிற்கு வந்ததாகத் தெரிகிறது. மற்றும் இது சமயத் தொடர்பான விழா என்பதும் புலனாகின்றது. "திருவாதிரைத் திருநாளோடு தொடர்புடைய விழாவாக இதனைப் பரிபாடல் கூறுகிறது."[49] திருப்பாவையில் ஆண்டாள் மார்கழி மாதம் நீராடியதை நினைவு கூறும் வகையில் இன்றும் பெண்கள் அதிகாலையில் நீராடுவதனைக் காணமுடிகின்றது. இதனை நற்றிணையில்,

**"தைஇத் திங்கள் தண்கயம் படியும்**
**பெரும் தோள் குறுமகள்"** ***(நற்.80:7-8)***

எனும் பாடலடிகளும், கலித்தொகையில்

**"தையின் நீராடிய தவந்தலைப் படுவாயோ"** ***(கலி.59)***

எனும் பாடலும் விளக்குகின்றன. "கன்னிப் பெண்கள் இறைவனை வேண்டி நோன்பு நோற்று நோன்பின் நிறைவு நாளன்று நீராடுவது தைந்நீராடல் ஆகும்"[59] என்பர். சிறந்த கணவனைப் பெறவேண்டும் என்ற நோக்கத்துடன் இந்நோன்பு மேற்கொள்ளப்பட்டதைச் சங்க இலக்கியப் பாடல்கள் தெரிவிக்கின்றன.

**வெள்ளணி விழா**

ஐரோப்பியர் வருகைக்குப் பின்னரே இந்தியர்கள் பிறந்த நாள் விழாக் கொண்டாடுவதாகச் சிலர் தவறாகக் கருதுகின்றனர். நம்நாட்டில் அரசர்களுடைய பிறந்தநாள் விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டதைச் சங்கப் பாடல்களால் அறியலாம்.

திருவண்ணாமலைக்கு அருகில் செங்கண்மா வினைச் (செங்கத்தை) சிறப்பாக நன்னன் எனும் குறுநில மன்னன் ஆட்சி புரிந்து வந்தான். அவனுடைய பிறந்த நாள் விழா அவனுடைய நாட்டு மக்களால் மிகச் சிறப்பாகப் பெருவிழாவாகக் கொண்டாடப்பட்டது. இதனை, மாங்குடி மருதனாரின்,

**"பேரிசை நன்னன் பெரும்பெயர் நன்னாள்**
**சேரி விழவின் ஆர்ப்பு எழுந்தாங்கு"** ***(மதுரை.618-619)***

எனும் பாடலடிகளிலும், இந்தப் பிறந்த நாள் விழாவினை 'வெள்ளணி விழா' எனப் போற்றுவது வழக்கம் என்பதனைச் சிலப்பதிகாரத்திலும் சுட்டுகின்றனர். இதனை,

**"அடித்தளை நீக்கும் வெள்ளணி தயாமெனும்" (சிலம்பு.27-229)**

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

**பங்குனி விழா**

பங்குனித் திருவிழா என்பது மாத அடிப்படையில் கொண்டாடப்படும் விழாவாகும். இதனை முருகன் விழா என்றும் குறிப்பிடுவர். இது தெய்வ விழாக்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. இதனை நற்றிணையில்,

**"பங்குனி விழாவின் உறந்தையொடு**
**உள்ளி விழவின் வஞ்சியும் சிறிதே" (நற்.234)**

பாடலடிகளில் நற்றாய், தலைவி கற்புக் கடம் பூண்டமையைக் குறிப்பாலுணரும்படி அறத்தொடு நின்ற செய்தியைக் கூறுமிடத்துக் கூறியது என்பதை அறியலாம். இப்பாடலின் மூலம் சோழனது தலைநகரில் பங்குனித் திருவிழாவும் சேரனது வஞ்சியில் 'உள்ளி விழாவும்' நடந்ததென்றும், உள்ளி விழாவைவிடப் பங்குனி விழா பெரிதாகச் சிறப்புடையதாக நடந்த தென்பதையும் அறியமுடிகின்றது. பங்குனி விழா எங்கு எப்படி நடந்தது என்பதை அகநானூற்றில்,

**"உருவெண் மணல் முருகுநாறு தண்பொழிற்**
**பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்**
**வீஇலை அமன்ற மரம்பயில் இறும்பில்**
**தீஇல் அடுப்பின் அரங்கம் போல" (அகம்.137:8–11)**

என்ற பாடலடிகளில் உறையூர் முதுகூத்தனார் விளக்குகிறார். உறையூரின்கண் ஆற்றிடையே கருதப்பட்ட இடத்தில் விழா நிகழ்ந்துள்ளது. அழகிய வெள்ளிய மணலையுடைய தேன் மணம் கமழுகின்ற குளிர்ந்த சோலையின் கண் அவ்விழாவை நிகழ்த்தினர். பங்குனித் திருநாளில் நிறைமதி நாளும், உத்திரநாளும் கூடுகின்ற நாளில் உத்திரப் பெருவிழா (பங்குனி விழா)

நிகழ்ந்தது. அவ்விழாவின் போது மக்கள் கூடி அடுப்புக்கோலித் தீமூட்டி மடைச்சோறு சமைத்துக் கொண்டாடுவர் என்பதனை இப்பாடலின் வழி அறியமுடிகின்றது.

இவ்விழா இன்று உத்திரப்பெருவிழாவாக முருகப்பெருமானுக்கு நடைபெற்று வருகின்றது. சிவபெருமான், பார்வதி தேவியை மணந்து கொள்ளும் நாளே பங்குனி உத்திரமாகும். இன்றும் பங்குனி உத்திரத்தன்று சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது.

**உள்ளி விழா**

உள்ளிவிழா பற்றிப் பழந்தமிழ் இலக்கியங்களில் அகநானூற்றில் மட்டும் ஒரு குறிப்பு உள்ளது. அவ்விழா எதற்காக நிழ்த்தப்பட்டது என்பதற்கு எவ்விதக் குறிப்பும் இல்லை. ''இது ஒரு விழா என்றும் அவ்விழாவின் கண் கொங்கு நாட்டினர் இடையில் மணியைக் கட்டிக் கொண்டு ஆரவாரம் பாடத் தெருவிலே கூத்தாடுவர் என்பதும் தெரியவருகிறது.''[51] என்பர். இவ்விழா பற்றிய காரணகாரியத் தொடர்புகளை அறியமுடியவில்லை.

***''எவன்கொல் வாழிதோழி கொங்கர்***
***மணியரையடுத்து மறுகின் ஆடும்***
***உள்ளி விழவின் அன்ன***
***அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே''   (அகம்.368:16–19)***

என மருதனிளநாகனார் குறிஞ்சித் திணைக்குரிய பாடலாகப் பாடியுள்ளார். பாடலின் போக்கில் நின்று இன்றைய நடைமுறை வாழ்வினை நோக்கும் போதும், இதற்கு ஒப்பாகத் தமிழ்நாட்டில் மழை வேண்டி நிகழ்த்தப்படும் சிறுமரபு விழாக்களில் ஆண்கள் ஒயிலாட்டம் என்ற ஆடலை நிகழ்த்துவதைக் காண்கிறோம். இவ்வாட்டத்தில் ஆண்கள் காலில் சதங்கை அணிந்து கொண்டு பாட்டுப்பாடித் தாளத்திற்கேற்றவாறு ஆடும் மறை பின்பற்றப்பட்டு வருகின்றமை மேற்கூறியவற்றோடு ஒப்புமை கூறுமளவில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. குறிஞ்சி நிலத்திற்குரியதாய் இவ்விழா அந்நிலத்தாரைப் பொறுத்தவரை மகிழ்ச்சியாகப் பெருவிழாவாக அம்மலையிடத்தே

நடைபெற்றதாக அறிகிறோம். "மலைநாட்டவர் நடத்தும் விழாவாக அறிவதால் குறிஞ்சி நிலக்கடவுளாகிய முருகப்பெருமானுக்கு உரியதாகவே இது உள்ளது"[52] என்பர்.

**பலியிடுதல்**

பலியிடுதல் பழஞ்சமுதாயத்தில் தெய்வத்தை அமைதிப்படுத்தக் கையாண்ட வழிபாட்டு முறையாகும். இது உயிர்ப்பலி, மலர்ப்பலி என இரு வகைப்படும். உயிர்ப்பலியின் வளர்ச்சியில் ஏற்பட்ட மனிதனின் மனமாற்ற நிலையினை உணர்த்தும் வகையில் அமைவதே மலர்ப்பலி எனலாம். உயிர்ப்பலி முறையே தொடக்க கால மக்கள் சமுதாயத்தினுடைய தெய்வத்தின் சீற்றம் போக்கக் கையாண்ட வழிபாட்டு முறை என்பதை மானிடவியலார் உணர்த்தியுள்ளனர்.

மறிப்பலி வெறியாட்டில் இடம்பெற்றிருந்ததனை நற்றிணையில்,

**"அணங்கறி கழங்கிற் கோட்டங் காட்டி**
**வெறியென உணர்ந்த உள்ளமொடு மறியறுத்து" (நற்.47:8-9)**

எனும் பாடலடிகளும்,

**"சிறுமறி கொன்று இவள் நறுநுதல் நீவி" (குறு.362:4)**

எனக் குறுந்தொகையும்,

**"மறிஉயிர் வழங்கா அளவை சென்றுயாம்" (அகம்.242:12)**

எனவும்,

**"மறிகொலைப் படுத்தல் வேண்டி வெறிபுரி" (அகம்.292:4)**

என அகநானூற்றுப் பாடலடிகளும் புலப்படுத்துகின்றன.

திருமுருகாற்றுப்படையில் மலையில் கிடைக்கும் தினை அரிசியால் செய்த பிரப்பரிசியை மலர்களுடன் தூவி, ஆட்டுக்குட்டியை அறுத்து அதையும் விரவி விழாக் கொண்டாடியதை,

**"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து" (முருகு.218)**

எனும் அடியின் மூலம் மலர்ப்பலியும், உயிர்ப்பலியும் இட்ட செய்தியினைக் காணமுடிகிறது.

ஐந்திணை எழுபதில் தலைவி தோழிக்குச் சொல்லியதாக மலைநாடனின் மேல் கொண்ட காதலால் பொலிவிழந்தேன். அதனைக் கண்ட தாய் இது தெய்வத்தாலானது எனக்கருதி முருகனுக்கு ஆட்டுக்குட்டியை அறுக்கத் துணிந்தாள். தோழி இதனை நிறுத்துவாயாக என்பதனை,

**"வார்குர லேனல் வளைவாய்க் கிளைகவரு**
**நீராற் றெளிதிகழ் காநாடன் கேண்மையே**
**யார்வத்தி னார முயங்குனேன் வேலனு**
**மீர வலித்தான் மறி" *(ஐந்.எழு.13)***

பாடலும், திணைமாலை நூற்றைம்பதில்,

**"வேலனார் போக மறிவிடுக்க வேரியும்**
***பாலனார்க் கீக பழியிலாள் - பாலாற்" (திணை.நூற்.12:1-2)***

எனும் பாடலடிகளும், சிலப்பதிகாரத்தில்

**"நற்பலி பீடிகை நலங்கொள வைத்தாங்**
***குயர்பலி யுண்ணு முருமுக்குரள் முழக்கத்து***
***மயிர்க்கண் முரசொடு வான்பலி யூட்டி"***
***(இந்திரவிழவூரெடுத்த காதை:86-88)***

என்றும்,

**"கண்ணுதல்**
***பாகம் ஆளுடையாள்பலி எயினர்" (வேட்டு.7)***

எனவும் சுட்டுகின்றன.

**சூள் தொடர்பான நம்பிக்கைகள்**

தெய்வத்தைச் சுட்டிக் கூறிச் 'சூள்' (சத்தியம்) செய்தல் பழந்தமிழரின் நம்பிக்கைகளில் ஒன்றாகும். மனிதனுக்கு மனிதன் உடன்படிக்கை செய்து கொள்ளும் போது, நடுநிலையாகத் தனக்கு மீறியதொரு சக்தி உண்டு என நம்புவது மனிதனின் இயல்பு. அந்த அடிப்படையில் 'சூள்' தெய்வத்தை நடுநிலையாகக் கொண்டு அதாவது தெய்வ சாட்சியாக அமைகின்றது.

இதனை ஐங்குறுநூற்றில் தலைவன் ஒருவன் தலைவியைக் கூடிய நாளில் நான் உன்னைப் பிரியமாட்டேன் எனத் தெய்வத்தினை முன் நிறுத்திச் சூளுரைத்தான் என்றதனை,

> **"துறை எவன் அணங்கும் நோயே?**
> **சிறையுழி புதுப்புணல் பாய்ந்தெனக் கலங்கிக்**
> **கழனித் தாமரை மலரும்**
> **பழன ஊர நீயுற்ற சூளே"  (ஐங்.53)**

எனும் பாடலின் வாயிலாக சூள் மீது பண்டைத் தமிழர் கொண்டுள்ள நம்பிக்கை புலனாகிறது. மேலும் தலைவன் ஒருநாள் தலைவியிடம் நான் உன்னைப் பிரிந்து செல்லமாட்டேன் எனச் சூளுரைக்கிறான். அவ்வாறு சொன்னபின் பரத்தமை மேற்கொள்கிறான். இதனை அறிந்த தலைவி தலைவன் செய்த சூளினை மீறிவிட்டானே என வருந்துகிறாள். இதனை,

> **"அம்ம வாழி தோழி! மகிழ்நன்**
> **கடன் அன்று என்னும் கொல்லோம் நம்மூர்**
> **முடமுதிர் மருதத்துப் பெருந்துறை**
> **உடனாடு ஆயமோடுற்ற சூளே"  (ஐங்.31)**

எனும் பாடல் குறிப்பிடுகின்றது.

**மடலேறுதல்**

"ஒரு ஆடவன் ஒரு பெண்ணைக் களவுடனோ அல்லது களவின்றியோ அடைய மேற்கொள்ளும் வழிமுறை மடலேறுதல்"[53] என்பர். தன் காதலின் திண்மையினைத் தலைவன் தன்னை வருத்திக் கொள்வதன் வாயிலாகப் பிறருக்கு அறிவித்து ஊராரது அனுதாபத்திற்கு ஆளாகி அவர்களின் வாயிலாகத் தனது காதலை முற்றுவிக்கக் கையாளும் உத்தியாகத் தென்படுகிறது. தொல்காப்பியர் இதனைப் பெருந்திணைக்குரிய ஒன்றாகக் குறிப்பிடுவதனை,

> **"ஏறிய மடல் திறம் இளமை தீர்திறம்**
> **தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்**

**மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்**

**செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே" (தொல்.997)**

என்பதன் மூலம் அறியலாம். மகளிர் மடலேறுதல் இல்லை என்பதனை (தொல்.981) நூற்பாவும் உணர்த்துகின்றன.

மடல் என்று சுட்டப்படும் மடன்மா ஏறுதலில் பனைமடலால் ஆக்கிய குதிரை ஏறியூர்தலே தலைவனின் காதல் வன்மையினைச் சோதிக்கும் நிலைக்களனாக அமைகின்றது.

மடலேறுதலை அக்காலச் சமுதாயம் இழிந்த செயலாகக் கருதியமையினைத் தொல்காப்பியர் பெருந்திணையின் பாற்படுத்தியுள்ளமை கொண்டறியலாம். எனவே தான் நாணுத்துரத்தலாகிய மடலேறுதலைத் தலைவனுக்குரிய ஒன்றாக,

**"எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்**

**பொற்புடை நெறிமை இன்மையான" (தொல்.981)**

என உணர்த்தியுள்ளார். பெண்கள் மடலேறுதல் இல்லை எனும் கருத்தை தொல்காப்பியரை ஒட்டித் திருவள்ளுவரும் உணர்த்துவதனை,

**"கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்**

**பெண்ணின் பெருந்தக்க தில்" (குறள்.1137)**

எனும் குறள் சுட்டுகின்றது.

உ.வே.சா. இலக்கியச் சான்றுகளின் அடிப்படையில் மடலேறுதலுக்குக் கீழ்க்கண்ட விளக்கம் தருகிறார். "காமம் மிக்க தலைவன் பனைமடலால் குதிரையைப் போல் ஓர் உருவம் அமைத்து அதன் கழுத்தில் மணி, மாலை முதலியவற்றைப் பூட்டித் தன் உருவத்தையும், தலைவியின் உருவத்தையும் ஒரு படத்தில் எழுதிக் கையிலேந்தி அதன்மேல் யாவரும் அறிய ஊர்ந்து வருதலை மடலேறுதல் என்பர். அங்ஙனம் அவன் வருவதைக் கண்ட ஊரினர் படம் முதலியவற்றால் இன்னவளுக்கும் இவனுக்கும் நட்பு உண்டு என்பதை அறிந்து வெளிப்படக் கூறிப் பழிப்பர். அது கேட்ட தமர் மணம் புரிவிப்பர். மடலேறும் தலைவன் நீறு, எருக்கமாலை, ஆவிரம்பூமாலை

முதலியவற்றை அணிந்து வருதல் வழக்கமென்று தெரிகின்றது''[54] எனச் சுட்டுகின்றார்.

மடலேறுதல் உலகியல் வழக்காக இருந்துள்ளதனைக் கலித்தொகைப் பாடல்கள் தெரிவிக்கின்றன. தலைவன் மாவூர்ந்து தமரிடமிருந்து தலைவியைப் பெற்ற நிலையினை,

> **''வருந்தமா வூர்ந்து மறுகின் கண்பாடத்**
> **திருந்திழைக் கொத்த கிளவிகேட்டாங்கே**
> **பொருந்தாதார் போல்வல் வழுதிக் கருந்திறை**
> **போலக் கொடுத்தார் தமர்'' *(கலி.141:22-25)***

என்றும், தலைவி ஞாயிற்றிடம் எப்பொருளையும் காட்டுகின்ற நீ நனவின்கண் வந்தாகிலும் தலைவனைக் காட்டாயாயின் பனையீன்ற குதிரையாகிய மடன்மாவேறி அவள் என்பால் தானே வரும்படியாகச் செய்யுமாறு காமனிடம் வேண்டிக் கொள்வேன் என்றதனை,

> **''கனவினாற் காணிய கண்படா வாயின்**
> **நனவினான் ஞாயிறே காட்டாய் நீயாயின்**
> **பனையீன்ற மாவூர்ந் தவன்வரக் காமன்**
> **கணையிரப்பேன் கால்புல்லிக் கொண்டு'' *(கலி.146:5760)***

எனும் பாடல்களின் மூலம் அறிய முடிகின்றது.

மடல் பெண்ணை எனப்படும் பனைமடலால் அமைக்கப் படுவதனை நற்றிணை

> **''நெடுமாப் பெண்ணை மடல்மா னோயே'' *(நற்.146:3)***
> **''குறுமுகில் எருக்கங் கண்ணி சூடி**
> **உண்ணா நல்மாப் பண்ணி எம்முடன்'' *(நற்.220:3)***

எனவும், குறுந்தொகையில்

> **''பன்னூல் மாலைப் பனைபடு கலிமா'' *(குறு.173:2)***
> **''விழுத்தலைப் பெண்ணை விளையல் மாமடல்'' *(குறுந்.182:1)***

எனும் பாடலடிகளும், அதன் கழுத்தில் மணி பூட்டப்பட்டிருந்ததனை நற்றிணை, குறுந்தொகையில்

**“சிறுமணி தொடர்ந்து பெருங்கச்சு நிறீஇ”     (நற்.220:1)**

**“மடன்மாவிற்கு மணி யணிதல்”     (குறு.172:3)**

எனும் பாடலடிகள் கொண்டு உணரமுடிகிறது.

மடலூறும் தலைவன் எருக்கம்பூ அணிந்திருந்ததனை,

**“குவிமுகி ழெருக்கங் கண்ணி சூடி”     (நற்.220:2)**

என்றும், ஆவிரை மலர், எருக்கங்கண்ணி அணிந்ததனைக் கலித்தொகையில்

**“அணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்**
**பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப**
**ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்தென் எவ்வநோய்”**
**(கலி.138:8-10)**

எனவும், பூளைப்பூவும் உழிஞைப் பூவும் அணிந்திருந்ததனை,

**“பூவல்ல பூளை யுழிஞையோ டியாத்த**
**புனவரை யிட்ட வயங்குதார்ப் பீலி”     (கலி.139:4-5)**

எனும் பாடலடிகளும் உணர்த்துகின்றன.

**கைம்மை**

கணவனை இழந்த பெண்டிர் ‘கைம்மை மகளிர்’ எனப்படுவர். இத்தகையோரை இன்று ‘கைம்பெண், விதவை’ என்று அழைக்கின்றனர். பண்டைத் தமிழ் இலக்கியங்களில் இவர்களின் நிலை, தொழில், தோற்றம் ஆகியவற்றின் அடிப்படையில் ஆளில் பெண்டிர், கழிகல மகளிர், படிவமகளிர், பருத்திப் பெண்டிர், உயவற்பெண்டிர் எனப் பலவாறாகச் சுட்டப் பட்டுள்ளதைக் காண்கிறோம். நற்றிணையில்

**“ஆளில் பெண்டிர் தாளிற் செய்த”     (நற்.353;2)**

**“சிறுவெள் ளாம்பல் அல்லி யுண்ணும்**
**கழிகல மகளிர் போல”     (நற்.280:13–14)**

என்றும்,

**"படிவ மகளிர் கொடிகொய் தழித்த**
**பொம்ம லடும்பின்" (நற்.272:2-3)**

எனும் பாடலடிகளும் புறநானூற்றில்

**"உயவற் பெண்டிரே மல்லேம் மாதோ" (புறம்.246:10)**

**"பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன" (புறம்.251:1)**

என்றும் குறிப்பிடப்படுகின்றன. தொல்காப்பியர் காஞ்சித்திணையில் காதலியை இழந்து நின்ற கணவனின் நிலையினைத் தபுதாரநிலை எனவும், காதலனை இழந்து நின்ற காதலியின் நிலையினைத் தாபதநிலை எனவும் சுட்டியதை,

**"காதலி இழந்து தபுதார நிலையும்**
**காதலன் இழந்த தாபத நிலையும்" (தொல்.1025:28-29)**

எனும் நூற்பா காட்டுகின்றது.

கணவனை இழந்த ஆற்றாமை தாங்காது பிரிவுத் துன்பத்தால் கணவனோடு உடன்மாய வேண்டும். அல்லது கைம்மை நோன்பு நோற்றுக் கற்புக்கடம் பூணவேண்டும் என விரும்பிய திறத்தினை இம்மகளிர் நிலை தெரிவிக்கின்றது. இக்கைம்மை மகளிரைத் தலை, இடை, கடைக் கற்பினராகக் கருதுவர். இதனை,

"தலைக்கற்பாவது நாயகன் இறந்தான் எனக் கேட்டவுடன் தானும் தன்னுயிர் துறந்துபடுதலாகும். இடைக்கற்பாவது கணவன் இறந்தது கேட்டுப் பின் உயிர் வாழ்தலாற்றாது தீப்புகுதல். இதுவே உடன்கட்டை ஏறுதல், கடைக்கற்பாவது கணவன் இறந்த பின்னர் நனிதுயரிழந்த நங்கை இனிவரும் பிறவியிலேனும் கணவனுடன் கூடி இன்புற்றிருப்பது வேண்டிக் கைம்மை விரதம் பூண்டு ஒழுகுதல்"[55] என்பதன் வழி அறியலாம்.

**தலைக் கற்பு**

இதனை உடன்மாய்தல் என்றும் கூறலாம். கணவன் உயிர் துறந்தமை அறிந்து துக்கம் தாங்காமல் உயிர் துறத்தலுக்கு எவ்வித முயற்சியும் எடுக்காமல்

மனைவி உயிர்விடலாகும். இந்நிலைத் தலைமைக் கற்பாகப் போற்றப்படுகிறது. சான்றாகச் சிலப்பதிகாரத்தில் பாண்டியன் ஆராயாது கோவலனைக் கொலைக்குட்படுத்திப் பின்னர் தவறுணர்ந்து உயிர்விட்ட நிலையில் தன்னுயிர் கொண்டு அவனுயிர் தேடியது போல் பாண்டிமாதேவி உயிர்விட்டதனை,

**"மன்னவன்மயங்கி வீழ்ந்தனனே தென்னவன்**
**கோப்பெருந்தேவி குலைந்தன ணடுங்கிக்**
**கணவனை இழந்தோர்க்கு காட்டுவது இல்லென**
**றிணையடி தொழுதுவீழ்ந் தனளே மடமொழி"**

**(சிலம்பு.20:74-81)**

எனும் பாடலடிகள் சான்றாக விளங்குகின்றன. கணவனின் பெரும்பிரிவு ஆற்றுதற்கரிது என்ற அன்பு நிலை இதற்குக்காரணம். இதுபோன்ற நிகழ்ச்சிகளை இன்றும் தமிழ்ப் பெண்டிர் சிலரின் வாழ்க்கையில் காணமுடிகின்றன.

**இடைநிலைக்கற்பு**

கணவனின் பெரும்பிரிவுக்காக வருந்திய மனைவி தன்னுயிரைத் தீப்பாய்தல், வரைப்பாய்தல் ஆகிய செயல்களின் மூலம் நிறைவேற்றுவர். இதனை உடன்கட்டை ஏறுதல், தீப்பாய்தல் என்றும் குறிப்பர். "உடன்கட்டை ஏறுதல் என்பது கணவனின் சிதையில் புகுதல், தனியே சிதை வளர்த்துப் புகுதல் என இருவகையினதாக அமையும். பெண்டிர் உடன்கட்டை ஏறி உயிர்விட்டமைக்குக் கற்பித நம்பிக்கைகள் அடிப்படை என்பர்."[56]

"உடன்கட்டை ஏறிய பெண்டிரைச் சதி எனக் குறிப்பர்"[57] என்பர். அவ்வாறு இறந்தவர்களின் நினைவாக எடுக்கப்படும் நினைவுச் சின்னமாகிய நடுகல் மகாசதிக்கல் என சுட்டப்படும் எனக் கலைக்களஞ்சியம் சுட்டும். இதனை "மகாசதிக்கல் என்பது கணவனிறந்ததும் தாமும் உயிர் நீத்த அல்லது உடன்கட்டையேறிய மகளிரின் (சதியின்) நினைவுக்குறியாக நடும் கல்"[58] என்று குறிப்பிடப்படுகின்றது.

தமிழிலக்கியத்தில் அரசமகளிரும் சாதாரணப் பெண்டிரும் உடன்கட்டை ஏறியதற்குச் சான்றுகள் காணப்படுகின்றன. பூதப்பாண்டியன் தேவி கோப்பெரும்பெண்டு தீப்பாய விழைந்ததனை

**"பல்சான்றீரே! பல்சான்றீரே**
**செல்கெனச் செல்லாது ஒழிக என விலக்கும்**
**பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே!**
**அணில்வரிக் கொடுங்காய் வாள் போழ்ந்திட்ட**
**............................................................**
**............................................................**
**வள்இதழ் அவிழ்ந்த தாமரை**
**நள்இரும் பொய்கையும் தீயும்ஓ ரற்றே" (புறம்.246)**

எனும் புறநானூற்றுப் பாடலும், மணிமேகலையில் சாதுவன் இறந்த பின் அவன் மனைவி ஆதிரை தீப்புகுந்து தீயும் சுடாத் தீவினையாகத் தன்னை நொந்து கொண்டதனை,

**"ஊரீரேயோ ஒள்அழல் ஈமமம்**
**தாரீ ரோவெனச் சாற்றினள் கழறிச்**
**சுடலைக் கானிற் றொடுகுழிப் படுத்து**
**முடலை விறகின் முனியெரி பொத்தி**
**மிக்க வென் கணவன் வினைப்பயனுய்பப்**
**புக்குழிப் புகுவே னென்றவள் புகுதலும்" (மணி.16:23-29)**

எனும் பாடலடிகளும் சான்றாக விளங்குகின்றதனை வைத்துப் பழந்தமிழரிடையே கணவனின் பிரிவுக்காகத் தாங்காது தீப்புகும் வழக்கம் இருந்துள்ளதனை அறியமுடிகின்றது.

**கடைக்கற்பு**

கடைக்கற்பினள் கணவன் இறந்ததும் உயிர்மேல் பற்றுக் கொண்டோ அல்லது சந்ததியினரைக் காக்கவோ நினைத்துக் கைம்பெண்டிர்க்குரிய சில நடைமுறைக் கட்டுப்பாடுகளைக் கைக்கொண்டு

உயிர் வாழ்கின்றனர். இதனைக் கைம்மை நோன்பு நோற்றல் என்றும் கூறுவர். அக்கைம்மை நோன்பில் தங்களை வருத்திக் கொண்டு வாழும் நிலையினதாகக் காட்டப் படுகிறது. செம்மை நோன்புடைய பெண்டிர் தங்களது அணிகலன்களைக் களைந்து வாழும் புல்லென்ற தோற்றத்தினர். அவர்கள் வளையல், தொடி, பூ ஆகியவற்றை நீக்கியிருந்தனர். இதனைப் புறநானூற்றில்,

**"ஊழி னுருப்ப எருக்கிய மகளிர்**
**வாழைப் பூவின் வளைமுறி சிதற"** ***(புறம்.237:10–11)***

என்றும்,

**"இளையோர் சூடார் வளையோர் கொய்யார்**
**..........................................................**
**வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை**
**முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே"** ***(புறம்.242:1,5-6)***
**"கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி"** ***(புறம்.250:4)***

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

கணவன் இறந்தவுடன் கைம்மை நோன்பிருக்கும் பெண்களுக்குக் கூந்தல் மழிக்கப்பட்டது. பாண்டியன் நெடுஞ்செழியன் கைம்மை கூறும் மகளிர்க்காக இரங்கிப் போர் தவிர்த்த நிலையினைக் கல்லாடனார்,

**"முலைபொலி யாக முருப்ப நூறி**
**மெய்மறந்துபட்ட வரையாப் பூசல்**
**ஒண்ணுதல் மகளிர் கைம்மைகூர**
**அவிரறல் கடுக்கும் அம்மென்**
**குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே"** ***(புறம்.25:10-14)***

என்று சுட்டிச் செல்கின்றது.

**வரைப்பாய்தல்**

"வரைப்பாய்தல் என்பது மலையினின்று வீழ்ந்து உயிர் இறத்தலாகும். இது தாங்கமுடியாத துக்கத்தால் ஏற்படும் செயலாகக் காட்சி தருகின்றது என்பர்."[59]

மடலேறியும் தலைவியைப் பெறாத நிலையில் தலைவன் வரைப்பாய்ந்து உயிர் துறத்தல் உண்டு என்பதனைக் குறுந்தொகை,

***"மாவென மடலுமூர்ப பூவெனக்***
***குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப***
***மறுகி னார்க்கவும் படுப***
***பிறிது மாகுப காமங்காழ்க் கொளினே"         (குறுந்.17)***

ஆண்குரங்கு இறந்த நிலையில் பெண் குரங்கு மலைப்பக்கத்தில் வீழ்ந்து உயிரை மாய்த்துக் கொண்ட கைம்மை நோன்பினை,

***"கைம்மை யுய்யாக் காமர் மந்தி***
***கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி***
***ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்"***
***(குறுந்.69:2-4)***

எனும் பாடலடிகளும் சுட்டுகின்றன.

கைம்மை மகளிரின் தோற்றமும் செயல்களும் சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் வாயிலாகக் காட்டப்படுகின்றன. இதனை,

***"இன்புறு தங்கணவ ரிடரெரி யகமூழ்கத்***
***துன்புறு வனநோற்றுத் துயருறு மகளிரைப் போல்***
***மன்பதை யலர்தூற்ற மன்னவன் றவரிழைப்ப***
***அன்பனை யிழந்தேன் யானவலங் கொண்டழிவலோ***
***நறைமலி வியன்மார்பி னண்பனை யிழந்தேங்கித்***
***துறைபல திறமூழ்கித் துயருறு மகளிரைப்போல்***
***.................................................................***
***.................................................................***
***.................................................................***
***கைம்மைகூர் துறைமூழ்குங் கவலைய மகளிரைப்போல்***
***செம்மையி னிகந்தகோற் றென்னவன் தவறிழைப்ப***
***இம்மையு மிசையொரீஇ யினைந்தேங்கி யழிவலோ"***
***(சிலம்பு.18:34-44)***

என இளங்கோவடிகள் சுட்டுகின்றார்.

**கைம்மை மகளிரின் உணவுமுறை**

இம்மகளிர் உண்ணும் உணவு முறையினை நற்றிணையில்,

> "அணியிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
> வெண்எள் சாந்தொரு புளிப்பெய் தட்ட
> வேளை வெந்த வல்சியாக" (புறம்.246:6-8)

எனும் பாடலடிகளில் பழஞ்சோற்றையும், வேளையாகியப் பச்சைக் கீரையினை வெள்ளை எள் துவையலுடன் புளியிட்டுக் காய்ச்சி உண்டதனையும் ஆம்பலது புல்லரிசியினை உண்டதனை

> "அல்லிப் படூஉம் புல்லா யினவே" (புறம்.248:5)

> "சிறுவெள் ஆம்பல் அல்லி உண்ணும்
> கழிகல மகளிர் போல" (புறம்.280:13-14)

என்றும், அவர்கள் படுக்கையாகப் பாய் இல்லாமல் கல் பரப்பியப் படுக்கையில் படுத்திருந்ததனை,

> "பரற்பெய் பள்ளிப் பாய்இன்று வதியும்
> உயவற் பெண்டிர்" (புறம்.246:9-10)

என்றும், கைம்மை மகளிரின் அழகிய மணல்வரி போலும் மெல்லிய கரியக் கூந்தலைக் கொய்தனர் என்பதனை,

> "ஒள்நுதல் மகளிர் கைம்மைகூர
> அவிர்அறல் கடுக்கும் அம்மென்
> கவை இருங்கூந்தல் கொய்தல் கண்டே" (புறம்.25:12-14)

என்றும்,

> "கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய "
> (புறம்.261:17)

> "மண்ணுறு மழித்தலைத் தெண்ணீர் வார" (புறம்.280:11)

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

**ஈமச்சடங்கு**

பெற்றோர் இறந்தபின் அவர்தம் "ஆத்மா" அமைதிபெறப் பிள்ளைகள் செய்யும் சடங்கு ஈமச்சடங்கு எனப்படுகிறது. ஆண் குழந்தை பெற்றவர்கள் இவ்வுலகில் புகல் பெற்று மறு உலகம் போவார்கள். ஏனெனில் ஆண் குழந்தைக்குத்தான் பெற்றோர்க்கு ஈமக்கடன் செய்து பிதிர்க்கடன் நிறைவேற்றும் தகுதி உண்டு என அகநானூற்றுப்பாடல்

**"இம்மை உலகத்து இசையொடும் விளங்கி**
**மறுமை உலகமும் மறுகின்று எய்துப**
**செறுநரும் விழையும் செயிர்நீர்க் காட்சிச்**
**சிறுவர்ப் பயந்த செம்மலோர்" *(அகம்.66)***

எனப் புலப்படுத்துகின்றது.

ஈமச்சடங்கின் போது எரித்ததனைக் கரிந்த விறகு அடுக்கப்பெற்ற சுடலையின் தீஎனப் புறநானூற்றில்,

***"கரிபுற விறகின் ஈம ஒள்ளழல்" (புறம்.231:2)***

***"ஒள்ளெரி நைப்ப உடம்பு மாய்ந்தது" (புறம்.240:10)***

***"புலையன் ஏவப் புன்மேல் அமர்ந்துண்டு***
***அழல்வாய்ப் புக்க பின்னும்" (புறம்.360:19–20)***

**"இடுதிரை மணலினும் பலரே சுடுபினக்**
**காடுபதி யாகப் போகி" *(புறம்.363:4–5)***

எனும் பாடலடிகளும் புலப்படுத்துகின்றன. புதைத்தல், எரித்தல் என இரண்டு செய்திகளையும்,

**"இடுக ஒன்றோ சுடுக ஒன்றோ**
**படுவழிப் படுகஇப் புகழ்வெய்யோன் தலையே"**
***(புறம்.239:4-5)***

எனும் பாடலடிகளும் சுட்டிச் செல்கின்றன.

**தாழியில் அடக்கம் செய்தல்**

இதனைப் பெரிய பானையில் அடக்கம் செய்தல் என்றும் சொல்வர். "பிணத்தை ஒரு பெரிய பானையிலிட்டு பூமியில் அதனைத் தலைகீழாய்ப் புதைத்து விடுதலே சட்டியில் புதைத்தல் என்பது. இப்பானை முதுமக்கள் தாழி எனப்பட்டது"[60] என்பர். இதனை நற்றிணை,

**"மாறிருந் தாழி கவிப்ப"** *(நற்.271:11)*

எனவும், புறநானூற்றில்

**"அன்னோற் கவிக்கும் கண்ணகன் தாழி"** *(புறம்.228:12)*

**"கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த"** *(புறம்.238:1)*

**"வியன்மலர் அகன்பொழில் ஈமத்தாழி**
**அகலி தாக வினைமோ"** *(புறம்.256:5–6)*

**"தாழிய பெருங்காடு எய்திய ஞான்றே"** *(புறம்.364:13)*

எனவும், பதிற்றுப்பத்தில்

**"மன்னர் மறைத்த தாழி"** *(பதிற்.44:22)*

எனும் அடிகள் தெளிவுபடுத்துகின்றன.

**வாளால் வெட்டி அடக்கம் செய்தல்**

பண்டைத் தமிழர் குழந்தைகள் பிறந்தவுடன் இறந்தாலோ அல்லது இறந்து பிறந்தாலோ அவற்றை வாளால் வெட்டிப் புதைப்பதைப் பழக்கமாகக் கொண்டிருந்தனர். குழந்தை வடிவம் பெறாமல் குறை வடிவமாக வெறும் சதைப் பிண்டமாக இருந்தாலும் இப்பழக்கத்திலிருந்து தப்புவது இல்லை. இதனை,

**"குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்**
**ஆள் அன்று என்று வாளிற் றப்பார்"** *(புறம்.74:1–2)*

எனும் புறநானூற்றுப் பாடல் உணர்த்துகின்றது.

இவ்வாறு வெட்டிப் புதைக்கும் பழக்கம் இன்னொரு பழக்கத்தை அடிப்படையாகக் கொண்டது. பிறந்தோர் யாவரும் சிறப்பாக ஆடவர்

யாவரும் நாட்டுக்காகப் போர்க்களத்தில் உயிரைவிட வேண்டும் என்று சங்ககால மக்கள் கருதினர். இவ்வாறு இறந்தால் தான், துறக்க இன்பம் வீர சுவர்க்கம் கிடைக்கும் என்று அவர்கள் நம்பினர். ஆகவே போர்க்களத்தில் இறக்கும் வாய்ப்பினைப் பெறாது குழந்தைப் பருவத்தில் இறந்தாலும் முதுமையுற்று இறந்தாலும் இறந்த பின் வாளால் வெட்டிப் புதைத்தனர்.

**முற்பிறப்பு, மறுபிறப்பு**

உயிர்கள் வினைக்கேற்பப்பிறவிகள் எடுக்கின்றன என்பது பிறவிக் கொள்கையின் அடிப்படையாகும். பிறப்பு பல என்பதும் உயிர்கள் ஆற்றும் வினைகளுக்கேற்ப மாறிப் பிறக்கின்றன என்பதும் பல்பிறப்புச் சிந்தனையாளர் களின் கொள்கை எனலாம். "முற்பிறப்பில் நல்வினை ஆற்றியோர் இப்பிறப்பில் நன்மையடைதலும், தீவினை ஆற்றியோர் துன்புறுதலும் வினைக் கொள்கையின்அடிப்படைகளாகும்"[61] என்பார் க.காந்தி.

பிறவிக் கோட்பாடு வினைக்கோட்பாட்டோடு தொடர்புடையது. பிறப்பு என்பது தம்முடைய வினையின் பயனுக்குத்தக அமையும் என்பது இன்றைய சமுதாய நம்பிக்கையாகும். சங்க காலத்தில் முற்பிறப்பு, மறுபிறப்பு போன்ற சிந்தனைகள் இருந்துள்ளதனை இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன.

இம்மை, மறுமை பற்றிய எண்ணங்கள் சமய எழுச்சிக்கு முன் தோன்றியவை என்றாலும் அவை சமய எழுச்சிக் காலத்தில் தான் சமுதாயச் செல்வாக்குப் பெற்றதெனலாம். இம்மை என்பது இந்நிலவுலக வாழ்வென்றும், மறுமை என்பது உயிர்கள் மரித்துப் பிறக்கும் மறுபிறப்பு எனவும் விளக்கப் பெறும். மறுபிறப்பிலும் மக்கள் பிறப்பையே விரும்புவதனை நற்றிணையில்

> ***"சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவின்***
> ***பிறப்புப் பிறிது ஆகுவது ஆயின்"       (நற்.397:7-8)***

எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனைக் குறுந்தொகையில் இப்பிறப்பு நீங்கப்பெற்று நமக்கு மறுபிறப்பு உண்டாயினும் என்னுடைய கணவன் நீதான் என்று தலைவி கூறியதை,

**“இம்மை மாறி மறுமை யாயினும்**

**நீயா கியரென் கணவனை”** ***(குறு.49:3–4)***

என்றும்,

**“மறுமை உலகத்து மன்னுதல் பெறுமே”** ***(குறு.199:8)***

எனவும், பரிபாடலில்

**“மறுபிறப்பு இல்எனினும் மடவோரும் சேரார்”** ***(பரி.5:76)***

என்றும் குறிப்பிட்டுள்ளனர். வைகை நதியே! கன்னித் தன்மை முதிராத கைக்கிளைக் காமத்தைத் தருகின்ற உன்னிடத்து இத்தைநீராடலை முறபிறப்பில் செய்தத் தவத்தால் இப்பிறப்பிலும் பெற்றோம். அதனை உன்நீர் நிறைவின் கண்ணே மறுபிறவியிலும் பெறுவோம் என்றதனை (பரி.11:136:140) பாடலடிகளும், முற்பிறவிகள் பலவற்றிலும் யாம் செய்தத் தவத்தால் உன்னை நினைத்து உன் திருவடிகளைக் கைகூப்பித் தொழுது வணங்கி வாழ்த்தினோம் என (பரி.13:63–64) பாடலடிகளும், கலித்தொகையில்

**“இம்மையும் மறுமையும் பகையாவது அறியாயோ”**

***(கலி.14:15)***

என்றும், இம்மையில் செய்யும் நல்வினையின் பயனை மறுமையில் அனுபவித்ததனைப் புறநானூற்றில் நப்பசலையார்,

**“ஈண்டுச்செய் நல்வினை யாண்டுச்சென் றுணீஇயர்**

**உயர்ந்தோர் உலகத்துப் பெயர்ந்தனன் ஆகலின்”**

***(புறம்.171:19–20)***

எனும் பாடலடிகளும், அகநானூற்றில்

**“இம்மை யுலகத் திசையொடும் விளங்கி**

**மறுமை உலகமும் மருவின் றெய்துப”** ***(அகம்.66:1–2)***

எனும் பாடலடிகளும் சுட்டுகின்றன.

நாலடியாரில் இந்நம்பிக்கையினை யானையின் மேல் வெண்கொற்றக் குடையின் நிழலில் அரசர்கள் சென்றாலும் மற்ற வினை

*தீவினை கொடுப்பதனால் முன்னிருந்த நிலையினின்றும் வேறுபட்டுத் தாங்கள் மணம் செய்து கொண்ட மனைவியைப் பகைவர் கொண்டு போகக் கெடுவார்கள். இதனை,*

**“யானையெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்**
**சேனைத் தலைவராய்ச் சென்றோரும் ஏனை**
**வினை உவப்ப வேறாகி வீழ்வர்தாம் கொண்ட**
**மனையாளை மாற்றார் கொள”     *(நாலடி.3)***

*என்றும் முற்பிறப்பில் செய்த தவத்தினால் மறுபிறப்பில் தவஞ்செய்யாதவர்கள் அகத்தில் உள்ளவரே நன்மையடைவர் என்பதனை,*

**“அகத்தோரே வாழ்வார் என்றண்ணாந்து நோக்கிப்**
**புகத்தாம் பெறாஅர் புறங்கடை பற்றி**
**மிகத்தாம் வருந்தி இருப்பாரே மேலைத்**
**தவத்தால் தவஞ்செய் யாதார்”     *(நாலடி.31)***

*எனவும், புத்தியுள்ளவன் தீவினைப் பயனாகிய ஆபத்து நேர்ந்தால் கடுமையாகப் பெருமூச்சு விட்டு மனத்திலே வருந்துவான். அத்தீவினைப் பயனை நினைத்து முற்பிறப்பின் பாவத்தால் நேர்ந்ததென்று அறிந்த விவேகிகள் சம்சார துக்கத்தின் எல்லையை விட்டு நீங்குவார்கள் என (நாலடி.33) பாடலும், ஒருவன் செய்த தவம் விளங்கும் இடத்துப் பாவச் செய்கைகள் நிற்காது, புண்ணிய காரியங்கள் நீங்குமிடத்துப் பாவச் செய்கை வந்து பிரவேசிக்கும் என (நாலடி.51) பாடலும்,*

**“தம்மை இகழ்ந்தமைதாம் பொறுப்பதன்றி மற்று**
**எம்மை இகழ்ந்த வினைப்பயத்தால் உம்மை**
**எரிவாய் நிரயத்து வீழ்வார் கொல் என்று**
**பரிவதூஉம் சான்றோர் கடன்”     *(நாலடி.58)***

*எனும் பாடலும் புலப்படுத்துகின்றன. முற்பிறப்பு வலிமையால் பிறர் மனையாளிடம் சென்றவர் மறுப்பிறப்பில் வருந்திக் கூத்தாடிப் பிச்சை வாங்கி உண்பர் என்று (நாலடி.85), நல்வினை அழிந்தால் செல்வமானது*

*வலிபொருந்திப் பிடித்தாலும் நிற்காது என (நாலடி.93), வந்து கூடும்படியான தீவினைகளைத் தடுத்தல் முனிவர்களுக்கு இசையாது பெரும்படியான தன்மையுடைய நல்வினைகளும் அத்தன்மையது. இதனை (நாலடி.104) எனவும், துன்பமுடைய மனத்தினர் யாவரும் பிச்சைக்காக வருந்தும் செயல்களெல்லாம் முற்பிறப்பில் செய்த தீவினையின் பயனாகி நிற்கும் என்பதை (நாலடி.107) பாடலும், நிந்தனையோடுக் கூடிய காரியங்களைச் செய்வது முற்பிறப்பில் செய்தத் தீவினையால் உண்டாகும் என (நாலடி.108) பாடலும், இறந்துபோகும் போது தம்மோடு கூட வருவது அவரவர் செய்த நல்வினை தீவினைகளே அல்லாமல் வேறு இல்லை என (நாலடி.120) பாடலும், முற்காலத்தில் நண்டை விரும்பிக் காலை ஒடித்துத் தின்றவர்கள் பிற்காலத்தில் அதற்கான கருமப் பயனை அடைவார்கள் என்பதனை,*

**“அக்கேபோல் அங்கையொழிய விரலழுகித்**
**துக்கத் தொழுநோய் எழுபவே – அக்கால்**
**அலவனைக்காதலித்துக் கால்முரித்துத் தின்ற**
**பழவினை வந்தடைந்தக் கால்” (நாலடி.123)**

*என்றும் சுட்டியுள்ளனர். தான் மூடருக்குச் செய்த உபகாரம் இம்மை மறுமை என்கிற ஈரிடத்திலும் தொடர்ந்து வருவதால் படிப்பில்லாத ஐயோக்கியர்களிடத்தினின்றும் நீங்கியிருப்பது நல்லது என (நாலடி.129), நேசித்தவர் நேசித்தவருக்குச் சாகும் வரையும் அந்த நாட்டாரோடு இன்பப்படும் அவைகளை இன்பப்பட்டு நடந்து துன்பப்படும் அவைகளைத் துன்பப்படாமல் போனால் மறுபிறப்பிலும் செய்யத்தக்க நற்காரியம் வேறொன்று இருக்கிறதோ இல்லை என (நாலடி.209), தென்தேசத்தாரும் சொர்க்கலோகம் சேர்வதனாலே தன்னால் மறுபிறப்பின் கதி உண்டாகும் என்பதனை (நாலடி.243), மறுமைப் பயனை அறியாதவர்களுடைய செல்வத்தைக் காட்டிலும் யோக்கியர்களுடைய தரித்திரமே மேலானது என (நாலடி.276), மறுபிறப்பிலும் நல்லவற்றைச் செய்வதனால் மானிகளிடத்துள்ள மதிப்பானது நல்லது என்றதனை,*

**"இம்மையும் நன்றாம் இயல்நெறியுங் கைவிடா**
**தும்மையும் நல்ல பயத்தலால் – செம்மையின்**
**நானம் கமழும் கதுப்பினாய்! நன்றேகாண்**
**மானமுடையார் மதிப்பு"** ***(நாலடி.294)***

*பாடலும், பண்பில்லாத போதும், நோய் வந்த போதும் அற்ப் புத்தியுடையார் மறுமைக்குரியதைச் செய்யும் மனத்துள்ளவரேயாகிச் செய்யக் கூடியக் காலத்தில் மறுமைக்குரியத் தருமத்தைச் சிறு கடுகளவு கூடச் செய்ய மாட்டார்கள் என (நாலடி.329) பாடலும் புலப்படுத்துகின்றன.*

*நான்மணிக்கடிமையில் இந்நம்பிக்கையினை ஒருவன் அறிவு நூல்களைக் கற்பதனால் அறியாமை குறையப் பெறுவான், இயற்கையை அறிவான், அவ்வியற்கையை அறிந்து கொண்டு அறநெறியில் செல்வான். அந்நெறியினால் இவ்வுலகின்கண் புகழ்நிறுத்தி மறுமையில் உயர்ந்த வீட்டுலகத்தில் புகுவான். இதனை,*

**"கற்பக் கழிமடம் அஃகும் மடம் அஃகப்**
**புற்கந்தீர்ந் திவ்வுலகின் கோளுணருங் கோளுணர்ந்தால்**
**தத்துவமான நெறிபடரும் அந்நெறி**
**இப்பாலுலகின் இசைநிறீஇ - உப்பால்**
**உயர்ந்த உலகம் புகும்"** ***(நான்மணி.30)***

*எனவும், ஒருவனுக்கு நல்லியல்பில்லாதவர் அயலார் யாவர்க்கும் அன்பரெனப் படுவார். மேலானத் தந்தையெனப்படுபவன் ஆசிரியன், தாயெனப்படுபவன் தான் முற்பிறப்பில் செய்த நல்வினையாகும் என (நான்மணி.45) பாடலும், ஒருவனது அறத்தின் எல்லையிற் படாத முன் செய்த வினை இப்பிறப்பில் வந்து கெடும் என்பதனை,*

**"முன்னை ஒருவன் வினைசுடும் வேந்தனையுந்**
**தன்னடைந்த சேனை சுடும்"** ***(நான்மணி.52:3-4)***

*எனும் பாடலடிகளும் காட்டுகின்றன.*

அறிவு மாட்சியை வேண்டாதவர்கள் தம்மால் வேண்டப்படாத தீவினைகளை இம்மை, மறுமையில் பெறுவார்கள் என (நான்மணி.59) பாடலும், ஒரு பிறப்பின் செய்கைகள் மறுபிறப்பின் நுகர்ச்சிக்கு ஏதுக்களாம். மெய்யுணர்வு வீடுபேற்றிற்குத் தவறாத ஏதுவாகும் என்பதனை (நான்மணி.75) பாடலும், முன்னைத் தவம் குறைந்தால் தீவினை மிகுந்து வருத்தும் என்று (நான்மணி.102) பாடலும் எடுத்தியம்புகின்றன.

திணைமாலை நூற்றைம்பதில் இப்பிறப்பின்கட் செய்தத் தீவினை இப்பிறப்பின் கண்ணே விளையும் போலும்! மறுபிறப்பின் கண் ஆம் என்பார் அறியாதவர் என்பதனை,

**“இம்மையாற் செய்ததை யிம்மையே யாம்போலும்**
**மும்மையே யாமென்பா ரோரார்கா - ணம்மை”**
**(திணை.நூற்.123:1-2)**

எனும் படலடிகள் புலப்படுத்துகின்றன. பழமொழியில்

**“படரும் பிறப்பிற்கொன் றீயார் பொருளைத்**
**தொடருந்தம் பற்றினால் வைத்திருப்பாரே”**
**(பழமொழி.220:1-2)**

எனும் பாடலடிகளும், துன்பமே தனக்குத் துணையாகத் தான் நினைத்தப் பொருளை ஒருவன் முடிக்கும் முயற்சியானது முற்பிறப்பில் செய்த தீவினை வந்து இடையூறு செய்தால் தான் வலிந்து என்செயவல்லது என (பழமொழி.228) பாடலும், முற்பிறப்பில் மிக்க புண்ணியத்தை இடையறாமல் செய்யாதவர் மறுபிறப்பில் மிக்க செல்வத்தைப் பெறுதல் கூடுமோ என்பதனை,

**“முற்பெரிய நல்வினை முட்டின்றிச் செய்யாதார்**
**பிற்பெரிய செல்வம் பெறலாமோ?” (பழமொழி.233:1-2)**

பாடலடிகளும் விளக்குகின்றன. தனக்கு ஏவல் செய்பவன் தீவினை வந்த காலத்தில் தன்னைச் சுடுவதன்றித் தன் ஊரையும் சுடுவான் என (பழமொழி.239), மறுமையிலும் இன்புறும்படி அறத்தைச் செய்வான் என

(பழமொழி.360), தம்மை வீட்டின் கண்ணே செலுத்தத்தக்கத் தகுதியை உடையார் இப்பிறப்பின் கண்ணே தாம் செய்யும் தவநெறியும் அறநெறியும் ஆகியவற்றைப் பொய்பட ஒழுகுதலானது இம்மையின் கண் விளையும் பழியையாக்குதலே அன்றி மறுமைக் கண்ணும் தாம் தம்மைப் பிறப்பின் கண்ணே பந்திக்கும் கயிற்றை ஆக்குதலுமாம் என்று (பழமொழி.372) பாடலும், ஒருவனுக்குச் சிறிய பொருளைக் கொடுத்துச் சம்பாதித்த நல்வினையாலேயே மறுமையில் பெறலான பெரும் பேற்றைக் கருதுவோரே விரும்பப்படும் என்பதை (பழமொழி.373) பாடலும், இம்மைக்கும் மறுமைக்கும் உறுதியாகத் தம் மனத்தைத் தம் வயத்ததாகித் தம்மை உணர்தலே தலையாயக் காரியம் என (பழமொழி.397) பாடலும் சுட்டுகின்றன.

திருக்குறளில் இந்நம்பிக்கையினைச் சிறு தன்மை இல்லாத இனிய சொல் எப்பிறப்பிலும் இன்பம் தரும். இதனை,

**“சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்**
**இம்மையும் இன்பம் தரும்” (குறள்.98)**

எனவும், நன்மனத்தால் மறுமையின்பம் கிடைக்கும் என குறள் (459), மனைவிக்கு அஞ்சுபவன் மறுமை இழந்தவன். அவன் காரியத்திறம் சிறப்படையாது என்று (குறள்.904), வறுமை என்ற பேர் பெற்ற பாவி எப்பிறப்பிலும் தொடர்ந்து வரும் என்பதனை,

**“இன்மை எனஒரு பாவி மறுமையும்**
**இம்மையும் இன்றி வரும்” (குறள்.1042)**

என்றும், இப்பிறப்பில் பிரியமாட்டோம் என்றதும் மறுபிறப்பில் பிரிவுண்டோ என்று அழுததனை,

**“இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்**
**கண்நிறை நீர் கொண்டனள்” (குறள்.1315)**

எனவும் குறள்கள் புலப்படுத்துகின்றன.

சிலப்பதிகாரத்தில் ஆற்றும் வினைகளுக்கேற்ப உயிர்கள் பிறவி எடுக்கின்றன என்பதனை,

***“இறந்த பிறப்பின் னெய்திய வெல்லாம்***
***பிறந்த பிறப்பிற் காணாயோநீ”      (சிலம்பு.11:156-157)***

எனவும், இப்பிறப்புக்கு முன் பழைய பிறப்பு ஒன்று உண்டு என்பதில் சிலப்பதிகாரக் கால மக்கள் நம்பிக்கை வைத்திருந்ததனை ஒன்பது இடங்களில் பதிவு செய்துள்ளதன் வாயிலாகவும் அறியமுடிகின்றது.

***“ஒரு நோன்பு***
***பொய்த்தாய் பழம்பிறப்பில் போய்க்கெடுக உய்த்துக்***
***கடலொடு காவிரி சென்று அழைக்கும்***
***......................................................***
***......................................................***
***தாம் இன்புறுவர் உலகத்துத் தையலார்***
***போகம் செய் பூமியினும் போய்பிறப்பர்”***
***(கனாத்திறம்.55-60)***

எனவும்,

***“புண்ணிய சரவணம் பொருந்துவீர் ஆயினும்***
***விண்ணவர் கோமான் விழுநூல் எய்துவீர்***
***பவகாரணி படிந்து ஆடுவீர் ஆயின்***
***பவகா ரணத்தில் பழம்பிறப்பு எய்துவர்” (காடுகாண்.98-101)***
***“இம்மை செய்தன யானறி நல்வினை”      (அடைக்கல.91)***
***“இம்மையும் இசைபூரிஇ இணைந்து ஏங்கி அழிவலோ” (துன்ப.45)***
***“முந்தைப் பிறப்பில் பைந்தொடி கணவன்***
***வெந்திறல் வேந்தர்க்குக் கோத்தொழில் செய்வோன்”***
***(கட்டு.151–152)***
***“விண்ணோர்உருவின் எய்திய நல்லுயிர்***
***மண்ணோர் உருவின் மறிக்கினும் மறிக்கும்” (நடுகல்.159-160)***
***“பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும்***
***புதுவதன்றே தோன்றியல் வாழ்க்கை”      (வரந்.139–140)***

**“ஏழ்பிறப்பு அடியோம் வாழ்க”     (காட்சி.56)**

என்பனவும் சிலம்பில் வரும் பிறப்புப் பற்றிய நம்பிக்கைகளாகும்.

மரணத்திற்குப் பின்னும் வாழ்க்கை உண்டு. இந்த வாழ்க்கை அவரவர் இவ்வுலகில் செய்த நல்லறங்களுக்குத் தகுந்தபடி அமைவதாகக் கருதுகின்றனர். கண்ணகியின் தாதையும், கோவலன் தாதையும் அரட்டன் செட்டியின் மக்களாகப் பிறந்ததும் மாதரி சேடகக் குடும்பியின் மகளாகப் பிறந்ததும் இதைத்தான் உணர்த்துகின்றன.

“ஒருவன் இவ்வுலகில் செய்த செயல்களுக்குத் தகுந்தபடி மீண்டும் நல்லவனாகவோ கெட்டவனாகவோ பிறக்கிறான் என்று உபநிடத கால மக்கள் கொண்டிருந்த நம்பிக்கை என்று பொ.அழகுகிருஷ்ணன் குறிப்பிடுகிறார்.”[62]

தானம் செய்வதால் ஒரு குரங்குகூட விண்ணோர் வடிவத்தைப் பெறலாம் என்பதை அடைக்கலக்காதை (175–180) பாடலடிகள் உணர்த்துகின்றன.

“அறம் செய்யாதவர்கள் மேனிலை உலகிற்குச் செல்ல முடியாது. அவர்கள் இவ்வுலகில் மீண்டும் பிறக்கிறார்கள் என்பதில் அக்கால மக்கள் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தனர். இதில் இளங்கோவடிகள் சதபதபிராமணர் என்ற நூலின் கருத்துக்களுடன் ஒத்துச் செல்வதாக பொ.அழகுகிருஷ்ணன் சுட்டுவார்.”[63] என்கின்றனர்.

முந்தைப் பிறப்பில் ஒருவன் செய்த தீவினைப் பயன் அவனை அடுத்த பிறப்பிலும் வந்து அல்லல் படுத்தும் என நம்பியதனைச் சிலம்பில் கண்ணகி கணவனை விட்டுப் பிரிந்திருப்பதற்குக் காரணம் அவள் பழம்பிறப்பில் கணவனுக்காகச் செய்ய வேண்டிய நோன்பு ஒன்றிலிருந்து தவறியதே என்கிறாள் வைதீகச் சமயத்தைச் சார்ந்த தேவந்தி. இதனைக் காடுகாண் காதையில் (156–157) பாடலடிகள் சுட்டுகின்றன.

மணிமேகலையில்,

**“பொற்கொடி யன்னாய் பொருந்திக் கேளாய்**
**போய பிறவியிற் பூமியங் கிழவன்**

***இராகுலன் மனையா னிலக்குமி யென்பேர்***
***ஆய பிறவியி லாடலங் கணிகை***
***மாதவி யீன்ற மணிமேகலை யான்"     (மணி.11:10-14)***

என்றும்,

***"பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்***
***உறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையின்"***
***(மணி.16:86–87)***

எனும் பாடலடிகள் மறுபிறப்புச் சிந்தனைகளை எடுத்தியம்புகின்றன. இப்பிறப்பு பற்றியச் செய்தியினை,

***"நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉம்***
***மனக்கினி யார்க்குநீ மகளாய தூஉம்***
***பண்டும் பண்டும் பல்பிறப் புளவால்***
***கண்ட பிறவியே யல்ல காரிகை"     (மணி.21:29–32)***

எனும் பாடலடிகளும் சுட்டுகின்றன. முற்பிறப்பு, மறுபிறப்புப் பற்றி அறிந்ததனைச் சங்க நூல்களின் வழி அறியமுடிகின்றது.

**ஊழ்வினை**

வினை, தலைவிதி, விதி என்று சுட்டப்படுவதையே பண்டைத் தமிழர், பால், முறை, ஊழ், விதி எனக் குறிப்பிட்டுள்ளனர். இவற்றுள் சங்க இலக்கியத்துள் 'பால்' என்ற சொல்லையே ஊழ்வினையைக் குறிக்க அதிகமாகப் பயன்படுத்தியுள்ளதனை உணரமுடிகிறது.

"ஊழ்வினை என்பது முற்பிறப்பில் செய்த நல்வினை தீவினைகளாகும். ஊழ்வினையை மேலைநாட்டார் 'விதி' (Fate) என்று கருதுகின்றனர்"[64] என இரா.கோதண்டபாணி சுட்டுகிறார்.

ஊழ்வினை உண்டென்ற உண்மையைத் தொல்காப்பியம் ஒருவனும், ஒருத்தியும் இல்லறஞ் செய்துழி அவ்விருவரையும் மறுபிறப்பினும் ஒன்றுவித்தலும் வேறாக்குதலுமாகிய இருவகை ஊழினும் என்று இளம்பூரணர் உரை வரைகிறார். இதனை

**"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
**ஒன்றி உயர்ந்த பாலது ஆனையின்**
**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**
**மிக்கோர் ஆயினும் கடிவரை யின்றே"    (தொல்.பொருள்.90)**

என்றுரைக்கின்றது. முற்பிறப்பில் ஒருவர் செய்த நல்வினை, தீவினைகளுக் கேற்ப இப்பிறப்பில் அவருடைய இன்ப துன்பங்கள் நிச்சயிக்கப்படுகின்றன என்பதனை நற்றிணையில்,

**"யாம் செய்தொல் வினைக் கெவன்பே துற்றனை**
**வருந்தல் வாழி தோழி யாம் சென்று"    (நற்.88:1-2)**

எனும் பாடலடிகளும், இளமையில் பூசல் கொண்டிருந்தச் சிறுவரை உடனுறை வாழ்க்கைக்குக் கூட்டியதும் ஊழ்வினையின் செயலாகச் சித்தரிக்கப்படுவதைக் குறுந்தொகையில்,

**"இவனிவல் ஐம்பால் பற்றவும் இவளிவன்**
**புன்றலை யோரி வாங்குநள் பரியவும்**
**காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிராது**
**ஏதில் சிறுசெரு வுருப மன்னோ**
**நல்லைமன் றம்ம பாலே மெல்லியற்**
**துணைமலர்ப் பிணையல் அன்னவிவர்**
**மணமகி ழியற்கை காட்டி யோயே"    (குறு.229)**

எனும் பாடலடிகளில் காணமுடிகிறது. ஐங்குறுநூற்றில் ஊழ் என்றதனை 'பால்' எனும் சொல்லில் குறிப்பிட்டதனை,

**"பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை**
**என்னை யென்றும் யாமே யிவ்வூர்**
**பிறிதொன்றாகக் கூறும்**
**ஆங்கு மாக்குமோ வாழிய பாலே"    (ஐங்.110:2-5)**

எனும் பாடலடிகளும், புறநானூற்றில் ஊழ் என்பதனை 'முறை' எனும் சொல்லில் குறிப்பதனை,

**"நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்**
**முறைவழிப் படூஉ மென்பது திறவோர்" *(புறம்.192:9-10)***

என்றும், நட்புக்காக உயிர்துறக்க முயலும் நிலையில் மறுமையில் நண்பனொடு உடனுறைய விழைதற்கு ஊழினை வேண்டியத் திறத்தினை

**"இம்மை போலக் காட்டி யும்மை**
**இடையில் காட்சி நின்னொடு**
**உடனுறை வாக்குக உயந்த பாலே" *(புறம்.236:10-12)***

எனும் பாடலடிகளும் சுட்டுகின்றன.

பழமொழி நானூறில் இந்நம்பிக்கையினை விளக்கும் முகமாக 'ஊழ்' எனும் தலைப்பாகவே அமைந்துள்ளது. ஊழினைத் தெய்வம் என்று குறிப்பதனை,

**"எவ்வந் துணையாய்ப் பொருள்முடிக்கும் தாளாண்மை**
**தெய்வம்முடிப்புழி என்செய்யும்" *(பழமொழி.228:1-2)***

என்றும்,

**"பொறியின் வகைய கருமம்அதனால்**
**அறிவினை ஊழே அடும்" *(பழமொழி.229:3-4)***

எனவும், ஊழுக்குக் காரணம் முற்பிறப்பில் செய்த நல்வினை, தீவினை அமைந்ததனை முறையே,

**"முற்பெரிய நல்வினை முட்டின்றிச் செய்யாதார்**
**பிற்பெரிய செல்வம் பெறலாமோ" *(பழமொழி.233:1-2)***

என்றும்,

**"பண்டுருத்துச் செய்த பழவினை வந்தெம்மை**
**இன்றொறுக் கின்ற தெனவறியார்" *(பழமொழி.239:1-2)***

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

திருக்குறளில் பொருள் வருங்கால் ஊக்கம் பிறக்கும், அப்பொருள் ஊழின் வழியால் போகுங்கால் சோம்பல் வந்துவிடும் என்பதனை,

**“ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்**
**போகூழால் தோன்றும் மடி” *(குறள்.371)***

*என்றும்,*

**“பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்**
**ஆகல்ஊழ் உற்றக் கடை” *(குறள்.372)***

*எனவும், ஊழைக் காட்டிலும் வலியது உண்டோ? எது தொடர்ந்தாலும் அது வென்றுவிடும். இதனை,*

**“ஊழிற் பெருவலி யாவுள? மற்றொன்று**
**சூழினும் தான் முந்துறும்” *(குறள்.380)***

*என்றும், சோர்வின்றிக் காளம் தாழ்த்தாது உழைப்பவர் மாறான விதியும் ஓடக் காண்பர் என்பதனை,*

**“ஊழையும் உப்பக்கம் காண்பார் உலைவின்றித்**
**தாழாது உஞற்று பவர்” *(குறள்.620)***

*எனும் குறளும் புலப்படுத்துகின்றன.*

*சிலப்பதிகாரத்தில்*

**“ஊழ்வினை கடைஇ உள்ளம் துரப்ப” *(நாடு.4)***

**“காவலன் செங்கோல் வலைஇய வீழ்ந்தனன்**
**கோவலன் பண்டை ஊழ்வினை உருத்து”**

***(கொலை.216-217)***

*என பாண்டியனின் செங்கோல் வளைவதற்குக் காரணம் ஊழ்வினை என்றும்,*

**“வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்ப” *(வழக்.58)***

*எனவும்,*

**“ஊடற் காலத்து ஊழ்வினை உருத்தெழ” *(நீர்.58)***

*என்றும் காட்டியுள்ளனர். மதுரை மாநகரம் எரிவதற்கும் ஊழ்வினையே காரணம் என்பதை,*

***"மதுரைமா தெய்வ மாபத்தினிக்கு***
***விதிமுறை சொல்லி யழல்வீடு கொண்டபின்"***
***(சிலம்பு.23:177-178)***

*எனவும், பாண்டிய மன்னன் கோவலனைக் கொல்லும்படிக் கூறியதற்கும் ஊழ்வினைக் காரணமானதனை,*

***"வினை விளை காலம் ஆதலின் யாவதும்***
***சினையிலர் வேம்பன் தேரானாகி" (கொலைக்.149–150)***

*எனும் பாடலடிகளும் உணர்த்துகின்றன.*

*மணிமேகலையில் சார்ங்கலெனென்னும் ஒருவன் இடுகாட்டில் பேயொன்றினால் தாக்கப்பட்டு இறந்தான். இதனைச் சம்பாபதி தெய்வத்திடம் கேட்க அதற்குக் காரணம் ஊழ்வினை என்று கூறியுள்ளதனை,*

***"அணங்கும் பேயு மாருயி ருண்ணா***
***பிணங்கு நூன் மார்பன் பேதுகந்தாக***
***ஊழ்வினை வந்திவ னுயிருண்டு கழிந்தது" (மணி.6:150-152)***

*எனவும், காஞ்சனனுக்குக் கந்திற் பாவை உதயகுமாரனின் இறப்பு பற்றியும், ஊழ்வினை உன்னையும் தொடர்ந்து வருத்தும் என்பதனை,*

***"ஊழ்வினை வந்திங் குதயகுமாரனை***
***ஆருயி ருண்ட தாயினும் அறியாய்***
***வெவ்வினை செய்தாய் விஞ்சைக்காஞ்சன"***
***(மணி.20:123–125)***

*எனும் பாடலடிகளும் உணர்த்துகின்றன. இதன் மூலம் வினைகள் ஊழ்வினைக்குக் காரணமாய் அமைந்தமையும், நல்வினை, தீவினைகள் பிற்பிறப்பிற்கு இன்ப துன்பங்களை நிச்சயிக்கும் காரணங்களாக அமைவதனையும் உணரமுடிகின்றது.*

**சாபம் பற்றிய நம்பிக்கை**

*சாபம் வாய்மையின் மிக்க தவத்தோர்க்கும் கடவுளர்க்கும் கைகூடும் ஒன்றாகக் காட்டப்படுகிறது. "தவத்தோர் தான் கொண்டக் கொள்கைக்கு*

இடையூறுவரின் சபித்தலில் ஈடுபடுவர் சாபம் பெற்றோர் சாபத்தின் பலனை அனுபவித்தே தீருவர் என்பது அந்நாளைய நம்பிக்கை என்று க.காந்தி கூறுவார்.''[65]

திருக்குறளில் சாபம் பற்றிக் கௌதம முனிவரிடம் சாபம் பெற்ற இந்திரனைக் குறிப்பிடுவதனை

**"ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்**
**இந்திரனே சாலும் கரி"** ***(குறள்.25)***

எனவும், சான்றோரின் சினத்தைச் சிறுபொழுதும் யாரேனும் தாங்க முடியாது என்பதனை,

**"குணம்என்னும் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயும் காத்தல் அரிது"** ***(குறள்.29)***

என்றும், எல்லாத் தகுதியும் நிறைந்தவர் சினந்தால் ஏற்றமான வாழ்வும் செல்வமும் என்னாகும் என (குறள்.897), மேலான கொள்கையுடையவர் சினந்தால் வேந்தனும் அரசு இழப்பான் என்று (குறள்.899), சிறப்புமிக்கப் பெரியோர்கள் சினந்தால் ஆற்றல் மிக்கவர் துணையிருப்பினும் மீளமுடியாது. இதனை,

**"இறந்தமைந்த சார்புடையார் ஆயினும் உய்யார்**
**சிறந்தமைந்த சீரார் செறின்"** ***(குறள்.900)***

எனும் குறளும் பதிவு செய்துள்ளன.

சிலப்பதிகாரத்தில் இந்நம்பிக்கையினை அகத்திய முனிவர், சயந்தன்–ஊர்வசி என்பவர்களுக்குச் சாபமிட்டதனை,

**"தெய்வ மால்வரைத் திருமுனி அருள**
**எய்திய சாபத்து இந்திர சிறுவனொடு**
**தலைக்கோல் தானத்துச் சாபம் நீங்கிய"** ***(அரங்.1-5)***

என்றும், கோவலனையும் கண்ணகியையும் இகழ்ந்து பேசியதால் கவுந்தியடிகள் சினந்துச் சாபமிட்டதனை

**"எள்ளுநர் போலும்இவர் என்பூங் கோதையை**
**முள்ளுடைக் காட்டின் முதுநரிஆக எனக்**
**கவுந்தி இட்டது தவந்தது சாபம்"** ***(நாடுகாண்.232-234)***

எனவும், சிங்கபுர மன்னர்பால் குற்றேவல் செய்து வந்த பரதன் மீது சங்கமன் மனைவி நீலி சாபமிட்டதனையும் அறியமுடிகின்றது. கவுந்தியடிகள் காமுகர்களை நோக்கிப் பன்னிரெண்டு திங்கள் கழித்து முன்னை உருவம் பெருவீர்கள் என சாபவிமோச்சனம் இட்டதனை,

**"எம்முறு துயரம் செய்தோர் யாவதும்**
**தம்முறு துயரம் இற்றாகுக என்றே**
**விழுவோன் இட்ட வழுவில் சாபம்**
**பட்டனிர் ஆதலின்"** ***(கட்டுரை.167-170)***

என்று எடுத்துரைக்கின்றது.

மணிமேகலையில் இந்நம்பிக்கையினை

**"முந்நா லாண்டின் முதிர்கனி நானீங்**
**குண்ணு நாளுன் னுறுபசி களைகென**
**அந்நா ளங்கவ னிட்ட சாபம்"** ***(மணி.17:45-47)***

எனவும்,

**"வானவன் விழாக்கோன் மாநக ரொழிந்தது**
**மணிமேகலா தெய்வ மற்றது பெறாஅள்**
**அணிநகர் தன்னை யலைகடல் கொள்கென**
**விட்டனள் சாபம் பட்டதிதுவாற்"** ***(மணி.25:197-200)***

எனவும், இந்திர விழாவினை மன்னன் கொண்டாடாமல் விட்டால் கடல் அம்மன்னனது நாட்டை அழிக்கும் என இந்திரன் ஏவிய சாபத்தினைக் குறிக்கின்றது. மணிமேகலையைச் சாப சரத்தி என்றதனை

**"ஊழ்தரு தவத்தள் சாப சரத்தி"** ***(மணி.5:16)***

என்றும், இந்திரன் அகலிகையை வெளவியதால் எய்தியச் சாபத்தினை

**“மாதவன் மடந்தைக்கு வருந்துய ரெய்தி**

**ஆயிரஞ் செங்க ணமரர்கோன் பெற்றது” (மணி.18:90-91)**

எனும் பாடலடிகளும் சுட்டுகின்றன. இவ்வகையான சாபத்தினைப் பற்றி எலியட் என்பவர் “சாபம் மனிதனின் ஆரம்ப காலத்திலிருந்து இன்றுவரை நாகரிகத்தின் ஒவ்வொரு நிலையிலும் மக்களிடையே சாதாரணமாக வழங்கி வந்த வடிவம். சாபத்தால் ஒரு மனிதன் மற்றொரு மனிதனை தன்வயப் படுத்துகிறான் என்கிறார்.”[66]

“அயர்லாந்து நாட்டில் மிகுந்த சக்திவாய்ந்த சாபம் இட்டவர்கள் ஞானிகளாகவே இருக்கின்றனர் என்று சாமி.சிதம்பரனார் குறிப்பிடுகின்றார்.”[67]

இதன் மூலம் சாபம் உலகியல் நியதிகளை வாய்மையின் வழி போற்றிப் பாதுகாக்கும் ஒருவகை ஆற்றல் என்று உணரமுடிகின்றது.

**அசரீரி**

உடலற்றது எனப்பொருள்படும். அசரீரி என்ற ஒலியினை வடசொல்லில் விண்ணிலிருந்து தோன்றும் எனக் குறித்துள்ளனர். இது கேட்பவரின் கண்ணுக்குக் காட்சியளிக்காமல் விண்ணிலிருந்து தோன்றும் ஒலியாகும். இதனை இன்று அசரீரி என்றழைக்கின்றனர். “அசரீரி வாக்கு என்பது வானவெளியில் நாம் நினைப்பதற்கோ, அல்லது கேட்பதற்கோ விடையாகக் கிடைக்கும் ஒலியாகும் எனச் சுட்டுகிறார் க.காந்தி.”[68]

அசரீரியையும் விரிச்சியையும் ஒன்றாகக் கருதுவதனை “இது ஒரு வகை நிமித்தம். நற்சொல் என்பது இதன் பொருள். ஏதேனும் ஒரு செயலைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில் அருகிலிருந்தவர்கள் தமக்குள் பேசும் ஒரு வார்த்தை தம் யோசிப்பதற்கு அனுகூலமாகவோ, பிரதிகூலமாகவோ அமைந்தால் அசரீரி வாக்கு என்கிறோம். அதுவே விரிச்சி எனப்படும்”[69] என கலைமகள் தொகுதி குறிப்பிடுகின்றது.

“யாரேனும் இருவர் ஒரு செயலைப் பற்றி பேசிக்கொண்டிருக்கும் போது ‘இக்காரியம் நன்முறையில் நடக்கும்’ என்று வீதி வழியே போகின்ற ஒருவரின் வார்த்தை காதில் கேட்டால் அதை விரிச்சி கேட்டல் என்பார்கள். அசரீரி வாக்கு என்று நாம் சாதாரணமாகக் குறிப்பிடுகிறோம் என்று ஆதி.பாலசுந்தரன் குறிப்பிடுகிறார்.”[70]

சங்க இலக்கியத்தில் அசரீரி பற்றியக் குறிப்புக் காணக் கிடைக்க வில்லை. பின்னுள்ள இலக்கியங்களான சிலம்பிலும் மணிமேகலையிலும் அசரீரி பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது. சிலம்பில் இதனை ஓர் குரல் என்றதனை,

**“தந்தேன் வரமென் றெழுந்த தொருகுரல்” (வரந்.164)**

எனவும், மதுரை மாநகர் மக்களிடம் தன் கணவன் கள்வனோ என்று கேட்டு நின்ற நேரத்தில் விடையாக விண்ணில் ஒள்ளெரி யுண்ணும் இவ்வூரென ஒரு குரல் தோன்றியதனை,

**“கள்வனோ அல்லன் கருங்கயற்கண் மாதராய்**
**ஒள்ளெரி உண்ணும் இவ்வூர் என்றது ஒருகுரல்”**
**(துன்ப.52-53)**

என்றும் சுட்டப்படுகின்றது.

மணிமேகலையில் இதனைத் தன் கணவன் இறந்தச் செய்தி கேட்ட ஆதிரை இறக்கத் துணிந்தாள். அப்பொழுது ஒரு குரல் ஆதிரை உன் கணவன் இறக்கவில்லை, அவன் பிழைத்துச் சென்று நாகர்மலையிலிருக்கின்றான் விரைவில் வருவான் என்றதனை,

**“ஆதிரை கேளுன் னரும் பெறற்கணவனை**
**ஊர்திரை கொண்டாங் குய்ப்பப் போகி**
**.........................................................**
**.........................................................**
**நின் பெருந்துன்ப மொழிவாய் நீயென**
**அந்தரந் தோன்றி யசரீரி யறைதலும்” (மணி.16:37-44)**

என்னும் பாடலடிகளும், காஞ்சனனுக்குக் கந்திற்பாவை இது உன் மனைவி இல்லை. இவ்வடிவம் மணிமேகலை கொண்ட வேற்று வடிவம் என்றும் காயசண்டிகைக்கு நேர்ந்த துன்பத்தைக் கேள் எனவும் ஒரு குரல் கூறியதனை,

**"நெடுநிலைக் கந்தி னிடவயின் விளங்கக்**

**கடவு ளெழுதிய பாவையாங் குரைக்கும்"**

***(மணி.20:110-111)***

எனும் பாடலடிகள் சுட்டிச் செல்கின்றன.

**கூற்றுவன் பற்றிய நம்பிக்கை**

கூற்றுவன் என்பது உடலிருந்து உயிரைப் பிரிப்பவன் எனப் பொருள்படும். "கூற்றுவன் எனும் சொல் இலக்கியத்தில் இறப்புக்குக் காரணமான கடவுளைக் குறிப்பதற்காகக் கையாண்ட சொல்லாகத் தென்படுவதாக க.காந்தி குறிப்பிடுவார்."[71]

தமிழில் கூற்றம், கூற்று, யமன், மறலி, காலன், மடங்கல் என பல பொருளில் அழைக்கப்பட்டதனைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. தொல்காப்பியத்தில் இதனை மாற்றுதற்கரிய கூற்றம் எனக்காட்டிப் பிறந்த உயிர் அழிவது திண்ணம் எனச் சுட்டியதை,

***"மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும்"***

***(தொல்.பொருள்.77-1)***

எனும் நூற்பா விளக்குகின்றது. குறுந்தொகையில் கூற்றம் எனக் குறிப்பிட்டுள்ளதனை,

**"ஊதையங் குளிரொடு பேதுற்று மயங்கிய**

**கூதி ருருவிற் கூற்றம்"** ***(குறுந்.197:3-4)***

பாடலடிகளும், பரிபாடலில் யமன் எனக் குறித்ததனை,

**"திருந்துகோல் ஞமன்றன மெய்யிற் பிரிவித்து"** ***(பரி.5:61)***

எனவும்,

**"தடவுநிமிர் முத்தீப் பேணியமன் னெச்சில்"** ***(பரி.5:41)***

பாடலடிகளும்,

**"இல்லத் துணைக்குப்பா லெய்த இறையமன்"** ***(பரி.11:8)***

*பாடலடிகளும் சுட்டுகின்றன. கலித்தொகையில் காலன் மடங்கல் எனக் கூறுவதனை,*

**"மடங்கலுங் கணிச்சியுங் காலனுங் கூற்று**
**தொடர்ந்து செல் அமையத்துத் துவன்றுயிர் உணீஇய"**
***(கலி.105:20-21)***

*பாடலடிகளும், காலன் எனும் சொல்லைப் புறநானூற்றிலும் கையாண்டுள்ளதனை,*

**"காலனும் காலம் பார்க்கும் பாராது"** ***(புறம்.41:1)***

*எனவும், மறலி, கூற்று, மடங்கல் என்று சுட்டுவதனை,*

**"மறலி யன்ன களிற்றுமிசை யோனே"** ***(புறம்.13:1)***

*என்றும்,*

**"கூற்று வெகுண் டன்ன முன்பொடு"** ***(புறம்.42:22)***
**"மடங்கலுண்மை மாயமோ வன்றே"** ***(புறம்.363:9)***

*எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.*

*பழமொழி நானூற்றில் இந்நம்பிக்கையினைக் கையில் கிடைத்த பொருளைப் பிற்காலத்தில் உதவும் எனச் சேமித்து வைக்காமல் பிறருக்குக் கொடுத்து உதவினால் எமன் கயிற்றாற் கட்டிப் போகின்ற பாலை நில வழியினின்றும் தப்பிப் போவார்கள். இதனை,*

**"என்னானும் ஒன்றுதம் கையுறப் பெற்றக்கால்**
**பின்னாவ தென்று பிடித்திரா – முன்னே**
**கொடுத்தார் உயப்போவர் கோடில்தீக் கூற்றம்**
**தொடுத்தாறு செல்லும் சுரம்"** ***(நாலடி.5)***

*என்றும், எமனை விட்டுப் பிழைத்துத் தப்பியோடியவர்கள் இவ்வுலகில் இல்லை என*

**"கூற்றம் குதித்துய்ந்தார் ஈங்கில்லை"** ***(நாலடி.6:2)***
**"கூற்றம் அளந்து நும் நாளுண்ணும்"** ***(நாலடி.7:2)***

எனவும், ஆயுள் முடிந்த ஆளைத் தேடிக் கொண்டு திரிகிற எமன் என (நாலடி.20) பாடலும், தருமத்தைச் செய்து அதன் பயனைப் பெற்றவர் எமன் வரும்போதுத் துன்பப்படுவது இல்லை என (நாலடி.35), இன்றோ, அன்றோ, என்றோ என எண்ணாமல் எமன் பின்புறத்திலேயே நிற்கின்றது என நினைத்துத் தீமையை விடுங்கள் என்று (நாலடி.36), படிந்து நடக்காதவர்கள் அறிவென்னப்பட்ட அந்தச் சாரத்தை உள்ளத்தில் உடையராய் இல்லாமையால் அவரை யமன் திப்பியென்று நினைத்துக் கொள்ளமாட்டான் என்றதனை (நாலடி.106), யமன் கொண்டு போகும் போது தாம் பாதுகாத்த ஆடையாபரணங்களால் அலங்கரித்த சரீரத்தினால் ஒரு பயனும் இல்லை என (நாலடி.120), எப்போதும் தருமத்தின் வழிகளை அறியுங்கள், யமனுக்கு அஞ்சுங்கள் என (நாலடி.172) பாடல்களும்,

**"ஒன்னாருட் கூற்றுட்கும் உட்குடமை" (நாலடி.188:2)**

**"அளவிறந்த காதற்றம் ஆருயி ரன்னார்க்**
**கொள இளைக்கும் கூற்றமுங் கண்டு" (நாலடி.330:3-4)**

**"கொலைவல் பெருங்கூற்றம் கோள்பார்ப்ப ஈண்டை**
**வளையகத்துச் செம்மாப்பார் மாண்பு" (நாலடி.331:3-4)**

**"எறியென் றெதிர்நிற்பாள் கூற்றம் சிறுகாலை**
**அட்டில் புகாதான் அரும்பிணி அட்டாதனை"**
**(நாலடி.363:1-2)**

எனும் பாடலடிகளிலும் கூற்றுவன் பற்றியச் செய்திகள் பதிவு செய்யப் பட்டுள்ளன.

நான்மணிக்கடிகையில் கூற்றுவன் பற்றிய நம்பிக்கையினை எமன் உயிர்களின் சாவை நோக்கி மகிழ்வான் என்பதை,

**"துளிநோக்கி வாழும் உலகம் உலகின்**
**விளிநேக்கி இன்புறூஉங் கூற்று" (நான்மணி.29:3–4)**

எனவும், கூற்றுவன் தன்னால் உண்ணப்படுபவன் சொல்வனவற்றைக் கேட்கமாட்டான் என (நான்மணி.42), கல்வி இல்லாதவற்கு அவர்

வாய்ச்சொல் கூற்றுவனாம், வாழை மரத்திற்கு அஃதீனும் குலை கூற்றுவனாம், தீங்கு செய்வார்க்கு அறக்கடவுள் கூற்றுவன். இல்லக்கிழத்தி கற்புக்கேடாக நடந்தால் கணவனே கூற்றுவன் என்பதனை,

**"கல்லா ஒருவர்க்குத் தம்வாயிற் சொற்கூற்றம்**
**மெல்லிலை வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம்**
**அல்லவை செய்வார்க்கு அறங்கூற்றம் கூற்றமே**
**இல்லத்துத் தீங்கொழுகு வாள்" (நான்மணி.85)**

எனும் பாடல் சுட்டுகின்றது. இனியவை நாற்பதில் இதனைக் கூற்றுவனின் வரவு உண்டென்று நினைத்து வாழ்வது இனிது என்பதனை,

**"கூற்றம் வரவுண்மை சிந்தித்து வாழ்வினிதே"(இனியவை.28:2)**

எனவும், திணைமொழி ஐம்பதில் கூற்றுவனையொத்த விடலையொடு தன்மகள் பாலை நிலவழியில் சென்றாள் எனத் தாய் கூறியதனை,

**"கூற்றன வல்வில் விடலையோ டென்மக**
**ளாற்றுங்கொல் லைய நடந்து" (திணை.ஐந்.20:3-4)**

என்றும், பழமொழியில் யமனைக் கடந்து பிழைத்தறிவார் இல்லை என,

**"மதித்தஞ்சி மாறுமஃ திண்மையால் கூற்றங்**
**குதித்துய்ந் தறிவாரோ இல்" (பழமொழி.392:3-4)**

என்றும் குறிப்பிடப்படுகின்றன. ஏலாதியில் காலன் எனும் சொல் (ஏலாதி.22) பதிவு செய்யப்பட்டுள்ளது.

**மந்திரம் பற்றிய நம்பிக்கை**

மந்திரம் என்ற சொல் ரகசியம், மறை எனப்பொருள்படும். ரகசியமாக ஆலோசனை செய்வதே மந்திராலோசனை. மந்திராலோசனை செய்யும் இடம் 'மந்திரக்கோட்டி' எனப்படும். மன்னன் தன் அமைச்சர்களுடன் ஆலோசனை செய்வதனைக் காப்பியங்கள் பேசுகின்றன.

"அறிவியல் அசைவற்ற பிரும்மம், ஆகாயமாகவும், காற்றாகவும், தீயாகவும், நீராகவும், மண்ணாகவும் இன்றும் எண்ணியிருந்த

பொருட்களாகவும், சக்திகளாகவும், எண்ணங்களாகவும் தோன்றிய போதெல்லாம், வெவ்வேறு அசைவுகள் உண்டாகித்தான் இருக்க வேண்டும். இந்த அசைவுகளின் போது ஏற்பட்ட ஒலிகளை யோகிகள் கண்டு கொண்டார்கள். இந்த ஒலிக்கோவைகளே மந்திரங்கள் என்று சிலம்பு நா.செல்வராசு குறிப்பிடுகிறார்.''[72]

இறைவழிபாட்டில் மந்திரம் சிறப்பிடம் பெறுகிறது. அனைத்துக் கடவுளர்களும் மந்திர ஒலிக்குக் கட்டுப்பட்டவர்கள். சமயம் தோன்றுவதற்கு முன்னுள்ள மக்கள் நிலையினை மந்திர ஆற்றலில் நம்பிக்கைமிக்க காலகட்டமாகக் கருதுவர். மந்திரம் போலச் செய்தல் என்ற கொள்கையினை அடிப்படையாகக் கொண்டது.

``மனிதன் தன்னுடைய சக்தியை அடிப்படையாகக் கொண்டு தனக்குப் புறம்பாக உள்ள இயற்கையிலும் அதே சக்திகளைக் கண்டு அவற்றை உபயோகித்து அடக்கக் கண்ட கருவி மந்திரம் என்பதனை லின்ஸே தெளிவாக விளக்கியுள்ளார் என்று க.கைலாசபதி சுட்டுவார்.''[73]

``மந்திரங்களின் வாயிலாகத் தேவதைகளைச் சுவாதீனம் செய்தல், இயற்கையைக் கட்டுப்படுத்தல், பகைவரை அழித்தல், நோயைக் குணமாக்குதல், பொருள் சேர்த்தல் ஆகியவற்றை அடையலாமென மக்கள் நம்புகின்றனர்.''[74]

``மந்திரத்தின் செயல்கள் அறுவகைப்படும் என்பர். அவை சாந்தி, வச்யம், ஸ்தம்பனம், வித்வேஷனம், உச்சாடனம், மாரணம் என்பனவாகக் குறிப்பர்.''[75]

தொல்காப்பியத்தில் மந்திரத்தை நிறைமொழி மாந்தரின் மறைமொழியாகச் சுட்டுவதனை,

**“நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளக்கும்**
**மறைமொழி தானே மந்திரம் என்ப”**

**(தொல்.பொருள்.480)**

எனும் நூற்பாவும், நான்மணிக்கடிகையில் பாம்பின் சீற்றத்தை மந்திரத்தினால் தவிர்ப்பார்கள் என்பதனை,

**"மந்திரத்தாற் தணிப்பர் மாநாகம்" (நான்மணி.12:2)**

எனும் பாடலடியும், இன்னா நாற்பதில் மறைமொழியாகிய மந்திரங்கள் பயனளிக்கவில்லையெனில் துன்பம் என்றதனை (இன்னா.1) பாடலும், பாம்பை அடக்குவதற்குரிய மந்திரம் தெரியாமல் அடக்குவது இன்னா என (இன்னா.29) பாடலும், சிலப்பதிகாரத்தில்,

**"அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்**
**வருமுறை எழுத்தின் மந்திரம் இரண்டு**
**ஒருமுறையாக உளம் கொண்டு ஒதி" (காடுகாண்.128-130)**

எனவும், கோவலன் பாவை மந்திரத்தினை உச்சரித்ததனை,

**"வஞ்சம் பெயர்க்கும் மந்திரத்தால்இவ்**
**அஞ்சில் ஓதியை அறிவேன் யான் எனக்**
**கோவலன் நாவிற் கூறிய மந்திரம்**
**பாய்கலைப் பாவை மந்திரம்" (காடுகாண்.194–197)**

என்றும்,

**"துன்னிய மந்திரம் துணையெனக் கொண்டு" (கொலை.143)**

எனும் பாடலடிகளும் விளக்குகின்றன.

மணிமேகலையில் மந்திரத்தைக் கொண்டுத் தொழிலாற்றுவோர் மந்திரமாக்கள் என்பதனை,

**"தந்துயர்க் கெடுக்கு மந்திர மாக்கள்" (மணி.7:83)**

எனவும், மணிமேகலாத் தெய்வம் மணிமேகலைக்கு வேறு உருவம் எய்தவும், வானிற்செல்லவும், இரும்பசி அருப்பதற்கும் மூன்று மந்திரங்களை அருளிய நிலையினை,

**"விளைபொரு ளுரையார் வேற்றுரு வெய்தவும்**
**அந்தரத் திரியவு மாக்குமின் வருந்திறல்**
**மந்திரங் கொள்கென வாய்மையி னோதி" (மணி.10:80-82)**

என்றும்,

**"மக்கள் யாக்கை யுணவின் பிண்டம்**

**இப்பெரு மந்திர மிரும்பசி யறுக்குமென்**

**றாங்கது கொடுத்தாங் கந்தர மெழுந்து**

**நீங்கிய தாங்குநெடுந் தெய்வந் தானென்" (மணி.10:90-93)**

பாடலடிகளும் புலப்படுத்துகின்றன.

**வேதம் பற்றிய நம்பிக்கை**

வைதீகச் சமயங்களான சைவமும் வைணவமும் வேதங்களைப் பெரிதும் குறிக்கோளாகக் கொண்டுத் திகழ்ந்தன. மதுரை நகரில் வைகறைப் பொழுதில் பல்வேறு ஓசைகள் கேட்டதனைச் சிலம்பில்,

**"நான்மறை அந்தணர் நவின் ஓதையும்" (புறஞ்சேரி.140)**

எனவும்,

**"காதில்**

**மறைநா பூசை அல்ல தீயாவதும்**

**மணிநா ஓசை கேட்டதும் இலனே" (கட்டு.30-32)**

என்று கூறிப் பாண்டியன் நகரைப் பாராட்டுகின்றனர். வேதங்களைக் கல்லாதவர்கள், அந்தணர் என்றோ வேதியர் என்றோ குறிக்கப்பெறவில்லை. இதனை,

**"வரிநவில் கொள்கை மறைநூல் வழுக்கத்துப்**

**புரிநூல் மார்பர் உறையதிச் சேர்ந்து" (புறஞ்.38-39)**

என்று கூறி அவர்களை மறைநூல் ஒழுக்கத்தை உழுவவிட்ட பூனூல் பூண்டோர் என்றே குறிப்பிடுவதனை உணரமுடிகின்றது.

**மழைச்சடங்கு**

"மருதநில மக்கள் மழைக்காகச் செய்யும் சடங்கினைப் பரிபாடல் கூறுகிறது. சங்கு, நண்டு, இறவு, வாளை போன்றவற்றைப் பிடித்து நீரிலிட்டனர்"[76] பிறகு 'விளைக', 'பொலிக' எனக் கூறியதனை,

**"நத்தொடு, நள்ளி, நடைஇறவு, வயவாளை**

**வித்தி அலையில், விளைக, பொலிக என்பார்" (பரி.10:85-86)**

எனவும் வேட்டையில் அம்பு தப்பிப் போனதற்குக் காரணம் கடவுளின் கோபம் எனக் கருதிய கானவன் கடவுளின் கோபத்தைப் போக்க மழை பெய்ய வேண்டியதனை நற்றிணையில்,

**"பனைத்த பகழிப் போக்கு நினைந்து கானவன்**
**அணங்கொடு நின்றது மலைவான் கொள்கென**
**கடவு ளோங்குவரை பேண்மார் வேட்டெழுந்து**
**கிளையொடு மகிழும் குன்ற நாடன்" (நற்.165:2-5)**

எனும் பாடலடிகளும், இதேபோல் ஐங்குறுநூற்றில் குறவன் மழை வேண்டிக் கடவுளை வழிபட்டு ஆரவாரித்த போது மழை பொழிந்ததனை,

**"குன்றக் குறவ னார்ப்பி னெழிலி**
**நுண்ப லழிதுளி பொழியு நாட" (ஐங்.251:1-2)**

எனும் பாடலும், வேண்டிய நேரங்களில் மழை பெய்யச் செய்வது, போதுமானச் சூழலில் மழையை நிறுத்தச் செய்வது இச்சடங்கின் அடிப்படை நோக்கம். இச்சடங்கு பெரும்பாலும் குறிஞ்சித் திணையில் நடைபெற்றது.

**"மலைவான் கொள்கென உயர்பலி தூஉய்**
**மாரி யன்று மழைமேக் குயர்கெனக்**
**கடவுட் பேணிய குறவர் மாக்கள்**
**பெயல்கண் மாறிய வுவகையர் சாரற்**
**புனத்தினை யயிலு நாட" (புறம்.143:1-5)**

எனும் பாடலில் மலையில் மழை வந்துச் சூழ வேண்டும் என்று மிகுதியான பலியைத் தூவி வழிபட்ட நிலையில் மழை மிகுதியாகப் பெய்ததையும் 'மழை நின்று மேகங்கள் மேலே போவதாக' எனக்கடவுளை வேண்டியவுடன் மழை நின்றுவிட்டதைக் கண்டு குறவர் மகிழ்ந்ததையும் மேற்பாடல் விளக்குகின்றது.

**கணவனைத் தொழுதால் மழை பெய்யும்**

தெய்வத்தை வணங்காது கணவனை வணங்கும் மனைவி மழை பெய்யென்று சொன்னால் பெய்யும் என்று நம்பினர். இதனை

**“தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**

**பெய்யெனப் பெய்யும் மழை” *(குறள்.55)***

*எனும் குறள் விளக்குகின்றது.*

**புலிப்பல் தாலி அணிதல்**

*வீரத்தின் அடையாளங்களில் இதுவும் ஒன்று. “புலிப்பல் தாலி என்பதற்குப் புலியின் பல்லைக் கோத்துச் செய்த கழுத்தணி எனவும் புலியின் பல்லைப் பொன்னிலமைத்துச் செய்த சிறுவர் மார்பிலணியும் ஓர் ஆபரணம் எனவும் குறிப்பதாகச் சுட்டுவர்.”*[77] *இதனைச் சிறுவர்கள் இளமைப் பருவத்தில் அணிந்திருந்தமையைப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. இது இளையோர்க்குக் காப்பாக அணியும் அணி என்று கருத இடமுண்டு.*

*“புலிப்பல் தாலி அணியும் வழக்கம் பண்டையக் குறிஞ்சிநில மக்களாகிய கானவரிடையே நிலவிய ஒன்று. இதனை அவர்கள் வீரத்தின் அறிகுறியாகவோ அல்லது காப்பணியாகவோக் கருதி அணிந்திருக்கலாம். ஏன் அணிந்தார்கள் என்று இலக்கியங்கள் விடை கூறவில்லை எனக் குறிப்பிடுவார் க. காந்தி.”*[78]

*“பண்டைத் திருமணத்தில் மணமகன் புலிப்பல் தாலியை மணமகள் கழுத்தில் கட்டினான். தாலிக்கு நூல் என்ற பெயரும் உண்டு எனவும் குறிப்பர்.”*[79]

*குறுந்தொகையிலும், புறநானூற்றிலும் புலிப்பல் தாலி சிறுவர்கள் அணிந்திருந்ததை,*

***“புலிப்பல் தாலிப் புதல்வர்புல்லி” (குறுந்.161:3)***

***“புலிப்பல் தாலிப்புன்தலைச் சிறார்” (புறம்.374:9)***

*என்றும், சிறுமியர் அணிந்திருந்ததை அகநானூற்றில்*

**“நின்னொடு வினவல் கேளாய் பொன்னொடு**

**புலிப்பல் கோத்த புலம்பு மணித்தாலி**

**.......................................................**

..................................................

..................................................

**கற்கெழு சிறுகுடிக் கானவன் மகளே"** ***(அகம்.7:17-22)***

எனும் பாடலடிகளும், பொன்னுடைத் தாலி என்றும் கூறியதனை,

**"பொன்னுடைத் தாலி யென்மக னொற்றி"** ***(அகம்.54:18)***

எனவும், சிலப்பதிகாரத்தில் புலியைக் கொன்று அதன் பல்லை எடுத்துத் தாலியாகச் செய்து அணிந்ததனை,

**"மறங்கொள் வயப்புலி வாய்பிளந்து**
**மாலை வெண்பற் றாலி"** ***(சிலம்பு.12:27-28)***

எனும் பாடலடிகளும் சுட்டுகின்றன.

**சொர்க்கம் - நரகம் பற்றிய நம்பிக்கை**

மனித உயிர்கள் நிலவுலகில் வாழுங்காலத்தில் ஆற்றும் நல்வினை, தீவினைகளுக்கேற்ப அவ்வுயிர்கள் முறையே சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் கொண்டு செல்லப்படுகின்றன என்று நம்பினர். "சுவர்க்க உலகமாகிய மேலுலகம் தேவர்கள் உரையும் விண்ணுலகிலும், நிரையமாகிய நரவுலகு பூமிக்கடியிலும் இருப்பதாக நம்பினர் எனக் க.காந்தி சுட்டுவர்."[79]

பழந்தமிழ் இலக்கியத்தில் வினை, ஊழ், பிறப்பு ஆகிய கோட்பாடுகள் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருப்பதோடு துறக்க உலகினைத் தேவர் உறையும் உம்பர்பதியாகக் கருதும் போக்கும் தென்படக் காண்கிறோம். குறுந்தொகையில் இதனைப் பெரும்பெயர் உலகம், உயர்நிலை உலகம் என்று கூறுவதனை,

**"பெரும்பெய ருலகம் பெறீஇயரோ அன்னை"** ***(குறு.83:2)***

**"உயர்நிலை யுலகமுஞ் சிறிதா லவர்மாலை"** ***(குறு.361:2)***

என்றும், கலித்தொகையில் 'ஆன்றோர் உலகம்' எனச் சுட்டியதனை,

**"அரிதின அறஞ்செய்யா ஆன்றோ ருலகம்"** ***(கலி.92:6)***

எனும் பாடலடியும், 'அரும்பெறலுலகம்' என அகநானூற்றில்

**"அரும்பெற லுலக மமிழ்தோடு பெறினும்"** ***(அகம்.213:18)***

எனவும், புறநானூற்றில் 'தேவருலகம், அரிது செல்லுலகம், மேலோருலகம், உடம்பொடு வாரா உலகம்' எனக் குறிப்பிட்டுள்ளதனை,

**"தேவருலக மெய்தின் ஆதலின்"** ***(புறம்.228:11)***

**"அரிதுசெல் லுலகிற் சென்றனன்"** ***(புறம்.260:21)***

**"மேலோருலக மெய்தின னெனாஅப்"** ***(புறம்.240:6)***

**"நீணிலை யெஃக மறுத்த வுடம்பொடு**
**வாரா வுலகம் புகுத லொன்றெனப்"** ***(புறம்.341:14-15)***

என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

துறக்கம், நிரையம் என்ற சொல்லாட்சிகள் சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ளதனைக் குறுந்தொகையில்,

**"பெண்கொலை புரிந்த நன்னன் போல**
**வரையா நிரையத்துச் செலீஇயரோ"** ***(குறுந்.292:5-6)***

எனும் பாடலடியும், அகநானூற்றில்

**"மறப்படைக் குதிரை மாறா மைந்தின்**
**துறக்க மெய்திய தொய்யா நல்லிசை**
**முதியோர்ப் பேணிய உதியஞ் சேரல்"** ***(அகம்.233:6-8)***

எனும் பாடலடிகளும் பதிவு செய்துள்ளன.

துறக்க உலகில் அமிழ்தம் உணவாக வழங்கப்பட்டதாகப் பழந்தமிழர் நம்பினர். இதற்கு

**"அரும்பெற லமிழ்த மார்பத மாகப்**
**பெரும்பெய ருலகம் பெறீ இயரோ வன்னை"**

***(குறுந்.83:1-2)***

எனும் குறுந்தொகைப் பாடல் சான்று பகர்கின்றது.

துறக்க உலகாகிய சுவர்க்கத்திற்குரியச் செயல்களாக நற்குணமுடை யோராயிருத்தல், பிற உயிர்களைப் பேணல், தவம் செய்தல் போன்றவைகளைக்

கலித்தொகைக் குறிப்பிடுகின்றது. இதனை நெய்தற்கலியில் சிறப்புடைய மன்னன் அவனது ஆட்யிலே அரசியல் ஒழுக்கத்தினையும், நன்னெறியிலே ஆட்சி செய்ததனையும் அவனது மக்களைக் கலங்காது காத்ததனையும், பின் சுவர்க்க உலகை விரும்பிச் சென்றதனையும்,

**"வெல்புகழ் மன்னவன், விளங்கிய ஒழுக்கத்தால்**
**நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கறத் தான்செய்த**
**தொல்வினைப் பயன்துய்ப்ப துறக்கம்வேட்டு எழுந்தாற்போல்"**
***(நெய்தற்கலி.1:1-3)***

என்றும்,

**"அடங்கரும் தோற்றத்து அருந்தவம் முயன்றோர் தம்**
**உடம்பு ஒழித்து உயர்உலகு இனிதுபெற்றாங்கே"**
***(நெய்தற்.கலி.21:30–31)***

எனவும்,

**"மாண்ட மனம் பெற்றார் மாஅ இல் துறக்கத்து**
**வேண்டிய வேண்டியாங்கு எய்துதல் வாய் எனின்"**
***(நெய்தற்.கலி.25:45–46)***

எனும் பாடலடிகளும் குறிப்பிடுகின்றன. சிறுபஞ்சமூலத்தில் இதனை உயிர்களைப் பேணும் அறச்செயல்கள் செய்தல் என்று குறிப்பிடுவதனை,

**"குளம்தொட்டு காவு பதித்து வழி சீத்து**
**உளம்தொட்டு உழுவயல் ஆக்கி வளம்தொட்டுப்**
**பாகுபடும் இணற்றோடு என்று இவை பாற்படுத்தான்**
**ஏகும் சுவர்க்கம் இனிது"** ***(சிறுபஞ்ச.64)***

எனும் பாடல் புலப்படுத்துகின்றது.

நிரையமாகி நரகத்திற்குரியக் காரணிகளாகப் பெண்கொலைப் புரிந்ததனைக் குறுந்தொகையில்,

**"பெண்கொலை புரிந்த நன்னன் போல**
**வரையா நிரையத்துச் செலீகியரோ"** ***(குறு.292:5-6)***

எனும் அடிகளும், அன்பும் அருளும் நீக்கியதனைப் புறநானூற்றில்

**"அருளும் அன்பும் நீக்கி நீங்கா**

**நிரயங் கொள்பவரோடு ஒன்றாது காவல்" (புறம்.5:5–6)**

என்றும் நற்றிணையில்

**"வரையா நயவினர் நிரையம் பேணார்" (நற்.329:1)**

எனவும், பழமொழியில் உறவினைப் பெற்றிலார்க்கு நரகமும் காடு போன்றது என்பதனை,

**"இவர்வரை நாட! தாமரையில் லார்க்கு**

**நரகமும் காடுபோன் றாங்கு" (பழமொழி.15:3–4)**

எனும் பாடலடிகளும், பிறர்மனை நோக்கல், கள், களவு, சூது, பொய், அழுக்காறு, அல்லறஞ்செய்தல் போன்றவை நரகத்திற்குரியக் காரணிகள் என்பதனை ஆசாரக்கோவை

**"பிறர்மனை கள் களவு சூது கொலையோடு**

**அறன் அறிந்தார் இவ்வைந்தும் நோக்கார் திறன் இலன்**

என்றும்,

**எள்ளப்படுவதூஉம் அன்றி நிரயத்துச்**

**செல்வழி உயர்த்திருதலான்" (ஆசாரக்.37)**

என்றும்,

**"பொய்க்குறளை வெளவல் அழுக்காறு இவை நான்கும்**

**ஐயம்தீர் காட்சியார் சிந்தியார் சிந்திப்பின்**

**ஐயம் புகுவித்து அருநிரயத்து உய்த்திடும்**

**தெய்வமும் செற்று விடும்" (ஆசாரக்.38)**

என்றும் புலப்படுத்துகின்றது.

இந்நரகத்தினைக் குறிக்கும் வேறு சொற்களாக அளறு, இருள் உலகம் எனத் திரிகடுகம் குறிப்பிடுகின்றது. இதனை,

**"காண்தகு மென்தோள் கணிகை வாய்இன் சொல்லும்**

**தூண்டினுள் பொதிந்த தேரையும் மாண்டசீர்**

**காழ்த்த பகைவர் வணக்கமும் இம்மூன்றும்**

**சூழ்ச்சிப் படுக்கும் அளறு" *(திரி.24)***

எனவும்,

**"ஈதற்குச் செய்த பொருளை அறநெறி**

**சேர்தற்குச் செய்க பெருநூலை யாதும்**

**அருள்புரிந்து சொல்லுக சொல்லை இம்மூன்றும்**

**இருள் உலகம் சேராத ஆறு" *(திரி.38)***

எனும் பாடல்கள் உணர்த்துகின்றன.

புலால் உண்டவனை நரகமும் உண்ணாது என்பதனைத் திருவள்ளுவர்,

**"உண்ணாமை உள்ளது உயிர்நிலை; ஊன்உண்ண**

**அண்ணத்தால் செய்யாது அளறு" *(குறள்.255)***

என்றும், எழுபிறப்பிலும் தான் தங்கும் நரகத்தினை ஒரு பிறப்பிலேயே பேதை தேடிக்கொள்வாள் என்பதனை,

**"ஒருமை செயலாற்றும் பேதை எழுமையும்**

**தான்புக்கு அழுந்தும் அளறு" *(குறள்.835)***

எனவும், மிக இழிந்தவர் கிடக்கும் நரகம் ஒரு வரம்பில்லாத பரத்தையின் தோளாகும். இதனை,

**"வரைவிழா மாணிழையார் மென்றோள் புரையிலாப்**

**பூரியர்கள் ஆழும் அளறு" *(குறள்.919)***

எனும் குறள்கள் பதிவு செய்கின்றன.

மணிமேகலையில் இதனை ஆழ்நரகு என்று குறித்துள்ளதனை,

**"பிறந்தோ ரறியிற் பெரும்பே றறிகுவர்**

**அறியா ராயி னாழ்நர கறிகுவர்" *(மணி.24:109-110)***

எனும் பாடலடிகள் சுட்டுகின்றன.

**தொகுப்புரை**

* செவ்வியல் நூல்கள் பண்டை மக்களின் பண்பாடு, நாகரிகம், பழக்க வழக்கம், நம்பிக்கைகள் போன்றவைகளைப் பதிவு செய்துள்ளதனை அறியமுடிகிறது.

* தெய்வ நம்பிக்கை மக்களிடம் வேரூன்றி இருந்ததனையும், அவற்றின் உறைவிடங்கள் பற்றியும், இயற்கையை வழிபட்ட முறையினையும் புலப்படுத்துகின்றன.

* ஒவ்வொரு நிகழ்விற்கும் மக்கள் (திருமணம், விழாக்கள்) நாள் பார்த்துச் செயல்பட்டதனை அறியமுடிகின்றது.

* மக்கள் வாழ்வில் கண்டக் கனவுகள் வாயிலாக நன்மை, தீமை பார்த்ததனைச் சுட்டிச் செல்கின்றன.

* திருமணத்திற்குச் சொல்லும், பொருளும், மணத்தேர்வு போன்றவை களையும், சில சடங்குமுறைகளையும் வகுத்து வைத்திருந்ததனை அறியமுடிகின்றது.

* நிமித்தங்கள் மனித வாழ்வினை இயக்குகின்றன என்பதனையும், நன்னிமித்தங்கள் நன்மை பயப்பனவாகவும், தீய நிமித்தங்கள் தீமை பயப்பதாகவும் நம்பியதனைக் காணமுடிகின்றது.

* புள் நிமித்தம், பல்லி, கண் துடித்தல், தும்மல், உன்னம் போன்றவைகள் நிமித்தக் காரணிகளாக அமைந்ததனை அறிய முடிகின்றது.

* விரிச்சி, கட்டுக்கேட்டல், கழங்கு பார்த்தல் போன்ற நம்பிக்கைகளை மக்கள் கைக்கொண்டிருந்ததை உணரமுடிகின்றது.

* வெறியாட்டுப் பற்றியும், பலியிடுதல் பற்றியும் மக்கள் நம்பியமைப் புலப்படுகின்றன.

* இறந்தவர்க்குக் கல்நட்டு வழிபடும் முறையைக் கடைபிடித்து வந்ததனை அறியமுடிகின்றது.

* பேய் பற்றியும், தோற்றம் பற்றியும் நம்பியதனைப் பதிவு செய்துள்ளமை புலனாகிறது.

* விழாக்கள் மக்கள் வாழ்வில் முக்கியப் பங்கு வகுத்ததனை, கார்த்திகை விழா, பங்குனி விழா, உள்ளி, ஓணவிழா, திருமண விழா போன்றவை களின் மூலம் அறியமுடிகின்றது.

* கைம்மை மகளிர், நோன்பு முறைகள், ஈமச்சடங்கு பற்றிச் செவ்வியல் நூல்கள் பதிவு செய்துள்ளதனை அறியமுடிகின்றது.

* முற்பிறப்பு, மறுபிறப்பு, ஊழ்வினை, பற்றியும் உயிர்கள் வினைக்கேற்ப பிறவிகள் எடுக்கின்றன என்பதும் புலப்படுத்துகின்றன.

* உயிரைக் கவர்ந்து செல்லும் கூற்றுவன் உண்டு என மக்கள் நம்பியதனைப் பதிவு செய்துள்ளதை அறியமுடிகிறது.

* மக்கள் வாழ்வில் மந்திரங்களைப் பெரிதும் நம்பியதனைச் செவ்வியல் நூல்கள் வழி அறியமுடிகின்றது.

# சான்றெண் விளக்கம்


1. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.3
2. ஔவை துரைசாமிப்பிள்ளை, செந்தமிழ் தொகுதி-51, சிலப்பதிகாரமும் இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளும், ப.257
3. கலைக்களஞ்சியம், தொகுதி-4, ப.448
4. The concepts of Animism, Ancestor worship and Polytheism constituted The Religious life of the aneient tamils including the cheras. - culture of The Ancient Cheras, M.E.Manicka Vasagam, p.169
5. தொல்.பொருள்.85
6. உலகத்தை மாற்றிய புத்தகங்கள், பக்.257-258
7. The New book of knowledge, Vol-20, p.209
8. ச.வே.சுப்பிரமணியன், இலக்கியக் கனவுகள், ப.14
9. மேலது, ப.59
10. எஸ்.சதக்கத்துல்லா, ஆய்வுக்கோவை, சங்கத் தமிழர் திருமண முறை, (பதினோராவது கருத்தரங்கு) தொகுதி-3, ப.87
11. L.A.Krishna Iyar, Social History of Kerala, Vol-1 (The Pre-Dravidions), p.90
12. இ.சுந்தரமூர்த்தி, பழந்தமிழ் இலக்கியத்தில் நிமித்தங்கள், ப.3
13. Tamil Lexicon, Vol-IV, Part-I, p.2254
14. கி.ர.அனுமந்தன், பண்டைக் கால நாகரிகங்களின் வரலாறு, ப.333
15. G.L.Hart, The Poems of Ancient Tamil, p.44
16. இரகுநாதாச்சாரியார், கலைமகள், தொகுதி-6, பல்லி, பக்.35-42
17. உ.வே.சாமிநாத ஐயர், பதிப்பு, புறநானூறு மூலமும் உரையும், ப.11
18. செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 46, சங்க இலக்கியத்தில் கூகையும் குராலும் குடிஞையும், ஊமனும் ஆண்டலையும், ப.402
19. டாக்டர்.சு.வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.196

20. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.117

21. மோ.இரசயேல், அகவன் மகள், ஆய்வுக்கோவை, மூன்றாவது கருத்தரங்கு, ப.64

22. பின்னத்தூர் நராயணசாமி ஐயர், நற்றிணை நானூறு, மூலமும் உரையும், ப.65

23. ஔவை. துரைசாமிபிள்ளை உரை, ஐங்குறுநூறு மூலமும் உரையும், அண்ணாமலைப்பல்கலைக்கழக வெளியீடு, ப.585

24. நக்கீரர் (உ.ஆ.) இறையனார் அகப்பொருள், ப.95

25. நா.வானமாமலை, தமிழர் பண்பாடும் தத்துவமும், ப.40

26. நா.வானமாமலை, ஆராய்ச்சி மலர் 4, துணர் 13, நடுகற்களும் நம்பிக்கைகளும், ப.10

27. மேலது, ப.9

28. வே.தி.செல்லம், தமிழக வரலாறும் பண்பாடும், ப.52

29. தமிழவன், ஆராய்ச்சி, பண்டைத் தமிழரின் பேய் பற்றிய கருத்து, பக்.438-439

30. க.கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.71

31. Encyclopaedia Britnnica Vol-9, Feast and Festival, p.125

32. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.52

33. கலைக்களஞ்சியம், தொகுதி - ஒன்பது, ப.417

34. ஆய்வுக்கோவை, தொகுதி - ஒன்று, ப.444

35. மேலது, ப.444

36. இரா.சீனிவாசன், சக்தி வழிபாடு, ப.79

37. ஆய்வுக்கோவை, தொகுதி-ஒன்று, ப.445

38. மேலது, ப.445

39. மேலது, ப.445

40. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.72.

41. மேலது, ப.73

42. மேலது, ப.54

43. மேலது, ப.74

44. க.ப.அறவாணன், தமிழ்ச் சமுதாய வரலாறு, ப.60

45. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.68

46. மேலது, ப.69

47. க.த.திருநாவுக்கரசு, தமிழ்ப் பண்பாடு, ப.43

48. பரிபாடல், ப.69

49. க.த.திருநவுக்கரசு, தமிழ்ப் பண்பாடு, ப.43

50. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.70

51. கு.வை.இளங்கோவன், சங்ககாலக் கடவுளர், ப.123

52. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.16

53. உ.வே.சா. பதிப்பு, குறுந்தொகை மூலமும் உரையும், ப.42

54. எம்.கே.எம்.அப்துல் காதிறு ராவுத்தர், செந்தமிழ், தொகுதி-6, கற்பு, பக்.356-357

55. ந.க.மங்களமுருகேசன், இந்தியச் சமுதாய வரலாறு, ப.375

56. இ.எம்.ராமச்சந்திரன் செட்டியார், செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு-18, உடன்கட்டை ஏறுதல், ப.366

57. கலைக்களஞ்சியம், தொகுதி-8, ப.21

58. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.98

59. டாக்டர். ந.சுப்பிரமண்யன், சங்ககால வாழ்வியல், ப.413

60. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.168

61. பொ.அழகு கிருஷ்ணன், சிலப்பதிகார நாகரிகமும் பண்பாட்டுச் சமுதாய வரலாறும், ப.218

62. மேலது, ப.218

63. ரா.கோதண்டபாணி, சிலப்பதிகாரப் பழக்க வழக்கங்கள், ப.58

64. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.153

65. பொ.அழகுகிருஷ்ணன், சிலப்பதிகாரம் காட்டும் பண்பாட்டுச் சமுதாய வரலாறு, ப.222

66. சாமி.சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், ப.216

67. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், பக்.147-148

68. கலைமகள், தொகுதி-4, ப.289

69. ஆதி.பாலசுந்தரன், தர்மசக்கரம்-28, ஆரம்-4, தெய்வ நம்பிக்கை, ப.154

70. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.298

71. சிலம்பு. நா.செல்வராசு, கோயில் பண்பாடு,

72. க.கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.73

73. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், பக்.150-151

74. மேலது, ப.151

75. எ.பாலுச்சாமி, மருதத்தில் மக்கள் வாழ்வியல், ப.26

76. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.197

77. மேலது, ப.197

78. நஜன், தமிழர் பண்டிகைகளும் விழாக்களும், ப.27

79. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.170

## முன்னுரை

மக்கள் வாழ்வில் எண்ணற்ற நம்பிக்கைகள் தோன்றி நிலைத்தும் மறைந்தும் வருகின்றன. இந்நம்பிக்கைகள் மக்களின் வாழ்க்கையை இயக்குகின்றன. மனிதனின் ஒவ்வொரு செயலிலும், சிந்தனைகளிலும் நம்பிக்கைகள் வேரூன்றிக் காணப்படுகின்றன. இவற்றை அவ்வக் கால இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. அவ்வாறு தோன்றும் நம்பிக்கைகள் பல காலந்தோறும் நின்று நிலைபெற்று மக்கள் வாழ்வினை இயக்குகின்றன. சில நம்பிக்கைகள் காலவோட்டத்தில் வழக்கிழந்துவிடுகின்றன. அவை ஒவ்வொரு மனிதனின் விருப்பங்கள் நிறைவேறுவதனைப் பொறுத்து அமைகின்றன.

செவ்வியல் நூல்களில் பதிவாகியுள்ள நம்பிக்கைகள் இன்றைய மக்கள் வழக்காற்றில் வழக்குப் பெற்றனவாகவும், வழக்கிழந்தனவாகவும் இருப்பதை மதிப்பிடும் முகமாகத் தமிழகத் தென்மாவட்டங்களில் ஒன்றான இராமநாதபுரம் மாவட்டம், திருவாடானை வட்டம், இராசசிங்க மங்கலச் சிற்றூர்ப் பகுதிகளில் கள ஆய்வு மேற்கொள்ளப்பெற்றதில் கிடைத்த தரவுகளை ஒப்பிட்டு மதிப்பீடு செய்வதாக இவ்வியல் அமைகின்றது.

## இராமநாதபுரம் அறிமுகம்

இராமநாதபுர மாவட்டத்தைச் சங்ககாலம் தொடங்கிப் பல மன்னர்கள் ஆண்டு வந்திருக்கின்றனர். இம்மாவட்டத்தில் பல்லவ மன்னர்கள் ஆண்டு வந்ததற்கான கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. குன்றக்குடி, பிள்ளையார்பட்டி, பூங்குன்றம் ஆகிய பகுதிகளில் காணப்படும் பல்லவர் காலத்திய குடைவரைக் கோயில்கள் இராமநாதபுர மாவட்டத்துடன் பல்லவர்களுக்கு இருந்த தொடர்பை உறுதி செய்கின்றன. பல்லவர்களுக்குப் பிறகு சோழர்கள், சோழர்களுக்குப் பிறகு பாண்டியர்கள் **13** ஆம் நூற்றாண்டு வரை ஆட்சி செய்து வந்துள்ளனர்.

“கி.பி. **1331**இல் மதுரையைத் தலைநகராகக் கொண்டு முஸ்லீம் ஆட்சி நிறுவப்பட்டது. கி.பி.**1371** இல் மதுரையில் சுல்த்தான்களின் ஆட்சி

*சரியத் தொடங்கி கி.பி.1393 இல் முடிவுற்றது. பின் மதுரையில் நாயக்கர் ஆட்சி ஏற்பட்டது. கி.பி.1605 இல் சேதுபதிகளின் ஆட்சிப் பொறுப்பில் இராமநாதபுரம் மாவட்டம் இருந்தது. சேதுபதிகளில் கிழவன் சேதுபதி குறிப்பிடத்தக்கவர். இவர் 1674 முதல் 1710 வரை ஆட்சி புரிந்தார்.'' இவர் காலத்தில் தான் இராமநாதபுரம் சேதுபதிகளின் தலைநகரம் ஆனது.*

*கர்நாடக நவாப்பான முகம்மது அலி கிழக்கிந்தியக் கம்பெனியாரின் செல்வாக்கைப் பயன்படுத்தி இராமநாதபுரம் பகுதிகளைக் கைப்பற்றினான். இதனால் கி.பி. 1772 முதல் 1780 வரை மீண்டும் முஸ்லீம் ஆட்சி ஏற்பட்டது. இவ்வாட்சியில் இராமநாதபுரம் கப்பம் கட்டும் அடிமைப் பிரதேசமாயிற்று. பின் கிழக்கிந்தியக் கம்பெனியின் திறமை, சூழ்ச்சியால் இராமநாதபுரம் பிரிட்டிசாரின் நேரடி ஆட்சிக்கு மாறியது.*

*1901 இல் திருநெல்வேலி, மதுரை மாவட்டங்களிலிருந்து இராமநாதபுரம் மாவட்டம் உருவாக்கப்பட்டது. ''1985 மார்ச் 15 இல் இம்மாவட்டம் மூன்றாகப் பிரிக்கப்பட்டு இராமநாதபுரம், விருதுநகர், சிவகங்கை மாவட்டங்கள் உருவாக்கப்பட்டன.''*

*இம்மாவட்டத்தின் பரப்பளவு 4,233.44 சதுர கிலோ மீட்டர் ஆகும். மக்கள் தொகை 11,83,321. எழுத்தறிவு பெற்றோர் 7,60,819 (73.05%) ஆகும். இம்மாவட்டத்தின் வருவாய்க்கோட்டங்கள் இரண்டு (இராமநாதபுரம், பரமக்குடி). வட்டங்கள் ஏழு (இராமநாதபுரம், இராமேஸ்வரம், திருவாடானை, பரமக்குடி, முதுகுளத்தூர், கமுதி, கடலாடி) ஆகும்.*

**வழிபாட்டுத் தலங்கள்**

*இராமேஸ்வரம், திருப்புல்லாணி, (பெருமாள் கோவில்), உத்திர கோசமங்கை, திருவாடானை (ஆதிரெத்தினேஸ்வரர்), ஏர்வாடி தர்ஹா, ஓரியூர் (கிறித்தவ தேவாலயம்), நயினார்கோயில், தேவிபட்டிணம் ஆகியவை முக்கிய வழிபாட்டுத் தலங்களாகும்.*

**இராசசிங்க மங்கலம் அறிமுகம்**

*இராசசிங்கம் ஒன்றியம் சுமார் 560 ச.கி.மீ. பரப்பளவில் அமைந்துள்ளது. இவ்வொன்றியத்தின் மக்கள் தொகை 67,216 (2001 கணக்குப்படி) ஆகும். இங்கு இந்து இனமக்கள் 60% விழுக்காடும், கிறித்தவர் 22% விழுக்காடும், இசுலாமியர்கள் 18 விழுக்காடும் வசிக்கின்றனர். கல்வியறிவு பெற்றவர்கள் 62% பேர் உள்ளதாகக் குறிப்பிடுகின்றனர்.*

*இராசசிங்கமங்கல ஒன்றியம் 35 ஊராட்சிமன்றங்களைக் கொண்டது. இவ்வொன்றியத்தின் வருவாய் கிராமங்கள் 57 ஆகும். இங்கு உள்ள மக்களின் முக்கியத் தொழில் வேளாண்மை. நெல், மிளகாய், பருத்தி போன்றவைகளைச் சாகுபடி செய்து வருகின்றனர். இங்கு வாரந்தோறும் சனிக்கிழமை மிளகாய்ச் சந்தை கூடப்படுகிறது. இவ்வொன்றியத்தில் சிறப்பாகப் பேசப்படுவது இராசசிங்கமங்கலம் பெரியகண்மாய். இக்கண்மாய் 5000 ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ளது. இது மாவட்டத்தின் இரண்டாவது பெரியகண்மாய் என்ற சிறப்புப் பெற்றது. "நாரை பறக்க முடியாத நாற்பத்தெட்டு கழுங்குடைத்து" என்று சிறப்பாகக் கூறுவர்.*

*இக்கண்மாயின் நீளம் 19.80 கி.மீ. நீரின் கொள்ளளவு 1205.0 மி.க.அடி. நிறை நீர்மட்டம் 15.25 மீட்டர். நீர்ப்பிடிப்பு 8.93 சதுர மைல் ஆகும். பயன்பெறும் கண்மாய்கள் 72. எழுபத்திரெண்டு கண்மாயின் பாசனப் பரப்பு 6,916.02 ஏக்கர். கண்மாயின் நேரடி பாசனப் பரப்பு 319.29 ஏக்கர். மொத்தப் பாசனப்பரப்பு 12141.68 ஏக்கர் ஆகும்.*

**கல்வி நிறுவனங்கள்**

*அரசுத் தொடக்கப்பள்ளிகள்-66, தனியார் தொடக்கப்பள்ளிகள்-14, ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளிகள்-11, தனியார் நடுநிலைப்பள்ளிகள்-2, ஆதிதிராவிட நடுநிலைப்பள்ளிகள்-2, அரசு உயர்நிலைப்பள்ளிகள்-4, தனியார் உயர்நிலைப்பள்ளிகள்-3, அரசு மேல்நிலைப்பள்ளிகள்-4 என மொத்தம் 106 பள்ளிகள் இராசசிங்கமங்கல ஒன்றியத்தில் உள்ளன. கல்லூரிகள் கிடையாது.*

**வழிபாட்டுத் தலங்கள்**

இராசசிங்க மங்கலம் ஒன்றியப் பகுதி மக்கள் இங்குள்ள கைலாசநாதர் ஆலயம், அரசாள வந்த அம்மன் ஆலயம், உப்பூர் வெயிலுகாத்த விநாயகர் ஆலயம், கொத்தியார்கோட்டை சாத்தாயி அம்மன், சாத்தனூர் சாத்தையா அய்யனார், முத்துப்பட்டிணம் புனித அந்தோனியார் போன்ற தெய்வங்களை வழிபட்டு வருகின்றனர்.

இவ்வழிபாட்டுத் தலங்கள் அனைத்தும் இவ்வொன்றியப் பகுதி மக்கள் சிறப்பாக வழிபட்டு வரக்கூடிய வழிபாட்டுத் தலங்கள் ஆகும். சுற்றுலாத் தலங்கள் என்று சொல்வதற்கு எதுவும் சிறப்பான இடங்கள் இல்லை.

இராசசிங்க மங்கலப் பகுதி மக்களில் மூன்று இனத்தவர்கள் இருந்தாலும் அனைவரும் சகோதரத்துவத்துடன் பழகிவருகின்றனர்.

**நம்பிக்கைகள்**

மக்கள் வாழ்வில் நம்பிக்கைகள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. மனிதன் தொடங்கும் ஒவ்வொரு செயலிலும் இவை வேரூன்றி நிற்பதை நடைமுறை வாழ்வு கொண்டு அறியமுடிகின்றது. பிறப்பு முதல் இறப்பு வரை பல்வேறு நம்பிக்கைகள் மக்கள் வாழ்க்கையை இயக்குகின்றன. இவ்வாறு தோன்றும் நம்பிக்கைகள் காலப்போக்கில் பல நிலைத்தும், சில வழக்கிழந்தும் காணப்படுவதனை வரலாற்று அல்லது இலக்கியச் சான்றுகள் உணர்த்தும். அவ்வகையில் செவ்வியல் நூல்களில் காணலாகும் நம்பிக்கைகள் எவை எவை வழக்கில் உள்ளன, எவை எவை வழக்கிழந்து காணப்படுகின்றன என்பதனைக் கள ஆய்வின் வழி தகவலாளிகள் தரும் அடிப்படையில் விளக்குவது இதன் நோக்கமாகும்.

**கடவுள் நம்பிக்கை**

அறிவியல் வளர்ச்சியில் முன்னேறி வரும் இன்றைய நிலையிலும் இயற்கைச் சக்தியின் மீதான நம்பிக்கையுடன் உலகம் இயங்கி வருகின்றது. உயிரினங்களை உருவாக்கி மனித மனங்களைப் பயன்படுத்தி வாழ்க்கை

உறுதியை ஏற்படுத்தும் அபூர்வ சக்தி இயற்கையிடத்து உள்ளது என்பது உலக நம்பிக்கை. இந்நம்பிக்கையின் அடிப்படையிலும் அச்சத்தின் காரணமாகவும் மதங்களும் தெய்வங்களும் தோன்றின. இந்நிலையில் ஒவ்வொரு மதத்தினரும், தாங்கள் கண்டுணர்ந்தவாறு இயற்கையை வழிபடலாயினர்.

இறைவன் உருவமில்லாதவன், அவன் எங்கும் நிறைந்திருக்கும் இயற்கை நிலையினன் என்பது இசுலாம் மதக்கோட்பாடு. சமய நெறிகளுக்கு அப்பாற்பட்டு மாறுபட்ட நிலையில் இயற்கையை வழிபடுகிறது இந்து மதம். மனிதர்களைப் படைத்தியக்கும் இயற்கை மனிதனின் வாழ்வியலோடு இணைத்துப் பல உருவங்களாக்கி வழிபடுவது இந்துசமயநெறி . இயற்கையே தெய்வம் என்பது இம்மதங்கள் உணர்த்தும் பொதுவான கருத்துக்களாகும்.

இன்றைய மக்கள் வழக்காற்றில் தெய்வ நம்பிக்கை இல்லாதவர்கள் இல்லை என்றாலும் தவறில்லை. இதனைக் கள ஆய்வின் வழி உணரமுடிகின்றது.

“தெய்வத்தை வணங்கி வழிபட்டு வந்தால் நாம் வேண்டியதைப் பெறலாம் என்றும், அவனன்றி அணுவும் அசையாது”[1] என்றும் தகவலாளி திரு.பூ.மாரிமுத்து குறிப்பிடுகிறார்.

“கடவுள் நம்பிக்கை ஒவ்வொருவருக்கும் இருக்கும், இல்லாமல் இருக்க முடியாது. ஒருவனுக்குச் சோதனை, துன்பம், நோய் போன்றவைகள் சூழ்ந்து கொள்ளும் போது இறைவனிடம் மன்றாடுகிறான். அவன் துன்பங்கள் தீர்ந்தவுடன் பக்தி மேலும் தீவிரமடைகிறது. வாரத்தில் இரண்டு நாள் செவ்வாய், வெள்ளிக் கிழமைகள் கோவில்களுக்குச் சென்று வழிபடுவேன் என்றும், மற்ற நாட்களில் இரவில் உறங்கும் போதும், காலை கண் விழிக்கும் போதும் வழிபடுவேன் என்றும் திரு.இராமச்சந்திரன் கூறுகிறார். இந்நம்பிக்கையின் மூலம் நான் உயர்ந்த நிலையை அடைந்துள்ளேன்”[2] என்று சுட்டுகிறார்.

கிறித்தவத் தகவலாளி அந்தோணி என்பவர் “எந்த ஒரு செயலுக்கும் நான் இயேசுவை நினைத்துக் கொள்வேன். ஒரு செயலைத் தொடங்கும் பொழுது சிலுவை போட்ட பின் தொடங்குவேன். அதன் மூலம் அக்காரியம்

வெற்றியடையும் என்றும், இயேசு கிறித்து வாழ்வில் எல்லா நன்மைகளையும் அளிப்பார் எனவும் அவரே என் வாழ்வின் ஒளி"[3] எனவும் குறிப்பிடுவதன் வாயிலாக அறியமுடிகின்றது.

"இராசசிங்க மங்கலப் பகுதியில் உள்ள கடற்கரை வாழ் கிறிஸ்தவ மக்கள் இயேசு கிறித்துவின் மீதும், அவர் கொலை செய்யப்பட்ட சிலுவை மீதும், இயேசு கிறிஸ்துவின் அன்னை புனித மரியன்னை மீதும் மற்றும் புனிதர்கள் மீதும் அதிக நம்பிக்கை கொண்டுள்ளதாகக் குறிப்பிடுகின்றனர். தங்கள் குழந்தைகளுக்குப் பாடும் தாலாட்டுப் பாடல்களில் சிலுவை, குருசு, தேவமாதா, சவேரியார், பிரான்சிஸ், சம்மசு போன்ற பெயர்கள் இடம் பெறுவதாக"[4] காரங்காடு திருமதி சவுரியம்மாள் தெரிவிக்கிறார்.

"இசுலாமியர்கள தங்கள் கடவுள் மேல் மிகுந்த ஈடுபாடு உடையவர்களாக இருக்கின்றனர். நாள் தவறாமல் தொழுகையில் ஈடுபடுகின்றனர். வெள்ளிக்கிழமை ஒரு நாள் சிறப்புத் தொழுகை நிகழ்த்துவதாக"[5] திரு.லியாகத் அலி குறிப்பிடுகிறார்.

"இறைவனை வழிபட்டால் அனைத்து வளங்களும் வந்து சேரும். நோய், நொடிகள், கவலைகள் தீரும்"[6] என்று பசீர் அகமது குறிப்பிடுகிறார்.

கள ஆய்வு மேற்கொண்டதில் இராசசிங்க மங்கலச் சிற்றூர்ப் பகுதி மக்கள் தெய்வ நம்பிக்கையில் மிகுந்த ஈடுபாடு உடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

**நாள்கோள் பார்த்தல்**

எந்த ஒரு செயலைத் தொடங்கும் போதும் நல்ல நாள் பார்த்துச் செய்யும் பழக்கம் மாந்தர்களிடையே இருந்து வருகின்றது. நன்மை விளைய வேண்டும் என்ற விருப்பம் இதற்குக் காரணமாக அமைகின்றது.

"தீமைகள் ஏற்படாமலிக்கவும், தீமைகளிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும், நன்மை விளைய வேண்டும் என்ற நோக்கமும் நாள் கோள் பார்த்தலின் அவசியமாகிறது"[7] என்கிறார்.

“நல்லநேரம், காலம் பார்த்து எந்தச் செயல்களைச் செய்தாலும் அச்செயல் வெற்றியடையும் என்றும் அதன்மூலம் முழுப்பயனையும் அடையலாம் என்றும் நம்புவதனை அறிய முடிகின்றது. அதனால் அன்றாட வாழ்வில் இதனைக் கடைப்பிடித்து வருவதாகவும் திரு.க.கண்ணதாசன் குறிப்பிடுகிறார்.”[8]

சான்றாக, காதணிவிழா நிகழ்த்த, திருமணம் செய்ய, பருவமடைந்த பெண்களுக்குச் சடங்குமுறைகள் செய்ய, மாங்கல்யம், வளைகாப்பு, குழந்தைக்குப் பெயர் வைக்க, விதை விதைக்க, வீடு கட்ட, புதுமனை புக, அறுவடை செய்ய, வாகனம் வாங்க, ஆபரணம் வாங்க, கிணறு வெட்ட, பயணம் செய்ய, புதிய தொழில் தொடங்க, வேலைக்குச் செல்ல போன்ற அனைத்துச் செயல்களுக்கும் நாள் பார்த்துச் செய்வது நடைமுறையில் உள்ளது என்பதனைக் கள ஆய்வின் வழி அறியமுடிகின்றது.

**கனவு நம்பிக்கை**

மாந்தர்கள் காணும் கனவுகளின் தன்மைகளைப் பொறுத்து அவை நன்மை, தீமை தருவனவாக அமைகின்றன. மக்கள் பொதுவாகப் பின் நிகழ்வனவற்றை முன்னுணர்த்தும் வகையில் கனவுகள் அமைகின்றன என்பதனைக் கள ஆய்வின் மூலம் தெளியமுடிகின்றது.

“மக்களுக்கு நன்மையோ தீமையோ வருவது கனவு மூலம் தெரிந்துவிடும் என நம்புகின்றனர். மரப்பெட்டி உடைதல், ஏற்றி வைத்த தீபம் அணைதல், தேங்காய் உடைதல் போலக் கனவு கண்டால் தீமை விளையும் என்று கருதுகின்றனர்”[9] என சு.சக்திவேல் குறிப்பிடுகிறார்.

“மக்கள் தங்களுக்கு நிகழப் போவதைத் தெய்வமோ அல்லது முன்னோர்களின் ஆவியோ கனவில் தோன்றிக் கூறுவதாக நம்புகின்றனர்.”[10]

“கனவுகள் ஒருவனின் செயல்பாடுகளை நிச்சயிக்கின்றன. ஒருவன் காணும் கனவுகளை வைத்து மறுநாள் அவன் செயல்பாடுகளைத் தொடங்குகிறான். நற்கனவுகளாகத் தோன்றினால் நன்மை விளையும் என்றும்

தீயகனவுகளாகத் தோன்றினால் தீமை விளையும்"[11] என்று தகவலாளி திரு.மு.ரவி குறிப்பிடுகிறார்.

கனவில் திருமணம், மாமிசம், நெற்குவியல், ஆமை, கனவில் பாம்பு கடிக்காமல் விடுதல், விளக்கு அணைதல், தேங்காய் உடைதல் விலங்குகளைக் காணுதல் போன்றவை தீமை விளைவிக்கும் என்று கள ஆய்வின் வழி அறிய முடிகின்றது.

கனவில் சாவைக் காண்பது, பாம்பு கடிப்பது, உப்பு காணுதல் போன்றவைகள் நன்மை விளைவிக்கும் என்றும் நம்புவதனை அறிய முடிகின்றது.

"பொதுவாகக் கனவுகள் தீமை பயப்பனவாகக் காட்சி தருகின்றன. நன்மை பயக்கும் கனவுகள் சில மட்டும் குறிப்பிடப்படுவதாக இராமநாதன் சுட்டுவார்."[12]

ஒரு சிலர் கனவுப் பலன்களைப் பெரிதும் நம்புகின்றனர். ஒரு சாரார் கனவுப் பலன்களை நம்ப மறுத்ததனைக் கள ஆய்வு உறுதி செய்கிறது.

கனவுகள் எது தோன்றினாலும் அதனைப் பெரிதுபடுத்துவதில்லை. நான் எனது வேலைகளைத் தடையில்லாமல் செய்து வருகிறேன். ஏனெனில் கனவுப் பலன்களை நம்பாதது இதற்குக் காரணம் என்று திரு.ஆ.நாகராசு குறிப்பிடுவார்.

கள ஆய்வில் பேட்டி கண்ட தகவலாளிகளில் 60% பேர் கனவுகளை நம்புகின்றனர். 40% பேர் கனவுப் பலனை எதிர்பார்க்காமல் செயல்படுகின்றனர்.

**திருமணச் சடங்கு**

திருமணம் இரண்டு தனிப்பட்டவர்களுக்கிடையே நடைபெறும் உடன்படுக்கை மட்டுமல்ல. அது இரண்டு குடும்பத்தினிடையே, குழுக்களிடையே இணைப்பை, நெருக்கத்தை ஏற்படுத்தும் உறவுப்பாலம் என்றும் கூறலாம். சங்க காலம் போல் இல்லாமல் இன்று அவரவர் வசதி

வாய்ப்புகளுக்கு ஏற்றவாறு நடத்துகின்றனர். ஆனால் சடங்குமுறைகளை முறையாகப் பின்பற்றி வருகின்றனர்.

தொல்காப்பியர் பத்துப் பொருத்தங்களாக, பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உருவம், நிறுத்த காமவாயில், நிறைப்பொருத்தம், அருள், உணர்வு, திருப்பொருத்தம் என்று குறிப்பிடுகின்றார்.

பொருந்தாத பத்துத் தன்மைகளாக, நிம்புரி, கொடுமை, வியப்பு, புறமொழி, வன்சொல், பொச்சாப்பு, குடிமை, ஏழைமை, மறதி, ஒப்புமை என்று குறிப்பிடுகின்றார்.

இன்றைய மக்கள் திருமணத்திற்குப் பெண் பார்த்தவுடன், பிடித்துப் போயிருந்தால் மணமக்கள் இருவரின் பிறப்புக் குறிப்புப் (சாதகம்) பார்த்து முடிவு செய்கின்றனர். “பத்துப் பொருத்தங்கள் இருக்கின்றதா என்றும் பார்த்து, அவ்வாறு பொருந்தி இருந்தால் இரு குடும்பத்தார்களும் நாள், நட்சத்திரம், கிழமை பார்த்துத் திருமணம் நடத்துவதாகத் திரு.க.கணபதி சுட்டுவார்.”[14]

“பத்துப் பொருத்தங்களில் ஐந்துக்குமேல் ஆறு, ஏழு இருந்தால் போதுமானது. இன்றைய நாளில் பத்துப் பொருத்தங்கள் பார்ப்பது என்பது தொல்காப்பியர் குறிப்பிடும் தன்மைகள் அல்ல என்றும் இன்று பார்க்கப்படும் பொருந்தங்களாவன, தினம், கணம், மகேந்திரம், ஸ்திரீ தீர்க்கம், யோனி, ராசி, வசியம், ரஜ்ஜீ, வேதை, நாடிப் பொருத்தம் என்பனவாகும்”[15] என்று சோதிடர் ரவி குறிப்பிடுவார்.

சங்கச் செவ்வியல் நூல்களின் வழி நோக்கும் போது “களவு மணம், பரிசங்கொடுத்து மணத்தல், சேவை மணம், திணைக் கலப்பு மணம், ஏறுதழுவி மணமுடித்தல், மடலேறி மணமுடித்தல், போர் நிகழ்த்தி மணமுடித்தல், துணங்கையாடி மணமுடித்தல், பலதாரமணம் என்று பலவகையானத் திருமணங்கள் நடைபெற்றன”[16] என்று சசிவல்லி சுட்டுவார்.

மக்கள் வாழ்கின்ற காலம், சூழல், நிலம், பண்பாடு, செல்வநிலை, மனநிலைக்கேற்ப இல்லற அமைப்பும், திருமண முறைகளும் மாறுபடுகின்றன.

“இன்றைய மக்கள் வழக்காற்றில் திருமணச் சடங்குகளாக, உறுதிமொழி கூறித் திருமணம் செய்தல், மணமக்கள் தேர்வு முடிந்தபின் சாதகம் பார்த்தல், பொருத்தம் இருந்தால், நாள் வைத்தல் (அ) நிச்சயம் செய்தல், பந்தக்கால் நடுதல், காப்புக்கட்டுதல், கூறை அணிதல் அதாவது திருமணத்திற்கான உடையணிதல், முளைப்பாலிகை வளர்த்தல், தாலி அணிவித்தல், தாலிக்குப் பொன்னுருக்குதல், கைத்தலம் பற்றித் தீவலம் வருதல் அருந்ததி காட்டல், ஆசி கூறுதல்”[17] போன்றவைகள் கடைப்பிடிக்கப்பட்டு வருவதாக திரு.கு.முனியாண்டி வேளாளர் குறிப்பிடுவார்.

“மணச்சடங்குகளில் தம்பதிகளுக்கு உண்டாகும் புதிய நிலையையும், மாறுதல்களையும், பந்தல் அமைத்தல், ஊர்வலம், மத்தளம் கொட்டுதல், சங்கம் ஊதல் போன்றவைகள் விளம்பரப்படுத்துகின்றன. பரிசமிடுதல், நிச்சயம் செய்தல், கோத்திரம் கூறல் போன்ற சடங்குகள் மண ஒப்பந்தத்தையும், அதற்கு வேண்டியச் சான்றுகளையும் அளிக்கும். தீபம் ஏந்தல், ஆரத்தி, நலுங்கு முதலியச் சடங்குகள் கண்ணேறு படாமல் காப்பதற்காகச் செய்யப்படுபவை. விரதம், உபநயனம், காப்பு போன்ற சடங்குகள் தம்பதிகள் இதுவரையிலிருந்த நிலையிலிருந்து விலகி இருத்தலைக் குறிக்கும். புத்தாடை அணிதல், தாலி, மெட்டி, அணிதல் தம்பதிகள் புதிய நிலைக்கு மாறுதலை அளிக்கும். அம்மி மிதித்தல், அருந்ததிக் காட்டல், குங்குமம், பட்டம் கட்டுதல், மஞ்சனமாடல், தாரை வார்த்துக் கொடுத்தல், கைத்தலம் பற்றல் போன்றவைகள் தம்பதிகளுடைய புதிய கடமைகள், உரிமைகள், நடவடிக்கைகளை அறிமுகப்படுத்தும். ஆசீர்வாதம், விருந்தளித்தல் போன்ற சடங்குகள் தம்பதிகளுடைய புதிய வாழ்க்கைக்கு வேண்டிய ஆதரவளிப்பனவாகும்”[18] எனக் கலைக்களஞ்சியம் சுட்டும்.

சங்கத் தமிழரிடம் காணப்பட்டத் திருமணச் சடங்குகள் இன்றைய மக்கள் வழக்காற்றிலும் வழக்கில் இருப்பதனை நடைமுறை வாழ்வு கொண்டு அறியமுடிகின்றது. இச்சடங்குகள் அவரவர் சாதியச் சமூக நிலைகளில் சிறுசிறு மாற்றங்களுடன் இருந்து வருகின்றன. சங்கத் தமிழரிடம் காணப்பட்ட

சடங்குகள் அப்படியே கடைப்பிடிக்கப்படவில்லை. அவை சிறுசிறு மாற்றங்களுடன் தொடர்ந்து கொண்டிருப்பதைக் கள ஆய்வு உறுதி செய்கிறது.

**நடுகல் நம்பிக்கை**

பண்டைத் தமிழ் மக்களிடம் வேரூன்றியிருந்த நம்பிக்கைகளில் மிகவும் குறிப்பிடத்தக்கது இறந்தார்க்கு நடப்பட்டக் கற்களை வணங்கும் நெறியாகும். போரில் இறந்தார்க்கு வீரர்களின் நினைவினைப் போற்றும் வண்ணம் அவர்களின் பெயர்களையும், பெற்ற வெற்றிகளையும், பெருமையையும் பொறித்துக் கல்நட்டு வணங்கும் மரபு தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே இருந்துள்ளதனை அவர் வெட்சித்திணையின் ஒரு கூறாகக் காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல், பெரும்படை வாழ்த்து என்று குறிப்பிடுவதன் மூலம் அறியலாம்.

இம்மரபு இன்றைய மக்கள் வழக்காற்றிலும் இருந்து வழிபட்டு வருவதனைக் கள ஆய்வு உறுதி செய்கிறது. ஆனால் போரில் இறந்தோர்க்கு அல்ல, "இயற்கையாக மரணம் அடைந்தவர்களுக்குக் கல்நட்டு, அவர்களின் பெயர், பிறப்பு, இறப்பு நாள் போன்றவைகளைக் குறிப்பிட்டு வருடம் ஒரு நாள் வழிபட்டு வருவதாகக்"[19] குறிப்பிடுவர்.

"கிறித்தவர்கள் பெரும்பாலும் சிலுவைக்கல் நடும் பழக்கத்தைக் கொண்டுள்ளனர். வருடம் ஒருமுறை கல்லறைத் திருநாள் கொண்டாடும் வழக்கம் உள்ளது. இவ்வாறு வழிபடுவதன் மூலம் அவர்களின் ஆன்மா சாந்தியடையும், வழிபடுவோர்க்கும் நிம்மதி கிடைக்கும் என்றும் திரு.சகாயம் சுட்டுவார்."[20]

இந்துக்களில் அனைவரும் கல்நட்டு வழிபடுவதில்லை. அவரவர் விரும்பினால் கல்நட்டு, சமாதி கட்டி வழிபடுகின்றனர். இதனைக் கண்ணன் அவர்கள் "எனது தந்தை மரணத்திற்குப்பின் அவரது பெயர், பிறப்பு, இறப்புத் தேதி குறிப்பிட்டுக் கல்நட்டு வழிபட்டு வருகிறேன் என்று தெரிவிப்பதன் மூலம் அறியமுடிகின்றது."[21]

சங்ககால நடுகல் வழிபாட்டின் எச்சங்கள் இன்றும் வழக்கில் உள்ளதனைக் காணமுடிகின்றது.

**நிமித்தம் பார்த்தல் (சகுனம்)**

கற்காலத்திலிருந்து இக்காலம் வரை மனித வாழ்க்கை இயற்கையை அடியொற்றி அமைந்துள்ளது. இயற்கை நிகழ்வுகளைக் காரண காரியத் தொடர்பின்றி நம்ப ஆரம்பித்தான். இவற்றின் அடிப்படையில் தோன்றிய பலவற்றுள் சகுனமும் ஒன்றாகும்.

"மனிதன் ஆற்றப்புகும் செயல்களுக்கும், இற்கையின் நிகழ்வுகளுக்கும் ஒருவிதத் தொடர்பு இருப்பதாக மனிதமனம் கற்பித்துக் கொண்ட நிலையில் நிமித்தக்கூறுகள் உருவாகத் தொடங்கின. காலப்போக்கில் வாழ்வியலில் தொடர்ந்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளோடு அவ்வியற்கை நிகழ்வுகளை இயைந்து நோக்கப்பட்ட நிலையில் அவை சகுனங்களாக வடிவெடுத்தன"[22] என க.காந்தி சுட்டுவார்.

சகுனத்தின் பொருள் நோக்கில் விரிச்சி என்ற சொல் தொடர்புடையது. அவ்விரிச்சி நம்பிக்கையின் பாற்படும். அது "ஒருவர் ஏதேனும் ஒரு செயலைப் பற்றிச் சிந்திக்கவோ, செயலாற்றவோ நினைக்கும் நேரத்தில் அயலிலிருப்பவர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்வது, தான் சிந்திப்பவற்றிற்கு இயைந்தனவாகவோ அல்லது இயையாதனாகவோ அமைந்து மேற்கொள்ளப்போகும் பலனை நிச்சயிக்கும் என நம்பிக்கை கொள்ளுதலே ஆகும்"[23] என்பர் சு.வித்தியானந்தன்.

மாந்தர் மேற்கொள்ளும் வினை அல்லது செயல் இனிதே முடியு மென்பதைக் காட்சி நிகழ்வுகள் மனிதன், பறவை, விலங்கு போன்றவைகள் முன்பே அறிவுறுத்தும். இக்காட்சி நிகழ்வுகளைத் தரவுகளின் அடிப்படையில்,

1. மாந்தர் தொடர்பானவை
2. உடல் உறுப்புகள் தொடர்பானவை
3. பறவைகள் தொடர்பானவை

4. விலங்குகள் தொடர்பானவை

5. ஊர்வன தொடர்பானவை

6. மரங்கள் தொடர்பானவை

7. தெய்வங்கள் தொடர்பானவை

8. கனவுகள் தொடர்பானவை என்று பகுத்து விளக்கலாம்.

**நன்னிமித்தங்கள்**

செவ்வியல் இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள நன்னிமித்தங்களாக விரிச்சிகேட்டல், பறவை நிமித்தம், ஓந்தி, பல்லி, காக்கை, காரிப்புள், மாந்தர் உறுப்புகளில் கண் துடித்தல், தும்மல் போன்றவைகள் குறிப்பிடப்படுகின்றன. இந்நிமித்தங்களில் இன்றைய மக்கள் வழக்காற்றில் பின்பற்றப்படுபவையாக விரிச்சி கேட்டல், பறவை நிமித்தம், பல்லி கத்துதல், காக்கை கரைதல், கண்துடித்தல், தும்மல் போன்ற நம்பிக்கைகள் வழக்கில் இருப்பதனைக் கள ஆய்வின் வழி அறியமுடிகின்றது.

இவற்றில் ஓந்தி, காரிப்புள் போன்ற நம்பிக்கைகள் மக்களிடம் வழக்கிழந்து இருப்பதனைக் காணமுடிகின்றன.

**விரிச்சி கேட்டல்**

விரிச்சி என்பதற்கு நிமித்தம், நற்சொல் கேட்டல் என இருவகைப் பொருளுண்டு. வருங்காரியத்தை முன்னரே தெரிந்து கொள்ள விரிச்சி கேட்கின்ற வழக்கம் பழந்தமிழரிடம் இருந்தது. விரிச்சி பற்றித் தொல்காப்பியர் புறத்திணையியலில்,

**“படையியங்கு அரவம் பாக்கத்து விரிச்சி”**

**(தொல்.பொருள்.1004)**

என்று குறிப்பிடுகின்றார்.

பாக்கத்து விரிச்சி என்பதற்கு இளம்பூரணர் “குறித்த பொருளின் பயன் அறிவதற்குப் பாக்கத்துக் கண் நற்சொல் ஆய்தல்” என்றுரைப்பார்.

இன்றைய மக்கள் சமூகமும் விரிச்சி கேட்டலை கடைப்பிடித்து வருவதை கள ஆய்வின் மூலம் நடைமுறை வாழ்வு கொண்டு அறியமுடிகின்றது.

“ஒரு செயலுக்குப் புறப்படுவதற்கு முன் அச்செயல் இனிதே முடியுமா, இல்லை இடர்பாடு ஏதும் நிகழுமா என்று பார்த்துச் செயல்படுவதாகவும், இதன்மூலம் நன்மை விளையும் என்றும் நம்புகின்றனர்”[26] என்று அ.தியாகராசன் குறிப்பிடுவார்.

சான்றாகத் தொழில் தொடங்க, வீடுகட்ட, வாகனம் வாங்க, நிலம் வாங்க, நீண்ட நாள் தடைபட்டுவந்த செயல்கள் நிறைவேற என பல நிலைகளில் பார்க்கப்படுவதைக் காணமுடிகின்றது.

இதேபோன்று “ஏதேனும் ஒரு செயலைப் பற்றி பேசிக் கொண்டிருக்கும் பொழுதும் சிந்தித்துக் கொண்டு இருக்கும் பொழுதும் பிறர் வாய்ச்சொல்லான ‘மகராசன் நல்லா இருக்கணும்’, ‘நூறு வயது வரை வாழணும்’, ‘போற காரியம் வெற்றியடையனும்’ போன்ற இனிமையான சொற்கள் நன்மை பயக்கும்”[27] என்று முனியசாமி குறிப்பிடுகிறார்.

“ஒரு செயலைப் பற்றிச் சிந்திக்கும் நேரம் பல்லி கத்துதல், தும்மல், மணியோசைக் கேட்டல் போன்றவைகளும் நன்மை பயக்கும்”[28] எனச் சுட்டுவார்.

மனிதர்களால் இன்று பார்க்கப்படும் சகுனங்களில் மிக முக்கியமானது பல்லிச் சகுனமாகும். மனிதர்கள் மீது பல்லி விழும் தன்மையை வைத்துச் சகுனம் நிச்சயிக்கப்படுகிறது. “வயிற்றில் விழுந்தால் குழந்தைப் பேறு கிட்டும், உடம்பில் விழுந்தால் தீர்க்க ஆயுள் கிட்டும்.”[29]

“காகம் கரைந்தால் விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கை இன்றும் மக்களிடம் நிலவி வருகின்றது”[30] என்று சுட்டுவார்.

கனவு நம்பிக்கையைப் பெரும்பாலும் மக்கள் இன்று நம்பி வருகின்றனர். “ஒருவர் தான் இறந்து போவது போன்று காணுதல், உப்பைக் காணுதல், அழுவது போலக் காணுதல், குதிரை, கழுதை, மாடு, பழங்கள்

போன்றவற்றைக் கண்டால் அவர் மறுநாள் வெளியில் எக்காரியம் தொடர்பாகச் சென்றாலும் அச்செயல் நன்மை பயக்கும்''[31] என்று உ.சாத்தையா குறிப்பிடுவார்.

**பிற நன்னிமித்தங்கள்**

மக்கள் ஒரு செயலைத் தொடங்கும் போது எதிரில் சிலரைக் கண்டால் நன்மை விளையும் என்று நம்பிக்கை கொள்கின்றனர். அவ்வகையில் ''ஆண்களில் அந்தணர், வணிகர், வேளாளர், வண்ணான், மீன் விற்போர் ஆகியோரும் பெண்களுள், தாய், மனைவி, குழந்தைகள், சகோதரி, சுமங்கலிப் பெண்கள், நிறைகுடத்துடன் வருவோர், பூவிற்போர், பால்குடம் கொண்டு வருவோர் ஆகியோரைப் பார்த்தால் நற்சகுனம் என்கிறார் திரு.ஆ.ஆறுமுகம்.''[32]

உடல் உறுப்புகளில் கண் துடித்தல், தும்மல் போன்றவைகள் நல்ல சகுனமாகக் கருதப்படுகின்றன. ''பெண்களின் இடக்கண் துடித்தல் நன்மை பயக்கும் என்று திருமதி.தா.மகேஸ்வரி சுட்டுவார். மேலும் செயலுக்கு ஏற்றவாறு தும்மல் சகுனமாக அமையும் என்றும் குறிப்பிடுவார்.''[33]

பறவைகள் தொடர்பானவற்றில் ''மக்கள் ஒரு செயலுக்காக வெளியில் செல்லும் போது பருந்து, கிளி, மயில், சிட்டுக்குருவி, புறா, கொக்கு போன்றவைகள் எதிர்பட்டால் நல்ல சகுனம் என்று நம்புகின்றனர்.''[34]

''விலங்குகளில் பசு, குதிரை, கழுதை, யானை, ஆடு, அணில், நாய், நரி, மான் போன்றவைகளைப் பார்த்துச் சென்றால் நன்மை கிட்டும் என்கிறார்.''[35]

''ஊர்வனவற்றில் பாம்பு, நண்டு, எறும்பு, பல்லி ஆகியனவற்றைப் பார்த்துச் சென்றால் நன்மை விளையும் என்றும், பாம்பில் இரு பாம்புகள் பிணைந்திருப்பதைக் கண்டால் வெற்றி நிச்சயம் என்றும் நம்புவதாக திரு.ஜெகநாதன் சுட்டுவார்.''[36]

மரங்கள் நன்னிமித்தம் உணர்த்தும் வாயில்களாக அமைவதனை உ.வே.சாமிநாத ஐயர் ''மரங்கள் நிமித்தமுணர்த்தும் திறத்தினைப் பண்டைக்

காலந்தொட்டு இன்றுவரை உலகின் பல பாகங்களில் வாழும் மக்களிடம் பரவியிருக்கிறது''[37] என்பர்.

வாழை மரமும், தென்னை மரமும் நன்மை பயக்கும் என்று நம்புகின்றனர். ''ஒரு செயலுக்காக வெளியில் செல்லும் போது குலை தள்ளிய வாழை மரத்தையும், பாலை தள்ளிய தென்னை மரத்தையும் பார்த்துச் செல்லுதல் நன்மை தரும்''[38] என்று உரைப்பர்.

மக்கள் தங்கள் அச்சத்தைப் போக்கிக் கொள்ளவும், தாங்கள் நினைத்தது நடக்கவும் தெய்வத்தை வேண்டுகின்றனர். இத்தெய்வங்களின் முன் கோயில்களில் சகுனம் பார்க்கின்றனர்.

''கோயிலில் பூக்களைக் கட்டிப்போட்டு சிறு குழந்தையை எடுக்கச் செய்து தங்களுக்குச் சாதகமான பூ வந்தால் நற்சகுனம் என்றும், அர்ச்சனையில் இடம்பெறும் தேங்காயினைப் பூசாரி சரிபாதியாக உடைத்தால் அவ்வர்ச்சனைக்குரிய பலன் கிடைக்கும்''[39] என்று சுட்டுவார்.

**தீய சகுனங்கள்**

ஒருவர் மேற்கொள்ளும் செயல் நன்மையின்றி தீமையில் முடியும் என்பதை முன்னறிவிப்பாக உணர்த்துவன தீய சகுனங்கள் எனப்படும். இச்சகுனங்களை இலக்கியங்களில் பல் நிலத்தில் விழுதல், எண்ணெய் தேய்த்தல், ஆண் பன்றியின் மேல் ஏறுதல், ஆடை நீக்குதல், தன்னுடைய படைகள் கவிழுதல் போன்றவைகளாகக் குறிப்பிடப்படுகின்றன. இவை கனவில் தோன்றும் தீய சகுனங்கள் ஆகும். மரங்கள் தொடர்பானவற்றில் உன்னமரம் கரிந்து காணுதல், பறவை நிமித்தங்களில் ஆந்தை, கூகை ஆகியவைகளும், விலங்கு நிமித்தங்களில் யானை, எருது, மறி, கோட்டுமா ஊர்தல் போன்றவைகளும், மாந்தர் நிமித்தங்காட்டுவதில் தலைவிரி கோலம், அழுகைக் கண்ணீர், விளக்கு அணைதல் போன்றவைகளும் சுட்டப்படுகின்றன.

''மாந்தர் உறுப்புகளில் பெண்கள் தலைவிரி கோலமாக எதிர்படுதல், அழுகைக் கண்ணீர், மொட்டைத் தலையுடன் எதிர்படுதல்,

முக்காடு போட்டு வருதல், கணவனை இழந்த பெண் எதிர்வருதல் போன்றவைகள் தீய சகுனங்களை உணர்த்துவதாக நம்புகின்றனர்.''[40]

''ஒரு நற்செயலுக்குச் செல்லும்போது ஏற்றிவைத்த தீபம் அணைதல், வீட்டு நிலையில் தலைதட்டுதல், கால் இடறுதல், தோள் துடித்தல் போன்ற அறிகுறிகள் தீயசகுனமாக இருக்கிறது''[41] என்பர்.

''பன்றி கழிவுகளை உண்ணும் இயல்புடையதால் நற்செயல் கருதி வெளியில் செல்லும் பொழுது பன்றி குறுக்கிடுவது வாகனங்களில் மோதுவது தீய சகுனமாகக் கருதப்படுகின்றன.''[42] அதனால் தான் பன்றி மோதிய வாகனத்தை உடனே விற்றுவிடுவர்.

''நாய், யானை, குதிரை, பசு ஆகியவைகள் தம் இயல்புக்கு மாறான செயல்கள் செய்தல்''[43] தீச்சகுனமாகக் கருதப்படுவதனை ஆய்வில் அறிய முடிகின்றது.

''நற்செயல் காரணமாக சிந்தித்துக் கொண்டு இருக்கும் பொழுதும், பேசிக் கொண்டிருக்கும் பொழுதும் பெண்கள் தும்மினால் தீய சகுனம்''[44] என்று குறிப்பிடுவார்.

**பிற தீச்சகுனங்கள்**

இன்றைய மக்கள் வாழ்வில் எண்ணற்ற சகுனங்களை நம்புகின்றனர். அவற்றில் தீயசகுனத்தை உணர்த்துபவை மிகுதியாகக் காணப்படுகின்றன.

''ஒருவர் ஒரு செயல் கருதி வெளியில் செல்லும் பொழுது அந்தணர் ஒருவராக எதிர்ப்பட்டால் தீச்சகுனம் என்று சுட்டுவார். மேலும் குறவர்கள், அலிகள், மாற்றுத் திறனாளிகள், கையில் மண்வெட்டியுடன் எதிர்ப்படுதல், வெற்றுக் குடத்தினைக் கொண்டு வருதல், கணவனை இழந்தோர் எதிர்ப்படுதல், மொட்டைத் தலையுடன் வருதல், முக்காடு போட்டு வருதல், தலைவிரிகோலமாக வருதல், விறகு சுமந்து வருபவர்களைக் காணுதல் ஆகியவை மாந்தர்கள் தொடர்பான நம்பிக்கைகள் என்றும் பறவைகளில் காகம் தலையில் தட்டிச் செல்லுதல், கருடன் தலையில் அடித்துச் செல்லுதல்,

விலங்குகளில் பன்றி, பூனை குறுக்கிடுதல், நாய் குரைத்துக் கொண்டு மண்ணைக் காலால் கீறுதல், ஊர்வன தொடர்பானவற்றில், ஆமை வீட்டிற்குள் வருதல், பாம்பு வீட்டிற்குள் வருதல், கனவுகள் தொடர்பானவை களில், திருமணக் கோலத்தில் ஒருவரைக் காணுதல், கோயில் மாடு முட்டுதல், பச்சை மரம் வெட்டுதல், பொட்டு அழிதல், புத்தாடை உடுத்தல், மாமிசம் காணுதல், நெற்குவியல் காணுதல் போன்றவைகள் தீய சகுனங்களாக அமைகின்றன"[45] என்று அ.தியாகராசன் சுட்டுவார்.

"தீயஒலிச் சகுனமாக, ஆந்தை கத்துதல், சாக்குருவி, கூகை குழறுதல், நாய் ஊளையிடுதல், பசு கத்திக்கொண்டே இருத்தல், மாந்தர்கள் ஐயையோ என்றலும், எங்கே போகின்றீர் என்று கேட்டலும் தீய சகுனம்"[46] என்கிறார்.

சகுனங்கள் மக்களின் வாழ்க்கையினை, செயற்பாடுகளை நிச்சயிக்கின்றன. புதிது புதிதாகச் சகுனங்கள் தோன்றினாலும், செவ்வியல் நூல்களில் காணலாகும் நம்பிக்கையின் அடிப்படையில் சகுனங்கள் பார்ப்பது இன்றைய மக்கள் வாழ்வில் நிலைபெற்று இருப்பதனைக் காண இயலும்.

இலக்கியங்களில் காணப்பட்டச் சகுனங்களில் உன்னமரம் தளிர்த்தல், கருகுதல் போன்ற நம்பிக்கைகள் இன்று வழக்கிழந்து இருப்பதனைக் காணமுடிகின்றது. இது ஏன் வழக்கிழந்தன என்று கள ஆய்வுத் தரவுகள் சேகரிப்பில் விளக்கம் கிடைக்கவில்லை. உன்ன மரம் என்றால் என்ன? என்பதே பலரும் நமக்கு எழுப்பும் வினாவாக அமைந்தது.

**பேய் நம்பிக்கை**

இன்றைய மக்கள் வழக்காற்றில் பேய் நம்பிக்கை இல்லாதவர்களே இல்லை என்று கூறலாம். அந்த அளவுக்கு மக்கள் இந்நம்பிக்கையில் உளவியல் நிலையில் திளைத்துள்ளனர். இலக்கியங்களில் இந்நம்பிக்கை பதிவு செய்யப்பட்டு இருந்தாலும் இன்றைய மக்கள் வாழ்விலும் இந்நம்பிக்கை மிகுதியாக நம்பப்பட்டு வருவதனைக் கள ஆய்வு உறுதி செய்கிறது. வெறியாட்டு என்பதனோடும் இதனைத் தொடர்பு படுத்திக் கூறலாம்.

**பேய் பிடிக்கக் காரணங்கள்**

“பேய் பிடித்தவர்கள் பிரம்மை பிடித்தவர்கள் போல் காட்சியளிக்கின்றனர். யார் சொல்வதையும் கேட்பதில்லை. எது சொன்னாலும் முறைத்துக் கோபத்துடன் பார்த்தல், உறக்கமின்மை, உடல் சோர்வு, மெலிவு, உடம்பு முழுமையும் யாரோ அடித்தாற் போல் வலி, தனிமையில் சிரித்தல், புலம்புதல், அழுதல், உணவு உண்ணாமை, எதிரில் இருப்பவர்களைத் தாக்க முயற்சித்தல் போன்றவற்றின் மூலம் அறிந்து கொள்ளலாம் என்பார்”[49] பூசாரி.

**பேய் விரட்டுதல் (பேயோட்டுதல்)**

“பேய் பிடித்துள்ளது என்று தெரிந்தவுடன் அதனை ஓட்டுவதற்குச் சில சடங்கு முறைகளைச் செய்து வருகின்றனர். மந்திரவாதி என்று அழைக்கப்படும் பூசாரி பேய் பிடித்தவரை தன் முன்னால் அமர வைத்து பூசைக்குத் தேவையான பொருட்களைப் பரப்பி தனது விருப்பத் தெய்வங்களை அழைத்து உடுக்கை எனும் இசைக்கருவியினை இசைத்துப் பாட்டுப்பாடுவார். இப்பாடல் கேட்டவுடன் பேய் பிடித்தவர் ஆட ஆரம்பித்து விடுகின்றனர். பூசாரி தனது தெய்வ சக்தியால் அப்பேயை விரட்ட முற்படும் சில நேரங்களில் பேய் பிடித்தவர்கள் பூசாரியை எதிர்க்கும் நிலைகளும் ஏற்படுவதாகக் குறிப்பிடுவார். இந்த நேரங்களில் சாட்டை, பிரம்பு முதலியவற்றைக் கொண்டு அடித்து விரட்டுவர் என்பர்.”[50]

“பூசைப் பொருட்களில் முக்கியப் பொருட்களாக எழுமிச்சைப் பழம், முட்டை, குங்குமம், பத்தி, சூடம், சாம்பிராணி, பூ, பழம், தேங்காய், காஞ்சிரங்குச்சி முதலியவைகள் பயன்படுத்தப்படும்”[51] என்று குறிப்பிடுவார்.

**சடங்குமுறை**

இராசசிங்கமங்கலம் மக்கள் பேய்பிடித்தவர்கள் வீட்டிலேயே பெரும்பாலும் சடங்குமுறைகளைச் செய்வதனைக் கள ஆய்வின் வழி அறிய முடிகின்றது.

“இச்சடங்கு பெரும்பாலும் இரவு நேரங்களில் நடத்தப்படுகிறது. பகல் நேரங்களில் என்றாவது ஒருநாள் தான் நடத்தப்படும்”[52] என்று கூறுவார்.

“பேய் ஆடிய பெண்களிடம் பூசாரி உனக்கு என்னென்ன வேண்டும் என்று கேட்டவுடன் அப்பேய் விருப்பப்பட்ட அனைத்துப் பொருள்களையும் கூறுவதாகவும், இவை அனைத்தையும் கொடுத்தால் விலகுவாயா? என்று கேட்பதற்கு விலகுவேன் என்றும் கூறுவதாகச் சுட்டுவார்.”[53]

“பேய் பிடித்தவர்கள் சொல்லும் அனைத்தையும் வாங்கி வந்து ஓரிரு நாள்கள் கழித்து மீண்டும் பூசையை ஏற்பாடு செய்து மீண்டும் அப்பேயை அழைத்துத் தான் கேட்ட அனைத்துப் பொருட்களும் இங்கே உள்ளது. அதனைப் பெற்றுக் கொண்டு விலகிவிடு என்று சொல்வதாகவும், அதனைக் கேட்டு நான் விலகிக் கொள்கிறேன் என்றும் கூறும். பிறகு பூசாரி திருநீரை எடுத்து பேய்பிடித்தவர் தலையில்போட்டு, நெற்றியில் பூசிவிடுவார். அத்துடன் பேய் விலகுவதாக நம்புகின்றனர்.”[54] மேலும் மந்திரித்த கயிறு, தாயத்து போன்றவைகளைக் கொடுத்துக் கட்டச் சொல்கிறார்.

“பேய் சொன்ன அனைத்துப் பொருட்களையும் இரவு நடுச்சாமத்தில் எடுத்துக் கொண்டு பூசாரியோடு உறவினர் ஒரு சிலர் சென்று ஊருக்கு ஒதுக்குப்புறமான இடத்தில் ஒரு மரத்தடியில் கேட்ட பொருட்களை வைத்து வழிபட்டு அம்மரத்தில் ஆணி அடித்து, சேவல் பலியிட்டு அதன் இரத்தத்தைத் தெளிப்பர். பிறகு பேய் பிடித்தப் பெண்ணின் தலையில் இருந்து சேகரிக்கப்பட்ட தலைமுடியை ஆணியில் சுற்றி வைத்துவிட்டுத் திரும்புவதாகக் கோட்டையன் குறிப்பிடுவார்.”[55]

மரத்தில் ஆணி அடித்துத் தலைமுடியைச் சுற்றுவதால் பேய் பிடித்தவரிடம் இருந்த பேய் மரத்தைச் சென்றடைவதாகவும் நம்புகின்றனர்.

“பேய்களுக்குப் பிடித்த பொருட்களாகக் கண்ணாடி, பொட்டு, வளையல், ரிப்பன், வாசனைத் திரவியம் (பவுடர்), சீப்பு, மஞ்சள், குங்குமம், மல்லிகைப்பூ போன்றவைகள் பெண் பேய்களும், பீடி, சிகரெட், சாராயம்,

இறைச்சி போன்றவைகள் ஆண் பேய்களும் கேட்கும்"[56] என்று தகவலாளி பூசாரி குறிப்பிடுவார்.

**கிறித்தவர்கள் பேயோட்டும் முறை**

கிறித்தவர்களிடமும் பேயோட்டும் பழக்கம் இருந்து வருகின்றது. மேல்நாட்டு சமயத்தை நம்பிக் கடைபிடிக்கும் இவர்கள் அடிப்படையில் இங்குள்ள மதம் மாறியத் தமிழர்கள் தேவாலயங்களில் புனித அந்தோனியார் தேவாலயம் இராசசிங்க மங்கலம் பெரிய கண்மாயின் உட்பகுதியில் முத்துப்பட்டிணம் எனும் ஊரில் இச்சடங்கு நடைபெறுகிறது. இவர்கள் உடுக்கை, சாட்டை, பிரம்பு கொண்டு விரட்டுவதில்லை.

"செபம் செய்வதன் மூலமும், பைபிளை பேய்பிடித்தவர்களின் தலையில் வைத்துச் செபிப்பதன் மூலமும் பேய் விலகும்"[57] என்று நம்புவதாக திரு.சேவியர் சுட்டுவார்.

"இசுலாமிய தர்ஹாகளிலும் பேய், நோய், பில்லி, சூனியம் பேயோட்டும் நிகழ்வு நடைபெறுவதாக நம்புகின்றனர். இராசசிங்க மங்கலப் பகுதியில் நிகழவில்லை என்றாலும் இராமநாதபுரம் மாவட்டத்தின் ஒரு பகுதியான ஏர்வாடி தர்ஹாவில் இந்நிகழ்வு நடைபெறுவதாகத் திரு.ச.ராஜாஉசேன் குறிப்பிடுவார்."[58]

அனைத்து மதத்தினரும் இங்குச் சென்று பலன் கிடைப்பதாகக் கூறி வருகின்றனர். பேய் நம்பிக்கை மேற்கண்ட சான்றுகளின் அடிப்படையில் மக்கள் வாழ்வில் இன்றும் மிகுதியாக நம்பப்பட்டு வழக்கில் இருப்பதனைக் காணமுடிகின்றது.

**விழா பற்றிய நம்பிக்கை**

ஒரு சமுதாயத்தின் வளர்ச்சி, வீழ்ச்சி, போக்கு, மறுமலர்ச்சி ஆகியவற்றை அச்சமுதாயம் காலங்காலமாகப் போற்றிக் கொண்டாடிக் கொண்டிருக்கும் விழாக்களின் வழி அறிய இயலும். சமுதாயத்தின் எண்ணப் போக்கிற்குத் தக விழாக்கள் உருவாகியும் மறைந்தும் வரக் காண்கிறோம். விழாக்களின் வழி ஒரு சமுதாயத்தின் பண்பாட்டினை இனங்காணலாம்.

செவ்வியல் நூல்களில் திருமணவிழா, பிறந்த நாள் விழா, கார்த்திகை விழா, பங்குனி விழா, உள்ளி விழா, ஓணவிழா, பூந்தொடை விழா, இந்திர விழா, காமன் விழா, புனலாட்டு விழா என்று பலவகை விழாக்கள் குறிப்பிடப் பட்டாலும் இன்றைய மக்கள் வழக்காற்றில் வழக்கில் இருக்கும் விழாக்களாவன திருமண விழா, பிறந்தநாள் விழா, கார்த்திகை விழா, பங்குனி விழா ஆகியனவாகும். இவற்றைத் தவிர மீதமுள்ள உள்ளிவிழா, ஓணவிழா, இந்திரவிழா, காமன்விழா, புனலாட்டு போன்ற விழாக்கள் வழக்கிழந்து காணப்படுவதனைக் கள ஆய்வு உறுதிசெய்கிறது.

திருமணவிழா பற்றி தனித் தலைப்பாக முன்னர் குறிப்பிட்டது கொண்டு அறியலாம். இன்றைய மக்கள் சமூகத்தில் தங்களுடையப் பிறந்தநாள்களையும், தங்களது குழந்தைகளுடைய பிறந்த நாட்களையும் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றதனை அறியமுடிகின்றது.

“பிறந்தநாள் விழா கொண்டாடுவதன் மூலம் பிறருடைய ஆசிர்வாதம் கிடைக்கின்றது. குழந்தைகளுக்கும் ஒரு இன்பமான நாளாக அமைகின்றது. அவர்களின் மூலம் மற்றவர்களும் மகிழ்ச்சியடைகின்றனர். வருடத்தில் ஒருநாள் இன்பமானதாக அமைத்துக் கொள்வது இதன் நோக்கமாகும்”[59] என்கிறார்.

“திருமண நாள் விழா வருடம் ஒருமுறை திருமணம் நடைபெற்ற நாளில் நிகழ்த்துவதுண்டு. அன்றைய தினம் இறைவனை வழிபட்டு, இயலாதவர்களுக்கு ஏதேனும் உதவிகளைச் செய்து வருவதாகத் திருமதி.மு.அமிர்தம் சுட்டுவார்.”[60]

**கார்த்திகை விழா**

இன்று தமிழகத்தில் கார்த்திகை விளக்கீட்டு விழா கொண்டாடப்பட்டு வருவதும், தலைநாளில் விளக்குகள் மிகுதியாக இடம்பெறுவதும், மற்றைய நாட்களில் சில விளக்குகள் ஏற்றப்படுவதனையும் வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

“இவ்விழா கார்த்திகை நட்சத்திரத்திற்கு உரியவனான முருகப் பெருமானுக்குக் கொண்டாடப்படும் விழாவாக நடைபெற்று வருகின்றது”[61] என்பார்.

திருவண்ணாமலையில் அக்னி வடிவமாகச் சிவன் உறைவதாக நம்பி திருக்கார்த்திகை வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. கார்த்திகை விழாவைத் திருக்கார்த்திகை, கொள்ளிக் கார்த்திகை எனப் பகுத்து வழிபடுகின்றனர். இராசசிங்க மங்கல ஒன்றியப் பகுதி மக்கள் இவ்விழாவினைப் பின்பற்றி வழிபட்டு வருவதனை ஆய்வில் அறிய முடிகின்றது.

“திருக்கார்த்திகை அன்று வீடுகள் தோறும் விளக்கேற்றி வழிபடுவர். கொள்ளிக் கார்த்திகையன்று மக்கள் ஓலைகளை ஒன்றாகச் சேர்த்து ஆள் உயரத்திற்குக் கட்டிப் பொது இடங்களான கோவில் முன்பு அதனைக் கொளுத்திச் சென்று அவரவர் வயல் மூலையில் ஊண்டி வைப்பர். இதன்மூலம் விளை நிலங்களில் பூச்சி தாக்காது என்றும், விளைச்சல் அதிகரிக்கும் என்றும் நம்புவதாகக் குறிப்பிடுவார்.”[62]

**பங்குனி விழா**

முருகன் கோயில்களில் இவ்விழா வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. பங்குனி மாதம் பவுர்ணமியன்று இப்பங்குனி விழா கொண்டாடப்படுகின்றது. இதனைப் பங்குனி உத்தரம் என்றும் வழங்கி வருகின்றனர். இராமநாதபுரத்தில் வழிவிடு முருகன் கோவிலில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. இராசசிங்க மங்கலப் பகுதியில் அழிந்திக் கோட்டையில் உள்ள பாலமுருகன் தண்டாயுதபானி கோவிலிலும் சிறப்பாகக் கொண்டாடப்படுவதாக மக்கள் குறிப்பிடுகின்றனர். கள ஆய்விலும் இதனை அறியமுடிகின்றது.

“பங்குனி உத்தர நாளன்று பொதுமக்களுக்கு உணவு படைத்தால் நன்மை பயக்கும், முருகனின் அருள் கிட்டும் என்று நம்பிக்கை உள்ளதாக திருமதி.ச.காளியம்மாள் குறிப்பிடுவார்.”[63]

பங்குனி மாதத்தில் வருகின்ற உத்தர நட்சத்திரத்தன்று மக்கள் விரதமிருந்து முருகப்பெருமானை வழிபடுவார்கள். “பங்குனி உத்தரத்தன்று மலையிலுள்ள கோயில்களுக்குச் சென்று பொங்கல் வைத்து முருகப் பெருமானை வழிபட்டால் நினைத்த காரியம் நிறைவேறும் என்பார்.”[64]

மேற்கண்ட சான்றுகளின் அடிப்படையிலும், தரவுகளின் அடிப்படையிலும் திருமண விழா, பிறந்தநாள் விழா, கார்த்திகை விழா, பங்குனிவிழா போன்றவைகள் வழக்கில் இருப்பதனையும், உள்ளிவிழா, ஓணவிழா, புனலாட்டு விழா, இந்திரவிழா, காமன்விழா போன்றவைகள் வழக்கிழந்து இருப்பதனையும் காணமுடிகிறது.

**வெறியாட்டு மற்றும் பலியிடுதல்**

தலைவன் மீது காதல் கொண்டத் தலைவி அவன் பிரிவில் உடல் மெலிந்து காணப்பட்டதும், நற்றாய் மகளின் மெலிவுக்குக் காரணம் கேட்டு வேலனை அழைக்கின்றாள். முருகனை வழிபடும் வேலன் தன் வழிபடு தெய்வத்தை அழைத்துப் பாடி பின் இந்நோய் முருகனால் வந்தது என்று கூறுவான். பின் வெறியாட்டு நிகழ்த்தக் களம் அமைத்துப் பூசை செய்து வெறிவிலக்குவர். ஆட்டின் கழுத்தை அறுத்துப் பலியிட்டதனையும் இதன் வாயிலாக அறியமுடிகின்றது. இவ்வெறியாட்டு இன்று பேயோட்டும் சடங்கோடு தொடர்புடையது என்று இன்றைய மக்கள் நம்புகின்றனர்.

“இன்றைய மக்கள் வழக்காற்றில் பேயோட்டும் நிகழ்வில் ஆடு பலியிடப்படுவதில்லை. சேவல் பலியிடப்படுகிறது. அப்படியும் சரியாகாவிட்டால் சிறு பன்றியை அறுத்துப் பலியிடுகின்றனர். இரவு நேரங்களில் மட்டும் இந்நிகழ்வுகளைச் செய்வதாக திரு.கோட்டைச்சாமி பூசாரி தெரிவிப்பார்.”[65]

பேய் மற்றும் தீராத நோய் உள்ளவர்களுக்கு இந்தப் பலியிடுதலைச் செய்தால் குணமடைவர் என்று நம்புகின்றனர்.

“பேய், செய்வினை அகற்றுதல், பில்லி, சூனியம் அகற்றுதல் போன்ற நிகழ்வுகளில் பாதிக்கப்பட்டவரின் இல்லத்தில் அவரை அமர வைத்து வெள்ளை நிறச் சேவலைக் கொண்டு ஏதோ மந்திரம் உபசரித்து தலையைச் சுற்றி விட்டுவிடுவர். பிறகு ஒரு மாதம் கழித்து பூசைக்குத் தேவையான பொருட்களை வாங்கி இரவு நேரத்தில் பச்சரிசி மாவில் மஞ்சள் தூள் சேர்த்து மனித உருவம் போன்ற பொம்மை செய்து அதன்மேல் குங்குமம் தடவி, குண்டூசிகளைக் கொண்டு அவ்வுருவம் முழுமையும் குத்துவர். பிறகு எழுமிச்சைப் பழத்தை அறுத்து குங்குமத்தைத் தடவி பாதிக்கப்பட்டவரின் தலையைச் சுற்றி நான்கு திசைகளிலும் வீசிவிடுவர். பின் தலைசுற்றி விடப்பட்ட சேவலைப் பாதிக்கப்பட்டவரின் தலையில் அமர வைத்து மந்திரங்கள் கூறி சாவலின் உடம்பில் குண்டூசியைக் குத்துவர். பின் சுடாத மண்பானையில் அச்சேவலை உயிருடன் அப்பானைக்குள் திணித்துச் சுடுகாட்டிற்குக் கொண்டு செல்வர். அங்கு முழங்கால் அளவிற்கு குழிவெட்டி படையல் பொருட்களைப் பரப்பிப் பூசை செய்து அக்குழிக்குள் படையல் பொருள்கள் அனைத்தையும் வைத்து, சேவலிருக்கும் பானையையும் வைத்துப் புதைத்து விடுகின்றனர். இவ்வாறு செய்வதன் மூலம் பேய், நோய் பிடித்தவரிடம் இருந்து அவை எல்லாம் சேவலுக்குள் குடிபுகுந்து விடுகின்றது என்று நம்புவதாக தெரிவிப்பார்.”[66]

பலியிடுதல் இன்று மக்களின் வேண்டுதல் நிறைவேறியவுடன் தெய்வங்களுக்கு நிறைவேற்றப்படும் சடங்காகச் செய்து வருகின்றனர். “இன்றைய மக்கள் வாழ்வில் தெய்வங்களிடம் தங்களது குறைகளையும், வேண்டுதல்களையும் கூறி முறையிடுகின்றனர். இதனை நிறைவேற்றினால் உயிர்ப்பலியாக ஆடு, கோழி, சேவல் இவைகளைப் பலியிடுவதாக நேர்ந்து கொள்கின்றனர். இத்தேவைகள் நிறைவேறியவுடன், குறைகள் நிவர்த்தி யடைந்தவுடன் பலியிடுதல் சடங்கினைச் செய்வதாகக் குறிப்பர்.”[67]

“இன்றைய மக்கள் வழக்காற்றில் பலியிடுதல், பல கோரிக்கைகளைத் தெய்வத்திடம் வைத்து நிகழ்த்தப்படுகின்றது. அதாவது குழந்தை இல்லாதோர்

குழந்தை வரம் வேண்டி, திருமணமாகாதோர் திருமணம் நடக்க வேண்டி, செல்வம் வேண்டி, நோய், துன்பம் தீர்த்தல், தொழில் வெற்றியடைதல், வேலை கிடைத்தல், நினைத்த செயல் வெற்றியடைதல், நன்மை விளைதல் போன்றவை நிறைவேறியவுடன் இச்சடங்கினைச் செய்து வருவதாக உரைப்பார்.''[68]

மேற்கூறிய சான்றுகளின் அடிப்படையில் இராசசிங்க மங்கலம் பகுதி மக்களிடம் வெறியாட்டு மற்றும் பலியிடுதல் நம்பிக்கை சிறு மாற்றங்களுடன் வழக்கில் இருப்பதனை அறியமுடிகின்றது.

**முற்பிறப்பு, மறுபிறப்பு**

முற்பிறப்பில் செய்த நல்வினை, தீவினைப் பயனாக மறுபிறப்பில் இன்ப, துன்பங்கள் நிச்சயிக்கப்படுகின்றன. ''உயிர்களின் வினைக்கேற்பப் பிறவிகள் எடுக்கின்றன என்பது பிறவிக் கொள்கையின் அடிப்படையாகும். பிறப்பு வினைப் பயனுக்கேற்ப அமையும் என்பது சமுதாயக் கொள்கையாகும்''[69] என்பார் சு.சக்திவேல்.

ஒப்பாரிப் பாடல்களில் இறப்பு, இறந்த உயிர், முற்பிறவி, மறுபிறவி, விதி, வினை, அறம் தொடர்பான நம்பிக்கைகள் காணப்படுவதாகவும் சுட்டுவார்.

இன்றைய மக்கள் வாழ்விலும் இந்த முற்பிறப்பு, மறுபிறப்பு நம்பிக்கையினைக் காணமுடிகின்றது. கள ஆய்வில் இராசசிங்க மங்கலப் பகுதியைச் சேர்ந்த மக்கள் இந்நம்பிக்கையைக் கடைப்பிடித்து வருவதாகத் தெரிவிக்கின்றனர்.

''போன பிறவியில் என்ன பாவம் செய்தேனோ / செய்தானோ இன்று இப்படி துன்பப்பட வேண்டியுள்ளது. இப்பிறவியில் ஏதேனும் துன்பம் எவர்க்கும் விளைவித்தால் மறுபிறவியில் அல்லது அவனது மனைவி குழந்தைகளைத் துன்பம் சூழ்ந்துவிடும் என்று நம்புவதாகக் குறிப்பிடுவார்.''[70]

''நான் செய்த பாவங்கள் எனது பிள்ளைகளைச் சேரும். இல்லையெனில் அடுத்த பிறவியில் என்னைச்சேரும் என்கிறார் திரு.உ.பஞ்சவர்ணம்.''[71]

மேற்காணும் சான்றுகள் முற்பிறப்பு மறுபிறப்பு நம்பிக்கை வழக்கில் இருப்பதனை உறுதிசெய்கிறது.

**ஊழ்வினை, நல்வினை, தீவினை**

ஊழ்வினை என்பது முற்பிறப்பில் செய்த நல்வினை, தீவினைகள் ஆகும். ஊழ்வினை உண்டென்னும் உண்மையைத் தொல்காப்பியர்,

> **"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
> **ஒன்றி உயர்ந்தது பாலது ஆணையின்**
> **ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**
> **மிக்கோர் ஆயினும் கடிவரை யின்றே"(தொல்.பொருள்.90)**

எனும் நூற்பாவில் சுட்டுகிறார். பழந்தமிழ் இலக்கியங்களும் முற்பிறப்பில் ஒருவர் செய்த நல்வினை தீவினைகளுக்கேற்ப அடுத்த பிறவியில் அவருடைய இன்ப துன்பங்கள் நிச்சயிக்கப்படுகின்றது என்தனை உணர்த்துகின்றது.

மனிதன் ஒரு பிறப்பில் செய்த வினைகளின் பயனைப் பின் வரும் பிறவிகளில் அனுபவித்துத் தீர வேண்டும் என்பது ஊழ்வினையின் நியதியாகும். ஊழ் மனிதனால் வெல்ல முடியாத ஒன்று என்பது பழந்தமிழரின் கொள்கை எனலாம்.

இன்றைய மக்கள் வாழ்விலும் இந்நம்பிக்கை இருந்து வருவதனைக் காணமுடிகின்றது. "ஒருவன் அவனது வாழ்வில் நல்ல செயல்கள் செய்தால் பிற்காலத்தில் அல்லது அடுத்த பிறவியில் நல்ல வாழ்வும், தீய செயல்கள் செய்தால் துன்பம் நிறைந்த வாழ்வும் கிடைக்கும் என்பார்"[72] திரு.ம.பாலகுரு.

ஒருவன் வாழ்வில் துன்பங்களைச் சந்தித்துக் கொண்டிருந்தால் போன பிறவியில் என்ன பாவம் செய்தானோ? என்று மக்கள் இன்றும் ஒருவரைப் பற்றி ஒருவர் பேசிக் கொள்வதனைக் காணமுடிகின்றது.

நல்வினை, தீவினைகளும் இவ்வினைகள் அடிப்படையில் சேரும். நல்வினையாற்றியோர் இன்பமாக வாழ்தலும், தீவினையாற்றியோர் துன்ப வாழ்வு வாழ்தலும் கொண்டு அறியமுடிகின்றது. ஒருவன் வாழ்வில்

முடிந்தவரை நன்மை செய்யவேண்டும், துன்பங்கள் செய்தல் கூடாது. நாம் எது செய்கிறோமே அது நம் வாழ்வில் பிற்காலத்தில் விழையும் என்று நம்புகின்றனர்.

**கூற்றுவன் பற்றிய நம்பிக்கை**

ஒருவனுடைய வாழ்நாள் இவ்வுலகில் முடிந்தவுடன் கூற்றுவன் வந்து உயிரைக் கவர்ந்து செல்வதாகச் சங்க காலம் தொட்டு இன்றுவரை மக்கள் நம்புகின்றனர். அவரவர் செய்த நல்வினை, தீவினைகளுக்கேற்ப அவர்களது உயிர் வெவ்வேறு உலகங்களுக்குச் செல்வதாகக் குறிப்பிடுகின்றனர்.

“எமன் உயிரைக்கொண்டு செல்பவன். ஆயுள் முடிந்தால் அவர்களுடைய உயிரை எடுத்துச் செல்வான். ஒருவன் தனது வாழ்நாளில் நன்மை செய்திருந்தால் சொர்க்கத்திற்கும், தீமை செய்திருந்தால் நரகத்திற்கும் கொண்டு செல்வான் என திருமதி.க.செல்வி குறிப்பிடுவார்.”[73]

இதே ஊரைச் சேர்ந்த திருமதி.ர.வள்ளி கூறுகையில் “இவ்வுலகில் பாவங்களை அதிகமாகச் செய்து வந்தால் எமன் விரைவில் அவர்களின் உயிரை எடுத்துச் செல்வான். புண்ணியம் செய்தால் நீண்ட நாள் வாழலாம் என்கிறார்.”[74]

இச்சான்றுகளின் அடிப்படையில் கூற்றுவன் பற்றிய நம்பிக்கை எமன் எனும் பெயரில் வழக்கில் இருப்பதனை நம்பமுடிகின்றது.

**சுவர்க்கம், நரகம்**

மக்கள் இறந்த பின் செல்லக்கூடிய உலகம் ஒன்று உண்டு என்று நம்பினர். இவ்வுலகில் நன்மை செய்தவர்கள் மறு உலகமாகிய சுவர்க்கத்தில் இன்பம் துய்ப்பார்கள் என்றும், தீமை செய்தவர்கள் மறு உலகமாகிய நரகத்தில் துன்பம் அடைவார்கள் என்றும் நம்புவதைக் கள ஆய்வின் வழி அறியமுடிகின்றது.

இராசசிங்க மங்கலப் பகுதி மக்களிடம் கள ஆய்வு மேற்கொண்ட போது “பிறருக்குத் துன்பம் விளைவிக்காமல் நன்மைகள் செய்தவர்கள் மேலுலகத்தில் அதாவது சொர்க்கத்தில் நல்ல வாழ்வு கிடைக்கும், தீமைகள்,

துன்பங்கள் செய்தவர்கள் நரகத்தில் துன்ப வாழ்வு பெறுவார்கள் என்று நம்புவதாகக் குறிப்பிடுவார்.”[75]

**மந்திரம் - வழக்கும் இழப்பும்**

இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள மந்திரங்கள் இன்றைய மக்கள் வாழ்விலும் இருப்பதை நடைமுறை வாழ்வு கொண்டு அறிய முடிகின்றது. இராசசிங்க மங்கல ஒன்றியப் பகுதி மக்களிடம் மேற்கொண்ட கள ஆய்வு இதனை உறுதிப்படுத்துகின்றது. மந்திர தந்திரங்களை மக்கள் நம்புவதனைக் கள ஆய்வின் மூலம் கண்டறிய முடிகின்றது.

திருமதி வளர்மதி அவர்கள் “மந்திரங்களை மக்கள் முழுமையாக நம்புகின்றனர். ஒருவருக்கு மந்திரத்தின் மூலம் செய்வினை செய்துத் துன்பப்பட வைக்கலாம். மந்திரத்தின் மூலம் செய்த செய்வினையை எடுக்கலாம்”[76] என்றுரைக்கிறார்.

“நாள்பட்ட நோய், பேய் போன்றவைகளும், செய்வினைகளும் மந்திரத்தின் வாயிலாகக் குணமடையும் என்று திரு.செந்தில்குமார் குறிப்பிடுகிறார்.”[77]

“மந்திரத்தின் மூலம் ஒருவரைக் குணமடையவும் செய்யலாம், இறந்து போகவும் செய்யலாம், எதிரிகளைத் தண்டிக்கவும் செய்யலாம் என்பார் திரு.அழகுசுந்தரம்.”[78]

**சாபம் வழக்கும் இழப்பும்**

சாபம் அன்று முதல் இன்று வரை மக்கள் வாழ்வில் கடைப்பிடிக்கப் பட்டு வரும் முக்கிய நிகழ்வாகும். ஒருவனைச் சாபத்தின் மூலம் அழிக்க முடியும் என்று நம்பியது இதற்குக் காரணமாக அமைகின்றது. இன்றைய மக்கள் வாழ்விலும் ‘சாபம்’ பற்றிய நம்பிக்கை இருந்து வருவதனைக் கள ஆய்வு உறுதி செய்கின்றது.

“சாபத்தின் மூலம் பலர் தன் வாழ்வியல் நிலைகளை விட்டுச் சீரழிந்து உள்ளதனைத் தனது வாழ்வில் பார்த்து உள்ளதாகவும், ஒருவரது

சாபம் இல்லாவிட்டாலும் ஒருவரது சாபம் பழித்துவிடும்''[79] என்றும் திருமதி கருப்பாயி சுட்டுவார்.

''தனக்குப் பிடிக்காதவர்கள், சண்டைக்காரர்கள் போன்றவர்களைச் சபித்தலில் ஈடுபடுகின்றனர் மக்கள். சண்டையின் போது ஒருவருக்கொருவர் 'நீ நாசமாகப் போக', 'உருப்புடாமப் போக' என்று மண்வாரித் தூற்றுதலும் உண்டு. கருநாக்குக்காரர்கள் கூறினால் அப்படியே பழிக்கும்''[80] என்று சுட்டுவர்.

''சாபமிட்டால் ஒருவருக்கு அப்படியே நேர்ந்துவிடும் என்றும், சிலர் கோயில்களில் சொல்வதுண்டு. ஒருசிலர் காசு வெட்டிப்போட்டு எதிரியைத் தண்டிக்கச் செய்வதும் உண்டு''[81] என திரு.மாடசாமி குறிப்பிடுவார்.

இவ்வாறு சாபமிடுதலின் மூலம் ஒருவரைத் தண்டிக்கவும் வாழ்க்கையை அழிக்கவும் முடியும் என்று நம்புவதனை அறியமுடிகின்றது. இன்றும் மக்களில் சிலர் ஒருவனின் வாழ்க்கை நிலையினைப் பார்த்து அவன் சாபம் சும்மாவிடுமா? என்று கூறிவருவதனைக் காணமுடிகின்றது.

**அசரீரி - வழக்கும் இழப்பும்**

அசரீரி என்பதற்கு உடலுருவற்றது, மறைவான வாக்கு அல்லது தெய்வ வாக்கு என்று பொருளுரைக்கப்படுகிறது. கண்ணுக்குக் காட்சியளிக்காமல் ஒலி மட்டும் கேட்பதாகக் குறிப்பிடப்படுகின்றது. தான் நினைத்தச் செயலுக்கு சிந்தனைக்கு ஏற்பத் தெய்வ வாக்குப் போன்று அமைவதாகும்.

இன்றைய மக்கள் வாழ்வில் இந்நம்பிக்கையானது வழக்கில் இருப்பதாகத் தெரியவில்லை. கள ஆய்வில் இப்பகுதி மக்கள் அசரீரி என்பது தெரியாமலேயே இருந்து வருவது தெரியவருகின்றது.

இன்றைய மக்கள் வழக்காற்றில் ஏதேனும் ''ஒரு நற்செயலை சிந்தித்துக் கொண்டிருக்கும் பொழுது, மணியோசை கேட்டல், பல்லி கத்துதல், தும்முதல் போன்றவைகள் நன்மை தருவதாக திரு.சங்கரலிங்கம் தெரிவிப்பார்.''[82]

அசரீரி நம்பிக்கையைக் கள ஆய்வின் வழி நோக்கும் பொழுது இன்றைய மக்களின் நடைமுறை வாழ்வில் வழக்கிழந்து இருப்பதனை நாம் அறியமுடிகின்றது.

**மடலேறுதல்**

சங்க காலத்தில் தான் விரும்பிய பெண்ணைத் திருமணம் செய்வதற்காகத் தலைவன் பனையின் மடலைக் கொண்டு குதிரை அமைத்துத் தன் காதலை ஊரார்க்கு வெளிப்படுத்தி மணம் முடித்ததை அறியமுடிகின்றது. இவ்வாறு செய்தால் தனது திருமணம் நடக்கும் என நம்பியது இதற்குக் காரணமாகும். இன்றைய மக்கள் வழக்காற்றில் மடலேறும் வழக்கம் இல்லை.

காதலுக்காக உயிர்விடும் வழக்கம் இருக்கின்றது. தான் விரும்பும் பெண் தன்னை நம்பாத பொழுது, அவளை நம்ப வைக்கும் பொருட்டுத் தன் உடம்புகளில் ஆயுதங்களால் கீரிக் கொள்ளுதலும் உண்டு. மடலேறுதல் நம்பிக்கையைக் கள ஆய்வின் வழி நின்று நோக்கும் பொழுது வழக்கிழந்து காணப்படுவதனை அறியமுடிகின்றது.

**கைம்மை மகளிர்**

கணவனை இழந்த பெண்கள் கைம்மை மகளிர் என்று அழைக்கப் படுகின்றனர். இன்றும் கணவனை இழந்தவர்களைக் கைம்பெண், விதவை எனும் சொற்களில் அழைப்பதைக் காணமுடிகிறது.

“கணவனை இழந்த பெண்களை கைம்பெண் விதவை என்று அழைப்பார்கள்”[83] எனத் திருமதி.பூ.கலா சுட்டுவார்.

“கைம்பெண்கள் தலையில் பூச்சூடக்கூடாது, பொட்டு வைக்கக் கூடாது, அணிகலன்கள் அணியக்கூடாது”[84] என்று திருமதி.ச.வளர்மதி குறிப்பிடுவார்.

“ஒரு காலத்தில் கணவனை இழந்தவர்கள், வெள்ளை ஆடை உடுத்தி இருந்தனர். காலப்போக்கில் இந்நிலை மாறிவிட்டது. ஆனால் இன்றும் இவர்கள் சுபகாரியங்களுக்கு முன் நிற்பதில்லை. தங்கள் நிலையை

மக்களும் நல்ல செயல்களுக்கு முன்னிறுத்திச் செயல்பட நினைக்க மாட்டார்கள். இவர்களை அமங்கலமாகக் கருதுகின்றனர்”[85] என்பார்.

“விதவைப் பெண்களை எவ்விதமானச் சுபகாரியங்களுக்கும் முன்னிலைப்படுத்துவதில்லை. இவர்கள் முன்னிருத்தினாலோ அல்லது கலந்து கொண்டாலோ அக்காரியம் சிறப்பாக அமையாது என்றும் நம்புகின்றனர்.”[86]

“சங்க காலத்தில் இருந்தது போன்று உணவுக் கட்டுப்பாடு இன்றைய காலகட்டத்தில் இல்லை என்பதனையும், கணவனுடைய சிதையில் புகுந்து தீப்புகும் வழக்கமும் இல்லை. கணவன் இறந்த செய்தி கேட்டு மரணமடையும் மனைவி இன்று ஒருசிலர் இருப்பதாகச் சுட்டுவார்.”[87]

“இன்றையக் கைம்பெண்கள் நல்ல உணவு, உடை போன்றவை களுடன் வாழ்கின்றனர். அணிகலன்களில் ஒரு செயின் அணிந்து கொண்டுள்ளனர். தலையில் பூ, பொட்டு வைப்பதில்லை என்று குறிப்பிடுவார்.”[88]

“உடன்கட்டையேறும் வழக்கம் இன்றைய கால கட்டத்தில் இல்லை எனவும், கணவன் இறந்தவுடன் இறந்த பெண்கள் சிலரை நாளிதழ்கள் மூலம் அறிந்ததாகவும் திரு.கோட்டைச்சாமி தெரிவிப்பார்.”[89]

“சில பெண்கள் கணவன் இழந்த துக்கம் தாங்காமல் அதிர்ச்சியில் இருந்து சில நாட்கள் கழித்து தற்கொலை செய்து கொல்வது இன்றும் மக்கள் வழக்கில் இருப்பதாகச் சுட்டுவார்.”[90]

மேற்சுட்டியச் சான்றுகளின் அடிப்படையில் இன்றைய மக்கள் வழக்காற்றில் கைம்மை மகளிர் மற்றும் அவர்களுக்குரிய நோன்புகளில் கைம்மை நம்பிக்கைகள், நோன்பு முறைகள் வழக்கிழப்பதை அறிய முடிகின்றது.

**கணவனைத் தொழுதால் மழை பெய்யும்**

கணவனைத் தொழுதால் மழை பெய்யும் எனும் நம்பிக்கை இருந்ததனை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இந்நம்பிக்கை இன்று வழக்கிழந்து இருப்பதனை அறியமுடிகின்றது.

“முற்காலத்தில் கணவனைத் தொழுதால் மழை பெய்யும் எனும் நம்பிக்கையும், பத்தினிப் பெண்கள் மழையை நிற்கச் சொன்னால் நிற்கும் எனவும் கேள்விப்பட்டதாகவும், இன்று அவ்வாறு நம்பிக்கைகள் இல்லை எனவும் திரு.திருவேல்முருகன் கூறுவார்.”[91]

“பெண்கள் காலை விழித்தெழுந்தவுடன் கணவனின் காலைத் தொட்டுக் கும்பிட்டுத் தன் மாங்கல்யத்தையும் கண்களில் ஒற்றிக் கொள்வர். இன்று வயதான பெண்கள் சிலர் மட்டும் அவ்வாறு செய்வதாகவும் மற்றவர்கள் அவ்வாறு செய்வதில்லை எனவும் குறிப்பிடுவார்.”[92] கணவனின் பெயரைக் கூறாத பெண்கள் சிலர் இன்றும் இருக்கின்றனர். மேற்கூறிய சான்றுகளின் வாயிலாக இந்நம்பிக்கை வழக்கிழந்து இருப்பதனைக் காண முடிகின்றது.

**புலிப்பல் தாலியும், ஐம்படைத் தாலியும்**

புலிப்பல் தாலியும், ஐம்படைத்தாலியும் அணிந்திருந்ததைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. “இளஞ்சிறார்க்கு வீரத்தின் அறிகுறியாக அல்லது ஆற்றலை அதிகரிக்கும் காப்பணியாக புலிப்பல்தாலியை அணிந்திருக்கலாம் என்பார்.”[93] இந்நம்பிக்கை இன்றைய நடைமுறை வாழ்வில் வழக்கிழந்து காணப்படுகின்றது.

“பத்து வருடங்களுக்கு முன்பு கிராமங்களில் ‘நரிப்பல்’ எனும் அணிகலன் அணிந்திருந்ததாகவும், காலப்போக்கில் இந்நம்பிக்கை வழக்கிழந்து காணப்படுவதாகவும் சுட்டுவார்.”[94]

இன்று மக்கள் வாழ்வில் குழந்தைகளுக்கு இடையில் கட்டும் அரைஞாண் கயிற்றில் விலங்கு, ஊர்வன போன்ற உருவங்கள் அமைந்த வெள்ளியால் ஆன அணிகலன் அணிந்திருப்பதைக் காணமுடிகின்றது. இன்று பற்கள் கோத்து அணிவதில்லை. அணிகலன்கள் கழுத்து, கை, கால், இடை போன்ற இடங்களில் அணிகின்றனர்.

**நிலவைப் பாம்பு விழுங்குதல்**

இன்று சந்திரகிரகணம் என்று அழைக்கப்படுவதனை அன்று நிலவைப் பாம்பு விழுங்குவதாக நம்பியதனை இலக்கியங்கள் சுட்டிச்

செல்கின்றன. இன்றும் இயற்கையாக நிகழக்கூடிய நிகழ்வுகளில் ஒன்று. "இந்நிகழ்வு நேரம் உணவு உண்ணக்கூடாது என்றும் அவ்வாறு உண்டு வந்தால் நோய் உண்டாகும் என்றும் பெரியோர் சுட்டுவார்."[95]

இந்நிகழ்வு இயற்கையாக நிகழக்கூடியது. இதனை இன்று யாரும் பெரிதாக எடுத்துக் கொள்வதில்லை. வயதான சிலரே உணவு உண்ணக் கூடாது என்று கூறிவருகின்றனர்.

**இன்றைய மக்கள் நம்பிக்கைகள்**

இன்றைய மக்கள் தங்கள் வாழ்வில் பல்வேறு நம்பிக்கைகளைக் கடைப்பிடித்து வருகின்றனர். இன்றைய நிலையில் பெரும்பாலும் வெளியில் புறப்படும் பொழுது மட்டும் சகுனங்கள் பார்க்கப்படுகின்றன. அச்சகுனங்களைக் கள ஆய்வின் வழி தொகுத்துக் காணலாம்.

**நல்ல சகுனங்கள்**

"ஒருவர் வெளியில் செல்லும் போது சுமங்கலிப் பெண் எதிர்படுதல் நல்ல சகுனமாகக் கருதுகின்றனர். இதனால் எடுத்த செயல் வெற்றியடையும் என்று நம்புகின்றனர்."[96]

"நிறைகுடத்துடன் பெண்கள் எதிர்படுதல் நல்ல சகுனம் என்று நம்புவதாக திரு.ஆ.காளீஸ்வரன் சுட்டுவார்."[97]

ஒருவர் பயணம் மேற்கொள்ளும் போது திருமண ஊர்வலம் எதிரில் வருதல் நல்ல சகுனம். இதன்மூலம் நினைத்த செயல் நன்றாக முடியும் என்று நம்புகின்றனர். மேலும் திருவிழாக் கூட்டத்தைக் காண்பதும் நல்லது என நம்புவதாகவும் குறிப்பிடுவார்.

"மங்கல ஒலிகளாக இரட்டைத் தும்மல், கோயில் மணி அடித்தல் போன்றவைகள் நல்ல சகுனங்களாக அமையும் எனவும், வெளியில் செல்லும் போது பிணம் எதிர் வருதல், வண்ணான் அழுக்குமூட்டை கொண்டு வருதல் போன்றவைகள் நற்சகுனமாகும் என்பார்."[98]

இதேபோன்று உள்ளங்கை அரித்தல், உள்ளங்கால் அரித்தல், பணம் தவறுதல், உள்ளங்கையைக் காலையில் பார்த்தல், மாறுகண், ஆறுவிரல் இருத்தல் போன்றவைகள் நன்மை தரும் என்று கள ஆய்வின் மூலம் அறியமுடிகின்றது.

**தீய சகுனங்கள்**

தீய சகுனங்களாக மக்கள் சிலவற்றை நம்புகின்றனர். ஒருவர் செல்லும் செயலுக்கு மாறாக விளைவுகளைத் தரும் நிகழ்வுகள் தீச்சகுனங்கள் ஆகும். இச்சகுனத்தால் பல்வேறு துன்பங்கள் ஏற்படுவதாக மக்கள் நம்புகின்றனர்.

“தோள் துடித்தல், கலகத்தைப் பார்த்தல், கால் இடறுதல், நிலைப்படியில் தூங்குதல், நீரால் கோலம் போடுதல், வெளியில் செல்லும் பொழுது நிலை தட்டுதல், அழுகுரல், அவச்சொற்கள், சனிக்கிழமை இறத்தல், சித்திரை மாதம் குழந்தை பிறப்பு, இரவில் வீட்டைப்பெருக்கி வெளியில் தள்ளுதல், ஒற்றைக் காலில் நிற்றல், பணத்தை மிதித்தல், கண்ணாடி உடைதல், இலையைத் தாண்டுதல் போன்றவைகள் தீய சகுனங்களாக அமைகின்றன என்று திரு.ஜெயப்பாண்டி கூறுவார்.”[99]

மாந்தர்கள் பறவைகள், விலங்குகள், ஊர்வன போன்ற உயிர்களுடன் நம்பிக்கையைப் பொருத்திப் பார்க்கின்றனர். இவைகளை முன்னிறுத்திப் பல்வேறு நம்பிக்கைகள் வழக்கில் உள்ளன.

“ஒரு வீட்டில் வெளவால் தங்குதல், குருவிக் கூட்டைக் களைத்தல், கோழி ஓடு இல்லாத முட்டையிடுதல் போன்றவைகள் தீச்சகுனமாகும். அதேபோல் புறா வீட்டில் வளர்த்தால் தரித்திரம் உண்டாகும் என்று நம்புவதாக”[100] திரு.க.முத்துவைரி சுட்டுவார்.

“நற்காரியம் தொடர்பாகச் செல்லும் பொழுது குதிரை, யானை, காளை மாடு எதிர்ப்பட்டால் நன்மை உண்டாகும். பன்றி, பூனை குறுக்கிடுதல் தீச்சகுனமாகும். எதிர்பாராமல் வாகனங்களில் பன்றி மோதினால் அதனை விற்று விடுவதை இன்றும் மக்கள் நம்பிக்கையாகக் கடைப்பிடித்து வருகின்றனர்.”[101]

**தொழில் தொடர்பான நம்பிக்கைகள்**

தொழில்கள் இன்றைய உலகத்தை இயக்கும் சக்தியாக வளர்ந்துள்ளன. செய்யும் தொழிலே தெய்வம் என்றும், வினையே ஆடவர்க்கு உயிரே என்றும் நம்புகின்றனர். ஒவ்வொரு தொழிலும் பலவிதமான நம்பிக்கைகளைக் கொண்டுள்ளன.

**கட்டிடத் தொழில் தொடர்பான நம்பிக்கைகள்**

கட்டிடம் விரைவில் நல்லமுறையில் கட்டி முடிப்பதற்கும், அக்கட்டிடம் கட்டும் போது அதில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கும் எவ்வித இடையூறு ஏற்படாமலிருக்கவும், அவ்வீட்டில் குடியேறுபவர்களுக்கு நன்மை உண்டாகவும் சில நம்பிக்கைகளைப் பின்பற்றுகின்றனர்.

**இடம் தேர்வு செய்தல்**

“கட்டிடம் கட்டுவதற்கு முதலில் இடத்தைத் தேர்வு செய்ய வேண்டும். அவ்விடத்தில் தோண்டும் போது தானியங்கள், தவளை, பல்லி, இருந்தால் நன்மை எனவும், பாம்பு, ஆமை, தேள் போன்றவைகள் இருந்தால் தீமை எனவும் நம்புவதாகத் திரு.மாடசாமி ஆசாரி குறிப்பிடுவார்.”[102]

**பூசை போடுதல்**

“கட்டிடம் கட்டுவதற்கு முன் சிறு குழி தோண்டி அக்குழியில் மஞ்சள், நவதானியம், நாணயம் போன்றவற்றைப் போட்டு பின் தேங்காய் பழம் வைத்துப் பூசை செய்து, எலுமிச்சைப் பழத்தை நான்காக அறுத்து குங்குமம் தடவி நான்கு திசைகளிலும் வீசுவர். இவ்வாறு செய்வதன் மூலம் கட்டிடம் கட்டி முடிக்கும் வரை எவ்வித இடையூறும் ஏற்படாது என்று நம்புவதாகத் தெரிவிப்பார்.”[103]

அதன்பின் நிலை வைத்தல், நிகழ்வு நடைபெறும் என்றும், வைகாசி, ஆவணி, கார்த்திகை, பங்குனி மாதங்களில் கட்டிடம் கட்டத் தொடங்கினால் விரைவாகக் கட்டி முடிக்கலாம் என்றும் நம்புவதாகத் தெரிவிப்பார்.

கட்டிடம் கட்டும்பொழுது பொருட்கள் அனைத்தும் புதியதாக வாங்கிக் கட்டுதல் நன்மை தரும், கருஞ்செங்கல் வைத்துக் கட்டக்கூடாது. மனையடி சாஸ்திரத்தில் உள்ள அளவுப்படிக் கட்டிடம் கட்ட வேண்டும். ஒரு தூண் மட்டும் வைத்துக் கட்டக்கூடாது. தேக்கு, வேங்கை, வேம்பு முதலிய மரங்களை மட்டும் பயன்படுத்த வேண்டும் என்பதைக் காணமுடிகிறது.

**கண்ணேறு கழிதல்**

இன்றைய மக்கள் தங்கள் வாழ்வில் கண்ணேறு கழித்தல் எனும் சடங்கினைப் பெரிதும் செய்து வருகின்றனர். குழந்தைகளுக்கு, வாகனங்களுக்கு, வீடு, கடைகளுக்கு என பல நிலைகளில் இச்சடங்கினைச் செய்து வருகின்றனர்.

வீடுகளில் இச்சடங்கினைச் செய்யும் பொழுது "தெருவின் முச்சந்தியில் மண்ணெடுத்து ஒரு பாத்திரத்தில் நெருப்பு அள்ளி அவற்றில் உப்பு, மிளகாய், எடுத்து வந்த மண் போன்றவற்றைப் போட்டு வெடிக்க வைப்பர். நன்றாக வெடித்தால் கண்ணேறு கழிந்ததாகவும் வெடிக்கவில்லை என்றால் கண்ணேறு கழியவில்லை என்றும் நம்புகின்றனர். பின் தெருவின் முச்சந்தியிலே கொட்டிவிடுவர் என்பர்."[104] இதன்மூலம் கண்ணேறு கழிந்துவிடும் என நம்புகின்றனர்.

"கடைகளுக்கு இரவு நேரங்களில் கடையை அடைக்கும் பொழுது தேங்காய் மீது சூடத்தை வைத்துக் கொழுத்தி உடைத்தால் கண்ணேறு கழிவதாக நம்புகின்றனர்."[105]

குழந்தை நன்றாகவும், கடவுளின் ஆசியுடன் நோய் நொடி இல்லாமல் பிறக்க வேண்டும் என்று மக்கள் பல்வேறு சடங்குகளையும், வழிபாடுகளையும் செய்கின்றனர். விருப்பப்பட்ட குழந்தை பிறக்க வேண்டும் என்று மந்திரங்கள் படித்தும், நேர்த்திக்கடன்கள் செய்வதாகவும் வேண்டிக் கொள்கின்றனர். இவ்வாறு மக்கள் பல்வேறு நம்பிக்கைகளைக் கடைப்பிடித்து வருவதனைக் கள ஆய்வின் வழி அறியமுடிகின்றது.

**பிறப்புச் சடங்கு**

திருமணமும், குழந்தைப் பிறப்பும் சமூக நிகழ்வுகளில் பெரும் சிறப்பிடம் பெறுகின்றன. மக்கட்பேறு ஆண்டவனுடைய நன்கொடை. ‘வயிற்றின் கனி வெகுமதி’ என விவிலியம் கூறுகிறது. “குடும்பம் என்னும் மரத்திற்குக் குழந்தையே இனிய பழமாகும்”[106] என்று இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார். மக்கட்பேறு இல்லாதப் பெண்களை ‘மலடி’ என்று வசைபாடுகிறது தமிழ்ச் சமூகம். “மலடி விளை நிலத்திற்குத் தீங்கானவள், மலடி விளை நிலத்தைப் பாழ்நிலமாக்கிடுவாள்”[107] என நரேந்திரநாத் பட்டாச்சாரியா சுட்டுவர். குழந்தைப்பேறின் சிறப்பை வள்ளுவர்,

**“குழலினிது யாழினிது என்பர் தம்மக்கள்**
**மழலைச் சொல் கேளாதவர்”[108] (குறள்.66)**

என்பார். மக்கள் அனைவரும் குழந்தைப் பேற்றை கிடைத்தற்கரிய வரமாகக் கருதுகின்றனர்.

**வளைகாப்பு**

ஒரு பெண் கருவுற்ற செய்தி அறிந்தவுடன் ஏழு அல்லது ஒன்பதாம் மாதத்தில் நிகழ்த்தப்பெறும் நிகழ்வு வளைகாப்பு ஆகும். இச்சடங்கு அப்பெண்ணை மகிழ்விப்பதற்காக நிகழ்த்துவதாகக் கருதப்படுகிறது. குழந்தை பிறப்பதின் எளிமை கருதி உடலில் ஏதுக்களை ஏற்படுத்துவதற்காகவும் இச்சடங்கு நிகழ்த்தப்படுகிறது என்கின்றனர். அனைத்து இன மக்களும் ஒரு பெண்ணின் முதல் குழந்தைக்கு மட்டும் இச்சடங்கை நிகழ்த்துகின்றனர்.

“நல்ல நாள் பார்த்துப் பெண்ணை நீராட்டி, பெண்ணின் திருமணச் சேலையை அணிவித்து மங்கலப் பொருட்களாகச் சந்தனம், குங்குமம் போன்றவற்றைப் பூசுவர். பிறகு பெண்கள் ஒவ்வொருவராக கண்ணாடி வளையல்களை அணிவிப்பர். அதன்பின் தாய்வீட்டிலிருந்து கொண்டுவரப் பெற்றிருக்கும் உணவு வகைகளான, சர்க்கரைப் பொங்கல், புளியோதரை, எலுமிச்சைசோறு, தயிர்ச்சோறு, தேங்காய்ச்சோறு, கேசரி என அனைத்தும் அப்பெண்ணிற்குக் கொடுத்து மகிழ்வர். பிறகு வந்திருக்கும் அனைவருக்கும்

வழங்குவர். இதனைச் சீமந்தம் என்றும் அழைப்பர். இச்சடங்கு முடிந்தபின் தாய்வீட்டிற்கு அழைத்துச் செல்லப்பட்டுக் குழந்தை பிறக்கும் வரையில் அங்கே இருப்பாள்”[109] எனக் குறிப்பிடுவார்.

**காதணி விழா**

இன்றைய மக்கள் ஆண், பெண் ஆகிய இரு குழந்தைகளுக்கும் காதணி அணிவிக்கும் வழக்கத்தை ஒரு விழாவாகக் கொண்டாடி வருகின்றனர்.

**“குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்**
**‘ஆள்அன்று’ என்று வாளிற் தப்பார்”[110] (புறம்.74:1–2)**

என்பது பழந்தமிழரின் வீரமரபு எனப் புறநானூறு சுட்டும். இந்த வீரப்பண்பின் எச்சமே காதணி அணிவித்தலாக மாறியிருக்கக்கூடும் என்று நினைக்கத் தோன்றுகிறது. இன்றும் குழந்தைகள் இறந்து பிறந்தாலும், பிறந்து இறந்தாலும் ஏதேனும் ஒரு முள் அல்லது கத்தி கொண்டு கீறிப் புதைப்பதனை வழக்கமாகக் கொண்டுள்ளனர். நல்லநாள் பார்த்து தாய்மாமன் மடியில் அமரவைத்து வீட்டிலோ அல்லது குலதெய்வக் கோயில்களிலோ காது குத்துகின்றனர். அவரவர் பொருளாதாரத்திற்கேற்ப ஆடம்பரமாகவோ, எளிமையாகவோ இந்நிகழ்ச்சி நடத்துகின்றனர்.

**பூப்புச் சடங்கு**

பெண்கள் பருவமடைந்த நிகழ்ச்சி பொதுவாக அனைத்துச் சமுதாயத்தினராலும் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. பூப்புச் சடங்கு வளத்தை அறிவுறுத்தும் சடங்கு ஆகும்.

**“பெண்கள் பூப்படையும் நிலை பருவ முதிர்ச்சியின் அறிகுறி”[111]** என்பர் க.காந்தி.

பூப்பெய்துதலை புஷ்பவதியாதல், சமைதல், வயதிற்கு வருதல், ஆளாதல், பெரிய பெண்ணாதல் என்றும் அழைப்பர்.

**இறப்புச் சடங்கு**

உயிருள்ளவை அனைத்தும் ஒருநாள் இறக்க வேண்டும் என்பது உலக நியதி.

**“தூங்கையிலே வாங்குகின்ற மூச்சு**
**சுழிமாறிப் போனாலும் போச்சு”**

எனும் சித்தர்களின் கூற்று இதற்கு அரண் செய்வதாக அமைந்துள்ளது. “இந்த உலகில் வாழும் ஒவ்வொரு உயிர்களும் இறந்தபின் என்ன ஆகின்றன என்பது இன்றுவரை மனிதர் மத்தியல் பெரும் வியப்பாக உள்ளது”[112] என்பார் இராமலிங்கம்.

கிறித்தவ மதம் மரணத்தை மறுவாழ்விற்கு அழைத்துச் செல்லும் வழியாகக் கருதுகின்றது. இறந்து போனவர்களை அவர்களது இறந்த நாளில் நினைத்து வழிபடுகின்றனர். அன்று இறந்தவரின் விருப்பமான உணவு வகைகளைப் படையலிட்டு வழிபாடு செய்து சடங்குகள் செய்கின்றனர்.

**ஆவி பற்றிய நம்பிக்கை**

மக்கள் வாழ்வில் எதிர்பாராத நன்மைகளும், தீமைகளும் ஏற்படும் போது இவை மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தியாக நினைக்கின்றனர். நன்மை தரும் சக்திகள் நல்ல ஆவி என்றும் தீமை தருபவை தீய ஆவி என்றும் கருதுகின்றனர்.

“கிறித்தவர்கள் நன்மை தரும் ஆவிகளைச் ‘சம்மனசுகள்’ என்றும் தீமை தரும் ஆவிகளைச் ‘சாத்தான்கள்’ என்றும் பெயரிட்டு அழைப்பர்.”[113]

தற்கொலை செய்து கொண்டவர்கள், விபத்தில் மரணம் அடைபவர்கள், தங்கள் விருப்பங்கள் நிறைவேறாதவர்கள் ஆவிகளாகவும் பேய்களாகவும் அழைவதாகத் திரு.ப.காளீஸ்வரன் சுட்டுவர்.

இறந்த மனிதர்களின் ஆவிகளில் நல்ல ஆவிகள் தீய ஆவிகள் என்று அவர்கள் வாழ்ந்த வாழ்க்கை நிலை, இறப்பின் தன்மை ஆகியவற்றைக் கொண்டு மக்கள் மதிப்பீடு செய்கின்றனர். தற்கொலை செய்து கொண்டவர்களின் ஆவிகளும், சாத்தான்களும் இவ்வுலகில் தீய ஆவிகளாகச் சுற்றி அழைகின்றன என்று மக்கள் நம்புகின்றனர். ஆவிகள் தங்கி இருப்பதற்கு மரங்கள், நீர்நிலைகள், பாழடைந்த மண்டபங்கள், மனித நடமாட்டம்

இல்லாத இடங்கள் போன்ற இடங்களைத் தெரிவு செய்து கொள்வதாகவும் குறிப்பிடுவர். இந்த ஆவிகள் குழந்தை பெற்றவர்களையும், பூப்படைந்த பெண்களையும் பிடித்துக் கொள்ளும் என்றும் அவர்கள் வெளியில் செல்லும் பொழுது வேப்பிலை அல்லது இரும்புத் துண்டு கையில் கொண்டு செல்ல வேண்டும் என்றும் கூறுகின்றனர்.

**இசுலாமிய நம்பிக்கைகள்**

இசுலாமியர்கள் சில குறிப்பிட்ட நம்பிக்கைகளைக் கடைப்பிடித்து வருகின்றனர். அவை,

1. இறைவன் மீது நம்பிக்கை
2. வேதங்கள் மீது நம்பிக்கை
3. பிறை பற்றிய நம்பிக்கை
4. வழிபாடு பற்றிய நம்பிக்கை
5. தர்ஹா பற்றிய நம்பிக்கை
6. இறுதிச் சடங்கு பற்றிய நம்பிக்கை
7. மறுமை பற்றிய நம்பிக்கை ஆகியவைகளாகும்.

***1. இறைவன் மீது நம்பிக்கை***

அல்லாஹ் ஒருவனே இறைவன் என்பது இசுலாமியர்களின் முக்கியக் கொள்கையாகும். இவர்களுக்கு உருவ வழிபாடு கிடையாது. இறைவனாகிய அல்லாஹ் இவ்வுலகத்தைப் படைத்து அவற்றின் இயக்கங்களுக்கு மூலகாரணமாக இருக்கிறான் என்று நம்புகின்றனர். ‘‘இறைவன் மீது ஆழமான நம்பிக்கை வைத்திருப்பவர் துன்பங்கள் காற்றாய்ப் பறந்து விடும் என்று நம்புகின்றனர். ‘லாஇலாஹா இல்லல்லாஹ்’ என மனத்தாலும் சொல்லாலும் கடைப்பிடிக்கின்றனர். அதாவது வணக்கத்திற்குரியவன் ‘அல்லாஹ்’ ஒருவனே வேறொருவன் இல்லை என்பது இதன் பொருள்’’[114] என்று திரு.சதாம்உசேன் குறிப்பிடுவார்.

***2. வேதங்கள் மீது நம்பிக்கை***

இசுலாமியர்கள் வறுமை எனும் இருள் நீங்கி வாழ்வில் ஒளி பெருகும் எனும் நம்பிக்கையில் வேத நூல்களை ஓதுவதாகக் குறிப்பிடுகின்றனர்.

### 3. பிறை பற்றிய நம்பிக்கை

இசுலாம் சமயத்தின் ஒவ்வொரு விழாக்களும், பண்டிகைகளும் பிறையை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றன. இவற்றில் முக்கியமானது ரமலான் மாதமாகும். இம்மாதத்தில் ஒவ்வொரு இசுலாமியரும் தனது கடமைகளுள் ஒன்றான நோன்பு நோற்று வாழ்கின்றனர். இந்த ரமலான் மாதத்தில் முப்பது நாட்களும் நோன்பு நோற்பது கடமையாக்கப்பட்டுள்ளது.

"ஈமான் கொண்டோர்களே உங்களுக்கு முன் இருந்தவர்கள் மீது நோன்பு விதிக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் விதிக்கப்பட்டுள்ளது. அதன்மூலம் நீங்கள் தூய்மையுடையோர் ஆகலாம்" என்று 'அல்குர் ஆன்' குறிப்பிடுகிறது. (அல்குர் ஆன்: 2:183)

"பெருநாள் என்து ஹஜ் பெருநாள், நோன்புப் பெருநாள் என்று இருவகை உண்டு. இவ்விரண்டு பெருநாளும் பிறை கண்ட பின்னரே கொண்டாடப்படும்"[115] என்று குறிப்பிடுவார்.

இசுலாம் சமயத்தின் திருமண முறைகளும் பிறையின் அடிப்படையில் நிகழ்த்தப்படுகின்றது. வளர்பிறை, தேய்பிறை எனப்பிரித்து மங்கல நிகழ்வுகளை வளர்பிறையில் நிகழ்த்த வேண்டும் என்று நம்பிக்கை கொண்டுள்ளனர். "பிறையை மையமாகக் கொண்டு மங்கல நிகழ்ச்சிகள் நிகழ்த்தினால் இறைவனால் அனைத்து நன்மைகளும் கிடைக்கும் என்று நம்புவதாகச் சுட்டுவர்."[116]

### 4. வழிபாடு பற்றிய நம்பிக்கை

இசுலாமியர்களின் அடிப்படைக் கடமைகளாக ஐந்து குறிப்பிடப் படுகின்றன. அவை கலிமா, தொழுகை, நோன்பு, ஹஜ், ஐக்காத் ஆகியவைகளாகும். இவற்றை இசுலாத்தின் ஐந்து தூண்கள் என்பர்.

'அல்லாவைத் தவிர வேறு இறைவன் இல்லை. முஹம்மது நபி இறைவனின் தூதுவனாக இருக்கிறான் என்பது கலிமா.'

“தொழுகை இசுலாமியர்களின் இரண்டாவது தூண். இது நாள்தோறும் செய்யக்கூடிய ஐந்து நேரத் தொழுகையைக் குறிக்கிறது. தனியாகவோ, குழுவாகவோ இணைந்து நிறைவேற்றப்படுகின்றது. இறைவனை நினைவு கூர்வதற்காகத் தொழுவதாகக் குறிப்பிடுகின்றனர். இறைவனுடன் நெருக்கம் கொள்ளச் செய்கிறது என்று குர்ஆன் கூறுவதாகக் குறிப்பிடுவர்.”[117]

ஒருநாளைக்கு ஐந்து நேரம் தொழுகை நடத்த வேண்டும் என்பது இசுலாமியர்களின் கடமையாகும். ஐந்து நேரத் தொழுகைகளாவன,

1. ஃபஜர் (சூரியன் உதிப்பதற்கு முன்)
2. ளுஹர் (பகலிலிருந்து மாலை வரை)
3. அஸர் (சூரியன் மறைவதற்கு முன்)
4. மஃகரி (சூரியன் மறைவுக்குப்பின்)
5. இஷா (வைகறைக்குள்)

“ஒரு உண்மையான இசுலாமியர்களின் அடையாளம் ஐந்து நேரத் தொழுகையை நிறைவேற்றுவதுதான்”[118] என்பர்.

### 5. தர்ஹா பற்றிய நம்பிக்கை

இசுலாத்தைப் பரப்புவதற்கு வந்த இறைநேசர்களின் அற்புதச் செயல்களைக் கண்டவர்களும், கேட்டவர்களும் இறைநேசர்களின் மறைவிற்குப் பின் அவர்களைச் சிறப்பிக்கும் நோக்கத்துடன் அவர்களின் அடக்க ஸ்தலத்தை உயரமாக அமைத்துப் பச்சைத் துணியைப் போர்த்தி வழிபடத் தொடங்கினர். இதனைத் தர்ஹா வழிபாடு என்று குறிப்பிடுகின்றனர். இங்கு மணமிக்க பத்தி, வாசனை திரவியங்கள் பயன்படுத்தி, பூக்களால் அலங்கரித்து வழிபாடு நிகழ்த்துகின்றனர்.

### 6. இறப்புச் சடங்கு

ஒவ்வொரு மனிதன் வாழ்விலும் இறுதியாக நடத்தப்பெறும் சடங்கு இறப்புச் சடங்காகும். எந்த ஒரு நிகழ்வுக்கும் தொடக்கம் முடிவு இருப்பது

போல் இந்த உலகில் உயிர்பெற்றுள்ள ஒவ்வொன்றிற்கும் தொடக்கம் முடிவு என்பது உண்டு. ஒருவருடைய மரணத்திற்குப் பின் நிகழ்த்தப்படும் சடங்குகள் அவரிடம் அவரது உறவினர்கள், நண்பர்கள், கொண்டுள்ள மதிப்பையும், அன்பையும், சமயப் பற்றையும் புலப்படுத்தும் வகையில் அமைகின்றன.

"இறைவன் விருப்பப்படியே மரணம் நிகழும் என்பது இசுலாமியர்களின் நம்பிக்கை"[119] என்று குறிப்பிடுவார்.

ஒவ்வொரு சமயத்தினரும் இறந்த மனிதனை ஒவ்வொரு முறையில் தகனம் செய்கின்றனர். இசுலாமியர்கள் இறந்தவர்களின் உடலை அடக்கம் செய்வதற்குச் சில நம்பிக்கை சார்ந்த சடங்குகளைச் செய்கின்றனர். அவை, அறிகுறிகாணல், படுக்கவைத்தல், குளிப்பாட்டுதல், துணி சுற்றுதல், தொழுகை நிறைவேற்றல், அடக்கம் செய்தல், மனைவி தனித்திருத்தல், துக்கம் விசாரித்தல், இறையருள் வேண்டுதல் போன்றச் சடங்குகளைப் பின்பற்றுவதாகக் கள ஆய்வில் குறிப்பிடுகின்றனர்.

### 7. மறுமை பற்றிய நம்பிக்கை

மனிதர்கள் செய்யும் நன்மை தீமைகளுக்கேற்ப மறுமையில் பலன்கள் கிடைக்கின்றன என்று திருமறைகள் கூறுகின்றன. "உலகில் வாழ்ந்த மனிதர்கள் அனைவரும் மறுமை நாளில் உயிர்ப்பித்து எழுப்பப்படுவார்கள் என்றும் அவர்களது செயல்கள் அனைத்தும் விசாரிக்கப்பட்டு நல்லவர்கள் சுவர்க்கத்திற்கும், தீமை செய்தவர்கள் நரகத்திற்கும் அனுப்பப்படுவர் என்றும் நம்பிக்கை கொள்வதாகக் கூறுவர்."[120]

### தொகுப்புரை

* மனித மனம் பெரும்பாலும் நம்பிக்கைகளை மையமிட்டுச் சூழல்கின்றது. நன்மை விளைய வேண்டும் என்கிற மனப்பாங்கு இந்நம்பிக்கைகளை நம்புவதற்குக் காரணம் ஆகும். எந்த ஒரு செயலும் நன்மை தரவேண்டும், வெற்றியடைய வேண்டும் என்ற நோக்கமும் ஆகும்.

* செவ்வியல் நூல்களில் கூறப்பட்ட நம்பிக்கைகளில் வழக்கிழந்து காணப்பட்டாலும் பெரும்பான்மையான நம்பிக்கைகள் வழக்கிலிருப்பதனைக் கள ஆய்வு சுட்டுகின்றது. இன்றைய மக்கள் வழக்காற்றில் தெய்வ நம்பிக்கை, நாள்கோள் பார்த்தல், கனவு, திருமணச்சடங்கு, நிமித்தம் பார்த்தல், விரிச்சி, பேய், வெறியாட்டு, விழா, பலியிடுதல், கூற்றுவன், மந்திரம், முற்பிறப்பு, மறுபிறப்பு, நல்வினை, தீவினை, ஊழ்வினை, சாபம், சுவர்க்கம், நிரையம், கைம்மை மகளிர் போன்ற நம்பிக்கைகள் வழக்கில் உள்ளதனை அறியமுடிகின்றது.

* இன்றைய மக்கள் வழக்காற்றில் வழக்கிழந்த நம்பிக்கைகளாக உன்னம், மடலேறுதல், ஓந்தி நிமித்தம் பார்த்தல், தீப்பாய்தல், முதுமக்கள் தாழி, கைம்மை நோன்பு, அசரீரி, புலிப்பல் தாலி அணிதல், கணவனைத் தொழுதால் மழை பெய்யும் எனும் நம்பிக்கைகள் வழக்கிழந்து காணப்படுவதனைக் கள ஆய்வு சுட்டுகின்றது.

* நடுகல் நம்பிக்கை சில இடங்களில் கல்நட்டு வழிபடும் மரபாகப் பின்பற்றி வருவதனை அறியமுடிகின்றது. இது பழங்காலத்தின் எச்சமாகப் பின்பற்றப்படுகிறது.

* மனித வாழ்க்கைக்கு இயைந்தனவாகவும், நன்மை தருவனவாகவும் அமைவனவற்றை நற்சகுனங்களாகக் கருதுகின்றனர். நல்லவை நிகழ்ந்தால் மகிழ்ச்சி கொள்வதும் தீயவை நிகழ்ந்தால் துன்பம் கொள்வதும் ஆகியவற்றிற்கு அடிப்படைக் காரணம் சகுனங்கள் என்றும் அவை சில குறியீடுகளின் வாயிலாக வெளிப்படுகின்றன என்றும் நம்புகின்றனர்.

* ஒருவர் சொல்லும் செயலுக்கு மாறாக விளைவுகளைத் தரும் நிகழ்வுகள் தீச்சகுனங்கள் என்றும் அவற்றைச் சில செயல்களின் வாயிலாகவும் ஓர் உள்ளுணர்வின் மூலமும் மக்கள் அறிந்து கொள்கின்றனர்.

* விழாக்கள், வெறியாட்டு, பலியிடுதல் போன்ற நம்பிக்கைகள் வழக்கிலிருப்பதனை அறியமுடிகின்றது.

* முற்பிறப்பு, மறுபிறப்பு, ஊழ்வினை, சுவர்க்கம், நிரையம் பற்றிய நம்பிக்கைளும் பின்பற்றி வருவதனைக் காணமுடிகிறது.

* கண்ணேறு பற்றிய நம்பிக்கை மக்கள் வழக்கில் மிகுதியாகக் காணப்படுவதனை அறியமுடிகின்றது. இதனைக் கட்டிடங்களுக்குத் திருஷ்டி பொம்மை வைத்தல், குழந்தைகள், கடைகள், வீடு, வாகனம் ஆகியவற்றிற்குச் சூடம் சுற்றுதல், நெருப்பில் முச்சந்தி மண், உப்பு, மிளகாய் போடுதல் போன்றவைகள் மூலம் அறியமுடிகின்றது.

* ஒரு பெண்ணின் முதல் குழந்தைக்கு வளைகாப்பு நிகழ்ச்சி நடத்துகின்றனர். இதனைச் சீமந்தம் என்றும் அழைப்பதனைக் காணலாம்.

* பெண் பருவமடைந்தபின் செய்யப்படும் சடங்காக மக்கள் கடைப்பிடித்து வருகின்றனர்.

* ஆவிகளும், பேய்களும் மக்கள் வாழ்வில் பெரும் பங்கு வகிப்பதனையும், இந்த ஆவிகள் இறந்தவர்களின் வாழ்க்கைநிலை, இறப்பின் தன்மை கொண்டு நல்ல, தீய ஆவிகள் என்றும் நம்புவதனைக் காணமுடிகின்றது.

* இசுலாமியர்கள் இறைவன், வேதங்கள், பிறை வழிபாடு, தர்ஹா, இறுதிச்சடங்கு, மறுமை மீது கொண்டுள்ள நம்பிக்கைகள் பற்றி அறியமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. பூ.மாரிமுத்து, வயது 48, விவசாயம், கோடனூர், நாள்: 17.2.13
2. இராமச்சந்திரன், வயது 59, கூட்டுறவு வங்கி மேலாளர், அழகர் தேவன்கோட்டை, நாள்: 17.2.13
3. அந்தோணி, வயது 61, விவசாயி, இருதயபுரம், நாள்: 17.2.13
4. சவுரியம்மாள், வயது 47, மீனவப்பெண், காரங்காடு
5. அக்பர், வயது 57, சோழந்தூர், நாள்: 24.3.13
6. M.பசீர்அகமது, வயது 52, SAM ஸ்டோர் உரிமையாளர், ஆர்.எஸ்.மங்கலம், நாள்: 24.3.13
7. க.கருப்பையா, வயது 70, விவசாயம், செங்குடி, நாள்: 28.4.13
8. க.கண்ணதாசன், வயது 51, ஆட்டோ ஓட்டுநர், A.மணக்குடி, நாள்: 28.4.13
9. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.211
10. மேலது,
11. மு.ரவி, வயது 44,எலக்ட்ரீசியன், கொத்திடல், நாள்: 18.5.13
12. மு.இராமநாதன், வயது 43, டைல்ஸ் மேசன், கொத்திடல், நாள்: 18.5.13
13. ஆ.நாகராசு, வயது 40, கொத்தனார், சோழந்தூர், நாள்: 16.2.13
14. க.கணபதி, வயது 62, விவசாயி, வடவயல், நாள்: 16.6.13
15. ரவி, வயது 64, சோதிடர், சாத்தனூர், நாள்: 15.6.13
16. வி.சி.சசிவல்லி, தமிழர் திருமணம், ப.38
17. கு.முனியாண்டி வேளாளர், வயது 57, விவசாயி, வடவயல், நாள்: 7.7.13
18. கலைக்களஞ்சியம், தொகுதி-8, ப.66
19. சகாயம், வயது 58, டூவீலர் மெக்கானிக், அன்னை நகர், நாள்: 7.7.13
20. மேலது
21. கா.கண்ணன், வயது 36, புகைப்பட நிபுணர், கோடனூர், நாள். 13.7.13
22. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.109
23. சு.வித்யானந்தன், தமிழர் சால்பு, ப.196
24. தொல்காப்பியம், பொருளதிகாரம், 1004

25. இளம்பூரணர் உரை, தொல்காப்பியம், ப.98

26. அ.தியாகராாசன், வயது 68, விவசாயி, தும்படைக்கான்கோட்டை, நாள்: 14.7.13

27. முனியசாமி, வயது 58, ஊ.ம.த., ரெகுநாதமடை

28. கோ.முருகேசன், வயது 41, அலுவலக எழுத்தர், கள்ளிக்குடி, நாள்:20.7.13

29. கெவுளி பஞ்சாங்கம், ப.10

30. லெ.மலைக்கண்ணு, வயது 62, விவசாயி, சூரம்புளி, நாள்: 20.7.13

31. உ.சாத்தையா, வயது 58, விவசாயி, சூரம்புளி, நாள்: 20.7.13

32. ஆ.ஆறுமுகம், வயது 72, விவசாயி, மேஸ்திரி, சோழந்தூர், நாள்: 21.7.13

33. தா.மகேஸ்வரி, வயது 44, ஆசிரியை, R.S.மங்கலம், நாள்: 21.7.13

34. மேலது, நாள்: 21.7.13

35. சேகர், வயது 48, ரியல் எஸ்டேட், பால்குளம், நாள்: 27.7.13

36. ஜெகநாதன், வயது 58, ஆட்டு வியாபாரி, கொத்தியார்கோட்டை, நாள்:27.7.13

37. உ.வே.சாமிநாத ஐயர், புறநானூற்று மூலமும் பழைய உரையும், ப.11

38. உ.சாத்தையா, வயது 52, விவசாயி, வரவணி, நாள்: 27.7.13

39. சக்திவேல் பூசாரி, வயது 58, வடவயல், 27.7.13

40. K.S.பூபாலன், வயது 59, ஒன்றிய வார்டு உறுப்பினர், பனிக்கோட்டை, நாள்: 27.7.13

41. கோவிந்தராசு ஐயர், வயது 60, கொத்தமங்கலம், நாள்: 2.2.13

42. மேலது, நாள்: 2.2.13

43. மேலது, நாள்: 2.2.13

44. மேலது, நாள்: 2.2.13

45. அ.தியாகராாசன், வயது 68, விவசாயி, தும்படைக்கான்கோட்டை, நாள்:14.7.13

46. மேலது, நாள்: 14.7.13

47. தே.ஞானசேகரன், மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள், ப.118

48. மேலது, ப.118

49. குப்புசாமி, வயது 60, பூசாரி, புலியூர், நாள்: 4.8.13

50. மேலது, நாள்: 4.8.13

51. மேலது, நாள்: 4.8.13

52. மேலது, நாள்: 4.8.13

53. மேலது, நாள்: 4.8.13

54. கோட்டையன், வயது 65, விவசாயி, வடவயல், நாள்: 4.8.13

55. மேலது, நாள்.4.8.13

56. குப்புசாமி பூசாரி, வயது 60, புலியூர், நாள்: 4.8.13

57. சேவியர், வயது 40, ஆசிரியர், R.S.மங்கலம், நாள்: 4.8.13

58. ராஜாஉசேன், வயது 52, டெய்லர், சோழந்தூர், நாள்: 10.8.13

59. க.முத்துவைரி, வயது 48, இந்தியராணுவம், R.S.மங்கலம், நாள்: 10.8.13

60. மு.அமிர்தம், வயது 44, அரசு சுகாதார செவிலியர், R.S.மங்கலம், நாள்:10.8.13

61. முத்துச்சாமி, வயது 57, கொட்டகை அமைப்பாளர், கருங்குடி, நாள்: 11, நாள்: 11.8.13

62. மேலது, நாள்: 11.8.13

63. ச.காளியம்மாள், வயது 50, விவசாயி, வடவயல், நாள்: 11.8.13

64. மேலது, நாள்: 11.8.13

65. கோட்டைச்சாமி பூசாரி, வயது 54, அரியான்கோட்டை, நாள்: 11.8.13

66. மேலது, நாள்: 11.8.13

67. சக்திவேல், வயது 55, பூசாரி, வடவயல், நாள்: 27.7.13

68. மேலது, , நாள்: 27.6.13

69. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, பக்.208-209

70. ஆ.காளீஸ்வரன், வயது 43, எலக்ட்ரீசியன், சோழந்தூர், நாள்: 11.8.13

71. உ.பஞ்சவர்ணம், வயது 58, ஒன்றியக்குழு உறுப்பினர், வடவயல், நாள்: 16.2.13

72. ம.பாலகுரு, வயது 34, இந்திய ராணுவம், செங்குடி, நாள்: 17.8.13

73. க.செல்வி, வயது 42, விவசாயி, கொத்திடல், நாள்: 17.8.13

74. ர.வள்ளி, வயது 40, தனியார் பள்ளி ஆசிரியை, கொத்திடல், நாள்:17.8.13

75. தாஸ்கண்ட், வயது 58, அரசுப் பேருந்து நடத்துநர், R.S.மங்கலம், நாள்:17.8.13

76. வளர்மதி, வயது 49, மீன் விற்பவர், திருப்பாலைக்குடி, நாள்: 24.8.13

77. செந்தில்குமார், வயது 52, மீனவர், மோர்ப்பண்ணை, நாள்: 24.8.13

78. அழகுசுந்தரம், வயது 58, சமையலர், நத்தக்கோட்டை, நாள்: 24.8.13

79. கருப்பாயி, வயது 69, விவசாயி, களத்தூர், நாள்: 24.8.13

80. பாரதி, வயது 46, குடும்பத்தலைவி, சனவேலி, நாள்: 24.8.13

81. ப.மாடசாமி, வயது 72, ஆசாரி, வடவயல், நாள்: 25.8.13

82. சங்கரலிங்கம், வயது 67, விவசாயி, விசவனூர், நாள்: 31.8.13

83. பூ.கலா, வயது 38, விவசாயி, வடவயல், நாள்: 31.8.13

84. ச.வளர்மதி, வயது 47, விவசாயி, கருப்பன் குடும்பன் பச்சேரி, நாள்:31.8.13

85. முனீஸ்வரி, வயது 54, விவசாயி, கடலூர், நாள்: 1.9.13

86. நா.பழநியம்மாள், வயது 36, குடும்பத்தலைவி, சித்தூர்வாடி, நாள்: 1.9.13

87. சோ.தங்கராசு, வயது 60, ஆசிரியர், சோழந்தூர், நாள்: 1.9.13

88. கணேசன், வயது 55, விவசாயி, ஆயிங்குடி, நாள்: 7.9.13

89. கோட்டைச்சாமி, வயது 62, விவசாயி, காவனக்கோட்டை, நாள்: 7.9.13

90. முனியசாமி, வயது 44, விவசாயி, மேல்பனையூர், நாள்: 7.9.13

91. திருவேல்முருகன், வயது 35, ஓட்டுநர், இராமநாதமடை, நாள்: 7.9.13

92. இராமர், வயது 57, விவசாயி, பெருமாள்மடை, நாள்: 8.9.13

93. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.196

94. பூ.காமராசு, வயது 44, விவசாயி, கோடனூர், நாள்: 8.9.13

95. கிருஷ்ணன், வயது 76, விவசாயி, வடவயல், நாள்: 8.9.13

96. இராமநாதன், வயது 56, விவசாயி, சீனாங்குடி, நாள்: 8.9.13

97. ஆ.காளீஸ்வரன், வயது 43, எலக்ட்ரீசியன், சோழந்தூர், நாள்: 8.9.13

98. ரமேஷ், வயது 36, விவசாயி, இருவான்பச்சேரி, நாள்: 14.9.13

99. ஜெயப்பாண்டி, வயது 33, ஆசிரியர், R.S.மங்கலம், நாள்: 14.9.13

100. க.முத்துவைரி, வயது 55, ராணுவவீரர், R.S.மங்கலம், நாள்: 10.8.13

101. மேலது, , நாள்: 10.8.13

102. ப.மாடசாமி, வயது 72, ஆசாரி, வடவயல், நாள்: 25.8.13

103. மேலது, நாள்: 25.8.13

104. கி.சாந்தி, வயது 42, விவசாயி, வடவயல், நாள்: 5.10.13

105. இராமநாதன், வயது 58, விவசாயி, கொத்தமங்கலம், நாள்: 5.10.13

106. மா.இராசமாணிக்கனார், இல்வாழ்க்கை, ப.131

107. க.கிருட்டிணசாமி, நாட்டுப்புறப் பாடல்களில் வளமையும், நம்பிக்கைகளும், சடங்குகளும், ப.187

108. திருக்குறள். 66

109. இராக்கம்மாள், வயது 56, விவசாயி, வடவயல், நாள்: 5.10.13

110. புறம், 74:1–2

111. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.63

112. இராமலிங்கம், வயது 64, விவசாயி, ஆப்பிராய், நாள்: 6.10.13

113. வேதம், வயது 60, விவசாயி, பொன்மாரி, நாள்: 6.10.13

114. சதாம்உசேன், வயது 72, விவசாயி, சோழந்தூர், நாள்: 6.10.13

115. ஜமால், வயது 76, சோழந்தூர், நாள்: 6.10.13

116. அன்சாரி, வயது 40, R.S.மங்கலம், நாள்: 12.10.13

117. சலால்முகமது, வயது 70, R.S.மங்கலம், நாள்: 12.10.13

118. இபுராகிம், வயது 36, சோழந்தூர், நாள்: 6.10.13

119. மஜீத், வயது 40, சோழந்தூர், நாள்: 6.10.13

120. அலாவுதீன், வயது 58, R.S.மங்கலம், நாள்: 12.10.13

**முன்னுரை**

*மக்கள் வாழ்வில் எண்ணற்ற நம்பிக்கைகள் தோன்றி நிலைத்தும் மறைந்தும் வருகின்றன. இந்நம்பிக்கைகள் மக்களின் வாழ்க்கையை இயக்குகின்றன. மனிதனின் ஒவ்வொரு செயலிலும், சிந்தனைகளிலும் நம்பிக்கைகள் வேரூன்றிக் காணப்படுகின்றன. இவற்றை அவ்வக் கால இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. அவ்வாறு தோன்றும் நம்பிக்கைகள் பல காலந்தோறும் நின்று நிலைபெற்று மக்கள் வாழ்வினை இயக்குகின்றன. சில நம்பிக்கைகள் காலவோட்டத்தில் வழக்கிழந்துவிடுகின்றன. அவை ஒவ்வொரு மனிதனின் விருப்பங்கள் நிறைவேறுவதனைப் பொறுத்து அமைகின்றன.*

*செவ்வியல் நூல்களில் பதிவாகியுள்ள நம்பிக்கைகள் இன்றைய மக்கள் வழக்காற்றில் வழக்குப் பெற்றனவாகவும், வழக்கிழந்தனவாகவும் இருப்பதை மதிப்பிடும் முகமாகத் தமிழகத் தென்மாவட்டங்களில் ஒன்றான இராமநாதபுரம் மாவட்டம், திருவாடானை வட்டம், இராசசிங்க மங்கலச் சிற்றூர்ப் பகுதிகளில் கள ஆய்வு மேற்கொள்ளப்பெற்றதில் கிடைத்த தரவுகளை ஒப்பிட்டு மதிப்பீடு செய்வதாக இவ்வியல் அமைகின்றது.*

**இராமநாதபுரம் அறிமுகம்**

*இராமநாதபுர மாவட்டத்தைச் சங்ககாலம் தொடங்கிப் பல மன்னர்கள் ஆண்டு வந்திருக்கின்றனர். இம்மாவட்டத்தில் பல்லவ மன்னர்கள் ஆண்டு வந்ததற்கான கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. குன்றக்குடி, பிள்ளையார்பட்டி, பூங்குன்றம் ஆகிய பகுதிகளில் காணப்படும் பல்லவர் காலத்திய குடைவரைக் கோயில்கள் இராமநாதபுர மாவட்டத்துடன் பல்லவர்களுக்கு இருந்த தொடர்பை உறுதி செய்கின்றன. பல்லவர்களுக்குப் பிறகு சோழர்கள், சோழர்களுக்குப் பிறகு பாண்டியர்கள் **13** ஆம் நூற்றாண்டு வரை ஆட்சி செய்து வந்துள்ளனர்.*

*“கி.பி. **1331**இல் மதுரையைத் தலைநகராகக் கொண்டு முஸ்லீம் ஆட்சி நிறுவப்பட்டது. கி.பி.**1371** இல் மதுரையில் சுல்த்தான்களின் ஆட்சி*

*சரியத் தொடங்கி கி.பி.1393 இல் முடிவுற்றது. பின் மதுரையில் நாயக்கர் ஆட்சி ஏற்பட்டது. கி.பி.1605 இல் சேதுபதிகளின் ஆட்சிப் பொறுப்பில் இராமநாதபுரம் மாவட்டம் இருந்தது. சேதுபதிகளில் கிழவன் சேதுபதி குறிப்பிடத்தக்கவர். இவர் 1674 முதல் 1710 வரை ஆட்சி புரிந்தார்.'' இவர் காலத்தில் தான் இராமநாதபுரம் சேதுபதிகளின் தலைநகரம் ஆனது.*

*கர்நாடக நவாப்பான முகம்மது அலி கிழக்கிந்தியக் கம்பெனியாரின் செல்வாக்கைப் பயன்படுத்தி இராமநாதபுரம் பகுதிகளைக் கைப்பற்றினான். இதனால் கி.பி. 1772 முதல் 1780 வரை மீண்டும் முஸ்லீம் ஆட்சி ஏற்பட்டது. இவ்வாட்சியில் இராமநாதபுரம் கப்பம் கட்டும் அடிமைப் பிரதேசமாயிற்று. பின் கிழக்கிந்தியக் கம்பெனியின் திறமை, சூழ்ச்சியால் இராமநாதபுரம் பிரிட்டிசாரின் நேரடி ஆட்சிக்கு மாறியது.*

*1901 இல் திருநெல்வேலி, மதுரை மாவட்டங்களிலிருந்து இராமநாதபுரம் மாவட்டம் உருவாக்கப்பட்டது. ''1985 மார்ச் 15 இல் இம்மாவட்டம் மூன்றாகப் பிரிக்கப்பட்டு இராமநாதபுரம், விருதுநகர், சிவகங்கை மாவட்டங்கள் உருவாக்கப்பட்டன.''*

*இம்மாவட்டத்தின் பரப்பளவு 4,233.44 சதுர கிலோ மீட்டர் ஆகும். மக்கள் தொகை 11,83,321. எழுத்தறிவு பெற்றோர் 7,60,819 (73.05%) ஆகும். இம்மாவட்டத்தின் வருவாய்க்கோட்டங்கள் இரண்டு (இராமநாதபுரம், பரமக்குடி). வட்டங்கள் ஏழு (இராமநாதபுரம், இராமேஸ்வரம், திருவாடானை, பரமக்குடி, முதுகுளத்தூர், கமுதி, கடலாடி) ஆகும்.*

**வழிபாட்டுத் தலங்கள்**

*இராமேஸ்வரம், திருப்புல்லாணி, (பெருமாள் கோவில்), உத்திர கோசமங்கை, திருவாடானை (ஆதிரெத்தினேஸ்வரர்), ஏர்வாடி தர்ஹா, ஓரியூர் (கிறித்தவ தேவாலயம்), நயினார்கோயில், தேவிபட்டிணம் ஆகியவை முக்கிய வழிபாட்டுத் தலங்களாகும்.*

**இராசசிங்க மங்கலம் அறிமுகம்**

*இராசசிங்கம் ஒன்றியம் சுமார் 560 ச.கி.மீ. பரப்பளவில் அமைந்துள்ளது. இவ்வொன்றியத்தின் மக்கள் தொகை 67,216 (2001 கணக்குப்படி) ஆகும். இங்கு இந்து இனமக்கள் 60% விழுக்காடும், கிறித்தவர் 22% விழுக்காடும், இசுலாமியர்கள் 18 விழுக்காடும் வசிக்கின்றனர். கல்வியறிவு பெற்றவர்கள் 62% பேர் உள்ளதாகக் குறிப்பிடுகின்றனர்.*

*இராசசிங்கமங்கல ஒன்றியம் 35 ஊராட்சிமன்றங்களைக் கொண்டது. இவ்வொன்றியத்தின் வருவாய் கிராமங்கள் 57 ஆகும். இங்கு உள்ள மக்களின் முக்கியத் தொழில் வேளாண்மை. நெல், மிளகாய், பருத்தி போன்றவைகளைச் சாகுபடி செய்து வருகின்றனர். இங்கு வாரந்தோறும் சனிக்கிழமை மிளகாய்ச் சந்தை கூடப்படுகிறது. இவ்வொன்றியத்தில் சிறப்பாகப் பேசப்படுவது இராசசிங்கமங்கலம் பெரியகண்மாய். இக்கண்மாய் 5000 ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ளது. இது மாவட்டத்தின் இரண்டாவது பெரியகண்மாய் என்ற சிறப்புப் பெற்றது. "நாரை பறக்க முடியாத நாற்பத்தெட்டு கழுங்குடைத்து" என்று சிறப்பாகக் கூறுவர்.*

*இக்கண்மாயின் நீளம் 19.80 கி.மீ. நீரின் கொள்ளளவு 1205.0 மி.க.அடி. நிறை நீர்மட்டம் 15.25 மீட்டர். நீர்ப்பிடிப்பு 8.93 சதுர மைல் ஆகும். பயன்பெறும் கண்மாய்கள் 72. எழுபத்திரெண்டு கண்மாயின் பாசனப் பரப்பு 6,916.02 ஏக்கர். கண்மாயின் நேரடி பாசனப் பரப்பு 319.29 ஏக்கர். மொத்தப் பாசனப்பரப்பு 12141.68 ஏக்கர் ஆகும்.*

**கல்வி நிறுவனங்கள்**

*அரசுத் தொடக்கப்பள்ளிகள்-66, தனியார் தொடக்கப்பள்ளிகள்-14, ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளிகள்-11, தனியார் நடுநிலைப்பள்ளிகள்-2, ஆதிதிராவிட நடுநிலைப்பள்ளிகள்-2, அரசு உயர்நிலைப்பள்ளிகள்-4, தனியார் உயர்நிலைப்பள்ளிகள்-3, அரசு மேல்நிலைப்பள்ளிகள்-4 என மொத்தம் 106 பள்ளிகள் இராசசிங்கமங்கல ஒன்றியத்தில் உள்ளன. கல்லூரிகள் கிடையாது.*

**வழிபாட்டுத் தலங்கள்**

இராசசிங்க மங்கலம் ஒன்றியப் பகுதி மக்கள் இங்குள்ள கைலாசநாதர் ஆலயம், அரசாள வந்த அம்மன் ஆலயம், உப்பூர் வெயிலுகாத்த விநாயகர் ஆலயம், கொத்தியார்கோட்டை சாத்தாயி அம்மன், சாத்தனூர் சாத்தையா அய்யனார், முத்துப்பட்டிணம் புனித அந்தோனியார் போன்ற தெய்வங்களை வழிபட்டு வருகின்றனர்.

இவ்வழிபாட்டுத் தலங்கள் அனைத்தும் இவ்வொன்றியப் பகுதி மக்கள் சிறப்பாக வழிபட்டு வரக்கூடிய வழிபாட்டுத் தலங்கள் ஆகும். சுற்றுலாத் தலங்கள் என்று சொல்வதற்கு எதுவும் சிறப்பான இடங்கள் இல்லை.

இராசசிங்க மங்கலப் பகுதி மக்களில் மூன்று இனத்தவர்கள் இருந்தாலும் அனைவரும் சகோதரத்துவத்துடன் பழகிவருகின்றனர்.

**நம்பிக்கைகள்**

மக்கள் வாழ்வில் நம்பிக்கைகள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. மனிதன் தொடங்கும் ஒவ்வொரு செயலிலும் இவை வேரூன்றி நிற்பதை நடைமுறை வாழ்வு கொண்டு அறியமுடிகின்றது. பிறப்பு முதல் இறப்பு வரை பல்வேறு நம்பிக்கைகள் மக்கள் வாழ்க்கையை இயக்குகின்றன. இவ்வாறு தோன்றும் நம்பிக்கைகள் காலப்போக்கில் பல நிலைத்தும், சில வழக்கிழந்தும் காணப்படுவதனை வரலாற்று அல்லது இலக்கியச் சான்றுகள் உணர்த்தும். அவ்வகையில் செவ்வியல் நூல்களில் காணலாகும் நம்பிக்கைகள் எவை எவை வழக்கில் உள்ளன, எவை எவை வழக்கிழந்து காணப்படுகின்றன என்பதனைக் கள ஆய்வின் வழி தகவலாளிகள் தரும் அடிப்படையில் விளக்குவது இதன் நோக்கமாகும்.

**கடவுள் நம்பிக்கை**

அறிவியல் வளர்ச்சியில் முன்னேறி வரும் இன்றைய நிலையிலும் இயற்கைச் சக்தியின் மீதான நம்பிக்கையுடன் உலகம் இயங்கி வருகின்றது. உயிரினங்களை உருவாக்கி மனித மனங்களைப் பயன்படுத்தி வாழ்க்கை

உறுதியை ஏற்படுத்தும் அபூர்வ சக்தி இயற்கையிடத்து உள்ளது என்பது உலக நம்பிக்கை. இந்நம்பிக்கையின் அடிப்படையிலும் அச்சத்தின் காரணமாகவும் மதங்களும் தெய்வங்களும் தோன்றின. இந்நிலையில் ஒவ்வொரு மதத்தினரும், தாங்கள் கண்டுணர்ந்தவாறு இயற்கையை வழிபடலாயினர்.

இறைவன் உருவமில்லாதவன், அவன் எங்கும் நிறைந்திருக்கும் இயற்கை நிலையினன் என்பது இசுலாம் மதக்கோட்பாடு. சமய நெறிகளுக்கு அப்பாற்பட்டு மாறுபட்ட நிலையில் இயற்கையை வழிபடுகிறது இந்து மதம். மனிதர்களைப் படைத்தியக்கும் இயற்கை மனிதனின் வாழ்வியலோடு இணைத்துப் பல உருவங்களாக்கி வழிபடுவது இந்துசமயநெறி . இயற்கையே தெய்வம் என்பது இம்மதங்கள் உணர்த்தும் பொதுவான கருத்துக்களாகும்.

இன்றைய மக்கள் வழக்காற்றில் தெய்வ நம்பிக்கை இல்லாதவர்கள் இல்லை என்றாலும் தவறில்லை. இதனைக் கள ஆய்வின் வழி உணரமுடிகின்றது.

"தெய்வத்தை வணங்கி வழிபட்டு வந்தால் நாம் வேண்டியதைப் பெறலாம் என்றும், அவனன்றி அணுவும் அசையாது"[1] என்றும் தகவலாளி திரு.பூ.மாரிமுத்து குறிப்பிடுகிறார்.

"கடவுள் நம்பிக்கை ஒவ்வொருவருக்கும் இருக்கும், இல்லாமல் இருக்க முடியாது. ஒருவனுக்குச் சோதனை, துன்பம், நோய் போன்றவைகள் சூழ்ந்து கொள்ளும் போது இறைவனிடம் மன்றாடுகிறான். அவன் துன்பங்கள் தீர்ந்தவுடன் பக்தி மேலும் தீவிரமடைகிறது. வாரத்தில் இரண்டு நாள் செவ்வாய், வெள்ளிக் கிழமைகள் கோவில்களுக்குச் சென்று வழிபடுவேன் என்றும், மற்ற நாட்களில் இரவில் உறங்கும் போதும், காலை கண் விழிக்கும் போதும் வழிபடுவேன் என்றும் திரு.இராமச்சந்திரன் கூறுகிறார். இந்நம்பிக்கையின் மூலம் நான் உயர்ந்த நிலையை அடைந்துள்ளேன்"[2] என்று சுட்டுகிறார்.

கிறித்தவத் தகவலாளி அந்தோணி என்பவர் "எந்த ஒரு செயலுக்கும் நான் இயேசுவை நினைத்துக் கொள்வேன். ஒரு செயலைத் தொடங்கும் பொழுது சிலுவை போட்ட பின் தொடங்குவேன். அதன் மூலம் அக்காரியம்

வெற்றியடையும் என்றும், இயேசு கிறித்து வாழ்வில் எல்லா நன்மைகளையும் அளிப்பார் எனவும் அவரே என் வாழ்வின் ஒளி"[3] எனவும் குறிப்பிடுவதன் வாயிலாக அறியமுடிகின்றது.

"இராசசிங்க மங்கலப் பகுதியில் உள்ள கடற்கரை வாழ் கிறிஸ்தவ மக்கள் இயேசு கிறித்துவின் மீதும், அவர் கொலை செய்யப்பட்ட சிலுவை மீதும், இயேசு கிறிஸ்துவின் அன்னை புனித மரியன்னை மீதும் மற்றும் புனிதர்கள் மீதும் அதிக நம்பிக்கை கொண்டுள்ளதாகக் குறிப்பிடுகின்றனர். தங்கள் குழந்தைகளுக்குப் பாடும் தாலாட்டுப் பாடல்களில் சிலுவை, குருசு, தேவமாதா, சவேரியார், பிரான்சிஸ், சம்மசு போன்ற பெயர்கள் இடம் பெறுவதாக"[4] காரங்காடு திருமதி சவுரியம்மாள் தெரிவிக்கிறார்.

"இசுலாமியர்கள தங்கள் கடவுள் மேல் மிகுந்த ஈடுபாடு உடையவர்களாக இருக்கின்றனர். நாள் தவறாமல் தொழுகையில் ஈடுபடுகின்றனர். வெள்ளிக்கிழமை ஒரு நாள் சிறப்புத் தொழுகை நிகழ்த்துவதாக"[5] திரு.லியாகத் அலி குறிப்பிடுகிறார்.

"இறைவனை வழிபட்டால் அனைத்து வளங்களும் வந்து சேரும். நோய், நொடிகள், கவலைகள் தீரும்"[6] என்று பசீர் அகமது குறிப்பிடுகிறார்.

கள ஆய்வு மேற்கொண்டதில் இராசசிங்க மங்கலச் சிற்றூர்ப் பகுதி மக்கள் தெய்வ நம்பிக்கையில் மிகுந்த ஈடுபாடு உடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

**நாள்கோள் பார்த்தல்**

எந்த ஒரு செயலைத் தொடங்கும் போதும் நல்ல நாள் பார்த்துச் செய்யும் பழக்கம் மாந்தர்களிடையே இருந்து வருகின்றது. நன்மை விளைய வேண்டும் என்ற விருப்பம் இதற்குக் காரணமாக அமைகின்றது.

"தீமைகள் ஏற்படாமலிக்கவும், தீமைகளிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும், நன்மை விளைய வேண்டும் என்ற நோக்கமும் நாள் கோள் பார்த்தலின் அவசியமாகிறது"[7] என்கிறார்.

“நல்லநேரம், காலம் பார்த்து எந்தச் செயல்களைச் செய்தாலும் அச்செயல் வெற்றியடையும் என்றும் அதன்மூலம் முழுப்பயனையும் அடையலாம் என்றும் நம்புவதனை அறிய முடிகின்றது. அதனால் அன்றாட வாழ்வில் இதனைக் கடைப்பிடித்து வருவதாகவும் திரு.க.கண்ணதாசன் குறிப்பிடுகிறார்.”[8]

சான்றாக, காதணிவிழா நிகழ்த்த, திருமணம் செய்ய, பருவமடைந்த பெண்களுக்குச் சடங்குமுறைகள் செய்ய, மாங்கல்யம், வளைகாப்பு, குழந்தைக்குப் பெயர் வைக்க, விதை விதைக்க, வீடு கட்ட, புதுமனை புக, அறுவடை செய்ய, வாகனம் வாங்க, ஆபரணம் வாங்க, கிணறு வெட்ட, பயணம் செய்ய, புதிய தொழில் தொடங்க, வேலைக்குச் செல்ல போன்ற அனைத்துச் செயல்களுக்கும் நாள் பார்த்துச் செய்வது நடைமுறையில் உள்ளது என்பதனைக் கள ஆய்வின் வழி அறியமுடிகின்றது.

**கனவு நம்பிக்கை**

மாந்தர்கள் காணும் கனவுகளின் தன்மைகளைப் பொறுத்து அவை நன்மை, தீமை தருவனவாக அமைகின்றன. மக்கள் பொதுவாகப் பின் நிகழ்வனவற்றை முன்னுணர்த்தும் வகையில் கனவுகள் அமைகின்றன என்பதனைக் கள ஆய்வின் மூலம் தெளியமுடிகின்றது.

“மக்களுக்கு நன்மையோ தீமையோ வருவது கனவு மூலம் தெரிந்துவிடும் என நம்புகின்றனர். மரப்பெட்டி உடைதல், ஏற்றி வைத்த தீபம் அணைதல், தேங்காய் உடைதல் போலக் கனவு கண்டால் தீமை விளையும் என்று கருதுகின்றனர்”[9] என சு.சக்திவேல் குறிப்பிடுகிறார்.

“மக்கள் தங்களுக்கு நிகழப் போவதைத் தெய்வமோ அல்லது முன்னோர்களின் ஆவியோ கனவில் தோன்றிக் கூறுவதாக நம்புகின்றனர்.”[10]

“கனவுகள் ஒருவனின் செயல்பாடுகளை நிச்சயிக்கின்றன. ஒருவன் காணும் கனவுகளை வைத்து மறுநாள் அவன் செயல்பாடுகளைத் தொடங்குகிறான். நற்கனவுகளாகத் தோன்றினால் நன்மை விளையும் என்றும்

தீயகனவுகளாகத் தோன்றினால் தீமை விளையும்"[11] என்று தகவலாளி திரு.மு.ரவி குறிப்பிடுகிறார்.

கனவில் திருமணம், மாமிசம், நெற்குவியல், ஆமை, கனவில் பாம்பு கடிக்காமல் விடுதல், விளக்கு அணைதல், தேங்காய் உடைதல் விலங்குகளைக் காணுதல் போன்றவை தீமை விளைவிக்கும் என்று கள ஆய்வின் வழி அறிய முடிகின்றது.

கனவில் சாவைக் காண்பது, பாம்பு கடிப்பது, உப்பு காணுதல் போன்றவைகள் நன்மை விளைவிக்கும் என்றும் நம்புவதனை அறிய முடிகின்றது.

"பொதுவாகக் கனவுகள் தீமை பயப்பனவாகக் காட்சி தருகின்றன. நன்மை பயக்கும் கனவுகள் சில மட்டும் குறிப்பிடப்படுவதாக இராமநாதன் சுட்டுவார்."[12]

ஒரு சிலர் கனவுப் பலன்களைப் பெரிதும் நம்புகின்றனர். ஒரு சாரார் கனவுப் பலன்களை நம்ப மறுத்ததனைக் கள ஆய்வு உறுதி செய்கிறது.

கனவுகள் எது தோன்றினாலும் அதனைப் பெரிதுபடுத்துவதில்லை. நான் எனது வேலைகளைத் தடையில்லாமல் செய்து வருகிறேன். ஏனெனில் கனவுப் பலன்களை நம்பாதது இதற்குக் காரணம் என்று திரு.ஆ.நாகராசு குறிப்பிடுவார்.

கள ஆய்வில் பேட்டி கண்ட தகவலாளிகளில் 60% பேர் கனவுகளை நம்புகின்றனர். 40% பேர் கனவுப் பலனை எதிர்பார்க்காமல் செயல்படுகின்றனர்.

**திருமணச் சடங்கு**

திருமணம் இரண்டு தனிப்பட்டவர்களுக்கிடையே நடைபெறும் உடன்படுக்கை மட்டுமல்ல. அது இரண்டு குடும்பத்தினிடையே, குழுக்களிடையே இணைப்பை, நெருக்கத்தை ஏற்படுத்தும் உறவுப்பாலம் என்றும் கூறலாம். சங்க காலம் போல் இல்லாமல் இன்று அவரவர் வசதி

வாய்ப்புகளுக்கு ஏற்றவாறு நடத்துகின்றனர். ஆனால் சடங்குமுறைகளை முறையாகப் பின்பற்றி வருகின்றனர்.

தொல்காப்பியர் பத்துப் பொருத்தங்களாக, பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உருவம், நிறுத்த காமவாயில், நிறைப்பொருத்தம், அருள், உணர்வு, திருப்பொருத்தம் என்று குறிப்பிடுகின்றார்.

பொருந்தாத பத்துத் தன்மைகளாக, நிம்புரி, கொடுமை, வியப்பு, புறமொழி, வன்சொல், பொச்சாப்பு, குடிமை, ஏழைமை, மறதி, ஒப்புமை என்று குறிப்பிடுகின்றார்.

இன்றைய மக்கள் திருமணத்திற்குப் பெண் பார்த்தவுடன், பிடித்துப் போயிருந்தால் மணமக்கள் இருவரின் பிறப்புக் குறிப்புப் (சாதகம்) பார்த்து முடிவு செய்கின்றனர். "பத்துப் பொருத்தங்கள் இருக்கின்றதா என்றும் பார்த்து, அவ்வாறு பொருந்தி இருந்தால் இரு குடும்பத்தார்களும் நாள், நட்சத்திரம், கிழமை பார்த்துத் திருமணம் நடத்துவதாகத் திரு.க.கணபதி சுட்டுவார்."[14]

"பத்துப் பொருத்தங்களில் ஐந்துக்குமேல் ஆறு, ஏழு இருந்தால் போதுமானது. இன்றைய நாளில் பத்துப் பொருத்தங்கள் பார்ப்பது என்பது தொல்காப்பியர் குறிப்பிடும் தன்மைகள் அல்ல என்றும் இன்று பார்க்கப்படும் பொருந்தங்களாவன, தினம், கணம், மகேந்திரம், ஸ்திரீ தீர்க்கம், யோனி, ராசி, வசியம், ரஜ்ஜீ, வேதை, நாடிப் பொருத்தம் என்பனவாகும்"[15] என்று சோதிடர் ரவி குறிப்பிடுவார்.

சங்கச் செவ்வியல் நூல்களின் வழி நோக்கும் போது "களவு மணம், பரிசங்கொடுத்து மணத்தல், சேவை மணம், திணைக் கலப்பு மணம், ஏறுதழுவி மணமுடித்தல், மடலேறி மணமுடித்தல், போர் நிகழ்த்தி மணமுடித்தல், துணங்கையாடி மணமுடித்தல், பலதாரமணம் என்று பலவகையானத் திருமணங்கள் நடைபெற்றன"[16] என்று சசிவல்லி சுட்டுவார்.

மக்கள் வாழ்கின்ற காலம், சூழல், நிலம், பண்பாடு, செல்வநிலை, மனநிலைக்கேற்ப இல்லற அமைப்பும், திருமண முறைகளும் மாறுபடுகின்றன.

“இன்றைய மக்கள் வழக்காற்றில் திருமணச் சடங்குகளாக, உறுதிமொழி கூறித் திருமணம் செய்தல், மணமக்கள் தேர்வு முடிந்தபின் சாதகம் பார்த்தல், பொருத்தம் இருந்தால், நாள் வைத்தல் (அ) நிச்சயம் செய்தல், பந்தக்கால் நடுதல், காப்புக்கட்டுதல், கூறை அணிதல் அதாவது திருமணத்திற்கான உடையணிதல், முளைப்பாலிகை வளர்த்தல், தாலி அணிவித்தல், தாலிக்குப் பொன்னுருக்குதல், கைத்தலம் பற்றித் தீவலம் வருதல் அருந்ததி காட்டல், ஆசி கூறுதல்”[17] போன்றவைகள் கடைப்பிடிக்கப்பட்டு வருவதாக திரு.கு.முனியாண்டி வேளாளர் குறிப்பிடுவார்.

“மணச்சடங்குகளில் தம்பதிகளுக்கு உண்டாகும் புதிய நிலையையும், மாறுதல்களையும், பந்தல் அமைத்தல், ஊர்வலம், மத்தளம் கொட்டுதல், சங்கம் ஊதல் போன்றவைகள் விளம்பரப்படுத்துகின்றன. பரிசமிடுதல், நிச்சயம் செய்தல், கோத்திரம் கூறல் போன்ற சடங்குகள் மண ஒப்பந்தத்தையும், அதற்கு வேண்டியச் சான்றுகளையும் அளிக்கும். தீபம் ஏந்தல், ஆரத்தி, நலுங்கு முதலியச் சடங்குகள் கண்ணேறு படாமல் காப்பதற்காகச் செய்யப்படுபவை. விரதம், உபநயனம், காப்பு போன்ற சடங்குகள் தம்பதிகள் இதுவரையிலிருந்த நிலையிலிருந்து விலகி இருத்தலைக் குறிக்கும். புத்தாடை அணிதல், தாலி, மெட்டி, அணிதல் தம்பதிகள் புதிய நிலைக்கு மாறுதலை அளிக்கும். அம்மி மிதித்தல், அருந்ததிக் காட்டல், குங்குமம், பட்டம் கட்டுதல், மஞ்சனமாடல், தாரை வார்த்துக் கொடுத்தல், கைத்தலம் பற்றல் போன்றவைகள் தம்பதிகளுடைய புதிய கடமைகள், உரிமைகள், நடவடிக்கைகளை அறிமுகப்படுத்தும். ஆசீர்வாதம், விருந்தளித்தல் போன்ற சடங்குகள் தம்பதிகளுடைய புதிய வாழ்க்கைக்கு வேண்டிய ஆதரவளிப்பனவாகும்”[18] எனக் கலைக்களஞ்சியம் சுட்டும்.

சங்கத் தமிழரிடம் காணப்பட்டத் திருமணச் சடங்குகள் இன்றைய மக்கள் வழக்காற்றிலும் வழக்கில் இருப்பதனை நடைமுறை வாழ்வு கொண்டு அறியமுடிகின்றது. இச்சடங்குகள் அவரவர் சாதியச் சமூக நிலைகளில் சிறுசிறு மாற்றங்களுடன் இருந்து வருகின்றன. சங்கத் தமிழரிடம் காணப்பட்ட

சடங்குகள் அப்படியே கடைப்பிடிக்கப்படவில்லை. அவை சிறுசிறு மாற்றங்களுடன் தொடர்ந்து கொண்டிருப்பதைக் கள ஆய்வு உறுதி செய்கிறது.

**நடுகல் நம்பிக்கை**

பண்டைத் தமிழ் மக்களிடம் வேரூன்றியிருந்த நம்பிக்கைகளில் மிகவும் குறிப்பிடத்தக்கது இறந்தார்க்கு நடப்பட்டக் கற்களை வணங்கும் நெறியாகும். போரில் இறந்தார்க்கு வீரர்களின் நினைவினைப் போற்றும் வண்ணம் அவர்களின் பெயர்களையும், பெற்ற வெற்றிகளையும், பெருமையையும் பொறித்துக் கல்நட்டு வணங்கும் மரபு தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே இருந்துள்ளதனை அவர் வெட்சித்திணையின் ஒரு கூறாகக் காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல், பெரும்படை வாழ்த்து என்று குறிப்பிடுவதன் மூலம் அறியலாம்.

இம்மரபு இன்றைய மக்கள் வழக்காற்றிலும் இருந்து வழிபட்டு வருவதனைக் கள ஆய்வு உறுதி செய்கிறது. ஆனால் போரில் இறந்தோர்க்கு அல்ல, "இயற்கையாக மரணம் அடைந்தவர்களுக்குக் கல்நட்டு, அவர்களின் பெயர், பிறப்பு, இறப்பு நாள் போன்றவைகளைக் குறிப்பிட்டு வருடம் ஒரு நாள் வழிபட்டு வருவதாகக்"[19] குறிப்பிடுவர்.

"கிறித்தவர்கள் பெரும்பாலும் சிலுவைக்கல் நடும் பழக்கத்தைக் கொண்டுள்ளனர். வருடம் ஒருமுறை கல்லறைத் திருநாள் கொண்டாடும் வழக்கம் உள்ளது. இவ்வாறு வழிபடுவதன் மூலம் அவர்களின் ஆன்மா சாந்தியடையும், வழிபடுவோர்க்கும் நிம்மதி கிடைக்கும் என்றும் திரு.சகாயம் சுட்டுவார்."[20]

இந்துக்களில் அனைவரும் கல்நட்டு வழிபடுவதில்லை. அவரவர் விரும்பினால் கல்நட்டு, சமாதி கட்டி வழிபடுகின்றனர். இதனைக் கண்ணன் அவர்கள் "எனது தந்தை மரணத்திற்குப்பின் அவரது பெயர், பிறப்பு, இறப்புத் தேதி குறிப்பிட்டுக் கல்நட்டு வழிபட்டு வருகிறேன் என்று தெரிவிப்பதன் மூலம் அறியமுடிகின்றது."[21]

சங்ககால நடுகல் வழிபாட்டின் எச்சங்கள் இன்றும் வழக்கில் உள்ளதனைக் காணமுடிகின்றது.

**நிமித்தம் பார்த்தல் (சகுனம்)**

கற்காலத்திலிருந்து இக்காலம் வரை மனித வாழ்க்கை இயற்கையை அடியொற்றி அமைந்துள்ளது. இயற்கை நிகழ்வுகளைக் காரண காரியத் தொடர்பின்றி நம்ப ஆரம்பித்தான். இவற்றின் அடிப்படையில் தோன்றிய பலவற்றுள் சகுனமும் ஒன்றாகும்.

“மனிதன் ஆற்றப்புகும் செயல்களுக்கும், இற்கையின் நிகழ்வுகளுக்கும் ஒருவிதத் தொடர்பு இருப்பதாக மனிதமனம் கற்பித்துக் கொண்ட நிலையில் நிமித்தக்கூறுகள் உருவாகத் தொடங்கின. காலப்போக்கில் வாழ்வியலில் தொடர்ந்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளோடு அவ்வியற்கை நிகழ்வுகளை இயைந்து நோக்கப்பட்ட நிலையில் அவை சகுனங்களாக வடிவெடுத்தன”[22] என க.காந்தி சுட்டுவார்.

சகுனத்தின் பொருள் நோக்கில் விரிச்சி என்ற சொல் தொடர்புடையது. அவ்விரிச்சி நம்பிக்கையின் பாற்படும். அது “ஒருவர் ஏதேனும் ஒரு செயலைப் பற்றிச் சிந்திக்கவோ, செயலாற்றவோ நினைக்கும் நேரத்தில் அயலிலிருப்பவர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்வது, தான் சிந்திப்பவற்றிற்கு இயைந்தனவாகவோ அல்லது இயையாதனாகவோ அமைந்து மேற்கொள்ளப்போகும் பலனை நிச்சயிக்கும் என நம்பிக்கை கொள்ளுதலே ஆகும்”[23] என்பர் சு.வித்தியானந்தன்.

மாந்தர் மேற்கொள்ளும் வினை அல்லது செயல் இனிதே முடியு மென்பதைக் காட்சி நிகழ்வுகள் மனிதன், பறவை, விலங்கு போன்றவைகள் முன்பே அறிவுறுத்தும். இக்காட்சி நிகழ்வுகளைத் தரவுகளின் அடிப்படையில்,

1. மாந்தர் தொடர்பானவை
2. உடல் உறுப்புகள் தொடர்பானவை
3. பறவைகள் தொடர்பானவை

4. விலங்குகள் தொடர்பானவை

5. ஊர்வன தொடர்பானவை

6. மரங்கள் தொடர்பானவை

7. தெய்வங்கள் தொடர்பானவை

8. கனவுகள் தொடர்பானவை என்று பகுத்து விளக்கலாம்.

**நன்னிமித்தங்கள்**

செவ்வியல் இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள நன்னிமித்தங்களாக விரிச்சிகேட்டல், பறவை நிமித்தம், ஓந்தி, பல்லி, காக்கை, காரிப்புள், மாந்தர் உறுப்புகளில் கண் துடித்தல், தும்மல் போன்றவைகள் குறிப்பிடப்படுகின்றன. இந்நிமித்தங்களில் இன்றைய மக்கள் வழக்காற்றில் பின்பற்றப்படுபவையாக விரிச்சி கேட்டல், பறவை நிமித்தம், பல்லி கத்துதல், காக்கை கரைதல், கண்துடித்தல், தும்மல் போன்ற நம்பிக்கைகள் வழக்கில் இருப்பதனைக் கள ஆய்வின் வழி அறியமுடிகின்றது.

இவற்றில் ஓந்தி, காரிப்புள் போன்ற நம்பிக்கைகள் மக்களிடம் வழக்கிழந்து இருப்பதனைக் காணமுடிகின்றன.

**விரிச்சி கேட்டல்**

விரிச்சி என்பதற்கு நிமித்தம், நற்சொல் கேட்டல் என இருவகைப் பொருளுண்டு. வருங்காரியத்தை முன்னரே தெரிந்து கொள்ள விரிச்சி கேட்கின்ற வழக்கம் பழந்தமிழரிடம் இருந்தது. விரிச்சி பற்றித் தொல்காப்பியர் புறத்திணையியலில்,

**"படையியங்கு அரவம் பாக்கத்து விரிச்சி"**

**(தொல்.பொருள்.1004)**

என்று குறிப்பிடுகின்றார்.

பாக்கத்து விரிச்சி என்பதற்கு இளம்பூரணர் "குறித்த பொருளின் பயன் அறிவதற்குப் பாக்கத்துக் கண் நற்சொல் ஆய்தல்" என்றுரைப்பார்.

இன்றைய மக்கள் சமூகமும் விரிச்சி கேட்டலை கடைப்பிடித்து வருவதை கள ஆய்வின் மூலம் நடைமுறை வாழ்வு கொண்டு அறியமுடிகின்றது.

"ஒரு செயலுக்குப் புறப்படுவதற்கு முன் அச்செயல் இனிதே முடியுமா, இல்லை இடர்பாடு ஏதும் நிகழுமா என்று பார்த்துச் செயல்படுவதாகவும், இதன்மூலம் நன்மை விளையும் என்றும் நம்புகின்றனர்"[26] என்று அ.தியாகராசன் குறிப்பிடுவார்.

சான்றாகத் தொழில் தொடங்க, வீடுகட்ட, வாகனம் வாங்க, நிலம் வாங்க, நீண்ட நாள் தடைபட்டுவந்த செயல்கள் நிறைவேற என பல நிலைகளில் பார்க்கப்படுவதைக் காணமுடிகின்றது.

இதேபோன்று "ஏதேனும் ஒரு செயலைப் பற்றி பேசிக் கொண்டிருக்கும் பொழுதும் சிந்தித்துக் கொண்டு இருக்கும் பொழுதும் பிறர் வாய்ச்சொல்லான 'மகராசன் நல்லா இருக்கணும்', 'நூறு வயது வரை வாழணும்', 'போற காரியம் வெற்றியடையனும்' போன்ற இனிமையான சொற்கள் நன்மை பயக்கும்"[27] என்று முனியசாமி குறிப்பிடுகிறார்.

"ஒரு செயலைப் பற்றிச் சிந்திக்கும் நேரம் பல்லி கத்துதல், தும்மல், மணியோசைக் கேட்டல் போன்றவைகளும் நன்மை பயக்கும்"[28] எனச் சுட்டுவார்.

மனிதர்களால் இன்று பார்க்கப்படும் சகுனங்களில் மிக முக்கியமானது பல்லிச் சகுனமாகும். மனிதர்கள் மீது பல்லி விழும் தன்மையை வைத்துச் சகுனம் நிச்சயிக்கப்படுகிறது. "வயிற்றில் விழுந்தால் குழந்தைப் பேறு கிட்டும், உடம்பில் விழுந்தால் தீர்க்க ஆயுள் கிட்டும்."[29]

"காகம் கரைந்தால் விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கை இன்றும் மக்களிடம் நிலவி வருகின்றது"[30] என்று சுட்டுவார்.

கனவு நம்பிக்கையைப் பெரும்பாலும் மக்கள் இன்று நம்பி வருகின்றனர். "ஒருவர் தான் இறந்து போவது போன்று காணுதல், உப்பைக் காணுதல், அழுவது போலக் காணுதல், குதிரை, கழுதை, மாடு, பழங்கள்

போன்றவற்றைக் கண்டால் அவர் மறுநாள் வெளியில் எக்காரியம் தொடர்பாகச் சென்றாலும் அச்செயல் நன்மை பயக்கும்''[31] என்று உ.சாத்தையா குறிப்பிடுவார்.

**பிற நன்னிமித்தங்கள்**

மக்கள் ஒரு செயலைத் தொடங்கும் போது எதிரில் சிலரைக் கண்டால் நன்மை விளையும் என்று நம்பிக்கை கொள்கின்றனர். அவ்வகையில் ''ஆண்களில் அந்தணர், வணிகர், வேளாளர், வண்ணான், மீன் விற்போர் ஆகியோரும் பெண்களுள், தாய், மனைவி, குழந்தைகள், சகோதரி, சுமங்கலிப் பெண்கள், நிறைகுடத்துடன் வருவோர், பூவிற்போர், பால்குடம் கொண்டு வருவோர் ஆகியோரைப் பார்த்தால் நற்சகுனம் என்கிறார் திரு.ஆ.ஆறுமுகம்.''[32]

உடல் உறுப்புகளில் கண் துடித்தல், தும்மல் போன்றவைகள் நல்ல சகுனமாகக் கருதப்படுகின்றன. ''பெண்களின் இடக்கண் துடித்தல் நன்மை பயக்கும் என்று திருமதி.தா.மகேஸ்வரி சுட்டுவார். மேலும் செயலுக்கு ஏற்றவாறு தும்மல் சகுனமாக அமையும் என்றும் குறிப்பிடுவார்.''[33]

பறவைகள் தொடர்பானவற்றில் ''மக்கள் ஒரு செயலுக்காக வெளியில் செல்லும் போது பருந்து, கிளி, மயில், சிட்டுக்குருவி, புறா, கொக்கு போன்றவைகள் எதிர்பட்டால் நல்ல சகுனம் என்று நம்புகின்றனர்.''[34]

''விலங்குகளில் பசு, குதிரை, கழுதை, யானை, ஆடு, அணில், நாய், நரி, மான் போன்றவைகளைப் பார்த்துச் சென்றால் நன்மை கிட்டும் என்கிறார்.''[35]

''ஊர்வனவற்றில் பாம்பு, நண்டு, எறும்பு, பல்லி ஆகியனவற்றைப் பார்த்துச் சென்றால் நன்மை விளையும் என்றும், பாம்பில் இரு பாம்புகள் பிணைந்திருப்பதைக் கண்டால் வெற்றி நிச்சயம் என்றும் நம்புவதாக திரு.ஜெகநாதன் சுட்டுவார்.''[36]

மரங்கள் நன்னிமித்தம் உணர்த்தும் வாயில்களாக அமைவதனை உ.வே.சாமிநாத ஐயர் ''மரங்கள் நிமித்தமுணர்த்தும் திறத்தினைப் பண்டைக்

காலந்தொட்டு இன்றுவரை உலகின் பல பாகங்களில் வாழும் மக்களிடம் பரவியிருக்கிறது''[37] என்பர்.

வாழை மரமும், தென்னை மரமும் நன்மை பயக்கும் என்று நம்புகின்றனர். ''ஒரு செயலுக்காக வெளியில் செல்லும் போது குலை தள்ளிய வாழை மரத்தையும், பாலை தள்ளிய தென்னை மரத்தையும் பார்த்துச் செல்லுதல் நன்மை தரும்''[38] என்று உரைப்பர்.

மக்கள் தங்கள் அச்சத்தைப் போக்கிக் கொள்ளவும், தாங்கள் நினைத்தது நடக்கவும் தெய்வத்தை வேண்டுகின்றனர். இத்தெய்வங்களின் முன் கோயில்களில் சகுனம் பார்க்கின்றனர்.

''கோயிலில் பூக்களைக் கட்டிப்போட்டு சிறு குழந்தையை எடுக்கச் செய்து தங்களுக்குச் சாதகமான பூ வந்தால் நற்சகுனம் என்றும், அர்ச்சனையில் இடம்பெறும் தேங்காயினைப் பூசாரி சரிபாதியாக உடைத்தால் அவ்வர்ச்சனைக்குரிய பலன் கிடைக்கும்''[39] என்று சுட்டுவார்.

**தீய சகுனங்கள்**

ஒருவர் மேற்கொள்ளும் செயல் நன்மையின்றி தீமையில் முடியும் என்பதை முன்னறிவிப்பாக உணர்த்துவன தீய சகுனங்கள் எனப்படும். இச்சகுனங்களை இலக்கியங்களில் பல் நிலத்தில் விழுதல், எண்ணெய் தேய்த்தல், ஆண் பன்றியின் மேல் ஏறுதல், ஆடை நீக்குதல், தன்னுடைய படைகள் கவிழுதல் போன்றவைகளாகக் குறிப்பிடப்படுகின்றன. இவை கனவில் தோன்றும் தீய சகுனங்கள் ஆகும். மரங்கள் தொடர்பானவற்றில் உன்னமரம் கரிந்து காணுதல், பறவை நிமித்தங்களில் ஆந்தை, கூகை ஆகியவைகளும், விலங்கு நிமித்தங்களில் யானை, எருது, மறி, கோட்டுமா ஊர்தல் போன்றவைகளும், மாந்தர் நிமித்தங்காட்டுவதில் தலைவிரி கோலம், அழுகைக் கண்ணீர், விளக்கு அணைதல் போன்றவைகளும் சுட்டப்படுகின்றன.

''மாந்தர் உறுப்புகளில் பெண்கள் தலைவிரி கோலமாக எதிர்படுதல், அழுகைக் கண்ணீர், மொட்டைத் தலையுடன் எதிர்படுதல்,

முக்காடு போட்டு வருதல், கணவனை இழந்த பெண் எதிர்வருதல் போன்றவைகள் தீய சகுனங்களை உணர்த்துவதாக நம்புகின்றனர்.''[40]

''ஒரு நற்செயலுக்குச் செல்லும்போது ஏற்றிவைத்த தீபம் அணைதல், வீட்டு நிலையில் தலைதட்டுதல், கால் இடறுதல், தோள் துடித்தல் போன்ற அறிகுறிகள் தீயசகுனமாக இருக்கிறது''[41] என்பர்.

''பன்றி கழிவுகளை உண்ணும் இயல்புடையதால் நற்செயல் கருதி வெளியில் செல்லும் பொழுது பன்றி குறுக்கிடுவது வாகனங்களில் மோதுவது தீய சகுனமாகக் கருதப்படுகின்றன.''[42] அதனால் தான் பன்றி மோதிய வாகனத்தை உடனே விற்றுவிடுவர்.

''நாய், யானை, குதிரை, பசு ஆகியவைகள் தம் இயல்புக்கு மாறான செயல்கள் செய்தல்''[43] தீச்சகுனமாகக் கருதப்படுவதனை ஆய்வில் அறிய முடிகின்றது.

''நற்செயல் காரணமாக சிந்தித்துக் கொண்டு இருக்கும் பொழுதும், பேசிக் கொண்டிருக்கும் பொழுதும் பெண்கள் தும்மினால் தீய சகுனம்''[44] என்று குறிப்பிடுவார்.

**பிற தீச்சகுனங்கள்**

இன்றைய மக்கள் வாழ்வில் எண்ணற்ற சகுனங்களை நம்புகின்றனர். அவற்றில் தீயசகுனத்தை உணர்த்துபவை மிகுதியாகக் காணப்படுகின்றன.

''ஒருவர் ஒரு செயல் கருதி வெளியில் செல்லும் பொழுது அந்தணர் ஒருவராக எதிர்ப்பட்டால் தீச்சகுனம் என்று சுட்டுவார். மேலும் குறவர்கள், அலிகள், மாற்றுத் திறனாளிகள், கையில் மண்வெட்டியுடன் எதிர்ப்படுதல், வெற்றுக் குடத்தினைக் கொண்டு வருதல், கணவனை இழந்தோர் எதிர்ப்படுதல், மொட்டைத் தலையுடன் வருதல், முக்காடு போட்டு வருதல், தலைவிரிகோலமாக வருதல், விறகு சுமந்து வருபவர்களைக் காணுதல் ஆகியவை மாந்தர்கள் தொடர்பான நம்பிக்கைகள் என்றும் பறவைகளில் காகம் தலையில் தட்டிச் செல்லுதல், கருடன் தலையில் அடித்துச் செல்லுதல்,

விலங்குகளில் பன்றி, பூனை குறுக்கிடுதல், நாய் குரைத்துக் கொண்டு மண்ணைக் காலால் கீறுதல், ஊர்வன தொடர்பானவற்றில், ஆமை வீட்டிற்குள் வருதல், பாம்பு வீட்டிற்குள் வருதல், கனவுகள் தொடர்பானவை களில், திருமணக் கோலத்தில் ஒருவரைக் காணுதல், கோயில் மாடு முட்டுதல், பச்சை மரம் வெட்டுதல், பொட்டு அழிதல், புத்தாடை உடுத்தல், மாமிசம் காணுதல், நெற்குவியல் காணுதல் போன்றவைகள் தீய சகுனங்களாக அமைகின்றன''[45] என்று அ.தியாகராசன் சுட்டுவார்.

''தீயஒலிச் சகுனமாக, ஆந்தை கத்துதல், சாக்குருவி, கூகை குழறுதல், நாய் ஊளையிடுதல், பசு கத்திக்கொண்டே இருத்தல், மாந்தர்கள் ஐயையோ என்றலும், எங்கே போகின்றீர் என்று கேட்டலும் தீய சகுனம்''[46] என்கிறார்.

சகுனங்கள் மக்களின் வாழ்க்கையினை, செயற்பாடுகளை நிச்சயிக்கின்றன. புதிது புதிதாகச் சகுனங்கள் தோன்றினாலும், செவ்வியல் நூல்களில் காணலாகும் நம்பிக்கையின் அடிப்படையில் சகுனங்கள் பார்ப்பது இன்றைய மக்கள் வாழ்வில் நிலைபெற்று இருப்பதனைக் காண இயலும்.

இலக்கியங்களில் காணப்பட்டச் சகுனங்களில் உன்னமரம் தளிர்த்தல், கருகுதல் போன்ற நம்பிக்கைகள் இன்று வழக்கிழந்து இருப்பதனைக் காணமுடிகின்றது. இது ஏன் வழக்கிழந்தன என்று கள ஆய்வுத் தரவுகள் சேகரிப்பில் விளக்கம் கிடைக்கவில்லை. உன்ன மரம் என்றால் என்ன? என்பதே பலரும் நமக்கு எழுப்பும் வினாவாக அமைந்தது.

**பேய் நம்பிக்கை**

இன்றைய மக்கள் வழக்காற்றில் பேய் நம்பிக்கை இல்லாதவர்களே இல்லை என்று கூறலாம். அந்த அளவுக்கு மக்கள் இந்நம்பிக்கையில் உளவியல் நிலையில் திளைத்துள்ளனர். இலக்கியங்களில் இந்நம்பிக்கை பதிவு செய்யப்பட்டு இருந்தாலும் இன்றைய மக்கள் வாழ்விலும் இந்நம்பிக்கை மிகுதியாக நம்பப்பட்டு வருவதனைக் கள ஆய்வு உறுதி செய்கிறது. வெறியாட்டு என்பதனோடும் இதனைத் தொடர்பு படுத்திக் கூறலாம்.

**பேய் பிடிக்கக் காரணங்கள்**

"பேய் பிடித்தவர்கள் பிரம்மை பிடித்தவர்கள் போல் காட்சியளிக்கின்றனர். யார் சொல்வதையும் கேட்பதில்லை. எது சொன்னாலும் முறைத்துக் கோபத்துடன் பார்த்தல், உறக்கமின்மை, உடல் சோர்வு, மெலிவு, உடம்பு முழுமையும் யாரோ அடித்தாற் போல் வலி, தனிமையில் சிரித்தல், புலம்புதல், அழுதல், உணவு உண்ணாமை, எதிரில் இருப்பவர்களைத் தாக்க முயற்சித்தல் போன்றவற்றின் மூலம் அறிந்து கொள்ளலாம் என்பார்"[49] பூசாரி.

**பேய் விரட்டுதல் (பேயோட்டுதல்)**

"பேய் பிடித்துள்ளது என்று தெரிந்தவுடன் அதனை ஓட்டுவதற்குச் சில சடங்கு முறைகளைச் செய்து வருகின்றனர். மந்திரவாதி என்று அழைக்கப்படும் பூசாரி பேய் பிடித்தவரை தன் முன்னால் அமர வைத்து பூசைக்குத் தேவையான பொருட்களைப் பரப்பி தனது விருப்பத் தெய்வங்களை அழைத்து உடுக்கை எனும் இசைக்கருவியினை இசைத்துப் பாட்டுப்பாடுவார். இப்பாடல் கேட்டவுடன் பேய் பிடித்தவர் ஆட ஆரம்பித்து விடுகின்றனர். பூசாரி தனது தெய்வ சக்தியால் அப்பேயை விரட்ட முற்படும் சில நேரங்களில் பேய் பிடித்தவர்கள் பூசாரியை எதிர்க்கும் நிலைகளும் ஏற்படுவதாகக் குறிப்பிடுவார். இந்த நேரங்களில் சாட்டை, பிரம்பு முதலியவற்றைக் கொண்டு அடித்து விரட்டுவர் என்பர்."[50]

"பூசைப் பொருட்களில் முக்கியப் பொருட்களாக எழுமிச்சைப் பழம், முட்டை, குங்குமம், பத்தி, சூடம், சாம்பிராணி, பூ, பழம், தேங்காய், காஞ்சிரங்குச்சி முதலியவைகள் பயன்படுத்தப்படும்"[51] என்று குறிப்பிடுவார்.

**சடங்குமுறை**

இராசசிங்கமங்கலம் மக்கள் பேய்பிடித்தவர்கள் வீட்டிலேயே பெரும்பாலும் சடங்குமுறைகளைச் செய்வதனைக் கள ஆய்வின் வழி அறிய முடிகின்றது.

“இச்சடங்கு பெரும்பாலும் இரவு நேரங்களில் நடத்தப்படுகிறது. பகல் நேரங்களில் என்றாவது ஒருநாள் தான் நடத்தப்படும்”[52] என்று கூறுவார்.

“பேய் ஆடிய பெண்களிடம் பூசாரி உனக்கு என்னென்ன வேண்டும் என்று கேட்டவுடன் அப்பேய் விருப்பப்பட்ட அனைத்துப் பொருள்களையும் கூறுவதாகவும், இவை அனைத்தையும் கொடுத்தால் விலகுவாயா? என்று கேட்பதற்கு விலகுவேன் என்றும் கூறுவதாகச் சுட்டுவார்.”[53]

“பேய் பிடித்தவர்கள் சொல்லும் அனைத்தையும் வாங்கி வந்து ஓரிரு நாள்கள் கழித்து மீண்டும் பூசையை ஏற்பாடு செய்து மீண்டும் அப்பேயை அழைத்துத் தான் கேட்ட அனைத்துப் பொருட்களும் இங்கே உள்ளது. அதனைப் பெற்றுக் கொண்டு விலகிவிடு என்று சொல்வதாகவும், அதனைக் கேட்டு நான் விலகிக் கொள்கிறேன் என்றும் கூறும். பிறகு பூசாரி திருநீரை எடுத்து பேய்பிடித்தவர் தலையில்போட்டு, நெற்றியில் பூசிவிடுவார். அத்துடன் பேய் விலகுவதாக நம்புகின்றனர்.”[54] மேலும் மந்திரித்த கயிறு, தாயத்து போன்றவைகளைக் கொடுத்துக் கட்டச் சொல்கிறார்.

“பேய் சொன்ன அனைத்துப் பொருட்களையும் இரவு நடுச்சாமத்தில் எடுத்துக் கொண்டு பூசாரியோடு உறவினர் ஒரு சிலர் சென்று ஊருக்கு ஒதுக்குப்புறமான இடத்தில் ஒரு மரத்தடியில் கேட்ட பொருட்களை வைத்து வழிபட்டு அம்மரத்தில் ஆணி அடித்து, சேவல் பலியிட்டு அதன் இரத்தத்தைத் தெளிப்பர். பிறகு பேய் பிடித்தப் பெண்ணின் தலையில் இருந்து சேகரிக்கப்பட்ட தலைமுடியை ஆணியில் சுற்றி வைத்துவிட்டுத் திரும்புவதாகக் கோட்டையன் குறிப்பிடுவார்.”[55]

மரத்தில் ஆணி அடித்துத் தலைமுடியைச் சுற்றுவதால் பேய் பிடித்தவரிடம் இருந்த பேய் மரத்தைச் சென்றடைவதாகவும் நம்புகின்றனர்.

“பேய்களுக்குப் பிடித்த பொருட்களாகக் கண்ணாடி, பொட்டு, வளையல், ரிப்பன், வாசனைத் திரவியம் (பவுடர்), சீப்பு, மஞ்சள், குங்குமம், மல்லிகைப்பூ போன்றவைகள் பெண் பேய்களும், பீடி, சிகரெட், சாராயம்,

இறைச்சி போன்றவைகள் ஆண் பேய்களும் கேட்கும்”[56] என்று தகவலாளி பூசாரி குறிப்பிடுவார்.

**கிறித்தவர்கள் பேயோட்டும் முறை**

கிறித்தவர்களிடமும் பேயோட்டும் பழக்கம் இருந்து வருகின்றது. மேல்நாட்டு சமயத்தை நம்பிக் கடைபிடிக்கும் இவர்கள் அடிப்படையில் இங்குள்ள மதம் மாறியத் தமிழர்கள் தேவாலயங்களில் புனித அந்தோனியார் தேவாலயம் இராசசிங்க மங்கலம் பெரிய கண்மாயின் உட்பகுதியில் முத்துப்பட்டிணம் எனும் ஊரில் இச்சடங்கு நடைபெறுகிறது. இவர்கள் உடுக்கை, சாட்டை, பிரம்பு கொண்டு விரட்டுவதில்லை.

“செபம் செய்வதன் மூலமும், பைபிளை பேய்பிடித்தவர்களின் தலையில் வைத்துச் செபிப்பதன் மூலமும் பேய் விலகும்”[57] என்று நம்புவதாக திரு.சேவியர் சுட்டுவார்.

“இசுலாமிய தர்ஹாகளிலும் பேய், நோய், பில்லி, சூனியம் பேயோட்டும் நிகழ்வு நடைபெறுவதாக நம்புகின்றனர். இராசசிங்க மங்கலப் பகுதியில் நிகழவில்லை என்றாலும் இராமநாதபுரம் மாவட்டத்தின் ஒரு பகுதியான ஏர்வாடி தர்ஹாவில் இந்நிகழ்வு நடைபெறுவதாகத் திரு.ச.ராஜாஉசேன் குறிப்பிடுவார்.”[58]

அனைத்து மதத்தினரும் இங்குச் சென்று பலன் கிடைப்பதாகக் கூறி வருகின்றனர். பேய் நம்பிக்கை மேற்கண்ட சான்றுகளின் அடிப்படையில் மக்கள் வாழ்வில் இன்றும் மிகுதியாக நம்பப்பட்டு வழக்கில் இருப்பதனைக் காணமுடிகின்றது.

**விழா பற்றிய நம்பிக்கை**

ஒரு சமுதாயத்தின் வளர்ச்சி, வீழ்ச்சி, போக்கு, மறுமலர்ச்சி ஆகியவற்றை அச்சமுதாயம் காலங்காலமாகப் போற்றிக் கொண்டாடிக் கொண்டிருக்கும் விழாக்களின் வழி அறிய இயலும். சமுதாயத்தின் எண்ணப் போக்கிற்குத் தக விழாக்கள் உருவாகியும் மறைந்தும் வரக் காண்கிறோம். விழாக்களின் வழி ஒரு சமுதாயத்தின் பண்பாட்டினை இனங்காணலாம்.

செவ்வியல் நூல்களில் திருமணவிழா, பிறந்த நாள் விழா, கார்த்திகை விழா, பங்குனி விழா, உள்ளி விழா, ஓணவிழா, பூந்தொடை விழா, இந்திர விழா, காமன் விழா, புனலாட்டு விழா என்று பலவகை விழாக்கள் குறிப்பிடப் பட்டாலும் இன்றைய மக்கள் வழக்காற்றில் வழக்கில் இருக்கும் விழாக்களாவன திருமண விழா, பிறந்தநாள் விழா, கார்த்திகை விழா, பங்குனி விழா ஆகியனவாகும். இவற்றைத் தவிர மீதமுள்ள உள்ளிவிழா, ஓணவிழா, இந்திரவிழா, காமன்விழா, புனலாட்டு போன்ற விழாக்கள் வழக்கிழந்து காணப்படுவதனைக் கள ஆய்வு உறுதிசெய்கிறது.

திருமணவிழா பற்றி தனித் தலைப்பாக முன்னர் குறிப்பிட்டது கொண்டு அறியலாம். இன்றைய மக்கள் சமூகத்தில் தங்களுடையப் பிறந்தநாள்களையும், தங்களது குழந்தைகளுடைய பிறந்த நாட்களையும் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றதனை அறியமுடிகின்றது.

“பிறந்தநாள் விழா கொண்டாடுவதன் மூலம் பிறருடைய ஆசிர்வாதம் கிடைக்கின்றது. குழந்தைகளுக்கும் ஒரு இன்பமான நாளாக அமைகின்றது. அவர்களின் மூலம் மற்றவர்களும் மகிழ்ச்சியடைகின்றனர். வருடத்தில் ஒருநாள் இன்பமானதாக அமைத்துக் கொள்வது இதன் நோக்கமாகும்”[59] என்கிறார்.

“திருமண நாள் விழா வருடம் ஒருமுறை திருமணம் நடைபெற்ற நாளில் நிகழ்த்துவதுண்டு. அன்றைய தினம் இறைவனை வழிபட்டு, இயலாதவர்களுக்கு ஏதேனும் உதவிகளைச் செய்து வருவதாகத் திருமதி.மு.அமிர்தம் சுட்டுவார்.”[60]

**கார்த்திகை விழா**

இன்று தமிழகத்தில் கார்த்திகை விளக்கீட்டு விழா கொண்டாடப்பட்டு வருவதும், தலைநாளில் விளக்குகள் மிகுதியாக இடம்பெறுவதும், மற்றைய நாட்களில் சில விளக்குகள் ஏற்றப்படுவதனையும் வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

“இவ்விழா கார்த்திகை நட்சத்திரத்திற்கு உரியவனான முருகப் பெருமானுக்குக் கொண்டாடப்படும் விழாவாக நடைபெற்று வருகின்றது”[61] என்பார்.

திருவண்ணாமலையில் அக்னி வடிவமாகச் சிவன் உறைவதாக நம்பி திருக்கார்த்திகை வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. கார்த்திகை விழாவைத் திருக்கார்த்திகை, கொள்ளிக் கார்த்திகை எனப் பகுத்து வழிபடுகின்றனர். இராசசிங்க மங்கல ஒன்றியப் பகுதி மக்கள் இவ்விழாவினைப் பின்பற்றி வழிபட்டு வருவதனை ஆய்வில் அறிய முடிகின்றது.

“திருக்கார்த்திகை அன்று வீடுகள் தோறும் விளக்கேற்றி வழிபடுவர். கொள்ளிக் கார்த்திகையன்று மக்கள் ஓலைகளை ஒன்றாகச் சேர்த்து ஆள் உயரத்திற்குக் கட்டிப் பொது இடங்களான கோவில் முன்பு அதனைக் கொளுத்திச் சென்று அவரவர் வயல் மூலையில் ஊண்டி வைப்பர். இதன்மூலம் விளை நிலங்களில் பூச்சி தாக்காது என்றும், விளைச்சல் அதிகரிக்கும் என்றும் நம்புவதாகக் குறிப்பிடுவார்.”[62]

**பங்குனி விழா**

முருகன் கோயில்களில் இவ்விழா வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. பங்குனி மாதம் பவுர்ணமியன்று இப்பங்குனி விழா கொண்டாடப்படுகின்றது. இதனைப் பங்குனி உத்தரம் என்றும் வழங்கி வருகின்றனர். இராமநாதபுரத்தில் வழிவிடு முருகன் கோவிலில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. இராசசிங்க மங்கலப் பகுதியில் அழிந்திக் கோட்டையில் உள்ள பாலமுருகன் தண்டாயுதபானி கோவிலிலும் சிறப்பாகக் கொண்டாடப்படுவதாக மக்கள் குறிப்பிடுகின்றனர். கள ஆய்விலும் இதனை அறியமுடிகின்றது.

“பங்குனி உத்தர நாளன்று பொதுமக்களுக்கு உணவு படைத்தால் நன்மை பயக்கும், முருகனின் அருள் கிட்டும் என்று நம்பிக்கை உள்ளதாக திருமதி.ச.காளியம்மாள் குறிப்பிடுவார்.”[63]

பங்குனி மாதத்தில் வருகின்ற உத்தர நட்சத்திரத்தன்று மக்கள் விரதமிருந்து முருகப்பெருமானை வழிபடுவார்கள். “பங்குனி உத்தரத்தன்று மலையிலுள்ள கோயில்களுக்குச் சென்று பொங்கல் வைத்து முருகப் பெருமானை வழிபட்டால் நினைத்த காரியம் நிறைவேறும் என்பார்.”[64]

மேற்கண்ட சான்றுகளின் அடிப்படையிலும், தரவுகளின் அடிப்படையிலும் திருமண விழா, பிறந்தநாள் விழா, கார்த்திகை விழா, பங்குனிவிழா போன்றவைகள் வழக்கில் இருப்பதனையும், உள்ளிவிழா, ஓணவிழா, புனலாட்டு விழா, இந்திரவிழா, காமன்விழா போன்றவைகள் வழக்கிழந்து இருப்பதனையும் காணமுடிகிறது.

**வெறியாட்டு மற்றும் பலியிடுதல்**

தலைவன் மீது காதல் கொண்டத் தலைவி அவன் பிரிவில் உடல் மெலிந்து காணப்பட்டதும், நற்றாய் மகளின் மெலிவுக்குக் காரணம் கேட்டு வேலனை அழைக்கின்றாள். முருகனை வழிபடும் வேலன் தன் வழிபடு தெய்வத்தை அழைத்துப் பாடி பின் இந்நோய் முருகனால் வந்தது என்று கூறுவான். பின் வெறியாட்டு நிகழ்த்தக் களம் அமைத்துப் பூசை செய்து வெறிவிலக்குவர். ஆட்டின் கழுத்தை அறுத்துப் பலியிட்டதனையும் இதன் வாயிலாக அறியமுடிகின்றது. இவ்வெறியாட்டு இன்று பேயோட்டும் சடங்கோடு தொடர்புடையது என்று இன்றைய மக்கள் நம்புகின்றனர்.

“இன்றைய மக்கள் வழக்காற்றில் பேயோட்டும் நிகழ்வில் ஆடு பலியிடப்படுவதில்லை. சேவல் பலியிடப்படுகிறது. அப்படியும் சரியாகாவிட்டால் சிறு பன்றியை அறுத்துப் பலியிடுகின்றனர். இரவு நேரங்களில் மட்டும் இந்நிகழ்வுகளைச் செய்வதாக திரு.கோட்டைச்சாமி பூசாரி தெரிவிப்பார்.”[65]

பேய் மற்றும் தீராத நோய் உள்ளவர்களுக்கு இந்தப் பலியிடுதலைச் செய்தால் குணமடைவர் என்று நம்புகின்றனர்.

“பேய், செய்வினை அகற்றுதல், பில்லி, சூனியம் அகற்றுதல் போன்ற நிகழ்வுகளில் பாதிக்கப்பட்டவரின் இல்லத்தில் அவரை அமர வைத்து வெள்ளை நிறச் சேவலைக் கொண்டு ஏதோ மந்திரம் உபசரித்து தலையைச் சுற்றி விட்டுவிடுவர். பிறகு ஒரு மாதம் கழித்து பூசைக்குத் தேவையான பொருட்களை வாங்கி இரவு நேரத்தில் பச்சரிசி மாவில் மஞ்சள் தூள் சேர்த்து மனித உருவம் போன்ற பொம்மை செய்து அதன்மேல் குங்குமம் தடவி, குண்டூசிகளைக் கொண்டு அவ்வுருவம் முழுமையும் குத்துவர். பிறகு எலுமிச்சைப் பழத்தை அறுத்து குங்குமத்தைத் தடவி பாதிக்கப்பட்டவரின் தலையைச் சுற்றி நான்கு திசைகளிலும் வீசிவிடுவர். பின் தலைசுற்றி விடப்பட்ட சேவலைப் பாதிக்கப்பட்டவரின் தலையில் அமர வைத்து மந்திரங்கள் கூறி சாவலின் உடம்பில் குண்டூசியைக் குத்துவர். பின் சுடாத மண்பானையில் அச்சேவலை உயிருடன் அப்பானைக்குள் திணித்துச் சுடுகாட்டிற்குக் கொண்டு செல்வர். அங்கு முழங்கால் அளவிற்கு குழிவெட்டி படையல் பொருட்களைப் பரப்பிப் பூசை செய்து அக்குழிக்குள் படையல் பொருள்கள் அனைத்தையும் வைத்து, சேவலிருக்கும் பானையையும் வைத்துப் புதைத்து விடுகின்றனர். இவ்வாறு செய்வதன் மூலம் பேய், நோய் பிடித்தவரிடம் இருந்து அவை எல்லாம் சேவலுக்குள் குடிபுகுந்து விடுகின்றது என்று நம்புவதாக தெரிவிப்பார்.”[66]

பலியிடுதல் இன்று மக்களின் வேண்டுதல் நிறைவேறியவுடன் தெய்வங்களுக்கு நிறைவேற்றப்படும் சடங்காகச் செய்து வருகின்றனர். “இன்றைய மக்கள் வாழ்வில் தெய்வங்களிடம் தங்களது குறைகளையும், வேண்டுதல்களையும் கூறி முறையிடுகின்றனர். இதனை நிறைவேற்றினால் உயிர்ப்பலியாக ஆடு, கோழி, சேவல் இவைகளைப் பலியிடுவதாக நேர்ந்து கொள்கின்றனர். இத்தேவைகள் நிறைவேறியவுடன், குறைகள் நிவர்த்தி யடைந்தவுடன் பலியிடுதல் சடங்கினைச் செய்வதாகக் குறிப்பர்.”[67]

“இன்றைய மக்கள் வழக்காற்றில் பலியிடுதல், பல கோரிக்கைகளைத் தெய்வத்திடம் வைத்து நிகழ்த்தப்படுகின்றது. அதாவது குழந்தை இல்லாதோர்

குழந்தை வரம் வேண்டி, திருமணமாகாதோர் திருமணம் நடக்க வேண்டி, செல்வம் வேண்டி, நோய், துன்பம் தீர்த்தல், தொழில் வெற்றியடைதல், வேலை கிடைத்தல், நினைத்த செயல் வெற்றியடைதல், நன்மை விளைதல் போன்றவை நிறைவேறியவுடன் இச்சடங்கினைச் செய்து வருவதாக உரைப்பார்.''[68]

மேற்கூறிய சான்றுகளின் அடிப்படையில் இராசசிங்க மங்கலம் பகுதி மக்களிடம் வெறியாட்டு மற்றும் பலியிடுதல் நம்பிக்கை சிறு மாற்றங்களுடன் வழக்கில் இருப்பதனை அறியமுடிகின்றது.

**முற்பிறப்பு, மறுபிறப்பு**

முற்பிறப்பில் செய்த நல்வினை, தீவினைப் பயனாக மறுபிறப்பில் இன்ப, துன்பங்கள் நிச்சயிக்கப்படுகின்றன. ''உயிர்களின் வினைக்கேற்பப் பிறவிகள் எடுக்கின்றன என்பது பிறவிக் கொள்கையின் அடிப்படையாகும். பிறப்பு வினைப் பயனுக்கேற்ப அமையும் என்பது சமுதாயக் கொள்கையாகும்''[69] என்பார் சு.சக்திவேல்.

ஒப்பாரிப் பாடல்களில் இறப்பு, இறந்த உயிர், முற்பிறவி, மறுபிறவி, விதி, வினை, அறம் தொடர்பான நம்பிக்கைகள் காணப்படுவதாகவும் சுட்டுவார்.

இன்றைய மக்கள் வாழ்விலும் இந்த முற்பிறப்பு, மறுபிறப்பு நம்பிக்கையினைக் காணமுடிகின்றது. கள ஆய்வில் இராசசிங்க மங்கலப் பகுதியைச் சேர்ந்த மக்கள் இந்நம்பிக்கையைக் கடைப்பிடித்து வருவதாகத் தெரிவிக்கின்றனர்.

''போன பிறவியில் என்ன பாவம் செய்தேனோ / செய்தானோ இன்று இப்படி துன்பப்பட வேண்டியுள்ளது. இப்பிறவியில் ஏதேனும் துன்பம் எவர்க்கும் விளைவித்தால் மறுபிறவியில் அல்லது அவனது மனைவி குழந்தைகளைத் துன்பம் சூழ்ந்துவிடும் என்று நம்புவதாகக் குறிப்பிடுவார்.''[70]

''நான் செய்த பாவங்கள் எனது பிள்ளைகளைச் சேரும். இல்லையெனில் அடுத்த பிறவியில் என்னைச்சேரும் என்கிறார் திரு.உ.பஞ்சவர்ணம்.''[71]

மேற்காணும் சான்றுகள் முற்பிறப்பு மறுபிறப்பு நம்பிக்கை வழக்கில் இருப்பதனை உறுதிசெய்கிறது.

**ஊழ்வினை, நல்வினை, தீவினை**

ஊழ்வினை என்பது முற்பிறப்பில் செய்த நல்வினை, தீவினைகள் ஆகும். ஊழ்வினை உண்டென்னும் உண்மையைத் தொல்காப்பியர்,

**"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
**ஒன்றி உயர்ந்தது பாலது ஆணையின்**
**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**
**மிக்கோர் ஆயினும் கடிவரை யின்றே"(தொல்.பொருள்.90)**

எனும் நூற்பாவில் சுட்டுகிறார். பழந்தமிழ் இலக்கியங்களும் முற்பிறப்பில் ஒருவர் செய்த நல்வினை தீவினைகளுக்கேற்ப அடுத்த பிறவியில் அவருடைய இன்ப துன்பங்கள் நிச்சயிக்கப்படுகின்றது என்தனை உணர்த்துகின்றது.

மனிதன் ஒரு பிறப்பில் செய்த வினைகளின் பயனைப் பின் வரும் பிறவிகளில் அனுபவித்துத் தீர வேண்டும் என்பது ஊழ்வினையின் நியதியாகும். ஊழ் மனிதனால் வெல்ல முடியாத ஒன்று என்பது பழந்தமிழரின் கொள்கை எனலாம்.

இன்றைய மக்கள் வாழ்விலும் இந்நம்பிக்கை இருந்து வருவதனைக் காணமுடிகின்றது. "ஒருவன் அவனது வாழ்வில் நல்ல செயல்கள் செய்தால் பிற்காலத்தில் அல்லது அடுத்த பிறவியில் நல்ல வாழ்வும், தீய செயல்கள் செய்தால் துன்பம் நிறைந்த வாழ்வும் கிடைக்கும் என்பார்"[72] திரு.ம.பாலகுரு.

ஒருவன் வாழ்வில் துன்பங்களைச் சந்தித்துக் கொண்டிருந்தால் போன பிறவியில் என்ன பாவம் செய்தானோ? என்று மக்கள் இன்றும் ஒருவரைப் பற்றி ஒருவர் பேசிக் கொள்வதனைக் காணமுடிகின்றது.

நல்வினை, தீவினைகளும் இவ்வினைகள் அடிப்படையில் சேரும். நல்வினையாற்றியோர் இன்பமாக வாழ்தலும், தீவினையாற்றியோர் துன்ப வாழ்வு வாழ்தலும் கொண்டு அறியமுடிகின்றது. ஒருவன் வாழ்வில்

முடிந்தவரை நன்மை செய்யவேண்டும், துன்பங்கள் செய்தல் கூடாது. நாம் எது செய்கிறோமே அது நம் வாழ்வில் பிற்காலத்தில் விழையும் என்று நம்புகின்றனர்.

**கூற்றுவன் பற்றிய நம்பிக்கை**

ஒருவனுடைய வாழ்நாள் இவ்வுலகில் முடிந்தவுடன் கூற்றுவன் வந்து உயிரைக் கவர்ந்து செல்வதாகச் சங்க காலம் தொட்டு இன்றுவரை மக்கள் நம்புகின்றனர். அவரவர் செய்த நல்வினை, தீவினைகளுக்கேற்ப அவர்களது உயிர் வெவ்வேறு உலகங்களுக்குச் செல்வதாகக் குறிப்பிடுகின்றனர்.

"எமன் உயிரைக்கொண்டு செல்பவன். ஆயுள் முடிந்தால் அவர்களுடைய உயிரை எடுத்துச் செல்வான். ஒருவன் தனது வாழ்நாளில் நன்மை செய்திருந்தால் சொர்க்கத்திற்கும், தீமை செய்திருந்தால் நரகத்திற்கும் கொண்டு செல்வான் என திருமதி.க.செல்வி குறிப்பிடுவார்."[73]

இதே ஊரைச் சேர்ந்த திருமதி.ர.வள்ளி கூறுகையில் "இவ்வுலகில் பாவங்களை அதிகமாகச் செய்து வந்தால் எமன் விரைவில் அவர்களின் உயிரை எடுத்துச் செல்வான். புண்ணியம் செய்தால் நீண்ட நாள் வாழலாம் என்கிறார்."[74]

இச்சான்றுகளின் அடிப்படையில் கூற்றுவன் பற்றிய நம்பிக்கை எமன் எனும் பெயரில் வழக்கில் இருப்பதனை நம்பமுடிகின்றது.

**சுவர்க்கம், நரகம்**

மக்கள் இறந்த பின் செல்லக்கூடிய உலகம் ஒன்று உண்டு என்று நம்பினர். இவ்வுலகில் நன்மை செய்தவர்கள் மறு உலகமாகிய சுவர்க்கத்தில் இன்பம் துய்ப்பார்கள் என்றும், தீமை செய்தவர்கள் மறு உலகமாகிய நரகத்தில் துன்பம் அடைவார்கள் என்றும் நம்புவதைக் கள ஆய்வின் வழி அறியமுடிகின்றது.

இராசசிங்க மங்கலப் பகுதி மக்களிடம் கள ஆய்வு மேற்கொண்ட போது "பிறருக்குத் துன்பம் விளைவிக்காமல் நன்மைகள் செய்தவர்கள் மேலுலகத்தில் அதாவது சொர்க்கத்தில் நல்ல வாழ்வு கிடைக்கும், தீமைகள்,

துன்பங்கள் செய்தவர்கள் நரகத்தில் துன்ப வாழ்வு பெறுவார்கள் என்று நம்புவதாகக் குறிப்பிடுவார்.''[75]

**மந்திரம் - வழக்கும் இழப்பும்**

இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள மந்திரங்கள் இன்றைய மக்கள் வாழ்விலும் இருப்பதை நடைமுறை வாழ்வு கொண்டு அறிய முடிகின்றது. இராசசிங்க மங்கல ஒன்றியப் பகுதி மக்களிடம் மேற்கொண்ட கள ஆய்வு இதனை உறுதிப்படுத்துகின்றது. மந்திர தந்திரங்களை மக்கள் நம்புவதனைக் கள ஆய்வின் மூலம் கண்டறிய முடிகின்றது.

திருமதி வளர்மதி அவர்கள் ‘‘மந்திரங்களை மக்கள் முழுமையாக நம்புகின்றனர். ஒருவருக்கு மந்திரத்தின் மூலம் செய்வினை செய்துத் துன்பப்பட வைக்கலாம். மந்திரத்தின் மூலம் செய்த செய்வினையை எடுக்கலாம்''[76] என்றுரைக்கிறார்.

‘‘நாள்பட்ட நோய், பேய் போன்றவைகளும், செய்வினைகளும் மந்திரத்தின் வாயிலாகக் குணமடையும் என்று திரு.செந்தில்குமார் குறிப்பிடுகிறார்.''[77]

‘‘மந்திரத்தின் மூலம் ஒருவரைக் குணமடையவும் செய்யலாம், இறந்து போகவும் செய்யலாம், எதிரிகளைத் தண்டிக்கவும் செய்யலாம் என்பார் திரு.அழகுசுந்தரம்.''[78]

**சாபம் வழக்கும் இழப்பும்**

சாபம் அன்று முதல் இன்று வரை மக்கள் வாழ்வில் கடைப்பிடிக்கப் பட்டு வரும் முக்கிய நிகழ்வாகும். ஒருவனைச் சாபத்தின் மூலம் அழிக்க முடியும் என்று நம்பியது இதற்குக் காரணமாக அமைகின்றது. இன்றைய மக்கள் வாழ்விலும் ‘சாபம்’ பற்றிய நம்பிக்கை இருந்து வருவதனைக் கள ஆய்வு உறுதி செய்கின்றது.

‘‘சாபத்தின் மூலம் பலர் தன் வாழ்வியல் நிலைகளை விட்டுச் சீரழிந்து உள்ளதனைத் தனது வாழ்வில் பார்த்து உள்ளதாகவும், ஒருவரது

சாபம் இல்லாவிட்டாலும் ஒருவரது சாபம் பழித்துவிடும்''[79] என்றும் திருமதி கருப்பாயி சுட்டுவார்.

''தனக்குப் பிடிக்காதவர்கள், சண்டைக்காரர்கள் போன்றவர்களைச் சபித்தலில் ஈடுபடுகின்றனர் மக்கள். சண்டையின் போது ஒருவருக்கொருவர் 'நீ நாசமாகப் போக', 'உருப்புடாமப் போக' என்று மண்வாரித் தூற்றுதலும் உண்டு. கருநாக்குக்காரர்கள் கூறினால் அப்படியே பழிக்கும்''[80] என்று சுட்டுவர்.

''சாபமிட்டால் ஒருவருக்கு அப்படியே நேர்ந்துவிடும் என்றும், சிலர் கோயில்களில் சொல்வதுண்டு. ஒருசிலர் காசு வெட்டிப்போட்டு எதிரியைத் தண்டிக்கச் செய்வதும் உண்டு''[81] என திரு.மாடசாமி குறிப்பிடுவார்.

இவ்வாறு சாபமிடுதலின் மூலம் ஒருவரைத் தண்டிக்கவும் வாழ்க்கையை அழிக்கவும் முடியும் என்று நம்புவதனை அறியமுடிகின்றது. இன்றும் மக்களில் சிலர் ஒருவனின் வாழ்க்கை நிலையினைப் பார்த்து அவன் சாபம் சும்மாவிடுமா? என்று கூறிவருவதனைக் காணமுடிகின்றது.

**அசரீரி - வழக்கும் இழப்பும்**

அசரீரி என்பதற்கு உடலுருவற்றது, மறைவான வாக்கு அல்லது தெய்வ வாக்கு என்று பொருளுரைக்கப்படுகிறது. கண்ணுக்குக் காட்சியளிக்காமல் ஒலி மட்டும் கேட்பதாகக் குறிப்பிடப்படுகின்றது. தான் நினைத்தச் செயலுக்கு சிந்தனைக்கு ஏற்பத் தெய்வ வாக்குப் போன்று அமைவதாகும்.

இன்றைய மக்கள் வாழ்வில் இந்நம்பிக்கையானது வழக்கில் இருப்பதாகத் தெரியவில்லை. கள ஆய்வில் இப்பகுதி மக்கள் அசரீரி என்பது தெரியாமலேயே இருந்து வருவது தெரியவருகின்றது.

இன்றைய மக்கள் வழக்காற்றில் ஏதேனும் ''ஒரு நற்செயலை சிந்தித்துக் கொண்டிருக்கும் பொழுது, மணியோசை கேட்டல், பல்லி கத்துதல், தும்முதல் போன்றவைகள் நன்மை தருவதாக திரு.சங்கரலிங்கம் தெரிவிப்பார்.''[82]

அசரீரி நம்பிக்கையைக் கள ஆய்வின் வழி நோக்கும் பொழுது இன்றைய மக்களின் நடைமுறை வாழ்வில் வழக்கிழந்து இருப்பதனை நாம் அறியமுடிகின்றது.

**மடலேறுதல்**

சங்க காலத்தில் தான் விரும்பிய பெண்ணைத் திருமணம் செய்வதற்காகத் தலைவன் பனையின் மடலைக் கொண்டு குதிரை அமைத்துத் தன் காதலை ஊரார்க்கு வெளிப்படுத்தி மணம் முடித்ததை அறியமுடிகின்றது. இவ்வாறு செய்தால் தனது திருமணம் நடக்கும் என நம்பியது இதற்குக் காரணமாகும். இன்றைய மக்கள் வழக்காற்றில் மடலேறும் வழக்கம் இல்லை.

காதலுக்காக உயிர்விடும் வழக்கம் இருக்கின்றது. தான் விரும்பும் பெண் தன்னை நம்பாத பொழுது, அவளை நம்ப வைக்கும் பொருட்டுத் தன் உடம்புகளில் ஆயுதங்களால் கீறிக் கொள்ளுதலும் உண்டு. மடலேறுதல் நம்பிக்கையைக் கள ஆய்வின் வழி நின்று நோக்கும் பொழுது வழக்கிழந்து காணப்படுவதனை அறியமுடிகின்றது.

**கைம்மை மகளிர்**

கணவனை இழந்த பெண்கள் கைம்மை மகளிர் என்று அழைக்கப் படுகின்றனர். இன்றும் கணவனை இழந்தவர்களைக் கைம்பெண், விதவை எனும் சொற்களில் அழைப்பதைக் காணமுடிகிறது.

“கணவனை இழந்த பெண்களை கைம்பெண் விதவை என்று அழைப்பார்கள்”[83] எனத் திருமதி.பூ.கலா சுட்டுவார்.

“கைம்பெண்கள் தலையில் பூச்சூடக்கூடாது, பொட்டு வைக்கக் கூடாது, அணிகலன்கள் அணியக்கூடாது”[84] என்று திருமதி.ச.வளர்மதி குறிப்பிடுவார்.

“ஒரு காலத்தில் கணவனை இழந்தவர்கள், வெள்ளை ஆடை உடுத்தி இருந்தனர். காலப்போக்கில் இந்நிலை மாறிவிட்டது. ஆனால் இன்றும் இவர்கள் சுபகாரியங்களுக்கு முன் நிற்பதில்லை. தங்கள் நிலையை

மக்களும் நல்ல செயல்களுக்கு முன்னிறுத்திச் செயல்பட நினைக்க மாட்டார்கள். இவர்களை அமங்கலமாகக் கருதுகின்றனர்''[85] என்பார்.

''விதவைப் பெண்களை எவ்விதமானச் சுபகாரியங்களுக்கும் முன்னிலைப்படுத்துவதில்லை. இவர்கள் முன்னிருத்தினாலோ அல்லது கலந்து கொண்டாலோ அக்காரியம் சிறப்பாக அமையாது என்றும் நம்புகின்றனர்.''[86]

''சங்க காலத்தில் இருந்தது போன்று உணவுக் கட்டுப்பாடு இன்றைய காலகட்டத்தில் இல்லை என்பதனையும், கணவனுடைய சிதையில் புகுந்து தீப்புகும் வழக்கமும் இல்லை. கணவன் இறந்த செய்தி கேட்டு மரணமடையும் மனைவி இன்று ஒருசிலர் இருப்பதாகச் சுட்டுவார்.''[87]

''இன்றையக் கைம்பெண்கள் நல்ல உணவு, உடை போன்றவை களுடன் வாழ்கின்றனர். அணிகலன்களில் ஒரு செயின் அணிந்து கொண்டுள்ளனர். தலையில் பூ, பொட்டு வைப்பதில்லை என்று குறிப்பிடுவார்.''[88]

''உடன்கட்டையேறும் வழக்கம் இன்றைய கால கட்டத்தில் இல்லை எனவும், கணவன் இறந்தவுடன் இறந்த பெண்கள் சிலரை நாளிதழ்கள் மூலம் அறிந்ததாகவும் திரு.கோட்டைச்சாமி தெரிவிப்பார்.''[89]

''சில பெண்கள் கணவன் இழந்த துக்கம் தாங்காமல் அதிர்ச்சியில் இருந்து சில நாட்கள் கழித்து தற்கொலை செய்து கொல்வது இன்றும் மக்கள் வழக்கில் இருப்பதாகச் சுட்டுவார்.''[90]

மேற்சுட்டியச் சான்றுகளின் அடிப்படையில் இன்றைய மக்கள் வழக்காற்றில் கைம்மை மகளிர் மற்றும் அவர்களுக்குரிய நோன்புகளில் கைம்மை நம்பிக்கைகள், நோன்பு முறைகள் வழக்கிழப்பதை அறிய முடிகின்றது.

**கணவனைத் தொழுதால் மழை பெய்யும்**

கணவனைத் தொழுதால் மழை பெய்யும் எனும் நம்பிக்கை இருந்ததனை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இந்நம்பிக்கை இன்று வழக்கிழந்து இருப்பதனை அறியமுடிகின்றது.

"முற்காலத்தில் கணவனைத் தொழுதால் மழை பெய்யும் எனும் நம்பிக்கையும், பத்தினிப் பெண்கள் மழையை நிற்கச் சொன்னால் நிற்கும் எனவும் கேள்விப்பட்டதாகவும், இன்று அவ்வாறு நம்பிக்கைகள் இல்லை எனவும் திரு.திருவேல்முருகன் கூறுவார்."[91]

"பெண்கள் காலை விழித்தெழுந்தவுடன் கணவனின் காலைத் தொட்டுக் கும்பிட்டுத் தன் மாங்கல்யத்தையும் கண்களில் ஒற்றிக் கொள்வர். இன்று வயதான பெண்கள் சிலர் மட்டும் அவ்வாறு செய்வதாகவும் மற்றவர்கள் அவ்வாறு செய்வதில்லை எனவும் குறிப்பிடுவார்."[92] கணவனின் பெயரைக் கூறாத பெண்கள் சிலர் இன்றும் இருக்கின்றனர். மேற்கூறிய சான்றுகளின் வாயிலாக இந்நம்பிக்கை வழக்கிழந்து இருப்பதனைக் காண முடிகின்றது.

**புலிப்பல் தாலியும், ஐம்படைத் தாலியும்**

புலிப்பல் தாலியும், ஐம்படைத்தாலியும் அணிந்திருந்ததைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. "இளஞ்சிறார்க்கு வீரத்தின் அறிகுறியாக அல்லது ஆற்றலை அதிகரிக்கும் காப்பணியாக புலிப்பல்தாலியை அணிந்திருக்கலாம் என்பார்."[93] இந்நம்பிக்கை இன்றைய நடைமுறை வாழ்வில் வழக்கிழந்து காணப்படுகின்றது.

"பத்து வருடங்களுக்கு முன்பு கிராமங்களில் 'நரிப்பல்' எனும் அணிகலன் அணிந்திருந்ததாகவும், காலப்போக்கில் இந்நம்பிக்கை வழக்கிழந்து காணப்படுவதாகவும் சுட்டுவார்."[94]

இன்று மக்கள் வாழ்வில் குழந்தைகளுக்கு இடையில் கட்டும் அரைஞாண் கயிற்றில் விலங்கு, ஊர்வன போன்ற உருவங்கள் அமைந்த வெள்ளியால் ஆன அணிகலன் அணிந்திருப்பதைக் காணமுடிகின்றது. இன்று பற்கள் கோத்து அணிவதில்லை. அணிகலன்கள் கழுத்து, கை, கால், இடை போன்ற இடங்களில் அணிகின்றனர்.

**நிலவைப் பாம்பு விழுங்குதல்**

இன்று சந்திரகிரகணம் என்று அழைக்கப்படுவதனை அன்று நிலவைப் பாம்பு விழுங்குவதாக நம்பியதனை இலக்கியங்கள் சுட்டிச்

செல்கின்றன. இன்றும் இயற்கையாக நிகழக்கூடிய நிகழ்வுகளில் ஒன்று. “இந்நிகழ்வு நேரம் உணவு உண்ணக்கூடாது என்றும் அவ்வாறு உண்டு வந்தால் நோய் உண்டாகும் என்றும் பெரியோர் சுட்டுவார்.”[95]

இந்நிகழ்வு இயற்கையாக நிகழக்கூடியது. இதனை இன்று யாரும் பெரிதாக எடுத்துக் கொள்வதில்லை. வயதான சிலரே உணவு உண்ணக் கூடாது என்று கூறிவருகின்றனர்.

**இன்றைய மக்கள் நம்பிக்கைகள்**

இன்றைய மக்கள் தங்கள் வாழ்வில் பல்வேறு நம்பிக்கைகளைக் கடைப்பிடித்து வருகின்றனர். இன்றைய நிலையில் பெரும்பாலும் வெளியில் புறப்படும் பொழுது மட்டும் சகுனங்கள் பார்க்கப்படுகின்றன. அச்சகுனங்களைக் கள ஆய்வின் வழி தொகுத்துக் காணலாம்.

**நல்ல சகுனங்கள்**

“ஒருவர் வெளியில் செல்லும் போது சுமங்கலிப் பெண் எதிர்படுதல் நல்ல சகுனமாகக் கருதுகின்றனர். இதனால் எடுத்த செயல் வெற்றியடையும் என்று நம்புகின்றனர்.”[96]

“நிறைகுடத்துடன் பெண்கள் எதிர்படுதல் நல்ல சகுனம் என்று நம்புவதாக திரு.ஆ.காளீஸ்வரன் சுட்டுவார்.”[97]

ஒருவர் பயணம் மேற்கொள்ளும் போது திருமண ஊர்வலம் எதிரில் வருதல் நல்ல சகுனம். இதன்மூலம் நினைத்த செயல் நன்றாக முடியும் என்று நம்புகின்றனர். மேலும் திருவிழாக் கூட்டத்தைக் காண்பதும் நல்லது என நம்புவதாகவும் குறிப்பிடுவார்.

“மங்கல ஒலிகளாக இரட்டைத் தும்மல், கோயில் மணி அடித்தல் போன்றவைகள் நல்ல சகுனங்களாக அமையும் எனவும், வெளியில் செல்லும் போது பிணம் எதிர் வருதல், வண்ணான் அழுக்குமூட்டை கொண்டு வருதல் போன்றவைகள் நற்சகுனமாகும் என்பார்.”[98]

இதேபோன்று உள்ளங்கை அரித்தல், உள்ளங்கால் அரித்தல், பணம் தவறுதல், உள்ளங்கையைக் காலையில் பார்த்தல், மாறுகண், ஆறுவிரல் இருத்தல் போன்றவைகள் நன்மை தரும் என்று கள ஆய்வின் மூலம் அறியமுடிகின்றது.

**தீய சகுனங்கள்**

தீய சகுனங்களாக மக்கள் சிலவற்றை நம்புகின்றனர். ஒருவர் செல்லும் செயலுக்கு மாறாக விளைவுகளைத் தரும் நிகழ்வுகள் தீச்சகுனங்கள் ஆகும். இச்சகுனத்தால் பல்வேறு துன்பங்கள் ஏற்படுவதாக மக்கள் நம்புகின்றனர்.

"தோள் துடித்தல், கலகத்தைப் பார்த்தல், கால் இடறுதல், நிலைப்படியில் தூங்குதல், நீரால் கோலம் போடுதல், வெளியில் செல்லும் பொழுது நிலை தட்டுதல், அழுகுரல், அவச்சொற்கள், சனிக்கிழமை இறத்தல், சித்திரை மாதம் குழந்தை பிறப்பு, இரவில் வீட்டைப்பெருக்கி வெளியில் தள்ளுதல், ஒற்றைக் காலில் நிற்றல், பணத்தை மிதித்தல், கண்ணாடி உடைதல், இலையைத் தாண்டுதல் போன்றவைகள் தீய சகுனங்களாக அமைகின்றன என்று திரு.ஜெயப்பாண்டி கூறுவார்."[99]

மாந்தர்கள் பறவைகள், விலங்குகள், ஊர்வன போன்ற உயிர்களுடன் நம்பிக்கையைப் பொருத்திப் பார்க்கின்றனர். இவைகளை முன்னிறுத்திப் பல்வேறு நம்பிக்கைகள் வழக்கில் உள்ளன.

"ஒரு வீட்டில் வெளவால் தங்குதல், குருவிக் கூட்டைக் களைத்தல், கோழி ஓடு இல்லாத முட்டையிடுதல் போன்றவைகள் தீச்சகுனமாகும். அதேபோல் புறா வீட்டில் வளர்த்தால் தரித்திரம் உண்டாகும் என்று நம்புவதாக"[100] திரு.க.முத்துவைரி சுட்டுவார்.

"நற்காரியம் தொடர்பாகச் செல்லும் பொழுது குதிரை, யானை, காளை மாடு எதிர்ப்பட்டால் நன்மை உண்டாகும். பன்றி, பூனை குறுக்கிடுதல் தீச்சகுனமாகும். எதிர்பாராமல் வாகனங்களில் பன்றி மோதினால் அதனை விற்று விடுவதை இன்றும் மக்கள் நம்பிக்கையாகக் கடைப்பிடித்து வருகின்றனர்."[101]

**தொழில் தொடர்பான நம்பிக்கைகள்**

தொழில்கள் இன்றைய உலகத்தை இயக்கும் சக்தியாக வளர்ந்துள்ளன. செய்யும் தொழிலே தெய்வம் என்றும், வினையே ஆடவர்க்கு உயிரே என்றும் நம்புகின்றனர். ஒவ்வொரு தொழிலும் பலவிதமான நம்பிக்கைகளைக் கொண்டுள்ளன.

**கட்டிடத் தொழில் தொடர்பான நம்பிக்கைகள்**

கட்டிடம் விரைவில் நல்லமுறையில் கட்டி முடிப்பதற்கும், அக்கட்டிடம் கட்டும் போது அதில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கும் எவ்வித இடையூறு ஏற்படாமலிருக்கவும், அவ்வீட்டில் குடியேறுபவர்களுக்கு நன்மை உண்டாகவும் சில நம்பிக்கைகளைப் பின்பற்றுகின்றனர்.

**இடம் தேர்வு செய்தல்**

“கட்டிடம் கட்டுவதற்கு முதலில் இடத்தைத் தேர்வு செய்ய வேண்டும். அவ்விடத்தில் தோண்டும் போது தானியங்கள், தவளை, பல்லி, இருந்தால் நன்மை எனவும், பாம்பு, ஆமை, தேள் போன்றவைகள் இருந்தால் தீமை எனவும் நம்புவதாகத் திரு.மாடசாமி ஆசாரி குறிப்பிடுவார்.”[102]

**பூசை போடுதல்**

“கட்டிடம் கட்டுவதற்கு முன் சிறு குழி தோண்டி அக்குழியில் மஞ்சள், நவதானியம், நாணயம் போன்றவற்றைப் போட்டு பின் தேங்காய் பழம் வைத்துப் பூசை செய்து, எலுமிச்சைப் பழத்தை நான்காக அறுத்து குங்குமம் தடவி நான்கு திசைகளிலும் வீசுவர். இவ்வாறு செய்வதன் மூலம் கட்டிடம் கட்டி முடிக்கும் வரை எவ்வித இடையூறும் ஏற்படாது என்று நம்புவதாகத் தெரிவிப்பார்.”[103]

அதன்பின் நிலை வைத்தல், நிகழ்வு நடைபெறும் என்றும், வைகாசி, ஆவணி, கார்த்திகை, பங்குனி மாதங்களில் கட்டிடம் கட்டத் தொடங்கினால் விரைவாகக் கட்டி முடிக்கலாம் என்றும் நம்புவதாகத் தெரிவிப்பார்.

கட்டிடம் கட்டும்பொழுது பொருட்கள் அனைத்தும் புதியதாக வாங்கிக் கட்டுதல் நன்மை தரும், கருஞ்செங்கல் வைத்துக் கட்டக்கூடாது. மனையடி சாஸ்திரத்தில் உள்ள அளவுப்படிக் கட்டிடம் கட்ட வேண்டும். ஒரு தூண் மட்டும் வைத்துக் கட்டக்கூடாது. தேக்கு, வேங்கை, வேம்பு முதலிய மரங்களை மட்டும் பயன்படுத்த வேண்டும் என்பதைக் காணமுடிகிறது.

**கண்ணேறு கழிதல்**

இன்றைய மக்கள் தங்கள் வாழ்வில் கண்ணேறு கழித்தல் எனும் சடங்கினைப் பெரிதும் செய்து வருகின்றனர். குழந்தைகளுக்கு, வாகனங்களுக்கு, வீடு, கடைகளுக்கு என பல நிலைகளில் இச்சடங்கினைச் செய்து வருகின்றனர்.

வீடுகளில் இச்சடங்கினைச் செய்யும் பொழுது ''தெருவின் முச்சந்தியில் மண்ணெடுத்து ஒரு பாத்திரத்தில் நெருப்பு அள்ளி அவற்றில் உப்பு, மிளகாய், எடுத்து வந்த மண் போன்றவற்றைப் போட்டு வெடிக்க வைப்பர். நன்றாக வெடித்தால் கண்ணேறு கழிந்ததாகவும் வெடிக்கவில்லை என்றால் கண்ணேறு கழியவில்லை என்றும் நம்புகின்றனர். பின் தெருவின் முச்சந்தியிலே கொட்டிவிடுவர் என்பர்.''[104] இதன்மூலம் கண்ணேறு கழிந்துவிடும் என நம்புகின்றனர்.

''கடைகளுக்கு இரவு நேரங்களில் கடையை அடைக்கும் பொழுது தேங்காய் மீது சூடத்தை வைத்துக் கொழுத்தி உடைத்தால் கண்ணேறு கழிவதாக நம்புகின்றனர்.''[105]

குழந்தை நன்றாகவும், கடவுளின் ஆசியுடன் நோய் நெடி இல்லாமல் பிறக்க வேண்டும் என்று மக்கள் பல்வேறு சடங்குகளையும், வழிபாடுகளையும் செய்கின்றனர். விருப்பப்பட்ட குழந்தை பிறக்க வேண்டும் என்று மந்திரங்கள் படித்தும், நேர்த்திக்கடன்கள் செய்வதாகவும் வேண்டிக் கொள்கின்றனர். இவ்வாறு மக்கள் பல்வேறு நம்பிக்கைகளைக் கடைப்பிடித்து வருவதனைக் கள ஆய்வின் வழி அறியமுடிகின்றது.

**பிறப்புச் சடங்கு**

திருமணமும், குழந்தைப் பிறப்பும் சமூக நிகழ்வுகளில் பெரும் சிறப்பிடம் பெறுகின்றன. மக்கட்பேறு ஆண்டவனுடைய நன்கொடை. ‘வயிற்றின் கனி வெகுமதி’ என விவிலியம் கூறுகிறது. “குடும்பம் என்னும் மரத்திற்குக் குழந்தையே இனிய பழமாகும்”[106] என்று இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார். மக்கட்பேறு இல்லாதப் பெண்களை ‘மலடி’ என்று வசைபாடுகிறது தமிழ்ச் சமூகம். “மலடி விளை நிலத்திற்குத் தீங்கானவள், மலடி விளை நிலத்தைப் பாழ்நிலமாக்கிடுவாள்”[107] என நரேந்திரநாத் பட்டாச்சாரியா சுட்டுவர். குழந்தைப்பேறின் சிறப்பை வள்ளுவர்,

**“குழலினிது யாழினிது என்பர் தம்மக்கள்**
**மழலைச் சொல் கேளாதவர்”[108] (குறள்.66)**

என்பார். மக்கள் அனைவரும் குழந்தைப் பேற்றை கிடைத்தற்கரிய வரமாகக் கருதுகின்றனர்.

**வளைகாப்பு**

ஒரு பெண் கருவுற்ற செய்தி அறிந்தவுடன் ஏழு அல்லது ஒன்பதாம் மாதத்தில் நிகழ்த்தப்பெறும் நிகழ்வு வளைகாப்பு ஆகும். இச்சடங்கு அப்பெண்ணை மகிழ்விப்பதற்காக நிகழ்த்துவதாகக் கருதப்படுகிறது. குழந்தை பிறப்பதின் எளிமை கருதி உடலில் ஏதுக்களை ஏற்படுத்துவதற்காகவும் இச்சடங்கு நிகழ்த்தப்படுகிறது என்கின்றனர். அனைத்து இன மக்களும் ஒரு பெண்ணின் முதல் குழந்தைக்கு மட்டும் இச்சடங்கை நிகழ்த்துகின்றனர்.

“நல்ல நாள் பார்த்துப் பெண்ணை நீராட்டி, பெண்ணின் திருமணச் சேலையை அணிவித்து மங்கலப் பொருட்களாகச் சந்தனம், குங்குமம் போன்றவற்றைப் பூசுவர். பிறகு பெண்கள் ஒவ்வொருவராக கண்ணாடி வளையல்களை அணிவிப்பர். அதன்பின் தாய்வீட்டிலிருந்து கொண்டுவரப் பெற்றிருக்கும் உணவு வகைகளான, சர்க்கரைப் பொங்கல், புளியோதரை, எலுமிச்சைசோறு, தயிர்ச்சோறு, தேங்காய்ச்சோறு, கேசரி என அனைத்தும் அப்பெண்ணிற்குக் கொடுத்து மகிழ்வர். பிறகு வந்திருக்கும் அனைவருக்கும்

வழங்குவர். இதனைச் சீமந்தம் என்றும் அழைப்பர். இச்சடங்கு முடிந்தபின் தாய்வீட்டிற்கு அழைத்துச் செல்லப்பட்டுக் குழந்தை பிறக்கும் வரையில் அங்கே இருப்பாள்''[109] எனக் குறிப்பிடுவார்.

**காதணி விழா**

இன்றைய மக்கள் ஆண், பெண் ஆகிய இரு குழந்தைகளுக்கும் காதணி அணிவிக்கும் வழக்கத்தை ஒரு விழாவாகக் கொண்டாடி வருகின்றனர்.

**“குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்**
**‘ஆள்அன்று’ என்று வாளிற் தப்பார்''[110]** ***(புறம்.74:1–2)***

என்பது பழந்தமிழரின் வீரமரபு எனப் புறநானூறு சுட்டும். இந்த வீரப்பண்பின் எச்சமே காதணி அணிவித்தலாக மாறியிருக்கக்கூடும் என்று நினைக்கத் தோன்றுகிறது. இன்றும் குழந்தைகள் இறந்து பிறந்தாலும், பிறந்து இறந்தாலும் ஏதேனும் ஒரு முள் அல்லது கத்தி கொண்டு கீறிப் புதைப்பதனை வழக்கமாகக் கொண்டுள்ளனர். நல்லநாள் பார்த்து தாய்மாமன் மடியில் அமரவைத்து வீட்டிலோ அல்லது குலதெய்வக் கோயில்களிலோ காது குத்துகின்றனர். அவரவர் பொருளாதாரத்திற்கேற்ப ஆடம்பரமாகவோ, எளிமையாகவோ இந்நிகழ்ச்சி நடத்துகின்றனர்.

**பூப்புச் சடங்கு**

பெண்கள் பருவமடைந்த நிகழ்ச்சி பொதுவாக அனைத்துச் சமுதாயத்தினராலும் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. பூப்புச் சடங்கு வளத்தை அறிவுறுத்தும் சடங்கு ஆகும்.

***“பெண்கள் பூப்படையும் நிலை பருவ முதிர்ச்சியின் அறிகுறி''[111]*** என்பர் க.காந்தி.

பூப்பெய்துதலை புஷ்பவதியாதல், சமைதல், வயதிற்கு வருதல், ஆளாதல், பெரிய பெண்ணாதல் என்றும் அழைப்பர்.

**இறப்புச் சடங்கு**

உயிருள்ளவை அனைத்தும் ஒருநாள் இறக்க வேண்டும் என்பது உலக நியதி.

**"தூங்கையிலே வாங்குகின்ற மூச்சு**

**சுழிமாறிப் போனாலும் போச்சு"**

எனும் சித்தர்களின் கூற்று இதற்கு அரண் செய்வதாக அமைந்துள்ளது. "இந்த உலகில் வாழும் ஒவ்வொரு உயிர்களும் இறந்தபின் என்ன ஆகின்றன என்பது இன்றுவரை மனிதர் மத்தியல் பெரும் வியப்பாக உள்ளது"[112] என்பார் இராமலிங்கம்.

கிறித்தவ மதம் மரணத்தை மறுவாழ்விற்கு அழைத்துச் செல்லும் வழியாகக் கருதுகின்றது. இறந்து போனவர்களை அவர்களது இறந்த நாளில் நினைத்து வழிபடுகின்றனர். அன்று இறந்தவரின் விருப்பமான உணவு வகைகளைப் படையலிட்டு வழிபாடு செய்து சடங்குகள் செய்கின்றனர்.

**ஆவி பற்றிய நம்பிக்கை**

மக்கள் வாழ்வில் எதிர்பாராத நன்மைகளும், தீமைகளும் ஏற்படும் போது இவை மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தியாக நினைக்கின்றனர். நன்மை தரும் சக்திகள் நல்ல ஆவி என்றும் தீமை தருபவை தீய ஆவி என்றும் கருதுகின்றனர்.

"கிறித்தவர்கள் நன்மை தரும் ஆவிகளைச் 'சம்மனசுகள்' என்றும் தீமை தரும் ஆவிகளைச் 'சாத்தான்கள்' என்றும் பெயரிட்டு அழைப்பர்."[113]

தற்கொலை செய்து கொண்டவர்கள், விபத்தில் மரணம் அடைபவர்கள், தங்கள் விருப்பங்கள் நிறைவேறாதவர்கள் ஆவிகளாகவும் பேய்களாகவும் அலைவதாகத் திரு.ப.காளீஸ்வரன் சுட்டுவர்.

இறந்த மனிதர்களின் ஆவிகளில் நல்ல ஆவிகள் தீய ஆவிகள் என்று அவர்கள் வாழ்ந்த வாழ்க்கை நிலை, இறப்பின் தன்மை ஆகியவற்றைக் கொண்டு மக்கள் மதிப்பீடு செய்கின்றனர். தற்கொலை செய்து கொண்டவர்களின் ஆவிகளும், சாத்தான்களும் இவ்வுலகில் தீய ஆவிகளாகச் சுற்றி அலைகின்றன என்று மக்கள் நம்புகின்றனர். ஆவிகள் தங்கி இருப்பதற்கு மரங்கள், நீர்நிலைகள், பாழடைந்த மண்டபங்கள், மனித நடமாட்டம்

இல்லாத இடங்கள் போன்ற இடங்களைத் தெரிவு செய்து கொள்வதாகவும் குறிப்பிடுவர். இந்த ஆவிகள் குழந்தை பெற்றவர்களையும், பூப்படைந்த பெண்களையும் பிடித்துக் கொள்ளும் என்றும் அவர்கள் வெளியில் செல்லும் பொழுது வேப்பிலை அல்லது இரும்புத் துண்டு கையில் கொண்டு செல்ல வேண்டும் என்றும் கூறுகின்றனர்.

**இசுலாமிய நம்பிக்கைகள்**

இசுலாமியர்கள் சில குறிப்பிட்ட நம்பிக்கைகளைக் கடைப்பிடித்து வருகின்றனர். அவை,

1. இறைவன் மீது நம்பிக்கை
2. வேதங்கள் மீது நம்பிக்கை
3. பிறை பற்றிய நம்பிக்கை
4. வழிபாடு பற்றிய நம்பிக்கை
5. தர்ஹா பற்றிய நம்பிக்கை
6. இறுதிச் சடங்கு பற்றிய நம்பிக்கை
7. மறுமை பற்றிய நம்பிக்கை ஆகியவைகளாகும்.

***1. இறைவன் மீது நம்பிக்கை***

அல்லாஹ் ஒருவனே இறைவன் என்பது இசுலாமியர்களின் முக்கியக் கொள்கையாகும். இவர்களுக்கு உருவ வழிபாடு கிடையாது. இறைவனாகிய அல்லாஹ் இவ்வுலகத்தைப் படைத்து அவற்றின் இயக்கங்களுக்கு மூலகாரணமாக இருக்கிறான் என்று நம்புகின்றனர். "இறைவன் மீது ஆழமான நம்பிக்கை வைத்திருப்பவர் துன்பங்கள் காற்றாய்ப் பறந்து விடும் என்று நம்புகின்றனர். 'லாஇலாஹா இல்லல்லாஹ்' என மனத்தாலும் சொல்லாலும் கடைப்பிடிக்கின்றனர். அதாவது வணக்கத்திற்குரியவன் 'அல்லாஹ்' ஒருவனே வேறொருவன் இல்லை என்பது இதன் பொருள்"[114] என்று திரு.சதாம்உசேன் குறிப்பிடுவார்.

***2. வேதங்கள் மீது நம்பிக்கை***

இசுலாமியர்கள் வறுமை எனும் இருள் நீங்கி வாழ்வில் ஒளி பெருகும் எனும் நம்பிக்கையில் வேத நூல்களை ஓதுவதாகக் குறிப்பிடுகின்றனர்.

## *3. பிறை பற்றிய நம்பிக்கை*

இசுலாம் சமயத்தின் ஒவ்வொரு விழாக்களும், பண்டிகைகளும் பிறையை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றன. இவற்றில் முக்கியமானது ரமலான் மாதமாகும். இம்மாதத்தில் ஒவ்வொரு இசுலாமியரும் தனது கடமைகளுள் ஒன்றான நோன்பு நோற்று வாழ்கின்றனர். இந்த ரமலான் மாதத்தில் முப்பது நாட்களும் நோன்பு நோற்பது கடமையாக்கப்பட்டுள்ளது.

"ஈமான் கொண்டோர்களே உங்களுக்கு முன் இருந்தவர்கள் மீது நோன்பு விதிக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் விதிக்கப்பட்டுள்ளது. அதன்மூலம் நீங்கள் தூய்மையுடையோர் ஆகலாம்" என்று 'அல்குர் ஆன்' குறிப்பிடுகிறது. (அல்குர் ஆன்: 2:183)

"பெருநாள் என்து ஹஜ் பெருநாள், நோன்புப் பெருநாள் என்று இருவகை உண்டு. இவ்விரண்டு பெருநாளும் பிறை கண்ட பின்னரே கொண்டாடப்படும்"[115] என்று குறிப்பிடுவார்.

இசுலாம் சமயத்தின் திருமண முறைகளும் பிறையின் அடிப்படையில் நிகழ்த்தப்படுகின்றது. வளர்பிறை, தேய்பிறை எனப்பிரித்து மங்கல நிகழ்வுகளை வளர்பிறையில் நிகழ்த்த வேண்டும் என்று நம்பிக்கை கொண்டுள்ளனர். "பிறையை மையமாகக் கொண்டு மங்கல நிகழ்ச்சிகள் நிகழ்த்தினால் இறைவனால் அனைத்து நன்மைகளும் கிடைக்கும் என்று நம்புவதாகச் சுட்டுவர்."[116]

## *4. வழிபாடு பற்றிய நம்பிக்கை*

இசுலாமியர்களின் அடிப்படைக் கடமைகளாக ஐந்து குறிப்பிடப் படுகின்றன. அவை கலிமா, தொழுகை, நோன்பு, ஹஜ், ஜக்காத் ஆகியவைகளாகும். இவற்றை இசுலாத்தின் ஐந்து தூண்கள் என்பர்.

'அல்லாவைத் தவிர வேறு இறைவன் இல்லை. முஹம்மது நபி இறைவனின் தூதுவனாக இருக்கிறான் என்பது கலிமா.'

"தொழுகை இசுலாமியர்களின் இரண்டாவது தூண். இது நாள்தோறும் செய்யக்கூடிய ஐந்து நேரத் தொழுகையைக் குறிக்கிறது. தனியாகவோ, குழுவாகவோ இணைந்து நிறைவேற்றப்படுகின்றது. இறைவனை நினைவு கூர்வதற்காகத் தொழுவதாகக் குறிப்பிடுகின்றனர். இறைவனுடன் நெருக்கம் கொள்ளச் செய்கிறது என்று குர்ஆன் கூறுவதாகக் குறிப்பிடுவர்."[117]

ஒருநாளைக்கு ஐந்து நேரம் தொழுகை நடத்த வேண்டும் என்பது இசுலாமியர்களின் கடமையாகும். ஐந்து நேரத் தொழுகைகளாவன,

1. ஃபஜர் (சூரியன் உதிப்பதற்கு முன்)
2. ளுஹர் (பகலிலிருந்து மாலை வரை)
3. அஸர் (சூரியன் மறைவதற்கு முன்)
4. மஃகரி (சூரியன் மறைவுக்குப்பின்)
5. இஷா (வைகறைக்குள்)

"ஒரு உண்மையான இசுலாமியர்களின் அடையாளம் ஐந்து நேரத் தொழுகையை நிறைவேற்றுவதுதான்"[118] என்பர்.

### 5. தர்ஹா பற்றிய நம்பிக்கை

இசுலாத்தைப் பரப்புவதற்கு வந்த இறைநேசர்களின் அற்புதச் செயல்களைக் கண்டவர்களும், கேட்டவர்களும் இறைநேசர்களின் மறைவிற்குப் பின் அவர்களைச் சிறப்பிக்கும் நோக்கத்துடன் அவர்களின் அடக்க ஸ்தலத்தை உயரமாக அமைத்துப் பச்சைத் துணியைப் போர்த்தி வழிபடத் தொடங்கினர். இதனைத் தர்ஹா வழிபாடு என்று குறிப்பிடுகின்றனர். இங்கு மணமிக்க பத்தி, வாசனை திரவியங்கள் பயன்படுத்தி, பூக்களால் அலங்கரித்து வழிபாடு நிகழ்த்துகின்றனர்.

### 6. இறப்புச் சடங்கு

ஒவ்வொரு மனிதன் வாழ்விலும் இறுதியாக நடத்தப்பெறும் சடங்கு இறப்புச் சடங்காகும். எந்த ஒரு நிகழ்வுக்கும் தொடக்கம் முடிவு இருப்பது

போல் இந்த உலகில் உயிர்பெற்றுள்ள ஒவ்வொன்றிற்கும் தொடக்கம் முடிவு என்பது உண்டு. ஒருவருடைய மரணத்திற்குப் பின் நிகழ்த்தப்படும் சடங்குகள் அவரிடம் அவரது உறவினர்கள், நண்பர்கள், கொண்டுள்ள மதிப்பையும், அன்பையும், சமயப் பற்றையும் புலப்படுத்தும் வகையில் அமைகின்றன.

"இறைவன் விருப்பப்படியே மரணம் நிகழும் என்பது இசுலாமியர்களின் நம்பிக்கை"[119] என்று குறிப்பிடுவார்.

ஒவ்வொரு சமயத்தினரும் இறந்த மனிதனை ஒவ்வொரு முறையில் தகனம் செய்கின்றனர். இசுலாமியர்கள் இறந்தவர்களின் உடலை அடக்கம் செய்வதற்குச் சில நம்பிக்கை சார்ந்த சடங்குகளைச் செய்கின்றனர். அவை, அறிகுறிகாணல், படுக்கவைத்தல், குளிப்பாட்டுதல், துணி சுற்றுதல், தொழுகை நிறைவேற்றல், அடக்கம் செய்தல், மனைவி தனித்திருத்தல், துக்கம் விசாரித்தல், இறையருள் வேண்டுதல் போன்றச் சடங்குகளைப் பின்பற்றுவதாகக் கள ஆய்வில் குறிப்பிடுகின்றனர்.

### 7. மறுமை பற்றிய நம்பிக்கை

மனிதர்கள் செய்யும் நன்மை தீமைகளுக்கேற்ப மறுமையில் பலன்கள் கிடைக்கின்றன என்று திருமறைகள் கூறுகின்றன. "உலகில் வாழ்ந்த மனிதர்கள் அனைவரும் மறுமை நாளில் உயிர்ப்பித்து எழுப்பப்படுவார்கள் என்றும் அவர்களது செயல்கள் அனைத்தும் விசாரிக்கப்பட்டு நல்லவர்கள் சுவர்க்கத்திற்கும், தீமை செய்தவர்கள் நரகத்திற்கும் அனுப்பப்படுவர் என்றும் நம்பிக்கை கொள்வதாகக் கூறுவர்."[120]

### தொகுப்புரை

* மனித மனம் பெரும்பாலும் நம்பிக்கைகளை மையமிட்டுச் சூழல்கின்றது. நன்மை விளைய வேண்டும் என்கிற மனப்பாங்கு இந்நம்பிக்கைகளை நம்புவதற்குக் காரணம் ஆகும். எந்த ஒரு செயலும் நன்மை தரவேண்டும், வெற்றியடைய வேண்டும் என்ற நோக்கமும் ஆகும்.

* செவ்வியல் நூல்களில் கூறப்பட்ட நம்பிக்கைகளில் வழக்கிழந்து காணப்பட்டாலும் பெரும்பான்மையான நம்பிக்கைகள் வழக்கிலிருப்பதனைக் கள ஆய்வு சுட்டுகின்றது. இன்றைய மக்கள் வழக்காற்றில் தெய்வ நம்பிக்கை, நாள்கோள் பார்த்தல், கனவு, திருமணச்சடங்கு, நிமித்தம் பார்த்தல், விரிச்சி, பேய், வெறியாட்டு, விழா, பலியிடுதல், கூற்றுவன், மந்திரம், முற்பிறப்பு, மறுபிறப்பு, நல்வினை, தீவினை, ஊழ்வினை, சாபம், சுவர்க்கம், நிரையம், கைம்மை மகளிர் போன்ற நம்பிக்கைகள் வழக்கில் உள்ளதனை அறியமுடிகின்றது.

* இன்றைய மக்கள் வழக்காற்றில் வழக்கிழந்த நம்பிக்கைகளாக உன்னம், மடலேறுதல், ஒந்தி நிமித்தம் பார்த்தல், தீப்பாய்தல், முதுமக்கள் தாழி, கைம்மை நோன்பு, அசரீரி, புலிப்பல் தாலி அணிதல், கணவனைத் தொழுதால் மழை பெய்யும் எனும் நம்பிக்கைகள் வழக்கிழந்து காணப்படுவதனைக் கள ஆய்வு சுட்டுகின்றது.

* நடுகல் நம்பிக்கை சில இடங்களில் கல்நட்டு வழிபடும் மரபாகப் பின்பற்றி வருவதனை அறியமுடிகின்றது. இது பழங்காலத்தின் எச்சமாகப் பின்பற்றப்படுகிறது.

* மனித வாழ்க்கைக்கு இயைந்தனவாகவும், நன்மை தருவனவாகவும் அமைவனவற்றை நற்சகுனங்களாகக் கருதுகின்றனர். நல்லவை நிகழ்ந்தால் மகிழ்ச்சி கொள்வதும் தீயவை நிகழ்ந்தால் துன்பம் கொள்வதும் ஆகியவற்றிற்கு அடிப்படைக் காரணம் சகுனங்கள் என்றும் அவை சில குறியீடுகளின் வாயிலாக வெளிப்படுகின்றன என்றும் நம்புகின்றனர்.

* ஒருவர் சொல்லும் செயலுக்கு மாறாக விளைவுகளைத் தரும் நிகழ்வுகள் தீச்சகுனங்கள் என்றும் அவற்றைச் சில செயல்களின் வாயிலாகவும் ஓர் உள்ளுணர்வின் மூலமும் மக்கள் அறிந்து கொள்கின்றனர்.

* விழாக்கள், வெறியாட்டு, பலியிடுதல் போன்ற நம்பிக்கைகள் வழக்கிலிருப்பதனை அறியமுடிகின்றது.

* முற்பிறப்பு, மறுபிறப்பு, ஊழ்வினை, சுவர்க்கம், நிரையம் பற்றிய நம்பிக்கைளும் பின்பற்றி வருவதனைக் காணமுடிகிறது.

* கண்ணேறு பற்றிய நம்பிக்கை மக்கள் வழக்கில் மிகுதியாகக் காணப்படுவதனை அறியமுடிகின்றது. இதனைக் கட்டிடங்களுக்குத் திருஷ்டி பொம்மை வைத்தல், குழந்தைகள், கடைகள், வீடு, வாகனம் ஆகியவற்றிற்குச் சூடம் சுற்றுதல், நெருப்பில் முச்சந்தி மண், உப்பு, மிளகாய் போடுதல் போன்றவைகள் மூலம் அறியமுடிகின்றது.

* ஒரு பெண்ணின் முதல் குழந்தைக்கு வளைகாப்பு நிகழ்ச்சி நடத்துகின்றனர். இதனைச் சீமந்தம் என்றும் அழைப்பதனைக் காணலாம்.

* பெண் பருவமடைந்தபின் செய்யப்படும் சடங்காக மக்கள் கடைப்பிடித்து வருகின்றனர்.

* ஆவிகளும், பேய்களும் மக்கள் வாழ்வில் பெரும் பங்கு வகிப்பதனையும், இந்த ஆவிகள் இறந்தவர்களின் வாழ்க்கைநிலை, இறப்பின் தன்மை கொண்டு நல்ல, தீய ஆவிகள் என்றும் நம்புவதனைக் காணமுடிகின்றது.

* இசுலாமியர்கள் இறைவன், வேதங்கள், பிறை வழிபாடு, தர்ஹா, இறுதிச்சடங்கு, மறுமை மீது கொண்டுள்ள நம்பிக்கைகள் பற்றி அறியமுடிகின்றது.

# சான்றெண் விளக்கம்

*1. பூ.மாரிமுத்து, வயது 48, விவசாயம், கோடனூர், நாள்: 17.2.13*

*2. இராமச்சந்திரன், வயது 59, கூட்டுறவு வங்கி மேலாளர், அழகர் தேவன்கோட்டை, நாள்: 17.2.13*

*3. அந்தோணி, வயது 61, விவசாயி, இருதயபுரம், நாள்: 17.2.13*

*4. சவுரியம்மாள், வயது 47, மீனவப்பெண், காரங்காடு*

*5. அக்பர், வயது 57, சோழந்தூர், நாள்: 24.3.13*

*6. M.பசீர்அகமது, வயது 52, SAM ஸ்டோர் உரிமையாளர், ஆர்.எஸ்.மங்கலம், நாள்: 24.3.13*

*7. க.கருப்பையா, வயது 70, விவசாயம், செங்குடி, நாள்: 28.4.13*

*8. க.கண்ணதாசன், வயது 51, ஆட்டோ ஓட்டுநர், A.மணக்குடி, நாள்: 28.4.13*

*9. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.211*

*10. மேலது,*

*11. மு.ரவி, வயது 44,எலக்ட்ரீசியன், கொத்திடல், நாள்: 18.5.13*

*12. மு.இராமநாதன், வயது 43, டைல்ஸ் மேசன், கொத்திடல், நாள்: 18.5.13*

*13. ஆ.நாகராசு, வயது 40, கொத்தனார், சோழந்தூர், நாள்: 16.2.13*

*14. க.கணபதி, வயது 62, விவசாயி, வடவயல், நாள்: 16.6.13*

*15. ரவி, வயது 64, சோதிடர், சாத்தனூர், நாள்: 15.6.13*

*16. வி.சி.சசிவல்லி, தமிழர் திருமணம், ப.38*

*17. கு.முனியாண்டி வேளாளர், வயது 57, விவசாயி, வடவயல், நாள்: 7.7.13*

*18. கலைக்களஞ்சியம், தொகுதி-8, ப.66*

*19. சகாயம், வயது 58, டூவீலர் மெக்கானிக், அன்னை நகர், நாள்: 7.7.13*

*20. மேலது*

*21. கா.கண்ணன், வயது 36, புகைப்பட நிபுணர், கோடனூர், நாள். 13.7.13*

*22. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.109*

*23. சு.வித்யானந்தன், தமிழர் சால்பு, ப.196*

*24. தொல்காப்பியம், பொருளதிகாரம், 1004*

25. இளம்பூரணர் உரை, தொல்காப்பியம், ப.98

26. அ.தியாகராசன், வயது 68, விவசாயி, தும்படைக்கான்கோட்டை, நாள்: 14.7.13

27. முனியசாமி, வயது 58, ஊ.ம.த., ரெகுநாதமடை

28. கோ.முருகேசன், வயது 41, அலுவலக எழுத்தர், கள்ளிக்குடி, நாள்:20.7.13

29. கெவுளி பஞ்சாங்கம், ப.10

30. லெ.மலைக்கண்ணு, வயது 62, விவசாயி, சூரம்புளி, நாள்: 20.7.13

31. உ.சாத்தையா, வயது 58, விவசாயி, சூரம்புளி, நாள்: 20.7.13

32. ஆ.ஆறுமுகம், வயது 72, விவசாயி, மேஸ்திரி, சோழந்தூர், நாள்: 21.7.13

33. தா.மகேஸ்வரி, வயது 44, ஆசிரியை, R.S.மங்கலம், நாள்: 21.7.13

34. மேலது, நாள்: 21.7.13

35. சேகர், வயது 48, ரியல் எஸ்டேட், பால்குளம், நாள்: 27.7.13

36. ஜெகநாதன், வயது 58, ஆட்டு வியாபாரி, கொத்தியார்கோட்டை, நாள்:27.7.13

37. உ.வே.சாமிநாத ஐயர், புறநானூற்று மூலமும் பழைய உரையும், ப.11

38. உ.சாத்தையா, வயது 52, விவசாயி, வரவணி, நாள்: 27.7.13

39. சக்திவேல் பூசாரி, வயது 58, வடவயல், 27.7.13

40. K.S.பூபாலன், வயது 59, ஒன்றிய வார்டு உறுப்பினர், பனிக்கோட்டை, நாள்: 27.7.13

41. கோவிந்தராசு ஐயர், வயது 60, கொத்தமங்கலம், நாள்: 2.2.13

42. மேலது, நாள்: 2.2.13

43. மேலது, நாள்: 2.2.13

44. மேலது, நாள்: 2.2.13

45. அ.தியாகராசன், வயது 68, விவசாயி, தும்படைக்கான்கோட்டை, நாள்:14.7.13

46. மேலது, நாள்: 14.7.13

47. தே.ஞானசேகரன், மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள், ப.118

48. மேலது, ப.118

49. குப்புசாமி, வயது 60, பூசாரி, புலியூர், நாள்: 4.8.13

50. மேலது, நாள்: 4.8.13

51. மேலது, நாள்: 4.8.13

52. மேலது, நாள்: 4.8.13

53. மேலது, நாள்: 4.8.13

54. கோட்டையன், வயது 65, விவசாயி, வடவயல், நாள்: 4.8.13

55. மேலது, நாள்.4.8.13

56. குப்புசாமி பூசாரி, வயது 60, புலியூர், நாள்: 4.8.13

57. சேவியர், வயது 40, ஆசிரியர், R.S.மங்கலம், நாள்: 4.8.13

58. ராஜாஉசேன், வயது 52, டெய்லர், சோழந்தூர், நாள்: 10.8.13

59. க.முத்துவைரி, வயது 48, இந்தியராணுவம், R.S.மங்கலம், நாள்: 10.8.13

60. மு.அமிர்தம், வயது 44, அரசு சுகாதார செவிலியர், R.S.மங்கலம், நாள்:10.8.13

61. முத்துச்சாமி, வயது 57, கொட்டகை அமைப்பாளர், கருங்குடி, நாள்: 11, நாள்: 11.8.13

62. மேலது, நாள்: 11.8.13

63. ச.காளியம்மாள், வயது 50, விவசாயி, வடவயல், நாள்: 11.8.13

64. மேலது, நாள்: 11.8.13

65. கோட்டைச்சாமி பூசாரி, வயது 54, அரியான்கோட்டை, நாள்: 11.8.13

66. மேலது, நாள்: 11.8.13

67. சக்திவேல், வயது 55, பூசாரி, வடவயல், நாள்: 27.7.13

68. மேலது, , நாள்: 27.6.13

69. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, பக்.208-209

70. ஆ.காளீஸ்வரன், வயது 43, எலக்ட்ரீசியன், சோழந்தூர், நாள்: 11.8.13

71. உ.பஞ்சவர்ணம், வயது 58, ஒன்றியக்குழு உறுப்பினர், வடவயல், நாள்: 16.2.13

72. ம.பாலகுரு, வயது 34, இந்திய ராணுவம், செங்குடி, நாள்: 17.8.13

73. க.செல்வி, வயது 42, விவசாயி, கொத்திடல், நாள்: 17.8.13

74. ர.வள்ளி, வயது 40, தனியார் பள்ளி ஆசிரியை, கொத்திடல், நாள்:17.8.13

75. தாஸ்கண்ட், வயது 58, அரசுப் பேருந்து நடத்துநர், R.S.மங்கலம், நாள்:17.8.13

76. வளர்மதி, வயது 49, மீன் விற்பவர், திருப்பாலைக்குடி, நாள்: 24.8.13

77. செந்தில்குமார், வயது 52, மீனவர், மோர்ப்பண்ணை, நாள்: 24.8.13

78. அழகுசுந்தரம், வயது 58, சமையலர், நத்தக்கோட்டை, நாள்: 24.8.13

79. கருப்பாயி, வயது 69, விவசாயி, களத்தூர், நாள்: 24.8.13

80. பாரதி, வயது 46, குடும்பத்தலைவி, சனவேலி, நாள்: 24.8.13

81. ப.மாடசாமி, வயது 72, ஆசாரி, வடவயல், நாள்: 25.8.13

82. சங்கரலிங்கம், வயது 67, விவசாயி, விசவனூர், நாள்: 31.8.13

83. பூ.கலா, வயது 38, விவசாயி, வடவயல், நாள்: 31.8.13

84. ச.வளர்மதி, வயது 47, விவசாயி, கருப்பன் குடும்பன் பச்சேரி, நாள்:31.8.13

85. முனீஸ்வரி, வயது 54, விவசாயி, கடலூர், நாள்: 1.9.13

86. நா.பழநியம்மாள், வயது 36, குடும்பத்தலைவி, சித்தூர்வாடி, நாள்: 1.9.13

87. சோ.தங்கராசு, வயது 60, ஆசிரியர், சோழந்தூர், நாள்: 1.9.13

88. கணேசன், வயது 55, விவசாயி, ஆயிங்குடி, நாள்: 7.9.13

89. கோட்டைச்சாமி, வயது 62, விவசாயி, காவனக்கோட்டை, நாள்: 7.9.13

90. முனியசாமி, வயது 44, விவசாயி, மேல்பனையூர், நாள்: 7.9.13

91. திருவேல்முருகன், வயது 35, ஓட்டுநர், இராமநாதமடை, நாள்: 7.9.13

92. இராமர், வயது 57, விவசாயி, பெருமாள்மடை, நாள்: 8.9.13

93. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.196

94. பூ.காமராசு, வயது 44, விவசாயி, கோடனூர், நாள்: 8.9.13

95. கிருஷ்ணன், வயது 76, விவசாயி, வடவயல், நாள்: 8.9.13

96. இராமநாதன், வயது 56, விவசாயி, சீனாங்குடி, நாள்: 8.9.13

97. ஆ.காளீஸ்வரன், வயது 43, எலக்ட்ரீசியன், சோழந்தூர், நாள்: 8.9.13

98. ரமேஷ், வயது 36, விவசாயி, இருவான்பச்சேரி, நாள்: 14.9.13

99. ஜெயப்பாண்டி, வயது 33, ஆசிரியர், R.S.மங்கலம், நாள்: 14.9.13

100. க.முத்துவைரி, வயது 55, ராணுவவீரர், R.S.மங்கலம், நாள்: 10.8.13

101. மேலது, , நாள்: 10.8.13

102. ப.மாடசாமி, வயது 72, ஆசாரி, வடவயல், நாள்: 25.8.13

103. மேலது, நாள்: 25.8.13

104. கி.சாந்தி, வயது 42, விவசாயி, வடவயல், நாள்: 5.10.13

105. இராமநாதன், வயது 58, விவசாயி, கொத்தமங்கலம், நாள்: 5.10.13

106. மா.இராசமாணிக்கனார், இல்வாழ்க்கை, ப.131

107. க.கிருட்டிணசாமி, நாட்டுப்புறப் பாடல்களில் வளமையும், நம்பிக்கைகளும், சடங்குகளும், ப.187

108. திருக்குறள். 66

109. இராக்கம்மாள், வயது 56, விவசாயி, வடவயல், நாள்: 5.10.13

110. புறம், 74:1–2

111. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.63

112. இராமலிங்கம், வயது 64, விவசாயி, ஆப்பிராய், நாள்: 6.10.13

113. வேதம், வயது 60, விவசாயி, பொன்மாரி, நாள்: 6.10.13

114. சதாம்உசேன், வயது 72, விவசாயி, சோழந்தூர், நாள்: 6.10.13

115. ஜமால், வயது 76, சோழந்தூர், நாள்: 6.10.13

116. அன்சாரி, வயது 40, R.S.மங்கலம், நாள்: 12.10.13

117. சலால்முகமது, வயது 70, R.S.மங்கலம், நாள்: 12.10.13

118. இபுராகிம், வயது 36, சோழந்தூர், நாள்: 6.10.13

119. மஜீத், வயது 40, சோழந்தூர், நாள்: 6.10.13

120. அலாவுதீன், வயது 58, R.S.மங்கலம், நாள்: 12.10.13

## இயல் நான்கு

# நம்பிக்கைகள் காட்டும் சமுதாயச் சிந்தனைகள்

## முன்னுரை

மனிதன் உண்டு, உடுத்தி, பேசி, வாழும் ஒரு விலங்கு மட்டுமல்ல. சமுதாயத்தில் அறிவுடைய விலங்குமாவான். விலங்கினின்று வேறுபட்ட மனிதன் அச்சுறுத்தும் தீமையினின்று தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும், விரும்பியதைப் பெறவும், மேலான சக்தியை ஆற்றலைக் கண்டுபிடித்தான். அறிவியல் துறையில் மிகுந்த ஈடுபாடு கொண்டு வளர்ச்சியடைகின்ற இக்கால கட்டங்களிலும் மக்கள் தங்களுடைய ஒவ்வொரு செயல்களுக்கும் நம்பிக்கையை அடிப்படைக் காரணமாக அமைத்துக் கொள்கின்றனர். இந்நம்பிக்கைகளைக் கொண்டு மக்களின் பண்பாட்டினை அறிய இயலும். செவ்வியல் இலக்கியங்கள் மற்றும் களப்பகுதி நம்பிக்கைகள் காட்டும் சமுதாயச் சிந்தனைகள் எனும் இயலைப் பற்றி விளக்குவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## சமுதாயம் - விளக்கம்

சமுதாயம் தனிமனிதன், குடும்பம் ஆகிய உறுப்புக்களைக் கொண்டது. ஆதியில் மனிதன் நாடோடியாகத் திரிந்த காலத்தில் ஒரு சமூகக் கட்டமைப்பு இன்றிக் காட்டுமிராண்டி வாழ்க்கை வாழ்ந்தான். பின்னர் அறிவியல் அறிவைப் பெற்றுச் சமுதாய வளர்ச்சியைக் காணத் தொடங்கினான். இச்சமுதாயம் மாற்றம்பெற படைப்பாளியும் காரணமாகின்றான். அவன் தன் கலைப்படைப்பில் சமுதாயச் சிக்கல்களைப் போக்க வல்ல தீர்வுகளையும் சுட்டிக்காட்ட முயல்கிறான்.

வேட்டைச் சமூக மக்கள் இயற்கையிடமிருந்தும், விலங்குகளிட மிருந்தும் தங்களைப் பாதுகாத்துக் கூட்டமாக வாழ்க்கையை நடத்தினர். பின்னர் ஒருவருக்கொருவர் உதவி செய்ய உயிர் காக்க வேண்டிய கட்டாயத்தால் சமூகம் உருவானது. சமூகம் என்பது ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்ட காலமாக ஒன்று சேர்ந்து வாழ்வதற்காக மக்கள் கூட்டம் ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பாகும்.

“கூட்டு வாழ்வுக்குழு, மன்னாயம், நட்புக்குழு, சேர்க்கை, தோழமை, தொகுதி, குடிமைப் பண்புடையோர் குழு” என்று ஆங்கில அகராதி சமுதாயத்திற்கு விளக்கம் தருகிறது.

ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் தனித்த பழக்க வழக்கங்களுடன் வாழும் மக்கள் கூட்டத்தைச் சமுதாயம் என்பர். “ஒரு சிறிய நிலப்பரப்பில் ஒரு பொது வாழ்க்கை முறையைப் பின்பற்றிக் கூட்டாக வாழும் மக்கள் தொகுதி சமுதாயம் எனப்படும். இது மக்கள் ஒன்றுபட்ட பொது எண்ணத்துடன் கூடியச் சட்ட திட்டங்களைக் கருத்தில் கொண்டு ஒன்று கூடி ஓர் இடத்தில் வாழும் அமைப்பைக் குறித்து அமைவதாகும்”[1] என வாழ்வியற் களஞ்சியம் சுட்டும்.

“பல சிறிய சமுதாயங்கள் ஒரு பெரிய சமுதாயத்திற்குள் இருக்கலாம். சான்றாக ஒரு கிராமம் நகரத்திற்குள்ளும், ஒரு நகரம் ஒரு மாநிலத்திற்குள்ளும், ஒரு மாநிலம் நாட்டிற்குள்ளும் இருக்கலாம்”[2] என்பர்.

“விஞ்ஞானப் பூர்வமாகவும், புறநிலையாகவும் மனிதனையும் சமுதாயத்தையும் ஆய்வதே சமூகவியலின் சாராம்சம் ஆகும். அதற்கு ஏதுவாகச் சமூக நிறுவனங்களும், நடைமுறைகளும், நம்பிக்கைகளும் வழக்காறுகளும் ஆராயப்படுகின்றன. இவையாவற்றினுடைய இயக்கத்தையும் இயக்க ஆற்றலையும் ஆராய்வதே சமூகவியலின் தலையாயப் பண்பும் பணியுமாகும்”[3] என்று க.கைலாசபதி குறிப்பிடுகின்றார்.

**சமுதாயம் அறிஞர்கள் கருத்து**

சமுதாயத்திலுள்ள மக்கள் தன்னுள் ஒருவருக்கொருவர் இணைந்து வாழவேண்டும். “சமுதாயம் என்ற சொல்லை சமு+தாயம் என்று பிரிக்கலாம். ‘சமு’ என்பது நல்லகூட்டம், ‘தாயம்’ என்பது தாய்வழிக் கூட்டம் கொண்ட அமைப்பாகும்”[4] என்று ர.ராசகோபால் குறிப்பிடுவார்.

“சமுதாயம் என்பது வெறும் மக்கள் கூட்டமன்று அது ஒரு நிலை; ஓர் உறவுமுறை என்பதாகப் பொருள்படும்”[5] என்பார் ரைட் எனும் அறிஞர்.

“தனிமனிதனின் ஒருங்கமைக்கப்பட்ட கூட்டம் சமுதாயம்”[6] என்கிறார் கிட்டிங்ஸ்.

“ஒரு வட்டாரத்தில் பொது வாழ்க்கை நெறியைப் பின்பற்றிக் கூட்டாக வாழும் மக்கள் தொகுதி சமுதாயம்”[7] என அழைப்பர் என்று மேக் ஈவர் எனும் சமூகவியலார் குறிப்பிடுவார்.

**சமூகம் - விளக்கம்**

ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்ட காலமாகச் சேர்ந்து வாழ மக்கள் கூட்டம் ஏற்படுத்திக் கொள்ளும் ஒரு அமைப்பு சமூகமாகும். “ஆங்கிலத்தில் இதனை Society என்பர். சமுதாயம் என்ற சொல் சோசியசு (Socius) எனும் இலத்தீன் மொழியிலிருந்து பிறந்ததாகும். அதற்குக் கேண்மை, அல்லது ஒன்று கூடுதல் என்று பொருள்படும். தமிழில் சமூகம் என்றும் சமுதாயம் என்றும் வழங்கப்படுகிறது”[8] என இராமகுருநாதன் குறிப்பிடுவார்.

ஒரு மனிதன் பிற மனிதனுடன் கொண்டிருக்கின்ற சிக்கலான உறவுமுறைத் தொடர்புகள் தான் சமூகமாகத் திகழ்கின்றன. “குறிப்பிட்ட பொது நோக்கங்களை அடைவதற்காக ஒரு சில நிலையான உறவு முறைகளினால் விளைவிக்கப்பட்டுள்ள மனிதக் கூட்டுத் தொகுதியைச் சமூகம் என்கிறோம். ஒற்றுமை, பல்வேறு தன்மைகள், நிலைபேற்றுத் தன்மை, சமுதாய உணர்ச்சி ஆகியவைகள் தான் சமூகத்தின் பண்புகள்”[9] என்று பாஸ்கல் கிஸ்பர்ட் சுட்டுவார்.

கிட்டிங்ஸ் என்பவர் “ஒரே விதமான எண்ணங்களையுடைய மனிதர்கள் தங்களுடைய ஒத்த தன்மையை உணர்ந்து, அதற்குக் காரணமாகப் பொதுவான நோக்கங்களை அடையச் சேர்ந்து முயல்கின்ற போது சமூகம் உருவாகிறது”[10] என்பர்.

“பொதுவான லட்சியத்தை அடையக் கூட்டுறவாகச் செயற்படும் பகுத்தறிவுள்ள மக்களின் நிலையான ஒழுக்க நியதிக்குட்பட்ட பிணைப்பு”[11] என தாமஸ் அக்வினாஸ் குறிப்பிட்டுள்ளார்.

சமூகம் என்பது அனைத்துச் சமூக உறவுகளையும் தன்னகத்தே கொண்ட ஒரு பின்னலாகும். பொதுவாகச் சமூகம் என்பது சமூக உறவுகளின் தொகுப்பு என்ற பொருளைத் தருகின்றது. அதுகுறித்த விளக்கங்கள் அகராதிகளில் இடம்பெற்றுள்ளன.

"ஒரு நிலப்பகுதியில் நிலையாகக் கூடி வாழும் பெருந்திரளான மக்கள் என்ற பொருளில் சமூகத்தைக் குறிப்பிடுகின்றார்கள். அதாவது தம்மைப் பேணிக்காத்துக் கொள்வதற்கும், அழியாமல் நிலை நிறுத்திக் கொள்வதற்கும் ஒன்றாக இணைந்துள்ள ஒரு குழு சமூகம்"[12] எனப்படுகிறது.

"சமூகம் என்பது சமுதாயம். சாதி - மக்கள் - தொகுதி - இனம்"[13] என்று நர்மதாவின் தமிழகராதி குறிப்பிடுகின்றது.

"Assembly, Multitute-திரள், Camukam-கழகம்"[14] எனச் சமூகம் பற்றித் தமிழகராதி குறிப்பிடுகிறது.

சமூகம் என்பது மனிதனின் சமூக உறவுகளில் தோன்றுகின்றது. உறவுகளை ஏற்படுத்திக் கொள்ளும் மனிதர்கள் அவ்வுறவுகளை நிலைப்படுத்தி, முறைப்படுத்தித் தங்களுக்குள் ஓர்அமைப்பை அனைவரும் கூடிவாழக் கூடிய நிலையினை ஏற்படுத்திக் கொள்ளும் போது சமூகம் பிறக்கிறது. இச்சமூகம் பற்றி பல அறிஞர்கள் தங்கள் கருத்துக்களை எடுத்துரைத்துள்ளனர்.

**பிளாட்டோ**

கிரேக்கத் தத்துவவாதி பிளாட்டோ "மனிதர்கள் தேவையின் காரணமாகத் தான் தங்களுக்குள் ஒரு சமூக அமைப்பை ஏற்படுத்திக் கொண்டு கூடி வாழ்கின்றனர்"[15] என்று சுட்டுகிறார்.

**புனித தாமசு**

"மனிதன் தன்னுடைய பற்றுக்களைத் தனித்திருந்து தன்னிச்சையாக அடையமுடியாது. பிறருடைய துணை, ஒத்துழைப்பு இருந்தால் மட்டுமே அடையமுடியும். எனவே இவற்றைப் பெற மனிதன் பிறரோடு சேர்ந்து சமூகத்தை அமைத்துக் கொள்கிறான்"[16] எனக் கூறுகிறார்.

**அரிஸ்டாட்டில்**

“மனிதனுக்குச் சமூகவியல்பு இயற்கையிலேயே இருக்கிறது. இந்தச் சமூகவியல்பு காரணமாக அவன் பிறரோடு கூடிப்பழகுகிறான். அவ்வாறு பழக முற்படும் போது சமூகம் உருவாகிறது”[17] என்கிறார்.

**ஏபெர்லி**

“சமூகம் என்பது தற்சார்புள்ள ஒரு முறையான செயற்பாட்டைப் பகிர்ந்து செயற்படும் ஒரு மனிதக்குழு”[18] என உரைக்கிறார்.

**இலெவி**

“சமூகம் என்பது தம்முடைய செல்வங்களைக் கொண்டே நெடுங்காலம் நீடித்திருக்கத் தேவையான செயற்பாட்டு முன் தேவைகளை நிறைவு செய்யும் ஒரு சமூகக் கோவை”[19] என்கிறார்.

**தமாசு ஆப்சு**

“இயற்கை நிலையில் மனிதர்கள் வாழ்ந்த போது அவர்களுக்கு ஏற்பட்டச் சிக்கல்களைப் போக்கத் தங்களுக்குள் ஓர் ஒப்பந்தத்தைக் கொண்டு சமூகத்தை நிறுவினார்கள்”[20] எனச் சுட்டுகிறார். மேற்கூறியவற்றிலிருந்து ஒன்றுகூடி வாழும் மனிதக் கூட்டமே சமூகம் என அழைக்கப்படுகின்றது என்பது புலனாகும்.

**கடவுள் நம்பிக்கை**

பழந்தமிழரின் சமயக் கோட்பாடு அச்சத்தை அடிப்படையாகக் கொண்டதாகக் காட்சி தருகின்றது. இதனை இயற்கைக் கூறுகளான மலை, கடல் ஆகியவற்றை வணங்கிய நிலை தெரிவிக்கும். “இயற்கையின் பாதிப்புக்குட்பட்ட மனிதன் அவற்றின் தாக்குதல்களிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முயன்ற நிலையில் கடவுள் கோட்பாடும் வழிபாடும் தோன்றின”[21] என்பர் க.காந்தி.

இயற்கையின் கூறுகளான நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், மலை, ஞாயிறு, திங்கள் போன்றவற்றை வழிபடும் தன்மையினை இயற்கை

வழிபாடாகக் கருதுவர். பழந்தமிழர் இயற்கைகளை வழிபட்டதனை ஞாயிறு, திங்கள், மலை, கடல், வணக்கங்கள் தெரிவிக்கும். இதனைத் தொல்காப்பியர்,

**“கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
**வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே”[22] (தொல்.1034)**

எனச் சுட்டியுள்ளார்.

இயற்கை வழிபாட்டின் அடிப்படையில் தோன்றிய இறைவழிபாடு காலப்போக்கில் பல தெய்வ வணக்கத்திற்கு வழியமைத்தது. பல தெய்வக் கோட்பாடு வளர்ந்த நிலையில் சிறுதெய்வம், பெருந்தெய்வம் என்ற பாகுபாடுகளும் தோன்றின. இந்நம்பிக்கையின் எச்சங்களை இன்றைய நாகரிக மக்களின் வாழ்க்கையிலும் காணமுடிகின்றது.

இன்றைய மக்கள் வழக்காற்றில் தெய்வவழிபாடு இல்லாத மனிதர்கள் இல்லை என்ற அளவிற்கு வளர்ச்சி அடைந்துள்ளதை உணர முடிகின்றது. இதற்குச் சிற்றூர் / நகர்ப்புற மக்கள் வழிபடும் தன்மைகளைச் சான்றாகச் சுட்டலாம். கடவுள் நம்பிக்கை இல்லை என்று கூறிக்கொண்டு திரிபவர்கள் கூட தமது வீட்டிற்குள் தெய்வப் படங்களை வைத்து வழிபட்டு வருவதனைக் காணமுடிகின்றது. கடவுளை வழிபட்டால் வேண்டியது கிடைக்கும், நன்மை கிட்டும், செல்வம் பெருகும், தொழில் வளர்ச்சியடையும், மன அமைதி கிடைக்கும் என்று நம்புகின்றனர்.

ஏதேனும் குற்றங்கள், தவறுகள் செய்தால் தெய்வம் தண்டிக்கும், அழித்துவிடும் என்ற நம்பிக்கை மக்களிடம் மேலோங்கி காணப்படுகிறது. இதன் மூலமாக

**“அரசன் அன்றே கொல்வான்**
**தெய்வம் நின்று கொல்லும்”**

**“யாருகடன் இருந்தாலும் மாரிகடன் ஆகாது”**

எனும் சொலவடை தோன்றியிருக்கலாம் என்று நினைக்க இடமுண்டு.

இன்ப, துன்ப நிகழ்வுகள் எதுவாக இருந்தாலும் மக்கள் தெய்வத்தினை வழிபட்டு, முறையிட்டு, நேர்த்திக்கடன் வைத்து வழிபட்டு வருவதனை இன்றும் காணமுடிகின்றது. சான்றாகக் கடவுளை வேண்டிக் குழந்தையில்லாதோர் ஆலமரம், அரசமரம், வேப்பமரம் போன்றவைகளில் தொட்டில் கட்டுவது, சுற்றிவருவதன் மூலம் குழந்தை பெற்றதனையும் அறியமுடிகின்றது.

மக்கள் தங்கள் வேண்டுதல் நிறைவேறியவுடன் நேர்த்திக் கடன்களாகப் பாதயாத்திரை செல்லுதல், மாவிளக்கு எடுத்தல், தீச்சட்டி எடுத்தல், அலகு குத்துதல், மடிப்பிச்சை எடுத்தல், முளைப்பாரி, பால்குடம், காவடி எடுத்தல் போன்றவைகள் கூட்டுநிலைச் சடங்குகளாகவும், காணிக்கை செலுத்துதல், வேல் அடித்து வைத்தல், உருவம் வாங்கி வைத்தல், கயிறு கட்டுதல், சன்னதிக்கு வருதல், விரதம் இருத்தல், மொட்டை அடித்தல், பொங்கல் வைத்தல், கிடாய் வெட்டுதல், கோழி, சேவல் பலியிடுதல் கோரிக்கைச் சீட்டுக் கட்டுதல், பூக்கேட்டல் போன்றவைகள் தனித்த நிலைச் சடங்குகளாகவும் செய்து வருகின்றனர்.

எதிரிகளைத் தெய்வம் தண்டிக்க காசு வெட்டிப்போடுதல் மண் வாரித் தூற்றிக் காளி கேளு, கருப்பன் கேளு எனக் கூறுவதனையும் கடைப்பிடித்து வருகின்னர். இவை அனைத்தும் தெய்வத்தின் மீது கொண்ட நம்பிக்கையினால் கடைப்பிடிக்கப்படுபவையாகும்.

**நாள் பார்த்தல்**

மக்கள் தாங்கள் ஈடுபடும் செயல்களில் நன்மை பயக்க வேண்டும் என்று எதிர்பார்க்கின்றனர். எனவே தான் நல்ல காலங்களைத் தேர்ந்து செயல்களைத் தொடங்குகின்றனர். “நல்ல நாளும் நல்ல பொழுதும் பார்த்துச் செயல்படும் நிலை பழங்குடி மக்கள் தொட்டு இன்றைய நாகரிக மக்கள் வரை அனைத்துச் சமூக மக்களிடமும் தொடர்ந்து மரபு வழியாகப் பின்பற்றப்பட்டு வருவதை வரலாறுகளும் வாழ்க்கை முறைகளும் உணர்த்துகின்றன”[23] என்று க.காந்தி குறிப்பிடுகிறார்.

புறநானூற்றில் வேளாண் மக்கள் வித்திடுவதற்கும், விளைந்ததை அறுவடை செய்வதற்கும் நல்ல நாள் பார்த்ததனை,

**"கருங்கட் கேழ லுழுத பூழி**
**நன்னாள் வருபதம் நோக்கிக் குறவர்**
**உழாஅது வித்திய பரூஉக்குரற் சிறுதினை**
**முந்துவிறை யாணர் நாட்புதி துண்மார்" (புறம்.168:4-7)**

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

இவ்வுணர்வு தோன்றுவதற்குக் காரணம் நன்மை விளைய வேண்டும் என்ற மனித மனத்தின் எதிர்பார்ப்பும், தீமைகளிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள வேண்டும் எனும் காப்புணர்வும் ஆகும்.

**"நாள் செய்வதை நல்லோர் செய்யார்"**

எனும் முதுமொழி நாள் பற்றிய நம்பிக்கையினைப் புலப்படுத்துகின்றது. "எகிப்தியர்கள் மருந்து உண்ணவும் விதை விதைக்கவும் நல்ல நாட்கள் என்று சில நாட்களை வகுத்திருந்தனர்"[24] எனக் கலைக்களஞ்சியம் சுட்டுகிறது.

இன்றைய காலகட்டத்தில் சங்க காலம் போல் பிறப்பு முதல் இறப்பு வரை நாள், பொழுது பார்த்துச் செயல்படுவதனைக் கைக்கொண்டிருக் கின்றனர். பிறந்த குழந்தைக்குப் பெயர்வைக்க, காதுகுத்த, மொட்டைபோட, பெண்களுக்கு மஞ்சள் நீராட்டுவிழா, திருமண நிகழ்வுகள், வளைகாப்பு, விதைவிதைக்க, அறுவடை செய்ய, இறப்பு நிகழ்வுகளில் பிணத்தை எடுக்க, காரியங்கள் செய்ய எனப் பல நிலைகளில் நாளும், பொழுதும் பார்த்துச் செயல்படுவதனைக் காணமுடிகின்றது.

நாள் பார்த்துச் செயல்படுவதன் மூலம் நன்மை விளையும் என்று நம்புகின்றனர். தெய்வ வினைகள் நல்ல நாளில் பார்த்துச் செயல்படுவதனையும், புதுமனை புகுவிழா போன்ற எந்த நிகழ்வுகளாக இருந்தாலும் நாளும் பொழுதும் பார்த்துச் செய்கின்றனர். இதற்குக் காரணம் தீமைகள் ஏற்படாமலிருக்கவும், தீமைகளிலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்பதும் ஆகும்.

அந்த வகையில் ஒரு செயலைத் தொடங்குமுன் அது நன்மையில் நிலைக்க வேண்டும் என்று நினைத்து, முன் கூட்டியே இன்னநாள், இன்ன கிழமை, இன்ன மாதம் என மக்கள் திட்டமிட்டுச் செயல்படுத்துகின்றனர்.

நல்ல நேரம், காலம் பார்த்து எச்செயலைச் செய்தாலும் அது வெற்றியடையலாம். அதன்மூலம் முழுப்பயனையும் அடையலாம் என்ற நம்பிக்கையும் மக்களிடையே உள்ளது. அன்றாட வாழ்விலும் இதனைக் கடைப்பிடித்து வருகின்றனர். இயற்கை நிகழ்வுகளைக் கண்டு அஞ்சிய மனிதன் நாளும் கோளும் பார்த்துச் செயல்படும் பழக்கத்தினை உண்டாக்கினான் என்பதற்கு இன்றைய மனிதனுடைய முக்கியமான செயல்கள் காரணமாக அமைகின்றன. இந்நிலை நாகரிகமிக்க, நாகரிகமற்ற அனைத்து மக்களிடையேயும் வழக்கில் உள்ளது.

**“நாளும் கோளும் நலிந்தோர்க் கில்லை”**

எனும் எதிர்மறை வழக்கும் சில மக்கள் வாழ்வில் இருப்பதனை அறியமுடிகின்றது.

**மணச்சடங்கு**

ஒத்த வயதுடைய ஆணும் பெண்ணும் இணையும் சடங்கிற்குத் திருமணம் என்று பெயர். “ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் கணவனும் மனைவியுமாக இல்லறம் நடத்த இசைந்து ஒன்று சேர்வதே மணமாம்”[25] என்று ஞா.தேவநேயன் குறிப்பிடுவார்.

“திருமணம் என்பது ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் இணைந்து வாழ்வதற்காகச் சமுதாயத்தால் ஏற்படுத்தப்பட்ட வினை முறையாகும்”[26] எனக் க.காந்தி சுட்டுவார்.

திருமணம் என்பது மனிதனுக்காக மனிதனால் நடத்தப்படும் ஒருவகைச் சடங்கு என்பர் ஏ.எம்.சலீம். இச்சடங்கு பற்றித் தொல்காப்பியர்,

**“பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
**ஐயர் யாத்தனர் கரணம் என்ப”** ***(தொல்.1091)***

என்று சுட்டுகிறார்.

பண்டைத் தமிழர் வதுவை, மன்றல், மணம் எனக் குறித்துள்ள மணமுறையினை, இன்றைய மக்கள் திருமணம், கல்யாணம் என்று குறிப்பிடுகின்றனர். பண்டைத் தமிழர் திருமணம் மணமகள் இல்லத்தில் நடைபெற்றது போல் இன்றைய மக்களும் மணமகள் இல்லத்தில் நடத்துகின்றனர். சிலர் திருமண மண்டபங்களில் நடத்துகின்றனர். இடவசதி பற்றாக்குறையினால் இம்முயற்சியை மேற்கொள்கின்றனர்.

ஒருசிலர் கோயிலிலும், கோயில் மண்டபத்திலும் திருமணம் நடத்துகின்றனர். பெரும்பாலும் நாட்டுப்புற மக்கள், ஏழை எளியோர் இன்றும் கோயிலில் திருமணம் நிகழ்த்தும் இடமாகக் கொள்கின்றனர். செல்வந்தர்கள் சிலர் வேண்டுதல் காரணமாகக் குறிப்பிட்ட கோயிலில் திருமணம் செய்வதனையும் பார்க்க முடிகின்றது.

சாதி வேற்றுமையைப் பாராது கலப்பு மணத்தை வரவேற்கும் பாரதிதாசனார் ‘ஒருவனுக்கு ஒருத்தி’ என்ற கொள்கையை வற்புறுத்துகிறார். மனைவியிருக்க வேறொருத்தியை மணப்பதை எதிர்க்கிறார். பலதார மணச் சட்டத்தைக் கொண்டு வந்த அரசைப் பாராட்டுகிறார்.

பெண்களைப் பொறுத்த வரையில் திருமணமில்லாமல் அவர்களுக்கு வாழ்வில்லை என்பது தமிழ்ச் சமுதாயத்தில் நிலவி வந்துள்ள கருத்து. இதனை உணர்த்தும் பழமொழிகளாக

**“அமைச்சன் இல்லாத அரசும், ஆமுடையான் இல்லாத ஆரிழையும்”**

**“ஆடுமிதியாக் கொல்லையும் ஆளன் இல்லாப் பெண்ணும் வீண்”**

**“ஆளன் இல்லாப் பெண்ணும் அழகு பாழ்”**

**“ஆளன் இல்லாத பெண்ணுக்கு வாழ்வில்லை”**

என்பன கூறப்படுகின்றன. ஒரு பெண்ணின் அழகும் நலனும் ஒருவனுக்கு உரியதாகும் பொழுதுதான் பெருமையடைகின்றன.

பெண்ணின் குணநலன், உழைப்புப் பற்றி அறிவதற்கு “தாயைப் போல பிள்ளை நூலைப்போல சேலை”, “தாயைத் தண்ணீர்க் கரையில்

பார்த்தால் மகளை வீட்டில் பார்க்க வேண்டியதில்லை'', ''வேரோடி விளாத்தி முளைத்தாலும் தாய்வழி தப்பாது'' போன்ற முதுமொழிகள் உதவுகின்றன. தாயின் ஒழுக்கம், பண்பு, நேர்மை, தொழில், பழக்கவழக்கம் ஆகியன அவள் மகளின் திருமணத்திற்கு உதவியாக இருந்ததனை அறியமுடிகின்றது.

தமிழர் தங்கள் வீட்டில் திருமண வயதுடைய பெண் இருந்தால் திருமணத்தை முதலில் முடிப்பர். இதனையே ''கன்னி இருக்கக் காளை மணை ஏரலாமா?'' என்பர். பெண்களுக்குத் திருமணம் செய்து வைப்பதில் உள்ள இடர்பாடுகளை உணர்த்தும் வகையில் ''ஆயிரம் பொய் சொல்லி ஒரு கலியாணம் செய்துவை'', ''கடன் வாங்கியானும் கல்யாணம் செய்'' எனும் பழமொழிகள் உணர்த்தும்.

ஒரு பெண்ணுக்கு விரைவில் திருமணம் நடக்கவில்லை எனில் ஊராரும், அவளைச் சார்ந்த உறவினர் சிலரும் பழிக்கத் தொடங்குகின்றனர். அவளுக்குப் பல மன உளைச்சல்களை ஏற்படுத்தித் தற்கொலைக்குத் தூண்டுகிறது இச்சமூகம். பெண்ணுக்குத் திருமணமாகாமலிப்பதற்குக் குடும்பச் சூழ்நிலை, பொருளாதாரச் சூழ்நிலை போன்றவைகள் காரணமாக இருக்கலாம்.

**கனவு**

மனிதர்களின் நிறைவேறாத எண்ணங்களின் வெளிப்பாடு கனவுகள். மனித வாழ்க்கையோடு இணைந்திருப்பவை. இவை மனித வாழ்வின் பிரதிபலிப்பாக உள்ளன. கனவுகளில் வரும் காட்சிகள் நமது வாழ்க்கையில் கடந்தகால, நிகழ்கால, எதிர்கால நிகழ்வுகளைப் பற்றி நமக்கு முன்னெச்சரிக்கையாகச் சொல்கின்றன என்று நமது முன்னோர் கருதினர். படித்தவர்களும் இன்று இவ்வுண்மையை மறுக்கவில்லை.

கனவுகள் மக்களுக்குப் பின் நிகழப் போவதை முன்னர் உணர்த்துகின்றன என்று நம்புகின்றனர். உளவியலார் அடக்கி வைக்கப்பட்ட விருப்பத்தின் மறைமுகமான வெளிப்பாடே கனவு என்பர். வேறு சிலர் கனவு உளநோயால் தோன்றுகிறது என்றும் கூறுவர். ''கனவுகளை நல்ல கனவு,

தீயகனவு என இருவகையாகப் பிரிப்பர். மக்களுக்கு நன்மையோ தீமையோ வருவது கனவு மூலம் தெரிந்துவிடும் என்று நம்புகின்றனர். சான்றாக ஏற்றி வைத்த தீபம் அணைதல், தேங்காய் உடைதல் போலக் கனவு கண்டால் தீமை விளையும் என்று கருதுகின்றனர். தங்களுக்கு நிகழப் போவதை தெய்வமோ அல்லது முன்னோர்களின் ஆவியோ கனவில் தோன்றிக் கூறுவதாக நம்புகின்றனர்"[27] என்று சு.சக்திவேல் குறிப்பிடுவார்.

ஐங்குறுநூற்றில் இக்கனவு பற்றி

**"கனவில் காணும் இவளே**
**நனவில் காணாள்நின் மார்பே"** ***(ஐங்.234:3-4)***

என்று குறிப்பிடப்படுகின்றது.

தமிழில் 'கனாநூல்' என்றொரு நூல் இருப்பது தமிழ் மக்கள் எந்த அளவிற்குக் கனவு பற்றிச் சிந்தித்துள்ளனர் என்பதற்குச் சான்றாகும். கனவுகள் வாழ்க்கையில் நிகழவிருக்கும் நன்மை தீமைகளை விளக்கும் ஒரு குறியீடாக மக்கள் இன்றும் பின்பற்றுகின்னர்.

சான்றாக: கனவில் மரணம், உப்புக்காணுதல், ஆமையைக் காணுதல், ஏர் உழுதல் முதலானவை நற்கனவுகள் என்று நம்புகின்றனர். அதிகாலைக் கனவு பலிக்கும் எனவும் நம்புகின்றனர்.

கனவில் திருமணம், பன்றி, ஆடு, பச்சைமரம், விறகு, காகம், இரும்பைக் காணுதல், கழுகு வட்டமிடுதல், இறைச்சியைக் காணுதல், நெற்குவியல் போன்றவைகள் தீமை பயக்கும் என்று நம்புகின்றனர். இன்றைய மக்கள் பலரும் வாழ்வில் "பகல் கனவு பலிக்காது, அதிகாலைக் கனவு பலிக்கும்." என்று நம்புவதனைக் காணமுடிகின்றது.

**நிமித்தம்**

நிமித்தம் என்பது வாழ்வில் பின் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் வாயிலாக முன்னுணர்த்துவதாகும். நிமித்தங்கள் அனைத்தும் நம்பிக்கையின் பாற்பட்டவை. இதனை நாட்டுப்புற

மக்கள் வழக்கில் நல்ல சகுனம் என்றும் கூறுவர். "ஒரு செயலைத் தொடங்கும் போது நல்ல சகுனம் தோன்றினால் அச்செயல் நன்மையாக முடியும் என்றும், தீய சகுனம் தோன்றினால் அச்செயல் தோல்வியடையும் என்றும் நம்புகின்றனர் என்பர்."[28]

நாட்டுப்புற மக்கள் சகுனங்களில் பெரும் நம்பிக்கை உடையவர்கள். அவற்றிற்குரிய காரண காரியத் தொடர்பு தெரியாவிட்டாலும் முன்னோர்கள் நம்பியதால் மரபு வழியாக இவர்களும் நம்புகின்றனர். சகுனத்தில் மக்களுக்கு நம்பிக்கை உண்டு என்பதை,

**"ஆந்தை அலறினாலும் காக்கை எச்சமிட்டாலும் தீது என்பர்"**

**"நீர் நிறைத்துவரினும் திருநீறு அணிந்து வரினும் நல்லது என்பர்"**

எனும் பழமொழிகள் எடுத்துக் காட்டுகின்றன.

புறநானூற்றில் நன்னிமித்தமும், நாள்பொழுதும் பார்த்ததனை,

**"புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை**
**உள்ளிச் சென்றோர் பழியலர் அதனால்"** **(புறம்.204:10-11)**

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

இன்றைய மக்கள் பெரும்பாலும் பயணம் மேற்கொள்ளும் பொழுது சகுனங்களை அதிகமாகப் பார்க்கின்றனர். கன்னிப் பெண் நிறைகுடத்துடன் வருதல், வண்ணான் அழுக்குத் துணியுடன் வருதல், பிணம் எதிரே வருதல், சுமங்கலியைக் காணுதல், தாயும் பிள்ளையுமாக வருதல், கோயில் மணியடித்தல், கழுதை கத்துதல், விழாவைக் காணுதல், இருபாம்புகள் பிணைந்திருப்பதைக் காணுதல், அணில் வீட்டிற்குள் வருதல், யானையைக் காணுதல் போன்றவைகள் நல்ல சகுனங்களாக நம்பப்படுகின்றன.

தீய சகுனங்களாக பூனை/பன்றி/நாய் குறுக்கே வருதல், விதவை எதிர்ப்படுதல், முக்காடிட்டவர் எதிர்ப்படுதல், காலி குடத்துடன் வருதல், நாய் ஊளையிடுதல், ஒற்றைப் பிராமணனைக் காணுதல், விறகுடன் வருதல், ஆந்தை அலறல், மண்வெட்டியுடன் எதிர்ப்படல், எங்கே போகிறீர் என்று கேட்டல் ஆகியவை தீய சகுனங்களாகக் கருதுகின்றனர்.

பறவைகளில் சகுனமாகக் காக்கை, ஆந்தை போன்றவை தீய சகுனத்தை உணர்த்துகின்றன. காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கை உள்ளது. பல்லியின் ஒலியைச் சகுனமாகக் கொள்வதனை இன்றைய மக்கள் கடைப்பிடித்து வருகின்றனர். நாம் நினைக்கும், நிகழ்த்தும் செயல்களுக்கேற்ப பல்லி சகுனம் நன்மை, தீமை உணர்த்தப்படுவதாக நம்புகின்றனர்.

கண் துடித்தல், தும்மல் ஒலி போன்றவைகள் நன்மை தீமை பயப்பதாகக் காணமுடிகின்றன. மாந்தர் உறுப்புகளில் தலைவிரிகோலம், அழுகைக் கண்ணீர் போன்றவைகளும், விளக்கு அணைதலும் தீய நிமித்தமாகக் கருதப்படுகின்றன.

மனிதமனம் பெரும்பான்மை நன்மையை மையமிட்டுச் சூழல்கின்றது. அதனையும் எதிர்பாராது தீமை நிகழ்ந்துவிடுகின்றது. உடனே மனிதமனம் நன்மை நடந்ததற்கும், தீமை நிகழ்ந்ததற்கும் காரணம் கற்பிக்கின்றது. கற்பிக்கப் பெற்றவை நம்பிக்கையாக மனித சமூகத்தில் மரபு வழிப்பட்டு தொடர்கிறது. அவ்வகையில் இங்கு நன்மையை ஏற்படுத்தும் நம்பிக்கைகள், தீமையைச் சுட்டும் நம்பிக்கைகள், கனவுகள், பறவைகள், விலங்குகள், ஊர்வன, தெய்வங்கள் ஆகியவற்றை மையமிட்டு அமையும் நம்பிக்கைகள், இயற்கை நிகழ்வை முன்னிறுத்தி வழங்கப்படும் நம்பிக்கைகள் போன்றவை மக்கள் சமூகத்தில் நம்பப்படுகின்றன.

**விரிச்சி கேட்டல்**

விரிச்சி என்பதற்கு நிமித்தம், நற்சொல் கேட்டல் என இருவகைப் பொருளுண்டு. வரும் வினைகளை முன்னரே தெரிந்து கொள்ள விரிச்சி கேட்கின்ற வழக்கத்தைப் பண்டுதொட்டு இன்றுவரை மக்கள் கடைப்பிடித்து வருகின்றனர். தொல்காப்பியத்தில் விரிச்சியினை

***“படையியங்கு அரவம் பாக்கத்து விரிச்சி”   (தொல்.1004:1)***

என்றும், நற்றிணையில்

***“இடூஉ ஊங்கண் இனிய படூஉம்”   (நற்.246:1)***

எனவும் குறிப்பிடப்படுகிறது.

ஒரு செயலுக்குப் புறப்படுவதற்கு முன்னர் சகுனம் பார்க்கின்ற முறையை அவர்கள் பறவையை முன்னிறுத்தியும், நற்சொல் கேட்டும் நிகழ்த்தியதனைச் சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகின்றது. இதன் மூலம் நன்மை விளையும் என்று நம்பியது இதற்குக் காரணமாகும்.

**கட்டுக் கேட்டல், கழங்கு பார்த்தல்**

அக இலக்கியத்தில் தலைவியின் உடல் மெலிவிற்குக் காரணமறியத் தாயர் அகவன் மகளாகிய கட்டுவிச்சியையோ அல்லது கழங்குக்குறி பார்க்கும் வேலனையோ அழைத்துக் குறிகேட்பர். அவை முறையே கட்டுக் கேட்டல், கழங்கு பார்த்தல் எனப்பெயர்பெறும்.

மக்கள் தங்கள் வாழ்க்கையில் நேரும் சில நிகழ்ச்சிகளின் உண்மையை அறிவதற்கும், பின் நிகழ்வதை அறியவும் குறிகேட்டல், நேர்ந்த துன்பங்களுக்குச் சாந்தி செய்தல் போன்ற வழக்கங்களைக் கொண்டிருக் கின்றனர். இக்கட்டுவிச்சு மூலம் ஒருவனுக்கு ஏற்படும் நோய், துன்பம், பேய்பிடித்தல், பயப்படுதல் போன்றவைகள் கண்டுபிடிக்கப்பட்டு, அவர்கள் கூறும் பரிகாரத்தின்படி நிவர்த்தியாவதாக மக்கள் சமுதாயம் நம்புகின்றனர். இக்குறி பார்க்கும் செயலை ஆண் பெண் இருபாலரும் தற்காலங்களில் மேற்கொண்டு வருகின்றனர்.

பதிற்றுப்பத்தில் கழங்கின் மூலம் நன்மை தீமை அறிந்ததனை,

***“எல்லாம் எண்ணின் இடு கழங்கு தபுந”*** ***(பதிற்.32:8)***

எனும் பாடலடி உணர்த்துகிறது.

கட்டுவிச்சு போலவே கழங்குக்குறியும் நோய், துன்பம், பேய்பிடித்தல், பயப்படுதல் போன்றவைகளைக் கண்டுபிடித்து அதற்கேற்றவாறு மந்திரித்து திருநீறு, கயிறு, எலுமிச்சைபழம் போன்றவைகளின் மூலம் குணமாவதாக நம்புகின்றனர். மக்களுக்கு ஏற்படக்கூடிய நோய், பேய், துன்பம் முதலானவை குணமாகின்றன என்று நம்புவதனால் கடைப்பிடித்து வருகின்றனர்.

**வெறியாட்டு**

வெறியாட்டு பற்றிக் குறுந்தொகையில்,

**"வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்**
**செந்நெல் வெண்பொறி சிதறி யன்ன"** ***(குறுந்.53:3-4)***

எனும் பாடலடிகள் சுட்டிச் செல்கின்றன.

வெறியாட்டு நிகழ்த்துவதன் மூலம் ஒருவனைப் பிடித்திருந்த பிணி, பேய், துன்பம் விலகுவதாக நம்பினார்கள். வேலனை அழைத்து வெறியாட்டு நிகழ்த்தி அதற்கான பரிகாரங்களையும் செய்து வந்துள்ளனர். இவற்றில் உயிர்ப்பலி செய்தும் வழிபட்ட நிலையினையும் அறியமுடிகின்றது.

இவ்வுயிர்ப்பலி இடும் சடங்குமுறை இன்றும் வழக்கில் இருப்பதனைக் காணமுடிகிறது. சங்க காலத்தில் ஆடு பலியிட்டு வழிபட்டனர். தற்காலத்தில் சேவல், பன்றி போன்றவைகளைப் பலியிட்டு நிகழ்த்துகின்றனர். பேய்பிடித்தல், செய்வினைக்கோளாறுகள், காத்துக்கருப்பு, முனி போன்றவை விட்டு விலகிச் செல்கின்றன என்று நம்புவது இதற்குக் காரணம் என்று கூறுகின்றனர்.

**நடுகல்**

போரில் பகைவர் அழியக் கொன்று புகழை நிலை நிறுத்திய மானமிக்க வீரர்களின் நடுகற்கள் வரிசையாக நிற்கும் என்பதனை,

**"நல்இசை நிறுத்த நாணுடை மறவர்**
**நிரைநிலை நடுகல் பொருந்தி இமையாது"** ***(அகம்.387:14-15)***

எனும் அகநானூற்றுப் பாடலடி எடுத்தியம்புகின்றது.

வீரத்தினைப் போற்றும் பண்பின் அடிப்படையில் தோன்றிய நினைவுச் சின்னம் காலப்போக்கில் ஆவி பற்றிய நம்பிக்கையின் பாற்பட்ட நிலையில் நடுகல் வழிபாடாக உருப்பெற்றது. "போரில் மாண்ட ஆவி சில நாட்களுக்கு உலகில் உலவுவதாகவும் சாவுச் சடங்குகள் கழிந்த பின்னரே வேறுலகு செல்வதாகவும் நம்பினர். சாவுச் சடங்குகள் நிகழ்த்துவதற்கு முன் கல் நட்டிச் சடங்கு செய்தால் ஆவியின் ஒரு பகுதி அங்கு தங்குமெனவும்

விழாக்காலங்களில் பழம் பிறப்புணர்வுடைய மேலோர் உலகிலுள்ள ஆவி இக்கல்லுக்கு வரும் என்ற நம்பிக்கை வழிபடுபவர்களுக்கு இருந்தது என்பர்''[29] இறந்தோர் ஆவி நடுகல்லில் புகுந்ததாக நம்பும் நிலை நடுகல் வழிபாட்டிற்கு வழிகாட்டியமையினை இதன்மூலம் உய்த்துணர முடிகின்றது.

இவ்வழிபாட்டின் எச்சத்தினை இன்றைய மக்கள் 'கல்நாட்டுதல்' என்று இறப்புச் சடங்குகளில் செய்து வருகின்றனர். கல்லறை அமைத்தும் தெய்வமாக வழிபட்டும் வருகின்றனர். இறந்தோர்களைச் சிலர் தெய்வமாகப் போற்றி வழிபடுகின்றனர். இவர்கள் தங்கள் குடும்பத்திற்கு எவ்விதத் தீங்கும் வராமல் காக்கின்றனர் என்று நம்புகின்றனர்.

**பேய் நம்பிக்கை**

பேய் பற்றிய நம்பிக்கை பண்பட்ட மற்றும் பண்படாத மக்களிடையே உலகெங்கும் இருந்துவரக் காண்கிறோம். ''இயற்கையின் ஆற்றலைத் தன் தேவைக்கேற்ப ஆளுகிற வலிமையை மாந்தர் பெறவில்லை. இயற்கையின் இயக்கத்திற்குரிய காரணங்களை அவள் ஆய்ந்தறியாத நிலையில் இயற்கையின் ஆற்றலில் பல அம்சங்களை அவன் கற்பனையில் மனித விகாரமாகவும் விலங்கு விகாரமாகவும் அமைந்த பேயுருவங்களாகப் படைத்து அவற்றை நம்பினான்.''[30]

பேய் பற்றிய நம்பிக்கையினை முத்தொள்ளாயிரத்தில்

***''அலங்கலம் பேய்மகளி ராட வருமே'' (முத்.36:3)***

எனும் பாடலடி சுட்டுகின்றது.

பேய்கள் உண்மையென நம்பப்பட்டது. அவற்றின் தோற்றம் பற்றி அஞ்சினர். ஒருவனுடைய இறுதிக்கால எண்ணங்கள் அவனது அடுத்த பிறவியின் தன்மையை நிர்ணயிக்கும் என்று கருதினர்.

ஆயுள் குறைவாக இறப்பவர்கள் ஆவிகளாகவும், பேய்களாகவும் உலவுவார்கள் என்று நம்புகின்றனர். அவர்கள் தங்களின் வாழ்வில் நிறைவேறாத ஆசைகள் நிறைவேறும் வரை ஆவிகளாக உலவி பிறருக்குத்

துன்பம் விளைவித்து வருவார்கள் என்றும் நம்பினர். இதனடிப்படையில் தான் வருடம் வருடம் அவர்களுக்கு நினைவு நாள் கொண்டாடி விருப்பப்பட்ட பொருட்களை வாங்கி வைத்து வழிபாடு செய்வார்கள். அவ்வாறு செய்வதன் மூலம் பிறருக்குத் துன்பம் கொடுக்க மாட்டார்கள் என்றும், அவர்கள் அந்தப் படையலை ஏற்றுக் கொண்டனர் என்றும் நம்புகின்றனர்.

குழந்தை பெற்றவர்களும், பருவமடைந்த பெண்களும் இரவு நேரங்களிலும், உச்சி வெயில் வேளையிலும் செல்லக்கூடாது என்றும், அவ்வாறு செல்லும் பொழுது அவர்களைப் பேய் பிடித்துக் கொள்ளும் என்றும் நம்புகின்றனர். அதேபோல் குழந்தைகளையும் வெயில் நேரங்களிலும், இரவு நேரங்களிலும் கொண்டு செல்லக்கூடாது. குழந்தைகளைப் பேய்கள் துன்புறுத்தும் என்று நம்புகின்றனர். இவ்வாறு மக்கள் சமுதாயத்தில் பேய்கள் பற்றி நம்பியதும், அதற்குப் பரிகாரமாக சாமியாடுபவர்களிடம் திருநீறு வாங்கிப் பூசி, தாயத்து மந்திரித்துக் கட்டுகின்றனர். இதன்மூலம் அனைத்தும் சரியாகிவிடுகின்றது என்று நம்புவது இதற்குக் காரணமாகும்.

**விழாக்கள்**

சமூகம் என்பது மனிதர்களைக் கூட்டாகக் கொண்ட ஓர் அங்கமாகும். ஒரு சமுதாயத்தின் வளர்ச்சி, வீழ்ச்சி, போக்கு, மறுமலர்ச்சி ஆகியவற்றை அச்சமுதாயம் காலங்காலமாகப் போற்றிக் கொண்டாடிக் கொண்டிருப்பதை விழாக்களின் வழி அறிய இயலும். சமுதாயத்தின் எண்ணப் போக்கிற்குத் தக விழாக்கள் உருவாகியும் மறைந்தும் வரக்காண்கிறோம். விழாக்களின் வழி ஒரு சமுதாயத்தின் பண்பாட்டினை இனங்காணலாம்.

“பசியும், பிணியும், பகையும் நீங்கி வளனும் சுரக்கப் பண்டைக்கால மக்கள் விழாக் கொண்டாடியதாகச் சிலம்பும், மணிமேகலையும் குறிப்பிடுகின்றன”[31] என்பர். இன்றும் பெரும்பாலான விழாக்கள் ஊர் செழிக்கவும், பசிபிணி, பகை நீங்கவும் கொண்டாடப்பட்டு வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும். வளமைச் சடங்குகள் காரணமாகவும் விழாக்கள் கொண்டாடப்பட்டு வருகின்றன. தெய்வங்களை

வழிபட்டுப் பயிரிட்டால் நன்கு செழித்து வளரும் என்ற நம்பிக்கையின் காரணமாக நடத்தப்படுகின்றன.

இனிய பாடல்களைப் பாடிப் பெருவிழாக் கொண்டாடியதைப் பட்டினப்பாலையில்,

**“பெருவிழாக் கழிந்த பேஎம் முதிர் மன்றத்து” (பட்டினப்.255)**

எனும் பாடலடி உணர்த்துகிறது.

தெய்வ நம்பிக்கை காரணமாகவும் விழாக்கள் நடைபெறுகின்றன. தெய்வத்திற்கு விழா எடுக்காவிட்டால் தம்மைத் தண்டித்துவிடும் என்று மக்கள் நம்பிக்கை கொள்கின்றனர். தம்முடைய முன்னோர்கள் வழிவழியாக விழாக்களை நடத்தி வந்தனர். இதனைப் பின்பற்றிப் போலச் செய்தல் காரணமாகவும் விழாக்களைக் கொண்டாடினர்.

“இவ்வுலகில் வாழுகின்ற மக்கள் இன்மையின்பமும், மறுமை யின்பமும் பெற்றுத் தம் பிறவியைத் தூய்மையாக்கவே விழாக்கள் நடத்தப்படுகின்றன”[32] என்கிறார் இரா.சீனிவாசன்.

விழாக்கள் மனிதனின் தேவைகளையும், குறிக்கோள்களையும் பூர்த்தி செய்வதற்குப் பயன்படுகின்றன. திருவிழாக்கள் அனைத்தும் நமது முன்னோர்களால் ஆய்ந்து அறிந்து ஏற்படுத்தப்பட்டவை. ஒவ்வொரு மதத்தவரும் தாங்கள் செய்த தீமைகளைப் போக்குவதற்காகவும், சமயத் தாக்கத்திற்காகவும் விழாக்களை நடத்துகின்றனர்.

“தமிழகக் கிராமப்புறங்களில் நடைபெறும் திருவிழாக்கள், வழிபாடுகள், சடங்குகள், பழக்க வழக்கங்கள் அனைத்தும் அக்கிராமத்திற்கே உரிய கலப்படமற்ற பண்பாட்டுக் கூறுகளாகத் திகழ்கின்றன”[33] என்பர்.

**பலியிடுதல்**

பலியிடுதலில் உயிர்ப்பலி, மலர்ப்பலி இட்டதனைத் திருமுருகாற்றுப்படையில்,

**“சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து”   (முருகு.218)**

எனும் பாடல் சான்று பகர்கின்றது.

பழஞ்சமுதாயத்தில் தெய்வத்தை அமைதிப்படுத்தக் கையாண்ட வழிபாட்டு முறை பலியிடுதலாகும். இது உயிர்ப்பலி, மலர்ப்பலி என இருவகைப்படும். உயிர்ப்பலி முறையே தொடக்ககால மக்கட் சமுதாயத்திடையே தெய்வத்தின் சீற்றம் போக்கக் கையாண்ட வழிபாட்டுமுறை என்பதை மானிடவியலார் உணர்த்தியுள்ளார். உயிர்ப்பலியின் வளர்ச்சியில் ஏற்பட்ட மனிதனின் மனமற்ற நிலையினை உணர்த்தும் வகையில் அமைவது மலர்ப்பலி எனலாம்.

இயற்கையின் சீற்றம், தெய்வச்சீற்றங்கண்டு அஞ்சிய மனிதன் அவற்றின் சீற்றந் தணிக்க வழிபாடும், பலியிடுதலும் செய்யத் தொடங்கினான். இவ்வாறு செய்வதன் மூலம் அவைகளின் சீற்றம் தணிந்து தனக்குத் துன்பம், இன்னல்கள் நேராது என்று நம்பினான். அதன் விளைவாகப் பலியிடுதலை நிகழ்த்தி இருக்க வேண்டும் என்று கருதலாம். பலியிடுதல் மரபு வழியாகக் காலங்காலமாகத் தொடர்ந்து பின்பற்றப்படுகிறது. முன்னோர்கள் எவ்வாறு வழிபட்டு, பலியிட்டு வந்தார்களோ அதனையே தலைமுறையினர் பின்பற்றி வருகின்றனர். இன்றைக்கும் சிறுதெய்வ வழிபாடுகளில் அதிக அளவில் ஆடு, கோழி, சேவல் போன்றவை வழிபடுவதனைக் காணமுடிகின்றது. அவரவர் நேர்த்திக் கடன்களுக்கு ஏற்றவாறு இந்நிகழ்வுகளைச் செய்து வருகின்றனர்.

**சூள்**

தெய்வத்தைச் சுட்டிக் கூறி ‘சூள்’ (சத்தியம்) செய்தல் பழந்தமிழர் நம்பிக்கைகளில் ஒன்றாகும். மனிதனுக்கு மனிதன் உடன்படிக்கை செய்து கொள்ளும் போது தனக்கு மீரியதொரு சக்தி உள்ளது என நம்பி அவற்றை நடுநிலையாக வைத்துச் சத்தியம் செய்வது மனிதனின் இயல்பு. அந்த அடிப்படையில் ‘சூள்’ தெய்வத்தை நடுநிலையாகக் கொண்டு (தெய்வ சாட்சியாக) அமைகின்றது.

மக்கள் வாக்குறுதிகளை உறுதிமொழியாக அளித்து; இவற்றை மீறி வாக்குறுதிகளை நிறைவேற்றாமல் நடந்து கொண்டால் தெய்வம் தண்டிக்கும் என அஞ்சியது இதற்குக் காரணம் எனலாம். சத்தியத்தின் வகைகளாகத் தலையில் அடித்துச் சத்தியம் செய்தல், கையில் அடித்துச் சத்தியம் செய்தல், சூடம் அணைத்துச் சத்தியம் செய்தல், பால் தொட்டு சத்தியம் செய்தல், வேட்டி போட்டுத் தாண்டுதல், சேவல் வைத்துச் சத்தியம் செய்தல், குழந்தைகள் மீது சத்தியம் செய்தல் எனப் பல நிலைகளில் காணப்படுகின்றன.

இவ்வாறு சத்தியம் செய்தலின் மூலம் ஒருவன் பொய் பேசுதல், திருடுதல், அடுத்தவர் பொருள்மேல் ஆசைப்படுதல், துன்பம் விளைவித்தல் போன்றவைகளைச் செய்யமாட்டான். அவ்வாறு மீறிச் செய்தால் அவன் தண்டனைக்கு உள்ளாவான். தெய்வம் தண்டிக்கும் என்றும் நம்புகின்றனர். திடீரென்று அவன் முடியாமல், நோய்வாய்ப்பட்டு இறந்தாலும், ஊரார் அவனைப் பழிப்பர். தெய்வம் தண்டித்து விட்டது என்று கூறுவர். இதனால் இன்றைய சமூகத்தில் சத்தியம் செய்தல் என்பது ஒரு கவசமாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது.

**கைம்மை மகளிர்**

கணவனை இழந்தோர் கைம்மை மகளிர் என்று அழைக்கப்படு கின்றனர். இவர்களை முதல், இடை, கடை என மூன்று வகையாகப் பகுப்பர். முதல்நிலைப் பெண்கள் கணவன் இறந்த செய்தி கேட்டவுடனும், இடைநிலைப் பெண்கள் கணவன் சிதையிலும் இறந்து படுவர். கடைநிலைப் பெண்கள் நோன்பு நோற்று வாழ்வர் என்று குறிப்பிடப்படுகின்றது. நற்றிணையில் கைம்மை மகளிரின் நிலையினை,

**“சிறுவெள் ளாம்பல் அல்லி யுண்ணும்**
**கழிகல மகளிர் போல”** ***(நற்.280:13-14)***

எனும் பாடல் புலப்படுத்துகின்றது.

கணவன் மீது மிகுந்த அன்பு கொண்ட மனைவி முதல் நிலைக்கற்பில் செய்தியைக் கேட்டவுடன் இறந்து படுகிறாள். இதன்மூலம்

கணவனும் மனைவியும் ஒத்த அன்பினை உடையவராகின்றார்கள். இரண்டாம் நிலைக் கற்பில் ஊரார் வற்புறுத்தி (அல்லது) தானே முடிவெடுத்து தீப்புகுதல், வரைப்பாய்தல் மூலம் இறத்தல். இப்படிச் செய்வதால் தன் "கணவனுடன் தேவலோகத்தில் பேரின்பத்தை அனுபவிக்கலாம் எனவும் தன் பெற்றோர் வழியில் மூன்று தலைமுறையினரின் பாவத்தைப் போக்குகிறாள் எனவும் நம்பப்படுகிறது"[34] என்பர்.

கடைக்கற்பினள் கணவன் இறந்தவுடன் உயிர்மேல் பற்றுக் கொண்டோ, அல்லது சந்ததியினைக் காக்கவோ நினைத்து சில நடைமுறைக் கட்டுப்பாடுகளைக் கைக்கொண்டு வாழ்கின்றனர். கணவன் உள்ளவரையில் சிறப்புடன் போற்றப்பட்ட மகளிர், கணவன் இறந்தவுடன் எல்லாவற்றையும் இழந்தவர்களாகக் கருதப்பட்டனர். கூந்தல் மழிக்கப்பட்டது. இச்செயல் மூலம் மளிருடைய அழகு குழைக்கப்பட்டது. "கணவனது சிறப்பு மிகு ஆற்றல் அனைத்தும் அவளது தலைமுடியில் குவிந்து கிடக்கும் என்றும் அவனுடைய மறைவால் அவள் அந்த ஆற்றல்கள் அனைத்தையும் இழந்துவிட்டாள் என்பதைப் புலப்படுத்தும் அறிகுறியே மொட்டையடித்தலாகும்"[35] என க.த.திருநாவுக்கரசு குறிப்பிடுவார்.

சமுதாயத்தின் மதிப்பினை இழந்தவள்; அழகற்றவள் என்பதை உணர்த்தவே கூந்தலைக் கொய்தனர் எனலாம். எனினும் மகளிர்க்கு வழங்கப் பட்ட மாபெருந் தண்டனையே 'கூந்தல் களைதல்' எனக் கூறினால் அது மிகையாகாது. இப்பெண்களைப் பார்த்து பிறர் ஆசை கொள்ளக்கூடாது என்ற எண்ணமும் இருந்திருக்கலாம். கணவன் இறந்தவுடன் வேறு ஒருவருடன் விருப்பப்பட்டு சேர்ந்து வாழ்ந்தால் சமுதாயச் சீரழிவு ஏற்படும் என்று கருதி மொட்டையடித்தல், அணிகலன் நீக்குதல் போன்றவை நிகழ்ந்திருக்கலாம்.

உணவுக் கட்டுப்பாடு மூலம் அவர்களின் உடல் மெலிந்து, அழகிழந்து காணப்படுவர். அதன்மூலம் அவள் பிறரையும், பிற ஆண்கள் இவளையும் பார்க்க மாட்டார்கள் என்று நினைத்து இக்கட்டுப்பாட்டைக் கைக்கொண்டிருக்கலாம்.

**ஈமச்சடங்கு**

இறந்தோர்களுக்குச் சடங்குகள் நிகழ்த்திப் புதைத்தல், எரித்தல், தாழியில் வைத்து அடக்கம் செய்தல் எனும் மூன்று நிலைகளைத் தமிழர்கள் கடைப்பிடித்து வந்தனர். இச்சடங்குகள் அவர்களின் உள்ளம் சாந்தி அடைவதற்காகச் செய்யப்படுகின்றன என்று குறிப்பிடப்படுகின்றன.

புறநானூற்றில் புதைத்தல், எரித்தல் எனும் செய்தியினை வெளிப்படுத்துவதனை,

**"இடுக ஒன்றோ சுடுக ஒன்றோ**
**படுவழிப் படுகஇப் புகழ்வெய்யோன் தலையே"**

***(புறம்.239:4-5)***

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன.

புதைத்தல் என்பது நாய், நரி, காக்கை, கழுகு போன்ற விலங்கினங்களும், பறவைகளும் தின்றுவிடாதபடி நிகழ்த்துதல் ஆகும். இந்நிகழ்வு மூலம் மக்கள் சமுதாயம் இறுதியாக ஒவ்வொரு மனிதனுக்கும் கிடைப்பது ஆறடி நிலம்தான். அதனை நல்லமுறையில் சடங்குகள் செய்து ஆடிப்பாடி, மேளதாளங்களுடன் செய்து வழியனுப்பி வைப்பதன் வாயிலாக மக்கள் நிறைவேற்றுகின்றனர். இதன்மூலம் இறந்தவர் எந்தக் குறையும் இல்லாமல் செல்வதுடன் பிறருக்குத் துன்பம் விளைவிக்கமாட்டார்கள் என்றும் நம்புகின்றனர்.

இப்புதைத்தல் நிகழ்வில் குழந்தைகள் பிறந்து இறந்தாலும், இறந்தே பிறந்தாலும் அவற்றை வாளால் வெட்டிப் புதைப்பது அக்காலத்திய வழக்கமாகும். பிறந்தோர் யாவரும் குறிப்பாக ஆடவர் நாட்டுக்காகப் போர்க்களத்தில் உயிரைவிட வேண்டும் என்று சங்ககால மக்கள் கருதினர். இவ்வாறு இறந்தால் தான் வீரமரணம் அடைந்ததாக நம்பினர். இதன் அடிப்படையில் வெட்டிப் புதைக்கும் பழக்கம் தோன்றியது எனலாம்.

இக்காலத்தில் முதியோர் இறந்தால் அவ்வாறு செய்வதில்லை. குழந்தை இறந்துவிட்டால் இடுகாட்டில் அடக்கம் செய்வதற்கு முன்பு

சிறு கத்தியாலோ அல்லது காட்டு முள்ளினாலோ கைவிரல் அல்லது காது, மூக்கு ஏதேனும் ஒரு பகுதியில் கீரி அடக்கம் செய்யும் வழக்கம் இருந்துவருகிறது. இதனைப் பண்டைக் காலத்தின் ‘எச்சமிச்சம்’ எனலாம்.

ஈமச்சடங்கு என்பது ஒருவன் தன் தந்தைக்குச் செய்யும் இறுதிச் சடங்கு ஆகும். எரித்தல் என்பது பெரும்பாலும் விபத்தில் இறப்பவர்கள். மருந்து குடித்து இறப்பவர்கள், தூக்குப்போட்டு இறப்பவர்கள், தீக்குளித்து இறப்போர் என இவ்வாறு குறைவயதில் இறப்பவர்களை எரிப்பதாகக் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு இறப்பவர்கள் தங்கள் ஆயுள் முடியும் வரை ஆவியாகவும், அதுவரை பிறருக்குத் துன்பம் தருபவர்களாகவும் இருப்பர் என மற்றொரு காரணம் கூறப்படுகின்றது. மேற்கூறியவாறு இறப்பவர்களை காவல்துறையினர் விசாரித்து காரணங்களைக் கண்டறிந்து தற்கொலைக்குக் காரணமானவர்களைத் தண்டிப்பர் என்றும் நம்புகின்றனர்.

தாழியில் வைத்து அடக்கம் செய்தல் தற்காலத்தில் இல்லை. கிறித்தவர்கள் சவப்பெட்டி செய்து அடக்கம் செய்வதனைக் காணமுடிகிறது.

**முற்பிறப்பு, மறுபிறப்பு**

இம்மையில் செய்யும் நல்வினையின் பயனை மறுமையில் அனுபவித்ததனைப் புறநானூற்றில்,

> **“ஈண்டுச்செய் நல்வினை யாண்டுச்சென் றுணீஇயர்**
> **உயர்ந்தோர் உலகத்துப் பெயர்ந்தனன் ஆகலின்”**
> ***(புறம்.171:1920)***

என்று நப்பசலையார் குறிப்பிடுகிறார்.

உயிர்கள் வினைக்கேற்பப் பிறவிகள் எடுக்கின்றன என்பது பிறவிக் கொள்கையின் அடிப்படையாகும். முற்பிறப்பில் நல்வினை ஆற்றியோர் இப்பிறப்பில் நன்மையடைதலும், தீவினையாற்றியோர் தீவினை அடைதலும், துன்புறுதலும் வினைக் கொள்கையின் அடிப்படைகளாகும். பிறப்பு தம்முடைய வினையின் பயனுக்குத்தக அமையும் என்பது சமுதாய

நம்பிக்கையாகும். இந்நம்பிக்கையின் அடிப்படையில் முற்பிறப்பு, மறுபிறப்புக் கொள்கைகள் அமைந்தன.

நற்பயனைச் செய்த உயிர் சுவர்க்கத்திற்கும், தீவினை செய்த உயிர் நரகத்திற்கும் செல்கின்றன என்று நம்புகின்றனர். இன்றைக்கும் மக்கள் வழக்கில் போன பிறவியில் என்ன பாவம் செய்தேனோ? இன்று இப்படித் துன்பப்பட வேண்டியுள்ளது என்று கூறுவதனைக் காணமுடிகின்றது. இதுபோக பெற்றோர்கள் செய்த தீவினைகள் அவர்கள் பிள்ளைகளைச் சாரும் எனவும் நம்புவதனைக் காணமுடிகின்றது.

**ஊழ்வினை**

“மனிதன் ஒரு பிறப்பில் செய்த வினைகளின் பயனைப் பின்வரும் பிறவிகளில் அனுபவித்தே தீரவேண்டும் என்பது ஊழ்வினையின் நியதி என்று”[36] க.காந்தி குறிப்பிடுவார். ஊழ் மனிதனால் வெல்லமுடியாத ஒன்று என்பது பழந்தமிழரின் நம்பிக்கை எனலாம். பல பிறவிகளின் நல்ல தீய செய்கைகளின் முழுப்பயனையும் அனுபவிக்கும் கட்டாயப் பொறுப்பு மனித உயிர்கட்கு உண்டென்பதை வலியுறுத்த ஊழ்வினைக் கொள்கை தோன்றியது எனலாம். மனிதனைத் திருத்தும் முயற்சிக்கு இது வழிகாட்டியது எனக் கூறினாலும் தவறில்லை.

**சாபம்**

நீதிக்குப் புறம்பாக நடந்து, ஒருவர் வாழ்வில் மனம் கொதிப்படையுமானால் அந்தச் சூழ்நிலையில் அவர் குமுறிக் கூறும் வன்சொற்கள் வலிமைபெற்றுச் செயலாக்கம் பெற்றுவிடுகின்றன. இதன் அடிப்படையில் கருநாக்கு உடையவர்கள் சொன்னால் பலிக்கும் என்று பிற்காலத்தில் நம்பப்பட்டது. “சாபம் வாய்மையின் மிக்கத் தவத்தோர்க்கும் கடவுளர்க்கும் கைகூடும் ஒன்றாகக் காட்டப்படுகிறது. தவத்தோர் தான் கொண்ட கொள்கைக்கு இடையூறுவரின் சபித்தலில் ஈடுபடுவர். சாபம் பெற்றோர் அதன் பலனை அனுபவித்தே தீருவர் என்பது அந்நாளைய

நம்பிக்கையாகும்”[37] எனச் சுட்டுவார் க.காந்தி. இதனையே இன்றைய மக்கள் ஒருவர் மீது பகை வந்தவுடன் மண்வாரித் தூற்றி நீ நாசமாகப்போ, காளி கேளு, கருப்பன் கேளு என்று சபித்தலில் ஈடுபடுவதற்குக் காரணம் என்று கூறலாம்.

**கூற்றுவன்**

உயிரை உடலினின்று பிரிப்பவன் எனப் பொருள்படும். தமிழில் கூற்றம், கூற்று, மறலி, யமன், காலன், மடங்கள் எனப் பலவாறாகப் பெயரிட்டு அழைத்ததனை அறியலாம். யமன் பற்றியக் குறிப்புகள் வேதங்களிலும் மாறுபட்ட தன்மை கொண்டனவாகக் காட்சி தருகின்றன. “இறந்தவரை ஆட்சி செய்பவன் என்றும் இறந்தவருக்கு இருப்பிடம் அளிப்பவன் என்றும் ரிக்வேதம் குறிப்பிடுவதாகவும், அவன் வசிக்குமிடம் விண்ணுலகத்தில் எல்லாவற்றிற்கும் உயர்ந்தது என்றும், மனிதருள் முதன்முதல் மடிந்து வானுலகம் சென்று மற்றவரும் அங்கு போக வழிகாட்டியவன் யமன் என்றும் சுட்டுவர்.”[38]

இக்கூற்றுவன் எருமையை வாகனமாகக் கொண்டவன் என்றும் கையில் பாசக்கயிற்றை வைத்திருப்பான் எனவும், யாருக்கு ஆயுள் முடிகின்றது என்று அவனுடைய உதவியாளர் சித்திரகுப்தன் சுவடிகளைப் பார்த்துச் சொல்ல அவர்களை யமன் கயிறு வீசி உயிரைக் கவர்ந்து கொள்வான் என்று மக்கள் நம்புகின்றனர்.

**அசரீரி**

நாம் ஏதேனும் ஒரு செயல் பற்றி உரையாடிக் கொண்டிருக்கும் போது எங்கேயாவது இருந்து மணியோசை கேட்டால் உடனே அந்தக் காரியத்திற்கு வெற்றி கிட்டும் என்று நினைத்துக் கொள்கிறோம். தெருவில் பேசிக்கொண்டு போகின்றவர்கள் தங்கள் பேச்சில் ‘இனிமேல் கவலை வேண்டாம்’ என்றும் ‘எல்லாம் நன்மையாகவே முடியும்’ அல்லது ‘நிச்சயம் முடியும்’ என்று சொல்லிக் கொண்டு போனால் அச்சொற்களை நாம் பேசிக் கொண்டிருக்கும் காரியத்தைக் குறித்துக் கூறியதாக நினைத்துக் கொள்கின்றனர். நாம் கண்ணால் காணாத காதால் கேட்ட இத்தகையச் சொற்களை அசரீரி

என்னும் தெய்வ வாக்காக நம்புகின்றனர். இவை பழந்தமிழரின் மரபு வழியாகப் பின்பற்றப்பட்ட ஒன்று. தாயை நினைத்து வருந்திய கன்றைப் பார்த்து ஆயர் சிறுமி முல்லைப்பாட்டில் இன்னே வருகுவர் நின் தாயர் என்று கூறுவதைக்கேட்ட முதுபெண்டிர் தலைவியிடம் நற்சொல் கேட்டோம். உன் தலைவன் வருவான் என்றனர். இந்நம்பிக்கை பரம்பரை பரம்பரையாக மூதாதையர்களிடமிருந்து தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றன.

**மந்திரம்**

தொல்காப்பியர் மந்திரத்தை நிறைமொழி மாந்தரின் மறைமொழி என்று குறிப்பிடுவதனை,

**"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளக்கும்**
**மறைமொழி தானே மந்திரம் என்ப" (தொல்.பொருள்.480)**

எனும் நூற்பா பதிவு செய்துள்ளது.

இயற்கையுடன் போராடிய மனிதன். தன்னைக் காத்துக் கொள்ளவும், அவற்றை வெற்றி கொள்ளவும் மந்திரச் சடங்குகளை ஏற்படுத்தினான். "இயற்கைச் சக்திகளின் மீது மக்கள் கொண்ட அச்சத்தைப் போக்குவதற்கு மந்திரமும், சமயமும் துணையாக வந்தன. தம் அறிவிற்கு எட்டாத சக்திகள், தமக்கு வரும் இன்னல்களைத் தடுத்துத் தம்மைக் காக்கும் என்று அம்மக்கள் நம்பினர். இந்நம்பிக்கை பலிப்பதற்குப் படையல்கள் பலியீடுகள், வேண்டுதல்கள், மந்திரங்கள் இவற்றை நாளடைவில் கைக்கொண்டனர்"[39] என்பார் தே.ஞானசேகரன்.

மந்திரங்களைப் பற்றிய கருத்துக்கள் இலக்கியங்களில் இடம் பெறுவதற்கு வெகு காலத்திற்கு முன்பிருந்தே மக்களிடம் வழக்கில் இருந்து வந்தன.

"மந்திரத்தின் கூறுகளை இந்து மதத்தில் மட்டுமன்றி, கிறித்தவம், இசுலாம் எனும் பிற மதங்களிலும் காண இயலும் என தத்துவ அகராதி விளக்கம் தருகிறது"[40] என்று தே.ஞானசேகரன் குறிப்பிடுவார்.

மந்திரங்கள் ஒரு மனிதனின் ஏற்றத்திற்குக் காரணமாகவும், எதிரிகள் வீழ்ச்சியடையக் காரணமாகவும் அமைகின்றன என்று மக்கள் வாழ்வில் நம்பிக்கை கொண்டுள்ளனர். ஒருவனுடைய முடி, நகம், காலடி மண் போன்றவைகள் மூலம் அவனது வீழ்ச்சியையோ, அல்லது மரணத்தையோ உண்டாக்கலாம் என்றும் நம்புகின்றனர்.

**சுவர்க்கம், நிரையம்**

மனித உயிர்கள் நிலவுலகில் வாழுங்காலத்தில் ஆற்றும் நல்வினை, தீவினைகளுக்கேற்ப அவ்வுயிர்கள் முறையே சுவர்க்கத்திற்கும், நரகத்திற்கும் கொண்டு செல்லப்படுகின்றன என்று சங்ககாலம் தொட்டு இன்றுவரை மக்கள் நம்புகின்றனர். நல்வினை செய்தோர் சுவர்க்கத்திற்கும், தீவினைகள் செய்தோர் நரகத்திற்கும் செல்வர் என்றும், சுவர்க்கத்தில் இனிமையான வாழ்வு கிடைக்கும் எனவும், நரகத்தில் துன்பப்படுவர் என்றும் நம்பியது இதற்குக் காரணம் என்று கூறலாம். சுவர்க்கம் பற்றி நெய்தற்கலியில்,

**"மாண்ட மனம் பெற்றார் மாசுஇல் துறக்கத்து**
**வேண்டிய வேண்டியாங்கு எய்துதல் வாய்எனின்"**
**(நெய்தற்கலி.21:30-31)**

என்றும், நரகம் பற்றி மணிமேகலையில்,

**"பிறந்தோ ரறியிற் பெரும்பே றறிகுவர்**
**அறியா ராயின் ஆழ்நரகு அறிகுவர்"**
**(மணி.24:109-110)**

எனவும் சுட்டப்படுகிறது.

நரகத்தில் பாம்பு, தேள் முதலிய கொடிய நஞ்சு கொண்ட உயிரினங்களும், கொதிக்கும் எண்ணெய், வெந்நீர் போன்றவைகளும், இதுபோன்று துன்பந்தரும் இன்னும் பிற செயல்களும் உள்ளதாக மக்கள் நம்புகின்றனர். அதன்விளைவாக இவ்வடிப்படையானது தோன்றியிருக்கலாம். தீவினைகள் பெருகி வளர்ந்த காலத்தில் அவற்றைத்

திருத்தும் நோக்கத்துடன் சுவர்க்கம், நிறையம் என்றொரு நம்பிக்கையை தோற்றுவித்துத் தீவினைகள் செய்தால் நரகத்தில் சென்று துன்பப்படுவாய் எனவும், நல்வினைகள் செய்தால் சுவர்க்கம் சென்று இன்பப்படுவாய் என்றும் முன்னோர்கள் வகுத்துச் செயல்பட்டு வந்தனர். அந்த அடிப்படையில் இந்நம்பிக்கை காலந்தோறும் மக்கள் வழக்காற்றில் நின்று நிலவி வருகின்றன.

இந்நம்பிக்கையின் மூலம் தீவினைகள், குற்றம் போன்றவைகள் குறையும் என்ற நோக்கம் மேலோங்கி நின்றதுதான் சுவர்க்கம், நிரையம் எனும் கோட்பாடு தோன்றக் காரணமாயிருந்திருக்கலாம்.

**புலிப்பல் தாலி**

அணிகலன்கள் அழகுபடுத்தவும் மருத்துவ நோக்கிலும் அணியப்பட்டு வந்ததனை இலக்கியச் சான்றுகள் உணர்த்துகின்றன. இவை தொடக்க காலத்தில் இயற்கைப் பொருட்களின் கூறுகளாக அமைந்திருந்தன. பின்னர் காலப்போக்கில் உலோகங்களின் பயன்பாட்டால் மனிதனது கற்பனை மற்றும் அழகுணர்வுகளுக்கு ஏற்ப ஈடுகொடுத்து வடிவ மாற்றங்களைப் பெற்றதனை அவற்றின் வளர்ச்சி நிலைகள் உணர்த்துகின்றன.

“இளஞ்சிறார்க்கு வீரத்தின் அறிகுறியாக அல்லது ஆற்றலை அதிகரிக்கும் காப்பணியாகப் புலிப்பல்தாலியைப் பயன்படுத்தி இருக்கலாம்”[41] என்று க.காந்தி குறிப்பிடுவார்.

இது அழகுக்காக அணியப்பட்டது என்பதைவிட நம்பிக்கையின் அடிப்படையில், மனிதன் பிற இயற்கைக் கூறுகளின் பாதிப்பிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ளக் கைக்கொண்ட காப்பணியாக அணிந்திருந்ததனைப் புலப்படுத்துகின்றது. தீய ஆவி, பேய், நோய்களில் இருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள பழந்தமிழர் இதனை அணிகலன்களாக அணிந்திருந்தனர் என்பதனை இதன்மூலம் அறியமுடிகின்றது. இதனை வீரத்தின் வெளிப்பாடு என்றும் கருதலாம்.

**கணவனைத் தொழுதால் மழை பெய்யும்**

பெண்கள் கணவனைத் தொழுதால் மழை பெய்யும் என்று நம்பிக்கை கொண்டிருந்தனர். இதனைத் திருவள்ளுவர் கணவனே கண்கண்ட தெய்வம் என வழிபட்டு மதித்து வரும் பெண்கள் மழை பெய்யட்டும் என்று சொன்னால் மழை பெய்யும் என்றதனை,

**"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை"** ***(குறள்.55)***

என்று குறிப்பிடுகிறார். இன்றும் சில பெண்கள் கணவனின் பெயர்களைக் கூறி அழைப்பதில்லை. அவ்வாறு அழைத்தால் கணவனுக்கு ஆயுள் குறைந்துவிடும் என்றும் நம்புவதனைக் காணமுடிகின்றது. இன்றைய காலகட்டத்தில் சில பெண்கள் காலையில் எழுந்தவுடன் கணவனின் காலைத் தொட்டுக் கும்பிட்டுப் பிறகு வேலைகளைத் தொடங்குவதனை அறிய முடிகின்றது.

**நிலவைப் பாம்பு விழுங்குதல் (சந்திரகிரகணம்)**

சங்க காலத்தில் நிலவினைப் பாம்பு விழுங்குவதாக மக்கள் நம்பினர். இதனை இன்று சந்திரகிரகணம் என்று கூறிவருகின்றனர். சந்திரகிரகணம், சூரியகிரகணம் என்ற இரண்டுமே வருடத்தில் ஒருமுறை இயற்கையாகத் தோன்றக்கூடியவை. அறிவு வளர்ச்சி மிகுந்த காலத்தில் சூரியகிரகணம், சந்திரகிரகணம் என்று பெயரிட்டு அழைத்து வருகின்றனர். வளர்ச்சியடையாத காலத்தில் ஏதோ விழுங்குகின்றது என்று கூறிப் பிறகு பாம்பு நிலவினை விழுங்குகின்றது என்று நம்பியதனை உய்த்துணர முடிகின்றது.

**தொகுப்புரை**

சமுதாயம் என்பதற்கு வாழ்வியற் களஞ்சியம் ஒரு பொது வாழ்க்கை முறையைப் பின்பற்றிக் கூட்டாக வாழும் மக்கள் தொகுதி என்றும், பல சிறிய சமுதாயங்கள் பல பெரிய சமுதாயத்திற்குள் இருக்கலாம் என்றும் குறிப்பிடுவதனைச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

சமூகம் என்பதற்கு அகராதிகள் அறிஞர்கள் கூறும் கருத்துக்கள் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

மனிதன் தனக்கு அப்பாற்பட்ட சக்திகளிடம் கொண்ட அச்சத்தின் காரணமாகக் கடவுளை வழிபடத் தொடங்கினான். அதன் விளைவாகப் பல்வேறு சடங்கு முறைகளைச் செய்து, தன் செயல்கள் நிறைவேற வழிசெய்து கொள்வதனை அறியமுடிகின்றது.

நல்ல நேரம், காலம் பார்த்துச் செயல்படுவதன் மூலம் அச்செயல்கள் வெற்றியடைகின்றன என்று நம்புகின்றனர். இயற்கையின் நிகழ்வுகளைக் கண்டு அஞ்சிய மனிதன் நாளும், கோளும் பார்த்துச் செயல்பட்டு அவற்றிற்குத் தீர்வு கண்டுள்ளான்.

மக்கள் சமுதாயத்தில் திருமணம் முக்கிய நிகழ்வாகும். அது மக்களின் வாழ்க்கையை நெறிப்படுத்தி ஒழுக்கத்திற்கு வித்திடுகிறது. நாகரிகம் வளரவளர வாழ்வில் ஒழுங்கும் கட்டுப்பாடும் படிப்படியாகத் தோன்றின. அதன் விளைவாகத் திருமணமும், அதற்குரிய சடங்குகளும் தோன்றலாயின.

கனவுகள் மனித வாழ்க்கையோடு இணைந்திருப்பவை. கனவுகளில் வரும் காட்சிகள் நமது வாழ்க்கையில் கடந்த கால, நிகழ்கால, எதிர்கால நிகழ்வுகளைப் பற்றி நமக்கு முன்னெச்சரிக்கையாகச் சொல்கின்றன என நம்பியதனையும் நம்புவதனையும் உணரமுடிகிறது.

நிமித்தம் என்பது வாழ்வில் பின் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் வாயிலாக முன்னுணர்த்துவதாகும். முன்னோர்கள் மரபுப்படிப் பின்பற்றி வருகின்றனர்.

வெறியாட்டின் மூலம் ஒருவருக்குப் பிடித்திருந்த பேய், நோய், பிணி நீங்கும் என்று நம்பினர்.

இறந்தோர்க்குச் சிறப்பு செய்யும் நோக்கத்தில் நடுகல் வழிபாடு தோன்றியது. அவர்களை வழிபடும் நோக்கத்திலும் இவை செயல்பட்டு வந்தது என்பதனை உணர்த்துகிறது.

பேய் பிறருக்குத் துன்பம் தரும் என்றும் அச்சுறுத்தும் என்றும் நம்பினர். சிறுவயதில் இறப்பவர்களும், அகால மரணமடைபவர்களும் ஆவியாக உலாவுவார்கள் என்று நம்பியதனை உணர முடிகின்றது.

விழாக்கள் மக்களின் வாழ்வில் சோர்வினைப் போக்கி இன்பம், மகிழ்ச்சி பொங்க கொண்டாடுவதாகும். இதன்மூலம் தெய்வத்திற்கு வழிபாடும், மக்களின் விருப்பமும் நிறைவேறுகின்றன.

தெய்வத்தினை அமைதிபடுத்தக் கையாண்ட ஒரு உத்தியாகப் பலியிடுதல் தோன்றியது. காலப்போக்கில் மனிதனின் வேண்டுதல், நிறைவேறியவுடன் பலியிடுதல் நிகழ்வு நடைபெற்று வருகிறது.

சத்தியம் செய்தல் மூலம் கொலை, கொள்ளை, துன்பம் விளைவித்தல் போன்றவைகள் குறைந்தன என்று நம்பினர்.

கணவனை இழந்த பெண்கள் பிறர்மேல் ஆசைப்படக்கூடாது, பிறரும் இவர்கள் மேல் ஆசைப்படக்கூடாது எனும் நோக்கில் தலை மொட்டையடிக்கப்பட்டுள்ளது. இது சமுதாயச் சீரழிவு ஏற்பட்டுவிடக் கூடாது எனும் நோக்கில் கையாண்டதாகத் தெரிகிறது.

ஈமச்சடங்கு நிகழ்வு ஒருவரின் இறப்புக்குப்பின் அவர்களுடைய பிள்ளைகள் இறுதியாகச் செய்யும் சடங்குகள் ஆகும்.

பிறப்புகள் அவரவர்களின் வினைக்கேற்ப அமைகின்றன. நல்வினை செய்தோர்க்கு நல்ல வாழ்வும், தீவினை செய்தோர்க்குத் தீய வாழ்வும் அமைவதாக நம்புகின்றனர்.

சாபத்தின் மூலம் ஒருவனை அழித்துவிடலாம் என்றும் அவனைத் துன்பப்பட வைக்கலாம் என்றும் நம்பியதனைக் காணமுடிகின்றது.

கூற்றுவன் மக்களின் ஆயுள் முடிந்தவுடன் அவர்களின் உயிரைக் கவர்ந்து செல்லும் தன்மையுடையவன் என்று மக்கள் நம்புவதனை அறிய முடிகின்றது.

மந்திரங்கள் இன்றைய மக்கள் வாழ்க்கையினை இயக்குகின்றன. இயற்கையுடன் போராடிய மனிதன் தன்னைக் காத்துக் கொள்ளவும், அவற்றை வெற்றி கொள்ளவும் மந்திரச் சடங்குகளை ஏற்படுத்தினான்.

மக்கள் வாழ்வில் எண்ணற்ற நம்பிக்கைகள் தோன்றினாலும் ஒவ்வொரு நம்பிக்கையும் சமுதாயத்திற்கு ஏதேனும் ஒரு கருத்தைக் கூறுவதாகவே நம்பப்படுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி-8, ப.469
2. மேலது
3. க.கைலாசபதி, சமூகவியலும் இலக்கியமும், பக்.20-21
4. ர.இராசகோபால், புதிய பார்வைகள், ப.18
5. வ.ஜெயா, சங்கப் பெண் புலவர்களின் மொழியும் கருத்தும், ப.79
6. க.பாஸ்கரன், சமுதாயத்தத்துவம், ப.27
7. தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல், பக்.12-13
8. இராமகுருநாதன், குறிஞ்சி காட்டும் சமுதாயம், ப.112
9. பாஸ்கல் கிஸ்பர்ட், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.14
10. மேலது, ப.14
11. மேலது, ப.14
12. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி-8, ப.588
13. நர்மதாவின் தமிழகராதி, ப.337
14. தமிழகராதி, ப.327
15. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி-11, ப.590
16. மேலது, ப.590
17. மேலது, ப.590
18. மேலது, ப.590
19. மேலது, ப.590
20. மேலது, ப.590
21. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.260
22. தொல்.பொருள். 85
23. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.156
24. கலைக்களஞ்சியம், தொகுதி-1, ப.723
25. வி.சி.சசிவல்லி, தமிழர் திருமணம், ப.IV
26. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.33

27. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.211

28. மேலது, ப.213

29. நா.வானமாமலை, ஆராய்ச்சி மலர்-4, துணர்-13, நடுகற்களும் நம்பிக்கைகளும், ப.10

30. தமிழவன், ஆராய்ச்சி, பண்டைத் தமிழரின் பேய் பற்றியக் கருத்து, பக்.438-439

31. ஆய்வுக்கோவை, தொகுதி-ஒன்று, ப.445

32. இரா.சீனிவாசன், சக்திவழிபாடு, ப.79

33. ஆய்வுக்கோவை, தொகுதி-இரண்டு, ப.294

34. ந.க.மங்களமுருகேசன், இந்தியச் சமுதாய வரலாறு, ப.375

35. க.த.திருநாவுக்கரசு, தமிழ்ப் பண்பாடு, ப.44

36. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.165

37. மேலது, ப.153

38. கலைக்களஞ்சியம், தொகுதி-8, ப.574

39. தே.ஞானசேகரன், மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள், ப.1

40. மேலது, ப.4

41. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.196

## முடிவுரை

இன்றைய மக்கள் வழக்காற்றில் செவ்வியல் கால நம்பிக்கைகள் வழக்கும் இழப்பும் என்னும் ஆய்வில் பெறப்பெற்ற முடிவுகள் பின்வருமாறு.

நம்பிக்கைகள் வழக்கும் இழப்பும் என்பதற்குத் தமிழகத் தென்மாவட்டங்களில் ஒன்றான இராமநாதபுரம் மாவட்டம், திருவாடானை வட்டம், இராசசிங்க மங்கலச் சிற்றூர்ப் பகுதிகளில் கள ஆய்வு மேற்கொண்டு கிடைத்தத் தரவுகளின் அடிப்படையில் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன.

'நம்பிக்கைகள் தோற்றம், வளர்ச்சி, இன்றைய நிலை' எனும் முதலியலில் நம்பிக்கைகள் குறித்து அகராதிகள் அறிஞர்கள் தரும் கருத்துக்கள் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

நம்பிக்கையின் தோற்றம், தன்னம்பிக்கை, மூடநம்பிக்கை பற்றியும், பிரிவுகளாகத் தனிமனித நம்பிக்கைகள், சமுதாய நம்பிக்கைகள் பற்றியும் விளக்கப்பெற்றுள்ளது.

இன்றைய நிலையிலான நம்பிக்கைகளில் செய்வினை ஒன்றாகும். இதன் பிரிவுகளான உருவேற்றுச் செய்வினை, கருமுறைச் செய்வினை, முகமாற்றுச் செய்வினைகள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

தொழில் தொடர்பான நம்பிக்கைகள், சமயம் தொடர்பான நம்பிக்கைகள், பொதுவான நம்பிக்கைகள் எனத் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

'செவ்வியல் படைப்புகளில் நம்பிக்கைகள்' எனும் இரண்டாமியலில் நாற்பத்தொரு (41) நூல்களில் கண்டறியப்பட்ட நம்பிக்கைகளான தெய்வ நம்பிக்கை, நாள் பார்த்தல், கனவு, திருமணம், நடுகல், நிமித்தம், விழா, விரிச்சி, வெறியாட்டு, பலியிடுதல், பேய், கூற்றுவன், நல்வினை, தீவினை, முற்பிறப்பு, மறுபிறப்பு, ஊழ்வினை, சாபமிடுதல், மந்திரம், அசரீரி, சுவர்க்கம், நிரையம், கைம்மை மகளிர், மடலேறுதல், முதுமக்கள் தாழி, புலிப்பல்தாலி, நிலவைப் பாம்பு விழுங்குதல், கணவனைத் தொழுதால் மழைபெய்யும், ஈமச்சடங்கு போன்றவை தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன.

மூன்றாம் இயலான ‘நம்பிக்கைகள் வழக்கும் இழப்பும்’ என்பதில் செவ்வியல் படைப்புகளில் காணப்பட்ட நம்பிக்கைகள் கள ஆய்வுப் பகுதியில் இன்றைய மக்கள் வாழ்வில் வழக்குப் பெற்றனவும், வழக்கிழந்தனவும் குறித்த மதிப்பீடுகள் இடம்பெற்றுள்ளன.

இவ்வொன்றியப் பகுதி மக்களிடம் வழக்கிழந்த நம்பிக்கைகளாக நிமித்தக் கூறுகளில் உன்னமரம், ஒந்தி வலம் செல்லல், விழாக்களில், ஓணவிழா, பூந்தொடை விழா, புனலாட்டு விழாவும், அசரீரி, மடலேறுதல், முதுமக்கள் தாழி, புலிப்பல் தாலி, கைம்மை மகளிரின் நோன்பு முறைகள், கணவனைத் தொழுதால் மழைபெய்யும் என்ற நம்பிக்கைகள் வழக்கிழந்து இருப்பதனையும் மற்ற நம்பிக்கைள் வழக்குப் பெற்றிருப்பதனையும் அறியமுடிகின்றது.

‘நம்பிக்கைகள் காட்டும் சமுதாயச் சிந்தனைகள்’ என்ற நான்காமியலில் மக்கள் சமூகத்தில் நிலம், தொழில், வழிபாடு, சடங்குகள் ஆகியவற்றின் தாக்கத்தால் நம்பிக்கைகள் பெற்றுள்ள மாற்றம் பற்றியும், ஏற்றம் பற்றியும் விளக்கப்பட்டுள்ளது.

நம்பிக்கைகள் மக்கள் வாழ்வின் வழிபாட்டு முறைகள், சடங்குகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை உட்கொண்ட அமைப்பாக விளங்குகின்றன. இறை நம்பிக்கை வழிபாடு, சடங்கு ஆகியவற்றின் அடிப்படையில் மக்கள் உள்ளத்தைப் பக்குவப்படுத்தி இவ்வுலகில் செம்மையாக வாழ்வதற்கு உதவுகின்ற வாழ்க்கை நெறியாக அமைகின்றன.

மனிதர்களின் உணர்ச்சிப்பூர்வமானக் கூறுகள் நம்பிக்கைகளைத் தீர்மானிக்கின்றன. வெளியிலிருந்து பார்க்கும் பார்வையில் சில நம்பிக்கைகளை மூடநம்பிக்கைகளாக இனங்காண முடிந்தாலும், நம்பிக்கைகளைப் பின்பற்றும் மக்கள் அவற்றை உண்மைகளாக நம்பி வாழ்வில் கடைப்பிடித்து வாழ்கின்றனர் என்பதை உணரமுடிகிறது.

நம்பிக்கைகள் பண்பாட்டின் முக்கியக் கூறுகளாக அமைகின்றன. மக்களின் வெவ்வேறு செயல்களில் அறிந்தோ, அறியாமலோ நம்பிக்கைகள்

வெளிப்படுகின்றன. நம்பிக்கைகளைச் செயல் வடிவமான வெளிப்பாடுகள் மூலம் உணர்ந்துகொள்ள முடிகின்றது.

அச்செயல்பாட்டிற்கானக் காரணங்கள் மனித மனங்களில் உறைந்திருக்கின்றன. இச்செயல்பாடுகள் வாய்மொழியாகவோ நடத்தை சார்ந்தோ வெளிப்படுகின்றன. இவற்றைத் தொகுத்து ஆய்வுக்கு உட்படுத்துவதன் மூலம் குறிப்பிட்ட நம்பிக்கைகள் கொண்டு வாழும் மக்களின் பண்பாட்டினை அறியமுடியும்.

நம்பிக்கைகள் பெரும்பாலும் அச்ச உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியனவாகக் காட்சி தருகின்றன. தீமையிலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ள முயலும் தற்காப்பு முயற்சியும், நன்மையடைய வேண்டும் என்ற ஆசையும் நம்பிக்கைகளை நிலை நிறுத்துகின்றன.

மக்கள் வாழ்வில் நம்பிக்கைகள் வேரூன்றிக் காணப்படுகின்றன நாகரிகம், பண்பாடு மனிதனை மாற்றியிருந்தாலும் நம்பிக்கைகளில் பிணைக்கப் பெற்றுள்ள அவனது மனத்தை மாற்ற இயலாது என்பதனை அறியமுடிகின்றது.

இறை நம்பிக்கையோடு வாழ்ந்தால் எல்லா வளமும் கிடைக்கும், பிணி, துன்பம் அச்சம் நீங்கும் என்று மக்கள் நம்புகின்றனர்.

இயற்கையின் பாதிப்புக்கு உட்பட்ட நிலையில் தான் மனிதனிடம் கடவுட் கோட்பாடுகளும், வழிபாட்டு முறைகளும் தோன்றியிருக்க வேண்டும். ஒரு சமூக அமைப்பின் மரபினைக் கண்டு கொள்வதற்கு அச்சமூகத்தின் நம்பிக்கைகள் துணைபுரிகின்றன.

இந்த நம்பிக்கைகள் சமூகத்தின் தேவை கருதியும், குறிக்கோள்களை மையப்படுத்தியும் வளர்ந்து வருகின்றன என்பதைக் காட்டுகின்றது.

சமுதாய அமைப்பில் அடித்தளமாகிய குடும்பங்களில் நிகழ்கின்ற பிறப்பு, பூப்பு, திருமணம், இறப்பு போன்ற ஒவ்வொன்றையும் மனிதன் ஒவ்வொரு சடங்குகளால் கட்டுப்படுத்திச் செயல்படுத்துகிறான். நாகரிக

வளர்ச்சியடைந்த சமுதாயம் மட்டுமின்றி, நாகரிக வளர்ச்சி இல்லாத மக்களிடமும் இத்தகைய நம்பிக்கைகளும், சடங்குகளும் காணப்படுகின்றன.

திருமணம் என்பது ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் இணைந்து வாழ்வதற்காகச் சமுதாயத்தால் ஏற்படுத்தப்பட்டச் சடங்காகும். இம்மணம் மக்கள் சமுதாயத்தில் மதம், இனம், பண்பாடு, மனப்பாங்கு இவற்றிற்குத் தக மாறுபடுகின்றது. திருமணம் சமூகவியல், பாலியல், வாழ்வியல் முதலிய நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு விளங்குகின்றது. இம்மணத்தை அனைத்து மதத்தினரும், இனத்தினரும் புனிதமான சடங்காகக் கருதுகின்றனர்.

வாழ்க்கையில் மகிழ்ச்சி, பொழுதுபோக்கு, வணிகம், ஒன்றுகூடல், இறையுணர்வு போன்றவற்றிற்காக விழாக்கள் நிகழ்த்தப்படுகின்றன. மனித நேயத்தை வளர்த்து, பண்பாட்டு மரபுகளைக் காத்து, புதுமைகளை ஏற்படுத்துவது இதன் நோக்கமாகக் காணப்படுகிறது.

நம்பிக்கைகள் காரண, வினைத் தொடர்புகளுக்கு உட்பட்டவை களாகும். விழாக்களில் பலியிடும் முறை தெய்வத்தின் சீற்றத்தைத் தணிப்பதற்கும், நன்மை வேண்டியும் நிகழ்த்தப்படுவதனை அறியமுடிகின்றது.

நல்லவை நிகழ்ந்தால் மகிழ்ச்சி கொள்வதும், தீயவை நிகழ்ந்தால் துன்பம் கொள்வதும் அடிப்படைக் காரணம் சகுனங்கள் என்றும், அவை குறியீடுகளாகக் காணப்படுகின்றன என்றும் மக்கள் நம்புகின்றனர்.

மனிதன் தனக்கு நேரவிருக்கும் தீமைகளை உள்ளுணர்வுகள் மூலமும், சில செயல்களின் வாயிலாகவும் அறிகிறான். அச்செயல்கள் சகுனங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

அறிகுறிகளைக் கண்டு அதனையும் மீறிச் சென்றால் அவன் மேற்கொள்ளும் செயல் தீமையில் முடிகின்றது என்பதைத் தன் அனுபவத்தின் மூலம் உணர்கிறான்.

மனித வாழ்க்கைக்கு இயைந்தனவாகவும், நன்மை தருவனவாகவும் அமைவனவற்றை நற்சகுனங்களாகக் கருதுகின்றனர். பெரும்பாலும் நன்மை விளைய வேண்டுமென்று மக்கள் சகுனம் பார்க்கின்றனர்.

சகுனம் பார்த்தல் என்பது மனிதன் தோன்றிய காலத்திலிருந்து இன்றுவரைத் தொடர்ந்து வரக்கூடிய ஒன்றாகும். அடிமட்டத்திலிருக்கும் மக்கள் முதல் மேல்மட்டத்திலிருக்கும் மக்கள் வரைச் சகுனம் பார்ப்பதனைக் காணமுடிகின்றது.

இறந்த மனிதர்களின் ஆவிகளில் நல்ல ஆவிகள், தீய ஆவிகள் என்று அவர்கள் வாழ்ந்த வாழ்க்கை நிலை, இறப்பின் தன்மை ஆகியவற்றைக் கொண்டு மதிப்பீடு செய்வதனை அறியமுடிகின்றது.

தற்கொலை செய்து கொண்டவர்களின் ஆவிகளும், சாத்தான்களும் இவ்வுலகில் தீய ஆவிகளாகச் சுற்றி அலைகின்றன என்று மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர்.

ஆவிகள் தங்குவதற்கு மரங்கள், நீர்நிலைகள், பாழடைந்த மண்டபங்கள், மனித நடமாட்டம் இல்லாத இடங்கள் போன்றவற்றைத் தெரிவு செய்து கொள்வதாக மக்கள் நம்புவதனை அறியமுடிகின்றது.

நம்பிக்கைகள் பலனளிக்கின்ற பொழுதும், முழுமைத் தன்மை அடையும் பொழுதும் அவற்றின் மீது மிகுந்த பற்று ஏற்படுகிறது. மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரை இந்த வழிமுறைகளில் தான் வாழவேண்டும் என்பதற்காக நம்பிக்கைகள் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன.

மனிதன் இவ்வுலகில் தவறுகள் செய்யாமலிருக்கவும், குற்றங்கள் பெருகாமலிருக்கவும் நம்பிக்கைகள் பின்பற்றப்பட்டு வந்திருக்கின்றன.

மக்கள் தங்கள் வாழ்வில் நன்மைகள் நிகழவேண்டும், தீமைகள் நிகழக்கூடாது என்று நம்பியது நம்பிக்கைகள் தொடர்ந்து நிலைபெற்றதற்குக் காரணங்களாக அமைகின்றன.

மக்கள் அறிந்தும், அறியாமலும் தம் முன்னோர்கள் விட்டுச் சென்ற நம்பிக்கைகளைப் பின்பற்றுகின்றனர். படித்தவர்கள் சிலர் மூடநம்பிக்கை என்று கூறினாலும் பெரும்பான்மையோர் நம்பிக்கை கொண்டுச் சகுனம் பார்க்கின்றனர், நம்பிக்கைகளைப் பின்பற்றுகின்றனர்.

நம்பிக்கைகளை ஆராயும் பொழுது இவை காலங்காலமாகச் சிறுசிறு மாற்றங்களுடனும் மறைந்தும் மக்கள் வாழ்வில் தொடர்வதை அறியமுடிகிறது.

உலகியல் வழக்குகள் இலக்கிய வழக்குகளாகின்றன. செவ்வியல் இலக்கியங்களில் காணலாகும் நம்பிக்கைகள் அக்கால மக்களின் உலகியல் வழக்கிலிருந்து எடுத்தாளப்பெற்றவை. இந்நம்பிக்கைகள் பன்னெடுங்காலமாக கற்றல், கேட்டல் நிலைகளில் முன்னெடுக்கப்பெற்றும், பாதுகாக்கப்பட்டும், புதிதாகச் சில நம்பிக்கைகள் தோற்றம் பெற்றும் மக்களை இயக்கி வந்துள்ளன என்பதைச் செவ்வியல் இலக்கிய நம்பிக்கைகளும், நாட்டுப்புற மக்களிடம் வழக்கிலுள்ள நம்பிக்கைகளும் புலப்படுத்துகின்றன. நம்பிக்கைகள் இலக்கியங்கள், வாய்மொழி வழக்காறுகள் வழி மக்களிடம் வாழ்ந்தும் பாதுகாக்கப்பட்டும் வருபவை என்பதை உணரமுடிகிறது.

## முதன்மைச் சான்றாதாரங்கள்


1. அடியார்க்கு நல்லார் (உ.ஆ.) - சிலப்பதிகாரம், டாக்டர் உ.வே.சாமிநாதையர், நூல் நிலைய வெளியீடு, சென்னை.

2. ஆலிஸ்.அ. (உ.ஆ.) - பதிற்றுப்பத்து நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., அம்பத்தூர், சென்னை-98 ஏப்.2004.

3. இளங்குமரனார் (உ.ஆ.) - தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர், தமிழ்மண் பதிப்பகம், சென்னை. முதற்பதிப்பு-2003.

4. இளம்பூரணர் (உ.ஆ.) - தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், புறத்திணையியல், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி-6.

5. இளம்பூரணர் (உ.ஆ.) - தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், கற்பியல், பொருளியல், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி-6.

6. உ.வே.சா.அரும்பத உரை - மணிமேகலை, டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம், 2, அருண்டேல் கடற்கரைச்சாலை, பெசன்ட் நகர், சென்னை. எட்டாம் பதிப்பு - 2008.

7. கௌமாரீஸ்வரி (ப.ஆ.) - பதினெண் கீழ்க்கணக்கு,
சாரதா பதிப்பகம்,
ஜ.4, சாந்தி அடுக்ககம்,
3, கிருஷ்ணபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை-14
முதற்பதிப்பு-மார்ச்சு-2009.

8. சுப்பிரமணியன்.ச.வே. - பத்துப்பாட்டு,
மூலமும் உரையும்,
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர் - 600 307
அக்.2003.

9. சுப்பிரமணியன்.பெ., பாலசுப்பிரமணியன்.கு.வெ. தட்சிணாமூர்த்தி.அ. (உ.ஆ.) - பரிபாடல் மூலமும் உரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
அம்பத்தூர்,
சென்னை.
ஏப்ரல் - 2004.

10. செயபால்.இரா. (உ.ஆ.) - அகநானூறு மூலமும் உரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
அம்பத்தூர்,
சென்னை.
ஏப்ரல் - 2004.

11. தட்சிணாமூர்த்தி.அ. (உ.ஆ.) - ஐங்குறுநூறு மூலமும் உரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
அம்பத்தூர்,
சென்னை.
ஏப்ரல் - 2004.

12. தமிழண்ணல். (உ.ஆ.) - தொல்காப்பியம்,
மீனாட்சி புத்தக நிலையம்,
மயூரா வளாகம்,
48, தானப்ப முதலி தெரு,
மதுரை-1
ஏப்ரல் - 2008.

13. நக்கீரர் (உ.ஆ.) - இறையனார் அகப்பொருள், களவியல்,
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
திருநெல்வேலி-6.

14. நாகராசன்.வி. - குறுந்தொகை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
அம்பத்தூர்,
சென்னை.
ஏப்ரல் - 2004.

15. பாலசுப்பிரமணியன்.கு.வெ.- நற்றிணை மூலமும் உரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
அம்பத்தூர், சென்னை.
ஏப்ரல் - 2004.

16. மேலது - புறநானூறு மூலமும் உரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
அம்பத்தூர்,
சென்னை.
ஏப்ரல் - 2004.

17. முத்துக்கணேசனார்.ரெ., (உ.ஆ.) - முத்தொள்ளாயிரம்,
பாரி நிலையம்,
59, பிராட்வே, சென்னை-1
நவம்பர் - 1957.

18. முத்தையா.ரா. - நாட்டுப்புற மருத்துவம் மந்திரச் சடங்குகள்,
அகரம் வெளியீடு,
சிவகங்கை மாவட்டம்.
1986

19. மோகன்.இரா. (உ.ஆ.) - பத்துப்பாட்டு மூலமும் உரையும்
(முதற்பகுதி),
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
அம்பத்தூர்,
சென்னை.
ஏப்ரல் - 2004.

20. நாகராசன்.வி. (உ.ஆ.) - பத்துப்பாட்டு இரண்டாம் தொகுதி,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
அம்பத்தூர்,
சென்னை.
ஏப்ரல் - 2004.

21. விசுவநாதன். (உ.ஆ.) - கலித்தொகை மூலமும் உரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
அம்பத்தூர்,
சென்னை.
ஏப்ரல் - 2004.

## துணைமைச் சான்றாதாரங்கள்


1. அண்ணாமலை.வே - சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம், (தொகுதி-1,2) மெய்யப்பன் பதிப்பகம், 53, புதுத்தெரு, சிதம்பரம்-1 முதற்பதிப்பு-2000.

2. அழகுபாலகிருஷ்ணன்.பொ. - சிலப்பதிகாரம் காட்டும் பண்பாட்டுச் சமுதாய வரலாறு, ஐந்திணைப் பதிப்பகம், 279, பாரதி சாலை, சென்னை-5 முதற்பதிப்பு-1988.

3. அறவாணன்.க.ப. - அற்றைநாட் காதலும் வீரமும் தமிழ்க்கோட்டம், சென்னை-29 முதற்பதிப்பு-1978.

4. இராகவன்.வி.எஸ்.வி., - பிளினி, மணிவாசகர் நூலகம், சென்னை-1 முதற்பதிப்பு-1977.

5. இராசகோபாலன்.அ.வ., - இலக்கியத்தில் வானியல், வெங்கடேசா பதிப்பகம், புத்தானம்பட்டி, திருச்சி. 1970.

6. இராசமாணிக்கனார் - இல்வாழ்க்கை, மதராஸ் ரிப்பன் பிரஸ், புதுக்கோட்டை. 1950.

7. இறையரசன்.ப. - தமிழர் நாகரிக வரலாறு,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை-108
முதற்பதிப்பு-1993.

8. எட்கர் தர்ஸ்சன் - தென்னிந்திய குலங்களும் குடிகளும்,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.
1986.

9. காந்தி.க., - தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்,
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச் சாலை,
மையத் தொழில் நுட்ப பயிலக வளாகம்,
தரமணி, சென்னை-113
1985.

10. கேசவராஜ்.வெ., - நடுகல் வழிபாடு,
சர்வோதயா இலக்கியப் பண்ணை,
மதுரை.
1978.

11. கைலாசபதி.க. - பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்,
மக்கள் வெளியீடு,
சென்னை.
1978.

12. சக்திவேல்.சு. - நாட்டுப்புற இயல் ஆய்வு,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை-108.
1983.

13. சசிவல்லி.வி.சி. - தமிழர் திருமணம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச்சாலை,
மையத் தொழில்நுட்ப பயிலக வளாகம்,
தரமணி, சென்னை-113
1985.

14. சண்முகசுந்தரம்.சு. - நாட்டுப்புற இயல்,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை-108
1975.

15. சாமி.பி.எல்., - தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வவழிபாடு,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை-2
இரண்டாம் பதிப்பு-1976

16. சாமிநாத சர்மா.வெ. - கிரீஸ் வாழ்ந்த வரலாறு,
பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம்,
புதுக்கோட்டை.
இரண்டாம் பதிப்பு-1963.

17. சிதம்பரனார்.சாமி., - எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்,
அறிவுப் பதிப்பகம், சென்னை-14.
1993.

18. மேலது - பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்,
ஸ்ரீ செண்பகா பதிப்பகம்,
32பி, கிருஷ்ணா தெரு,
பாண்டி பஜார், சென்னை-17
2010.

19. சுசீலா கோபாலகிருஷ்ணன் - சங்க இலக்கியத்தில் நிமித்தங்கள்,
பாலாஜி பதிப்பகம், மதுரை.
1987.

20. சீனிவாசன்.இ.ரா., - சக்தி வழிபாடு,
ஜெயக்குமாரி ஸ்டோர்,
நாகர்கோவில்.
1975.

21. சுப்பிரமணியன்.ஆ. - மந்திரம் சடங்குகள்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை-98
1998.

22. சுப்பிரமணியன்.ச.வே. - இலக்கியக் கனவுகள்,
தமிழ்ப் பதிப்பகம்,
சென்னை-20
இரண்டாம் பதிப்பு-1979.

23. சுப்பிரமணியன்.ந. - சங்ககால வாழ்வியல்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை - 98
1986.

24. செல்வம்.வி.டி., - தமிழக வரலாறும் பண்பாடும்,
மதுரை பப்ளிஷிங் ஹவுஸ்,
மதுரை-1
1976.

25. சோமலே - தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்,
நேஷனல் புக் டிரஸ்ட்,
இந்தியா.
1975.

26. ஞானசேகரன்.தே. - மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
1987.

27. டவுன்ஸ் ராபர்ட்.பி. - உலகத்தை மாற்றிய புத்தகங்கள்,
வேங்கடாச்சாரி.ஏ.ஜி., (தமிழாக்கம்)
கலைமகள் காரியாலயம், சென்னை-4
1972.

28. தட்சிணாமூர்த்தி.அ. - தமிழர் நாகரிகமும் பண்பாடும்,
யாழ் பதிப்பகம்,
AP-1108, தென்றல் குடியிருப்பு,
மூன்றாவது தெரு, மேற்கு அண்ணாநகர்,
சென்னை-40
1973

29. தமிழவன் - நாட்டுப்புற நம்பிக்கைகள்,
சர்வோதயா இலக்கியப் பண்ணை,
மதுரை.
1976.

30. திருநாவுக்கரசு.க.த., - தமிழ்ப் பண்பாடு,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச்சாலை,
மையத் தொழில்நுட்ப பயிலக வளாகம்,
தரமணி, சென்னை-113
2001.

31. நஜன் (நடராஜன்.எஸ்.) - தமிழர் பண்டிகைகளும் பண்பாடும்,
வானதி பதிப்பகம்,
சென்னை-17
1972.

32. பரமசிவன்.தொ. - தெய்வங்களும் சமூக மரபுகளும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை-104
1995.

33. பரமசிவானந்தம்.அ.மு., - மலைவாழ் மக்கள் மாண்பு,
தமிழ்க் கலைப் பதிப்பகம்,
சென்னை-30.

34. பாலுச்சாமி.எ., - மருதத்தில் மக்கள் வாழ்வியல்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச்சாலை,
மையத் தொழில்நுட்ப பயிலக வளாகம்,
தரமணி,
சென்னை-113
2011.

35. பிள்ளை.கே.கே. - தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை.
1972.

36. மகாலட்சுமி.தி., - இலக்கியத்தில் சோதிடம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
1996.

37. மங்கள முருகேசன்.ந.க., - இந்தியச் சமுதாய வரலாறு,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை.
1975.

38. மாணிக்கம்.வ.சுப. - தமிழ்க்காதல்,
சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி.
1976.

39. ரிஷபானந்தன் - கனவுகளின் பலன்கள்,
அனுராகம்,
10, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை-17
1990.

40. முருகு ராசேந்திரன் - சகுனம் பார்ப்பது எப்படி,
பாரதி பதிப்பகம்,
10, உஸ்மான் சாலை,
தியாகராய நகர்,
சென்னை-17
1984.

41. முல்லை முத்தையா - தமிழர் வாழ்வியல்,
மணிவாசகர் நூலகம்,
சிதம்பரம்.
1981.

42. முஹம்மது யூசுப். - கனவின் பலன்,
சுலைமானியா பப்ளிஷன்ஸ்,
சென்னை-1

43. வானமாமலை.நா. - மக்களும் மரபுகளும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை-98
1975.

44. மேலது - தமிழர் பண்பாடும் தத்துவமும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை-98
1973.

45. வித்தியானந்தன்.சு. - தமிழர் சால்பு (சங்ககாலம்)
பாரி புத்தக நிலையம்,
சென்னை-5
இரண்டாம் பதிப்பு-1971.

46. வையாபுரிப்பிள்ளை.எஸ்., - தமிழர் பண்பாடு,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை.
1965.

47. கிருட்டிணசாமி.க. - நாட்டுப்புறப் பாடல்களில் வளமையும்
நம்பிக்கையும் சடங்குகளும்,
மு.ப.-1918.

## அகராதிகள்

1. கிரியாவின் தற்காலத் தமிழகராதி

தமிழ்-தமிழ்-ஆங்கிலம்

கிரியா

2. தமிழகராதி

சென்னைப் பல்கலைக்கழகம்

1982

3. நர்மதாவின் தமிழகராதி

நர்மதா பதிப்பகம்

தியாகராயநகர்

சென்னை

2000

கலைக்களஞ்சியங்கள்

தொகுதி-4

தொகுதி-7

தொகுதி-8

தொகுதி-9

தமிழ் வளர்ச்சிக் கழகம்

சென்னை

1961

வாழ்வியற் களஞ்சியம்

தொகுதி-11

தமிழ்ப் பல்கலைக்கழகம்

தஞ்சாவூர்

1991

## ஆய்வேடுகள்

1. அழகுராஜா.கோ. - புறநானூற்றுப் பெண்பாற் புலவர்கள் பாடல்களில் பண்பாட்டுக் கூறுகள்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி.
2008 ஜுலை.

2. சண்முகம்.வே. - சங்க அக இலக்கியத்தில் வெறியாட்டு,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி.
மே-2002.

3. சுரேஷ்.பி. - எட்டுத் தொகையில் மானிட மதிப்புகள்,
தமிழாய்வுத்துறை,
தூய வளனார் தன்னாட்சிக் கல்லூரி,
திருச்சிராப்பள்ளி,
2009.

4. பாஸ்கரன்.ந. - சகுனம் பார்த்தல்
(சிங்கம்புணரி வட்டம்)
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி.
2003.

5. மகாலட்சுமி.சு. - அகநானூற்றில் விழாக்கள்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி.
2004.

6. மதிக்குமார்.பு. - இராமநாதபுரம் கடற்கரைப் பகுதி மீனவர்களின் வாழ்வியல் சடங்குகளும் நம்பிக்கைகளும்,
கலை வரலாறு அழகியல் மற்றும் நுண்கலைத்துறை நிகழ்த்துக்கலைப் பள்ளி,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை.
2012.

7. ராமேஸ்வரி.ரா. - சிலப்பதிகாரத்தில் நம்பிக்கைகள்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-3
2010.

8. ரேணுகாதேவி.இரா. - நாட்டுப்புற நம்பிக்கைகள்,
தமிழ்த்துறை,
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர்.
2011.